ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

# கைவல்லிய நவநீதம்

மூலமும்

உடையார்பாளையம் ஸ்ரீ ஆறுமுக சுவாமிகள் அருளிச் செய்த

# சுவாநுபூதி விளக்கமென்னும்

உரையும் (மீள்பதிப்பு)



கணபதி பதிப்பகம், பாடியநல்லூர், சென்னை–52.

உ

சிவமயம்.

ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# கைவல்லிய நவநீதம்

மூலமும்

---

உடையார்பாளையம்

**ஸ்ரீ ஆறுமுக சுவாமிகள்**

அருளிச்செய்த

சுவாநுபூதி விளக்கமென்னும்

உரையும்

---

ஷை சுவாமிகளின் மாணாக்கர்

சிதம்பரம் ஸ்ரீ சற்குரு விலாசமடம்

முத்தானந்த சுவாமிகளால்

---

திட்டகுடி

மு. மருத முதலியார் விருப்பப்படி

சிதம்பரம்

பாண்டியன் அச்சகத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

முதல் பதிப்பு : 1950 மீள்பதிப்பு : 2016

## அர்ப்பணிப்பு

இந்நூலை விருத்தாசலம்

ஸ்ரீலஸ்ரீ சிதம்பரம் சுவாமிகள் வழிவந்த

ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாசம் சுவாமிகள் அவர்களின்

மலர்ப்பாதங்களில் கணபதி பதிப்பகத்தின் சார்பாக

சமர்ப்பிக்கிறோம். அவர்களின் பேராற்றல்

எங்கும் எப்பொழுதும் ஒளிவீசிக் கொண்டிருக்க

பரம்பொருளை இறைஞ்சுகின்றோம்

நன்றியுடனும் பணிவுடனும்...

**கணபதி பதிப்பகத்தார்**
பாடியநல்லூர், சென்னை-52
கைபேசி : 9444014117

# சற்குரு ஸ்துதி.

உரை ஆசிரியர்

## ஸ்ரீ ஆறுமுக சுவாமிகளின்

பிரதம மாணாக்கர்

## சிதம்பர சுவாமிகள் இயற்றியது.

நித்தியமாய் நிராமயமாய் நிரஞ்சனமாய் நிர்மலமாய்
நிராலம்ப நிஷ்கிரிய மாய்
சத்தியமாய்ச் சனாதனமாய்ச் சர்வமுமாய்ச் சாந்தமுமாய்ச்
சதானந்த சித்துருவ மாய்
முத்தமுமாய் மூலமுமாய் முக்குணங்க ளற்றதுமாய்
மோனநிலை யருவ மாகி
அத்துவித பூரணமா யகண்டமதாய் நின்றபொரு
ளாறுமுக ஞான குருவே 1.

ஆறாறு தத்துவத்தி லொன்றே நீயா
மையேழு நீயன்று எனவே காட்டி
மாறாத தத்துவத்தில் மனதைவைத்து
மயக்கமற நிற்கவெனு முபதே சத்தைக்
கூறாது கூறியநின் னருளை நோக்கிக்
கொண்டலே யருட்கடலே குணக்குன் றென்னப்
பேறாறு முகநினது அடிக ளேத்திப்
பிரியாமல் உருகிநிதம் பணிவர் தாமே. 2.

சத்தியசிற் சுககனமாய்ச் சாந்த மாகிச்
சகலவதிஷ் டானபரப் பிரம மிங்கே
புத்திமுத லனைத்திற்குஞ் சாட்சி யான
பூரணசை தன்யசிவம் நீயென் றோதி
நத்தியகத் துருமுதலஞ் ஞானநீக்கி
நலந்திகழு மானந்தந் தேங்க நல்கும்
வித்தையருள் ஆறுமுக தேசி கன்றன்
விரைமலர்த்தா ளனுதினமு மேவி வாழ்வாம் 3.

முடிவிலா வின்பந் தானே முடிவினைக் காட்ட வேண்டிப்
படியினி லுருவாய் வந்து பலமுறை யுபதே சித்துத்
தடையறத் தன்னைத் தானே தந்தருட் கருணை மூர்த்திப்
படிவமா மெந்த ஞசான் பதநிதந் தொழுதல் செய்வாம். 4.



ஸ்ரீ

ஆறுமுக ஞான தேசிக சுவாமிகள்,

உடையார்பாளையம்.

பிரம்மமே சத்யம் பிரபஞ்சம் அசத்யம்

ஓம்தத்ஸத்

ஸ்ரீ கிருஷ்ணாய பரப்பிரம்மணே நம:

## எனதுரை

கயிலை. மு. கார்த்திகேயன்,
நிர்வாகி
வேதாந்த பிரவர்த்தக மடம்,
மற்றும்
ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக ஞானதேசிக
சுவாமிகள் சமாதி ஆலயம்,
வெள்ளாழத்தெரு,
உடையார்பாளையம்-621 804,
அரியலூர் மாவட்டம்.

"கைவல்லிய நவநீதம்" என்னும் ஞான நூல் ஏறக்குறைய 400 ஆண்டுகளுக்கு முன்பு அதாவது 16ம் நூற்றாண்டில் நன்னிலத்தில் எழுந்தருளியிருந்த சுரோத்திரிய பிரம நிஷ்ட பண்டிதர் ஸ்ரீ தாண்டவராய சுவாமிகளால் எழுதப்பட்டது. இதில் தத்துவ விளக்கப்படலம் என்றும், சந்தேகம் தெளிதல் படலம் என்றும் இருபடலமாக 288 பாடல்களாக திருவாய் மலர்ந்தருளினார். இந்நூலுக்குத் தமிழ்நாட்டில் பல சுவாமிகளால் உரைநூல் எழுதப்பட்டுள்ளது.

அவ்வாறு உரைநூல் எழுதிய ஞானாச்சார்யார்களுள் அரியலூர் மாவட்டம் உடையார்பாளையம் வேதாந்த பிரவர்த்தக மடாலயத்தின் ஸ்தாபகர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக ஞானதேசிக சுவாமிகள் எழுதிய "கைவல்லிய நவநீதம்" மூலமும் சுவாநுபூதி விளக்கம் என்னும் உரையும், என்ற உரைநூல் பல சிறப்பம்சங்கள் பொருந்தி மிகவும் குறிப்பிடத்தக்கதாக விளங்குகிறது. தற்போது இந்த நூல் எவரிடத்திலும் கிடையாது.

இந்த உரைநூல் சுமார் 65 ஆண்டுகளுக்கு முன்பு 1950ஆம் ஆண்டு முதல் பதிப்பாக சிதம்பரத்தில் அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளது. மேற்படி உரைநூல் முதன்முதலாக அச்சிடப்பட்டு வெளிவரக் காரணமாக இருந்த ஸ்ரீ சற்குரு நாதரின் பிரதான சீடர்களாக விளங்கிய கொல்லாபுரம் ஸ்ரீ சிதம்பர சுவாமிகள், சோமசுந்தரம்பிள்ளை என்கிற முத்தானந்த சுவாமிகள், ஸ்ரீ ரெங்கசாமி சுவாமிகள் மற்றும் தீவிர பக்தர் திட்டக்குடி மருத முதலியார்

ஆகியோருக்கு நமது பணிவான வணக்கத்தினை அவர்களது பாதங்களுக்கு காணிக்கை ஆக்க கடமைப்பட்டுள்ளோம். மேலும், நித்த, சுத்த, புத்த, முத்த, சத்திய, பரமானந்த அத்வைத சொரூபமாகிய பிரம்ம சொருபத்தினை அனைவரும் அறியும் படியாக விளக்கும் முகத்தான் இந்த உரைநூலில் பல முத்தாய்ப்பான சிறப்பு அம்சங்கள் உள்ளன. அவை யாதெனில் ஒவ்வொரு பாடலுக்கும் ஸ்ரீ சுவாமிகளால் 1) அவதாரிகை 2) இதன் பொருள் 3) பதசாரம் 4) விசேடவுரை மற்றும் 5) இதன் தாத்பரியம் என 5 பிரிவுகளில் மிகவும் விஸ்தாரமாக விளக்கப்பட்டுள்ளது. பல திருஷ்டாந்தங்கள் கொடுத்து அழகுற விளக்கம் தரப்பட்டுள்ளது

இந்த உரைநூல் தற்போது 2வது பதிப்பாக (மறுபதிப்பு) போடப்படுவதால் சற்குருநாதர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக சுவாமிகளின் வாழ்க்கைக் குறிப்பு பற்றி சுருக்கமாக குறிப்பிட விரும்புகிறேன். சற்குருநாதர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக சுவாமிகளின் பேரன்கள் பலரில் நானும் ஒருவன் என்பதை நினைத்து பெருமை அடைகிறேன். ஸ்ரீ சுவாமிகள் ஆங்கிலம் 1849ம் வருடம் அதாவது தமிழ் சௌமிய வருடம் புரட்டாசி மாதம் உத்திராட நட்சத்திரத்தில் சபாபதிப்பிள்ளை அவர்களுக்கு ஒரே மகனாகப் பிறந்து துவக்கத்தில் ஆசிரியராக பணிபுரிந்து பிறகு வேதாந்த பிரவர்த்தக மடத்தினை ஸ்தாபித்து பலருக்கு சற்குருவாக இருந்து கைவல்லிய நவநீதம் மற்றும் பல ஞான நூல்களை அனைவருக்கும் பாடம் நடத்தி தான தர்மங்கள் செய்து வந்துள்ளார்கள்.

ஸ்ரீசுவாமிகள் தன்னை நாடி வந்த பல அடியார்களுக்கு ஞான உபதேசம் செய்து அநித்தியமான இந்த வாழ்க்கையில் பிறவித் துன்பத்திலிருந்து விடுபடவும் தடையற்ற ஆனந்தமாகிய பிரம்மானந்தத்தை அடையவும். அருளாசி வழங்கி வந்துள்ளார்கள்.

சற்குருநாதர் ஸ்ரீசுவாமிகள் கடந்த 09.04.1932க்கு சரியான தமிழ் பிரஜோத்பத்தி வருடம் பங்குனி மாதம் 27ம் தேதி கார்த்திகை நட்சத்திரத்தில் வெள்ளிக்கிழமை விதேக கைவல்லியம் அடைந்தார்கள். சற்குருநாதருக்கு அவரது பிரதான சீடர் ஸ்ரீசிதம்பர சுவாமிகள் மற்றும் தீவிர பக்தர்கள் திட்டக்குடி மருதமுதலியார் போன்றோர் பலரின் முயற்சியில் கருங்கல் திருப்பணி செய்யப்பட்டு 23.03.1942ல் அதன் முதலாவது கும்பாபிஷேகமும் 1972ல்

ஸ்ரீரெங்கசாமி சுவாமிகளால் 2வது கும்பாபிஷேகமும் மற்றும் எனது குடும்ப உறுப்பினர்கள் மற்றும் எனது முயற்சியால் கடந்த 29.10.2001ல் (தமிழ் விஷு வருடம் ஐப்பசி மாதம் 12ம் தேதி திங்கட்கிழமை) மூன்றாவது கும்பாபிஷேகமும் நடைபெற்றுள்ளது. ஸ்ரீசற்குருநாதர் பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார்கள். தற்போது உள் அன்போடு வணங்கும் அடியார்களுக்கு காரிய சித்தி நடைபெற்று வருகிறது என்பது உண்மை. நித்தியபடி பூசை மற்றும் ஆண்டு குருபூசை விழாவும் சீரும் சிறப்புமாக நடைபெற்று வருகிறது. தற்போது சுவாமிகள் எழுதிய கைவல்லிய நவநீதம் மூலமும் சுவாநுபூதி விளக்க உரை என்ற உரை நூல் தற்போது பலரின் சீரிய முயற்சியால் 2வது பதிப்பாக (மறுபதிப்பு) அச்சிடப்பட்டு வெளிவர உள்ளது.

இந்த 2வது பதிப்பினை சென்னை பாடியநல்லூர் கணபதி பதிப்பகத்தார் ஏற்றுக் கொண்டு அச்சிட்டு வெளியிட ஒப்புக் கொண்டு செய்வதற்காக அவருக்கு நமது நன்றியினை தெரிவித்துக் கொள்ள கடமைப்பட்டுள்ளோம்.

இந்த புத்தகம் அச்சிடப்பட்டு வெளிவர மிகவும் உறுதுணையாக இருந்த விருத்தாசலம் வேதாந்த மடத்தின் அதிபதியாக இருந்த காலம் சென்ற ஸ்ரீ ஞானப்பிரகாச சுவாமிகள், மற்றும் தத்போதம் குழுமத்தின் ஆசிரியர் ஸ்ரீஜவஹர் சுவாமிகள் மற்றும் கைவல்லிய நவநீத ஞானப் பெருமன்றம் பாடிய நல்லூர் மற்றும் கணபதி பதிப்பகத்தின் உரிமையாளர் திரு. கு.தியாகராஜன் அவர்களுக்கு நமது வணக்கத்தினையும் மகிழ்ச்சியினையும் தெரிவிக்க கடமைப்பட்டுள்ளேன் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நூல் சென்னை கணபதி பதிப்பகத்தார் அவர்களால் வெளி வர உள்ளது கண்டு அனைவரும் சந்தோஷமும் மகிழ்ச்சியும் அடைகிறோம். அவர்களுக்கு எனது மனமார்ந்த மகிழ்ச்சியை மீண்டும் தெரிவித்துக் கொள்கிறேன்.

09-04-2016
மன்மத வருடம், பங்குனி–27

இப்படிக்கு,

ஸ்ரீ சற்குருநாதன்,
திருவடித் தொண்டன் அடிமை
கயிலை. மு. கார்த்திகேயன் முத்துபிள்ளை
முதன்மைக் கல்வி அலுவலர்(ஓய்வு) கல்வித் துறை
உடையார்பாளையம்.

உ

ஓம் தத் சத்

ஸ்ரீ கணேசாய நம:

# சற்குருவின் தோத்திரப் பாக்கள்.

உரையாசிரியரின் பிரதம மாணாக்கர்

ஸ்ரீ சிதம்பரசுவாமிகள் இயற்றியது.

---

(எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.)

அருளார னன்பு வகம்புறத் துறவோ
டத்வைதா னந்தமெய்ஞ் ஞானப்
பொருளெலாந் திரண்டோ ரருள்வடி வானப்
போதவா னித்தபூ ரணமே
மருளற மனத்தின் மயக்கெலா மகற்றி
மாசில்பே ரறிவெனக் கருள்வாய்
முருகெழில் முற்க புரியில்வா ழாறு
முகவருண் ஞானதே சிகனே. 1.

சிவந்திகழ் சீவ செகத்துமா யதீத
சித்ததாய் சிதைவில்பே ரொளியாய்த்
தவந்திகழ் மோன சாந்தியா யிலகுந்
தத்துவா தற்பதப் பொருளே
பவந்திகழ் கடற்கோர் புணையதா யிலகும்
பரமனே பாவியேன் றனக்கும்
உவந்தருண் முற்க புரியில்வா ழாறு
முகவருண் ஞானதே சிகனே. 2.

நித்தியர் தனைவந் தடைந்தசா தகர்கள்
நெஞ்சுற மறையுப நிடதச்
சத்தியப் பொருளின் சாரமா மதனைச்
சாற்றியங் கவர்க்குப சாந்தி
சித்தியா லளித்துச் சித்ததாய்த் திகழ்வோய்
சிறியனை யாள்வதுன் கடனே
முத்தனே முற்க புரியில்வா ழாறு
முகவருண் ஞானதே சிகனே. 3.

துன்னுமேழ் பவ்வா ரிதியதிற் றரங்கத்
துரும்பென துகள்மனப் பாச
மென்னுமிவ் வலையாற் படுந்துய ரடியே
னெந்தையே யிம்பமிக் கெளிதோ
உன்னுமெய்ஞ் ஞான மரக்கல மெனக்கிங்
குதவி நன்முத்தியாங் கரைசேர்
முன்னுறு முற்க புரியில்வா ழாறு
முகவருண் ஞானதே சிகனே. 4

தவமெலா முடிந்துந் தண்மதி முகமாய்த்
தனதடி யார்கள்சஞ் சிதமாம்
பவமெலாம் வேறோ டழித்துமெய்ஞ் ஞானப்
பரசுகக் கொடிநிறைத் தாள்வோய்
சிவமெலா மெனுநல் லுணர் வுருக்காட்டிச்
சிறியன்றீ வினையெலாஞ் சிதைத்தாள்
முவமெலா முற்க புரியில்வா ழாறு
முகவருண் ஞானதே சிகனே. 5.

எண்ணருஞ் சனனத் தீவினை யனைத்து
மெழுந்து முத்தாப வெம்பிணியாய்ப்
பண்ணருந் துயரப் படுத்திடு மிதனைப்
பற்றிடா தகற்றிநின் பதமாம்
நண்ணரு ஞானா தீதநற் சுகத்தை
நாயினேற் கருள்வையின் னமுதம்
உண்ணுநன் முற்க புரியில்வா ழாறு
முகவருண் ஞானதே சிகனே. 6

சற்குணக் கடலே சராசர மெதிலுஞ்
சமமதா மபேதசிந் தையனே
நிற்குண வடிவே நிராதர வெளியே
நிரந்தரா னமானுபூ தியனே
சிற்குண ஞானந் திகழ்சிவ மோனஞ்
சிறியனுக் களிப்பது மென்றோ
முற்குண முற்க புரியில்வா ழாறு
முகவருண் ஞானதே சிகனே. 7.

ஓம் மகாகணபதயே நம:

சிவமயம்

# முகவுரை

இந் நிலவுலகின் கண் சீவான்மாக்கள் துக்க நிவர்த்தியும் சுகப் பிராப்தியுமே விரும்புகின்றனர் என்பது யாவருக்கும் தெரிந்தவிஷயம் இத்தகைய துக்கநிவர்த்தியோடு கூடிய சுகம். ஆன்ம ஞானம் ஒன்றினாலேயே அடையப்படும். இச் சம்சாரத்தில் ஆன்ம ஞானத்தை தவிர மேலானபேறு வேறொன்றில்லை. ஏனெனில் ஆன்ம ஞானவாயிலாக மோட்சத்தை அடைந்த அதிகாரிகள் மீண்டும் சம்சாரத்திற்கு வருவதில்லை. ஆதலால் ஞானிகளுக்கு பிறப் பிறப்புகளின் நீக்கமாகிய அனுவிருத்தியே உண்டு. இச் சீவான்மா அஞ் ஞான நிவர்த்தி பூர்வகமாய் தனது சச்சிதானந்த வடிவமாய் நிலைத்தல்தான் மோட்ச மெனப்படும். பிரமலோக முதலிய வற்றை அடைதல் மோட்சமன்று. கர்மங்களால் செய்யப்பட்டவைங்கூழ் எவ்வாறு நாசத்தை அடைகின்றனவோ, அவ்வாறு நல்வினையால் சம்பாதிக்கப்பட்ட சொர்க்க முதலிய யாவும் நாசத்தை அடைகின்றன. நித்திய ஸ்வரூப மோட்சமடையும்பொருட்டு சர்வஞ்ஞத்வாதி சகல கல்யாண குணகளாலங்கிருத பரம கிருபாலுவான சர்வேஸ்வரன் அதிகாரிகளின் வேறுபாட்டினால் அவர்களுய்ய கர்மம் உபாசனை ஞானம் என்னும் மூன்றினையும் வேதங்களின் வாயிலாகக்கூறி அருளினர். இவற்றுள், கர்மம் உபாசனை இரண்டும் சித்த சுத்திக் கேதுவாயும், ஞானம் ஒன்றே அனர்த்த நிவர்த்தி ஆனந்த பிராப்தி வடிவ மோட்சத்தைப் பயப்பதாயும் இருத்தலால், பண்டைக்காலத்து மகரிஷிகள் ஞானம் ஒன்றையே பிரதி பாதிப்பதாகிய ஸ்ரீ பிர்ம சூத்திரம் ஸ்ரீ பகவத்கீதை உபநிஷத்துக்களாகிய வேதாந்த நூல்களை அருளிச்செய்தனர். இம் மூன்றிற்கும் ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய ஸ்வாமிகள் செய்த பாஷியங்களே பிரஸ்தானத் திரயமென்று உலகத் பொன்போல் போற்றப்பட்டு வருகின்றன.

இவற்றை அநுசரித்து ஆன்றோர் வழிநூல் சார் நூலாக வாசிட்டம் பஞ்சதசி முதலிய நூல்களை இயற்ற அருளினர். அவைகளை ஆராய்ந்தறியும் சக்தியில்லாத தீவிர முமூட்சுக்களாகிய அதிகாரிகள் சுலபமாய் அறிந்து அநுஷ்டித்து மோட்சமடையும் பொருட்டுப் பெருங் கருணையி னல்,, ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் வடமொழியிலுள்ள பிரஸ்தானத் திரய முதலிய வேதாந்த நூல்களின் சாரமான கருத்துக்கள் அமையும்படி தமிழ் மொழியில் செய்யுள் வடிவ மாய்க் கைவல்லிய நவநீத மென்னும் ஞான நூலை இயற்றி அருளினர்.

அதற்குப் பல உரைகள் இருப்பினும் பெரும்பாலும் ஸ்ரீபொன்னம்பலசுவாமிகள் இயற்றிய உரையையே ஆதரித்து அநுஷ்டித்து வருகின்றனர். அவற்றை ஆராய்ச்சி செய்யும் சக்தி இல்லாத தீவிர முமூட்சுக்களின் மீது கருணை கூர்ந்து வேதாந்த பாஷா கிரந்தங்களை ஐயந்திரிபற உணர்ந்து சுரோத்திரிய பிரஹ்மநிஷ்டராய் சகசநிட்டையுடன் வேதாந்த பிரவர்த்தகராய் அநேக அடியவர்கட்கு ஆத்ம ஞானத்துக் கேதுவாகிய அத்தியான்ம சாஸ்திரங்களை உபதேசித்துக் கொண்டும் முறகபுரி க்ஷேத்திரமென்னும் உடையார்பாளை யத்தின்கண் எழுந்தருளியிருந்த என் சற்குரு ஸ்ரீ ஆறுமுக ஞான தேசிக சுவாமிகள், இக் கைவல்லிய நவநீதத்திற்கு எளிய நடையில் கற்பவருக்கும் கேட்பவருக்கும் அஞ்ஞானத் தைப் போக்கி ஆத்மஞானத்தை விளக்கி ஆனந்தம் கொடுக் கக்கூடிய முறையில் அநேக உதாரணங்களோடு தாத்பரியங் களை விளக்கிக்காட்டிச் சுவாநுபூதி விளக்கம் என்னும் ஒருரை இயற்றிக் கையெழுத்துப் புத்தகமாக வைத்துகொண்டு சீடர் களுக்கு உபதேசித் திருந்து கலியுகாதி 5032-க்கு பிரஜோத் பத்தி௵ பங்குனி௴ 27௳ சுக்கிரவாரம் திருதியை, கார்திகை கூடிய நாளில் விதேக கைவல்லியத்தை அடைந்து உடையார் பாளையம் க்ஷேத்திரத்தில் திருக்கோயில் கொண்டு எழுந் தருளினர். அத்தகைய பெரியாருக்கு நித்திய நைமித்திய பூஜைகள் நடந்து வருகின்றன.

அவர்களால் செய்யப்பட்ட கைவல்லிய நவநீதம் சுவாநு பூதி விளக்க உரையை அச்சிட்டு உலகோபகாரமாக வெளி படுத்த வேண்டுமென்று ௸ சுவாமிகளின் பிரதான

ரர்கிய ஸ்ரீ சிதம்பர ஸ்வாமிகள் பிரேரணை செய்தும்பரிசோதித்தும் தந்தார்கள். சிட்ர்களும் அன்பர்களும் இதற்குத் திரவிய சகாயம் செய்தனர். எல்லோரும் இறைவன் திருவருளால் சித்தசுத்தி துவாரா ஞானனந்தம் பெற்றுய்யுமாறு பிரார்த்திக்கிறேன்.

ஆன்றோர் பணியை மேற்கொண்டுள்ள அடியேன் முயற்சி இறைவன் திருவருளால் அச்சிட்டு முடிவு பெற்றது. கல்வியில் அதிகப் பயிற்சி இல்லாதவர்களும் இந்நூலை ஒரு முறை இருமுறை ஆராய்ச்சி செய்வதினலேயே சாதனங்கள் பெற்று ஆன்ம சாட்சாத்கார ஞானத்தை அடையத் தகுதி உள்ளவராவார்கள் என்பது திண்ணம். ஆனதால் ஒவ்வொருவரும் விரும்பி வாங்கி அமுதம்போல் அநுபவிப்பது இன்றியமையாததாம்.

இதற்கு அன்பு பாராட்டி உதவிபுரிந்த அண்ணுமலை சர்வ கலாசாலை தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமான் பூவராகம் பிள்ளை, அவர்களுடைய நன்றி என்றும் மறக்கற்பாற்றன்று.

சிதம்பரம்
விக்ருதி
வைகாசி 1உ

சற்குருநாதன் அடிமை
உடையார்பாளையம்சோமசுந்தரம்பிள்ளை, என்ற
**முத்தானந்தன்.**

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கைவல்லிய நவநீத

## உரைச் சிறப்புப் பாயிரம்.

---

திருவாரூர் ஸ்ரீ S. நீலகண்ட சுவாமிகள் இயற்றியது.

தரவு கொச்சகக் கலிப்பா.

---

கங்கைசேர் சடையுடைய கண்ணுதலெம் பெருமானின்
துங்கமுறு நல்லருளாற் சோழவள நாடதனில்
தங்குபுகழ் நன்னிலத்துத் தாண்டவரா யப்பெரியோன்
பங்கமற விவ்வுலகிற் பகர்கைவல் லியநூற்கே 1

விற்பனநல் விசேடவுரை விரிவுறப்பல் விளங்கிடினும்
*அற்றவற்றை யறியாற்ற லவகாச மிலர்க்கிரங்கிப்
பற்றுபதப் பொருளுடனே பதசாரங் கருத்துரைகள்
▲ பெற்றசுவ அநுபூதிப் பெயர்விளக்கத் தாற்றந்தான். 2

நீர்மேவவ் வளநாட்டு நிலவுடையார் பாளையத்துப்
பேர்மேவு மாறுமுகப் பீடுபெறு தவமுனிவன்
சீர்மேவு மழபாடித் திகழுசுயம் பிரகாச
நேர்மேவு குருபானி னிறையருள்பெற் றுளசீலன். 3

நற்றவத்து நாயகனாய் ஞானவொளிச் சூரியனாய்
முற்றறிஞர் போற்றியிடு மூதுயர்கல் விக்கடலாய்க்
குற்றமறு குணக்குன்றாய்க் குன்றாவி ராகவெற்பா
யுற்றகரு ணைக்கடலா யுள்ளவனப் பெரியோனே 4

அன்னவனி னநுக்கிரக மடைந்துயுமுத் தானந்தன்
துன்னுபல்சீர் சிதம்பரத்துத் துலங்குறுசற் குருவிலாச
மன்னுமடத் துறைதுறவி மாண்பெறுமந் நூலுரையைப்
பொன்னுறவச் சிட்டெவர்க்கும் பொருந்தவுப கரித்தனனே.

---

*அற்று — அவற்றை அத் தன்மைவாய்ந்த அவற்றினை

▲ சுவ அநுபூதி பெயர் விளக்கத்தால் — என்பதனை சுவ பூதி விளக்கப் பெயரால் என அந்வயிக்க.

## உரையாசிரியரின் பிரதம மாணுக்கர்
## ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் இயற்றியது.

நித்திய முத்தன் நிகரிலா வீசன்
சொப்பனம் போலச் செப்பு கற்பனையாம்
ஈட்டித் தாக்கி யிரட்சித் தொழிக்கும்
இப்பெரு முலகத் தெழிலா ருறுபுகழ்
நன்னில மெழுந்த நாரண குரவன்
தன்பாற் றோன்றிய் தாண்டவ ராயன்
அற்புத குணத்தோன் அருளுடை வள்ளல்
ஆனந்தா தீதத் தழுந்தி யவசமாஞ்
சிந்தையின் மகிழ்ச்சி செகமெலா நிறைய
ஆனந்தம் வியக்கோ அற்புதம் வியக்கோ
சொக்கெனச் சொக்கித் துரிசற நின்றோன்
பாற்கட லென்னப் படர்வே தாந்த
உபநிட தாதியின் வொண்பொரு ளுணர்ந்து
சூத்திரப் பாடியச் சூழ்பொரு ளுணர்ந்து
தள்வன தள்ளிக் கொள்வன கொண்டு
அத்தியா ரோப அவ்வா தத்தான்
தத்துவ மசியெனச் சாற்றுமா வாக்கியந்
தத்பதந் துவம்பதஞ் சார்பொரு ளதனில்
வாச்சி யார்த்தம் வகுத்திடும் பேதம்
இலக்கிய வர்த்தம் இரண்டு மொன்றெனா
அசிபத வர்த்தம் ஐக்கிய முணர்த்தும்
வேத நான்கும் விளம்புவ திதுவெனச்
சாதன நிறைந்த சற்குண சீடர்க்
கான மோன நிட்டை கைகூடச்
சாட்சாத் காரச் சகசா நுபவமுறச்
சகல சந்தேகம் சாரா தூரம்பெற
சர்வ சாத்திர சாரமு மிதுவென
நற்கை வல்லிய நவநீதம் தம்

அநுபவ வலியால் அமைத்தா னிதற்கு
ஆன்றோர் பலவுரை ஆற்றினா ரதனில்
பொன்னம் பலகுரு புகழ்நிறை முனிவன்
இயற்றிய வுரையே யெவரும் போற்றத்
தகுதிய தாயினும் தருக்கம் ஞான
நூற்பல வுணரு நுண்ணறி வாளர்க்
கறியுந் தரமென ஆய்ந்தறி வுற்றுத்
தன்குரு வாக்கை தன்னுட் கொண்டு
பரந்தநூல் பார்க்க மாட்டா மந்தரும்
உணரு மாறு வுரைப்பனென் றருளிய
வாக்கிற் கிணங்க வரைந்தது மன்றிச்
சுயவநு பவமாய்ச் சுவாநு பூதி
விளக்க வுரையென விளங்கச் செய்தல்
நறுநெய் பெருமணம் நன்றெனக் கொள்ளல்
சசிசூரி யற்குச் சார்ந்துள கலைகள்
கிரண முறையே கிளர்வுற நிறைதல்
அழகு வடிவே அவ்விதம் இவ்வுரை
செவ்விதின் விளங்கச் சிறுவரும் விரைவில்
வைராக் கியாதி வைபவம் பெற்றுச்
சிரவண முறையாய்ச் சித்தம் சிறுகி
இடுக்க ணீங்கி இன்புரு வாகப்
பதப்பொருள் விசேடம் பதசா ரத்தொடு
தாற்பரியம் மெனத் தகவுரை தந்தான்
காவிரி வடபால் கவின்புகழ் வனமாந்
திருமழ பாடித் திருத்தலந் தன்னில்
தினமணி போன்று திகழ்வுற உதித்தோன்
சதுரப் பாடுடைச் சற்குணக் கட்லோன்
திருநட ராஜன் றிருவரு ளுடையோன்
சாதகங் கழன்று சாத்திய மிறந்து
நாட்டந் தேட்ட நவைமுத லறுமதி
ஊணும் உறக்கமும் உடுப்பவும் இன்றி
நாணப் புதருள் நதிக்கரை யோரம்

கொள்ளிட மணலிற் கோடை நடுவெயில்
இருந்தும் புரண்டும் எதிருறப் படுத்துங்
கண்டோர் களிப்பக் கேட்போர் வியக்க
ஆனந்த ரசமா யநுபவ விலாசக்
கீர்த்தனஞ் செய்து கெம்பீரத் தொடும்
அவதூத மாநிலை அருனோக் கினனுஞ்
சுயம்பிர காசநற் சுவைநற வொழுகும்
பாதப் போதைப் பற்றி வீட்டின்ப
நித்திய சாட்சி நிறைவறி வானோன்
சத்திய நிராசைதன் சமநிலை ராச்சியஞ்
சகசா சிதசுதன் சார்ந்துள மகிழ்வான
மைத்திரி யாதி மாண்புறு குணங்கள்
தீரத் தன்மை செவ்வினை யுள்ளோன்
சீலம் பொறுமை சிறந்துள சாந்தம்
உதாரமும் பரம மௌனிவிடு தெளிவோன்
என்னுடைக் குருவா மெழிலருண் மூர்த்தி
பசுபதி யான பயரணி மகாலிங்
கேசன் வாழும் கேதமில் உடையார்
பாளைய மென்னும் பண்பெழு நகரில்
மரபு விளங்க மகேசன் வழிபடும்
நாட்டிய தர்ம நலம்பெறச் செய்யும்
கார்காத்த வம்ச கற்பகத் தருவென
அருண்மிகு வள்ளலா யவதரித் தவனார்
திருமான் மருகன் திருப்பெயர் வாய்ந்த
ஆறு முகமென் றமர்குரு பரனே.

---

## திருவையாறு ஸ்ரீ சித. நாராயணசாமி சுவாமிகள்.

## இயற்றியது.

---

### வெண்பா.

1. மிக்கோர் புகழும் விழுப்பெருஞ்சீர்க் கைவல்யத்
தக்க தொருநூற்குத் தாரணியோர் — மிக்கமகிழ்
கொள்ளவுரை செய்தளித்தான் கோமான் குருபரனும்
வள்ளல்சுய வாறுமுக மன்.

2. தெருளாரும் நன்முனியாய்த் தேடிவரு வோரை
அருளானல் அத்துவி தியாக்கி — யிருள்விடியச்
செய்துடையார்பாளையத்திற்றெய்வமதாய் வாழ்ந்தவவன்
செய்தவுரை யச்சில்வரத் தேர்ந்து.

3. ஆறு முகமுனிவ ரன்ப னருந்துறவி
ஆறு முளம்படைத்த வானந்தன் — தேறியநன்
முத்தானந் தப்பெரியோன் முன்மைபெறப் பதிப்பித்
தித்தரையோர்க் கீந்தா னினிது.

---

## உரை ஆசிரியரின் மாணாக்கருள் ஒருவரான
## சிதம்பரம்
## சற்குரு விலாச மடம்
## முத்தானந்தன் இயற்றியது

---

திகழ்கின்ற சோழவள நாட்டதனின் மிக்கதோர்
சீர்பெருகு பொன்னிவட பால்
சிறந்தவுடை யார்பாளை யந்தன்னில் வாழ்சீவர்
செய்தநற் புண்ணியத் தால்
புகழ்தக்க வகண்டபரி பூரணப் பிரமமே
பொருவிலா மனிதவுரு வாய்
புகல்மூன்று 'தாபமது பொறுக்கொணா வதிகாரி
பொன்றொணா பதமெய் தவே
மகிழ்வாக வேதாந்த பிரவர்த்தக மடமதில்
மாவாக்ய தாத்பரி யமே
மாறாது போதித்து மாணவர்க் கநுகூல
மாகவே கைவல்ய நூற்
இகழ்விலாச் சுவாநுபூ திவிளக்க வுரைதனை
இவ்வுலக மீடேற வும்
இந்தநம் ஆறுமுக ஈசனும் ஞானகுரு
இருபாத மலர்சூடு வாம்.

---

அத்தியூர், அனுகூல மாமுனிவர் ஆசிரமம்

## ஸ்ரீ கிரீசானந்த சுவாமிகள் இயற்றியது.

---

சீர்கொளுஞ் செல்வந் திகழ்மணி ஞாலச்
சீவர்கள் அகத்திருள் நீக்கிப்
பேர்கொளு மசபா மந்திர மதனற்
பிரமநன் னிலையினைக் காட்டிக்
கார்கொளு மகந்தை மனஞ்சுழல் வெருளிக்
கட்டவிழ்த் தருளினைப் புரிந்த
பார்கொளும் உடையார் பாளையந் திகழும்
பதியறு முகமகா னன்றே.

எழின்மிகு தவத்தோன் சுயம்பிர காசன்
இணையடி இளைந்தநற் றூயோன்
வழிநெறி யறியா மாந்தரு முணர
வகுத்தனன் கைவல்ய மதற்கே
யழிவிலாச் சுவாநு பூதிவி ளக்க
மாமுறை பிறவிவெங் கடலாம்
பழிகள்வந் தணுகா வங்கமா மாந்தர்
பயன்றர வையம்வாழ்ந் திடவே.

---

உ
கணபதி துணை
சிவமயம்

# கைவல்லிய நவநீதம்

## மூலமும் சுவாநுபூதி விளக்கவுரையும்

---

## நூன்முகம்

வடமொழி தென்மொழியில் வன்மையுள்ள இந்நூலாசிரியர் தாமடைந்த அத்துவிதஞான அப்பிரதி பந்தா பரோட்ச சாட்சாத்கார அநுபவத்தை முமூட்சுக்கள் எளிதிலடைந்து ஆனந்தாதீதமாகும் பொருட்டுப் பேரருளினாற் சொல்லப் புகுந்த இந்நூல் தேகமனோமதவாதி விக்கினமின்றி இனிதினிறைவேறும் பொருட்டும், இந்நூலைப் பெரியோர் அங்கீகரிக்கும் பொருட்டும், படிப்போர் கேட்போர்கட்குத் தேக விக்னமின்றி ஏகாக்கிரசித்த முதலியனவுண்டாய் ஆனந்தாதீதஞ் சித்திக்கும் பொருட்டும், இந்நூல் பாரம் பரியமாய் விளங்கும் பொருட்டும், இதனந்தரங்கமான பிரமஸ்வரூபத்தை நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமானந்த அத்துவிதஸ்வரூபமாகவும் சர்வ காரண சத்துச் சித்தானந்த நித்திய பூரண பரமாத்துவித ஸ்வரூபமாகவும் துதிப்பான் ஞெருட்ங்குகின்றனர்.

(அவதாரிகை) இச்செய்யுளில் நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமானந்தாத்துவிதஸ்வரூபமாகத் துதிக்கின்றார்.

பொன்னில மாத ராசை பொருந்தினர் பொருந்தாருள்ளந்
தன்னிலந் தரத்திற் சீவ சாட்சிமாத் திரமாய் நிற்கும்
எந்நிலங் களினு மிக்க வெழுநில மவற்றின் மேலாம்
நன்னில மருவும் ஏக நாயகன் பதங்கள் போற்றி 1

இதன் பொருள்:

பொன் – செல்வத்தினிடத்தும், நிலம் – பூமியினிடத்தும், மாதர் – மடவாரிடத்தும், ஆசை பொருந்தினர் – ஆசையுள்ள

அஞ்ஞானிகளும், பொருந்தார் – நிராசையுள்ள ஞானிகளு மாகிய இவர்களது, உள்ளந்தன்னில் – இதயாம் பரத்திலும், அந்தரத்தில் – பேதங்களிடத்திலும், சிவசாட்சி மாத்திர மாய் – சிதாபாசனுக்குச் சாட்சி மாத்திரமாக, நிற்கும் – நிறைந்திருக்கின்ற அறிவும், எந்நிலங்களினும் – எவ்விதமான பூமிகளிலும், மிக்க – மேலாகிய, எழுநிலமவற்றின் – ஞான பூமிகளேழினுள், மேலாம் நன்னிலமருவும் – முடிவாகிய துரிய பூமியிற் பொருந்திய, ஏகநாயகன் – அகண்டைகஸ்வரூப சர்வ சாட்சியும், பதங்கள் – (ஒன்றென்னும் அயிக்கிய சொரூப மாகிய) * திருவடியை, போற்றி – வணங்குவாம்.

பதசாரம்:

நவலோக நவரத்தின நவதானியம் முதலிய விற்கத் தகுந்த இகத்திலுள்ளவைகளும், சங்கநிதி பதுமநிதி சிந்தா மணி காமதேனு கற்பக விருட்ச முதலிய பரத்திலுள்ளவை களும், நாகரத்ன மு த லி ய பர்தாளத்துள்ளவைகளும், செல்வமென்பார் பொன்னெனவும், குறிஞ்சி நிலம், பாலைநிலம் முல்லை நிலம், மருத நிலம், நெய்தல் நிலமாகிய இகத்திற் பஞ்ச நிலங்களும் மேலுலகங்களும் கீழுலகங்களும் பூமியென்பார் நிலமெனவும், இகலோக ஸ்திரீ ரம்பாதி தேவ கன்னிகைகள் மடவாரென்பார் மாதரெனவும்,

பிரமாதி ஸ்தம்பாந்த சரஉயிர்களெல்லாம் ஞானி அஞ் ஞானி யென்னும் இருவகையாய் இருக்குமென்பார் ஆசை பொருந்தினர் பொருந்தரெனவும், உழுதல், தொழு தல், வரைதல், வாணிபம், வித்தை, சிற்பமாகிய அறுவகைத் தொழிலும் செய்து இகத்திற் பொன்னில மாதரையடையவும் யாக, தான, உபாசனை செய்து பரத்திலும் பர்தாளத்திலு முள்ள பொன்னிலமாதரை யடையவும் இச்சை செய்யும் அஞ் ஞானிகளென்பார் ஆசை பொருந்தினரெனவும், ஈசுவர

---

* நான்எனதற்ற நிலையே திருவடி, அந்நிலை இருதயத்தில் கூடஸ்த பிர்ஹ்மஐக்கியானுபவம் எனவும் கொள்க.

பதங்கள் என்றது சந்தஸ்நோக்கி ஒருமையில் பன்மை. சகுணமாகக்கொண்டு, பதங்கள் — திருவடிகள், என்று பன்மை கூறுவர்.

கிருபையினல் தத்துவஞானம் வந்து மித்யா புத்தியால் நிராசையுடைய ஞானிகளென்பார் பொருந்தாரெனவும்,

பசுவின் சரீரமெல்லாம் பாலிருந்தாலும் முலைக்காம்பிற் காணப்படுதல் போலவும் சூரிய கிரணம் எங்கும் பொருந்தினும் காந்தக் கல்லினிடத்து அக்கினி காணப்படுதல் போலவுஞ் சாட்சி எவ்விடத்திலும் நிறைந்திருந்தாலும் விளங்குதற்குரிய ஸ்தானம் இதயமென்பார் உள்ளந் தன்னிலெனவும், குறுமுனை முதல் கற்பகத்தருவரை அசரவுயிர்களிடத்தும் பஞ்சபூதம் மலை யாறு கோபுர முதலான அசேதனங்களிடத்துஞ் சாட்சி விளக்கமின்றி வியாபித்திருக்குமென்பார் அந்தரத்தி லெனவும், தூலசரீரம் நூறு வருடத்துள்ளும் சூட்சுமசரீரம் பிரளயத்திலுமிறக்கத் தத்துவஞானம் வருகிற வரையில் இறவாது சீவித்தும் சூரியப் பிரதிபிம்ப திட்டாந்தம்போன் மூன்று சரீரமுடையுவனாய், விசுவ தைசத பிராஞ்ஞனென்னு நாமத்தோடு அவத்தாத்திரயத்திலும், கர்த்தா போக்தா பிரமாத் துருவாய்ச் சண்டைக்காரன் போற் பஞ்சகோசத்தை அபிமானித்தும், விளங்குகிறவ னென்பார் சீவனெனவும், சீவன் விட்யாகாரமாய்ப் போமிடத்தும், சாட்சிக்காரன் போல் அதிற்றுக்கற்றறிந்தும், சீவன் முதலியன ஆத்மாவைக் குறித்துச் சட்மாய்ப் போதல் போலொன்றினுலுஞ் சட்மாகாமலும், சீவன் முதலியன அநித்தியமாய்ப் போதல்போலின்றி நித்தியமாகவும், இருக்கின்ற பிரக்ஞான பதார்த்தமாகிய வறிவு சொரூபமென்பார் சாட்சி மாத்திரமாய் நிற்குமெனவும்,

சகல சமயங்களு மடங்கிய அஞ்ஞானபூமிஏழுக்கு மேலானது ஞானபூமி யென்பார் "எங்கிலங்களினும்...எழுநில" மெனவும், அவைகளின் முடிவானதாயும் மேலடையும் பூமி ஒன்று அற்றதாயும் இருக்கின்ற துரியபூமி யென்பார் நன்னிலமெனவும், பிரமம் பதின்மூன்று பூமியிலும் விளங்காது பதினுலாவது துரியபூமியில் விலட்சணமாய் விளங்குமென்பார் மருவு மெனவும், ஆகாசமும் அநேகங்கடத்தில் வளைபட்டு அநேக ஆகாசமாய்த் தோற்றினும் ஒன்ருயிருத்தல் போலவும், சூரியன் அநேக கடசலத்தில் பிரதிபிம்பித்து அநேக சூரியனுகத் தோற்றினும் ஒன்ருயிருத்தல் போலவும், அனேக அவித்தையில் வளைபட்டு அநேக சாட்சியாகத் தோற்றினும்

அநேக அந்தக் கரணத்தில் பிரதிபிம்பித்து அனேக சீவன் போலத் தோற்றினும் ஒன்றாகவும், பிறவித் துன்பத்தை நீக்கி மோட்ச இன்பத்தைக் கொடுப்பதாகவும், இருக்கின்ற பிரம பத அர்த்தமாகிய சருவசாட்சி என்பார் ஏகநாயகனெனவும், சருவத்துக்கு மாதாரமான பிரக்ஞான பிரமபத வர்த்தமான அயிக்கிய சொரூப மென்பார் பதங்களெனவும், அவ்வயிக்கிய சொரூப வனுபவத்தால் தற்போதத்தை யொழிக்கின்றே னென்பார் போற்றியெனவுங் கூறினார்.

விசேடவுரை:

ஆசை பொருந்தாரென்ற பதத்துக்குப்பரத்தில் சனகாதி நந்தியாதி கருடாதி யாகுவாதியும் இகத்தில் அர்ச்சுனாதி அனுமாராதி கரிக்குருவியாதி நாகமாதி கூர்ம மச்சாவ தாராதியும், பாதாளத்தில் ஆதிசேடனாதி மாவலியாதியும் ஞானமுடையோரெனவும், சீவனென்னும் பதத்துக்குச் சூரியன் ஆபாசப்படுவதற்குச் சலம் வேண்டுவதுபோல் சித்தாபாசத் துக்கு அந்தக் கரணமும், சலத்துக்கு ஆதாரம் கடம்போல் அந்தக் கரணத்துக்கு ஆதாரம் தூலசரீரமும், அவ்விரண்டிற் கும் ஆதாரம் ஆகாசம்போல் இவ்விரண்டிற்கும் ஆதாரம் அவித்தையா சரீரமும், வேண்டுதலின் மூன்று சரீரமுடைய வனாய்ச் சண்டைக்காரர் ஒருவன் செய்கை மற்றொருவன் பேரிற் சுமத்துகிறதுபோ லன்னமய கோசத்தினது பருத்தல் இளைத் தலாதியும் பிராணமய கோசத்தினது பசிதாகாதியும் மனோமய கோசத்தினது காமக்குரோதாதியும் விஞ்ஞானமய கோசத் தினது நிச்சய மானாபிமானாதியும் ஆனந்தமய கோசத்தினது பிரியமோத பிரமோத வறிவறியாமையும் பிரகாசமே சுபாவ மானதான் தனதென்றும், எனதென்றும் அபிமானிப் பவனாய் விளங்குவோன் சீவனெனவும்,

"எண்ணிலங்களினும் மிக்க எழுநிலமவற்றின்மேலா நன்னில மருவுமேக நாயகன் பதங்கள் போற்றி" என்னும் பதங்களுக்கு மற்றைச் சாத்திர கர்த்தாக்க ளெல்லாம் நூன்முகப்பில் விக்கினேசுவரர் முதலிய கடவுளை வணங்கியிருக்க இந்நூலில் தனக்கு வணக்கம்கூறியது ஏனெனில் அக்கடவுளில் ஒன்றை வணங்கி மற்றொன்றை வணங்காதிருந்தால் நிந்தித்த தாக லானும் சர்வ சாட்சியாகிய தன்னுடைய ஐக்கிய சொரூபம் சமுத்திரம்போல அபாரமாக்வும் அதில் விஷ்ணு சிவன்

பிரமன் முதலிய சகல தேவதைகளும் அலை குமிழிகளாகவும் இருப்பதால் தன்னை (பிர்ஹ்மத்தை) வணங்கில் சருவ தெய்வத்தையும் வணங்கியதாகலானும் தனக்கு (பிர்ஹ்மத்துக்கு) வணக்கம் சொல்லப்பட்டதெனவுங் கொள்க.

இதன் தாற்பரியம்:

அதத்துவா விருத்தியினால் தம் சமாதியில் விலட்சணமாய் நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமானந்தாத்துவித அநுபவத்தில் விளங்கிய இருக்குவேத மகாவாக்கியார்த்த ஸ்வரூபத்தைத் துதி செய்ததாம்.

(அ - கை) முற்கூறிய பிரமசொரூபத்தைச் சர்வகாரண சத்துச் சித்தானந்த நித்திய பூரண பரமாத்துவித சொரூபமாகத் துதிக்கின்றார்.

ஈன்றளித்தழிக்குஞ் செய்கைக்கேதுவா மயனாய் மாலாய்
ஆன்ற வீசனுமாய்த் தானேயநந்த மூர்த்தியுமாய் நிற்கும்
பூன்றமுத் தனுமா யின்பப் புணரியா தவனாய் நாளுந்
தோன்றிய விமலபோத சொரூபத்தைப் பணிகின்றேனே.

(இ - ள்) ஈன்று – சிருஷ்டித்து, அளித்து – இரட்சித்து, அழிக்கும் – சங்கரிக்கும், செய்கைக் கேதுவாம் – இம்முத் தொழிற்குங் காரணமாகிய, அயனாய் – பிரமனாகியும், மாலாய்– விஷ்ணுவாகியும்,ஆன்றவீசனுமாய்–மாட்சிமையுள்ளவுருத்திரனாகியும், தானே – தானே (பிரஹ்மமே), அனந்தமூர்த்தியுமாய் – மற்றும் பல வடிவங்களாகியும், நிற்கும் – இருக்கின்ற, பூன்ற – பூரணமாய், முத்தனுமாய் –*அபாவம் விடுபட்ட நித்தியமாய், இன்பப்புணரி – ஆனந்த சமுத்திரமாய், ஆதவனாய்– ஞான சூரியனாய், நாளுந்தோன்றிய – திரிகாலத்திலும் காணப்படுஞ் சத்தாய் விளங்கிய, விமலபோத சொரூபத்தை– சுத்தசைதன்னிய ஸ்வரூபத்தை, பணிகின்றேன் – வணங்குகின்றேன்.

(ப – ம்) ஆணவத்திற் கட்டுண்டிருக்குஞ் சீவர்கள் கர்மபோகம் புசித்துத் தீர்ந்து மோட்சமடையும் பொருட்டுத்

---

* பிரமமே சகத்காரணமென் றறிவித்தற்கு (அபாவம் விடுபட்ட நித்தியமாய்) என்று பொருள் கொள்ளப்பட்டது

தவளக்கலிங்கந் தரித்தவராயும் தமனிய வண்ணராயும் சிகையக்ஞோபவீதராயும் மணிமகுட கனக குண்டல கேயூரராயுங் கடககங்கண மணிந்தவராயுஞ் சுவேதாம்பரதாரியராயுஞ் சுருதி வாக்கியராயும் பரசாயுதராயும் தண்டு கமண்டல தாரியருஞ் சரஸ்வதி சமேதராயும் அன்னரூடராயும் பிரமலோகாதிபதியாயும் பத்மாசனராயும் மிருந்து, பிரமாண்ட பிண்டங்களாகிய சர்வசராசரப்பிரபஞ்சங்களையும் சீவர்களினுடைய சஞ்சிதகருமமறிந்து சிருட்டி பண்ணுகின்றவனென்பார் அயனெனவும், தமனியத்தாளை தரித்தவராயும் சர்வாபரணராயும் புரிநூலழகராயும் நவரத்தின மணிமகுட கனக குண்டல கேயூரராயும் கடககங்கண கவுஸ்துவாபரணராயும் நீலமேகசாமள ஸ்வரூபராயும் பீதாம்பர தாரியாயும் பைந்துழாய் மௌலியராயும் பஞ்சாயுத பாணியாயும் ஸ்ரீயப்பதியாயும் கருடாரூடராயும் வைகுந்த பதியாயுமிருந்து சீவர்களின் நல்வினை தீவினைகளை யறிந்து சுத்தா சுத்த போகங்களைப் புசிக்கும்படி தன் மாயாசக்தியால் மயக்கிப் பிரமாண்ட பிண்டங்களாகிய சர்வ சராசரப் பிரபஞ்சங்களையும் திதி செய்கின்றவ ரென்பார் மாலெனவும், சுழுத்தியவத்தையிற் சாக்கிர சொப்பனமடங்குவதுஞ்* சுழுத்தி அம்மூன்றவத்தையிலுமிருப்பதுஞ் சுகஞ்செய்தலும் போல சார்த்தூல சருமமணிந்தவராயும் தந்தியுரி போர்வையராயும் சந்திர சூடராயும் சர்ப்பாபரணராயும் செஞ்சடாமகுட சிரோ ரத்தின பன்னக குண்டலகேயூரராயும் பொன்னிதழிசேர்புய்த்தராயும் புயங்க கங்கணராயும் புரிநூலழகராயும் சிலம்பணிதாளராயும் திரிபுராந்தகராயும் திரிநேத்திர தாரியாயும் திரிபுண்டர வழகராயும் மாணிக்க மணிவண்ணராயும் மலைமகள் பாகராயும் பரசாயுதபாணியாயும் இடபாரூடராயும் கயிலாய பதியாயுமிருந்து பிரம விஷ்ணுக்களைச் சங்கரித்தலும் முத்தொழில் வல்லவராயும் சீவர்களினுடைய பிராரத்துவமொழியுங் காலமறிந்து பிரமாண்ட பிண்டங்களாகிய சர்வசராசரப் பிரபஞ்சங்களையு முபசம்மாரம் செய்து சுகம் செய்தலுமுடைய சர்வஞ்ஞத்துவாதி ஷட்குண வைசுவரிய சம்பன்னரென்பார் ஆன்றவீசனெனவும்,

லோகாயுதன் முதலிய சமயவாதிகள் சொல்லும் தெய்வங்கள் செகத்காரணமல்ல. பிரமமே அநன்னிய நிமித்

* இங்குச் சுழுத்தி என்றது காரண சரீர அஞ்ஞானத்தை.

தேர்பாதான காரண (சிருட்டியாதி முத்தொழிற் செய்யுஞ் செகத்காரண) மென்பார் தானே யெனவும், சிவேகவர சகத்தாயிருப்பது சலட்சணமாக விளங்குகின்ற அயமாத்மா பிரமமென்னும் வாக்கியார்த்த சொரூபமென்பார் "அயனாய் ...நிற்கு" மெனவும், அகண்ட மென்றிருக்கும் ஈசுராதிகள் ஆகாசம் போன்ற தேசகாலவஸ்து பரிச்சேதமற்ற பிரமத்தைக் குறித்துக் கண்டமென்பார் பூன்றவெனவும், நித்தியமென்றிருக்கும் ஈசுராதிகள் மண்போன்ற பிராகாபாவ முதலிய நான்கபாவமு மற்ற பிரமத்தைக் குறித் தநித்திய மென்பார் முத்தனெனவும், மகத்தென்றிருக்கும் மநுட்டானந்த முதற் பதினொருவகை யானந்தமுங் கடல்போன்ற பிரமானந்த சாகரத்திறோர் திவலையென்பார் இன்பப்புணரி யெனவும், முக்கியமென்றிருக்கும் மின்னலாதி அட்டப் பிரகாசமுஞ் சூரியன்போன்ற பிரமப் பிரகாசத்தைக் குறித்து மின்மினிப் பிரகாசம்போல அற்பமென்பார் ஆதவனென்வும், சத்தென் றிருக்கும் ஈசுராதிகள் பழுதை போன்ற பிரமசத்தையைக் குறித்துப் பாம்பாதிபோல அசத்தென்பார் நாளுந் தோன்றிய வெனவும், முப்பத்தைந்து தத்துவம்போல் மலம் பொருந்தியது அல்லாததாகியும் சத்துச் சித்தானந்த நித்திய பூரணம்போற் சலட்சணத்துவ மாகாத தாயு மிருக்கின்ற சுத்த சைதன்னிய மென்பார் விமலபோத மெனவும், சைதன் னியம் குணமல்லவென்பார் போதசொரூப மெனவும், அச் சொரூபாகாரமா யிருக்கின்றே னென்பார் பணிகின்றே னெனவுங் கூறினர்.

(வி – ரை) "ஈன்றளி...ஈசனுமாய்" என்ற பதங்களுக்குச் செகத்காரண மொருவஸ்துவுக்கே தவிர இரண்டு மூன்று வஸ்துவிற் கூடாதாகலின் சிருட்டிக்குக் காரணமாத்திரங் கூறின் ஒரு குலாலன் உண்டாக்குவதை மற்றொருவன் உடைப்பதுபோற் சம்மாரத்துக்குக் காரணவஸ்து வேறுகு மாதலாலும், சிருட்டி சம்மாரகாரண மாத்திரங் கூறிற் சருவஞ் ஞத்துவ மில்லாத வுலண்டுப் பூச்சிக் கத்தொழில் இரண்டு மிருந்து மிரட்சிப்புத் தொழில் இல்லாமை போல ஸ்திதிக்குக் காரணம் வேறுகுமாதலாலும், தானே முத்தொழிற்கும் காரண மென்று பிரமத்தைத் தட்தத விருத்தியாற் றெரிவித்த தெனவும், "தானே" யென்றபதத்துக்கு லோகாயத ஞனவன் ரதா பிதாக்களால் சிருட்டி வுண்டாகின்றது; கண்டதே

காட்சி; ஆதலால் வேறே தெய்வமில்லை; ஆதலால் அவர்களே செகத்காரண மென்பது: மாதா பிதாக்கள் ஆணிச்சித்தால் பெண்ணும் பெண்ணிச்சித்தால் ஆணும் இரண்டுமின்றி அலியு முண்டாகையாலும், அவர்களுக்குப் பிராணனில்லாதபோது ஒரு தொழிலும் நடவாது பிராண னுண்டானபோது சகல தொழிலும் நடத்தலாலும், சுக்கில சுரோணிதங்களை இவர்கள் ஒன்றுஞ் செய்யாதிருக்க வேறே ஒரு வீசுரன் கரசரணாதி யவயவங்களாய்ச் செய்தலாலும், இவர்கள் பஞ்சபூதத்திற் பிறந்து இறத்தலாலும் கூடாது; சுபாவவாதியானவன் மஞ்சளும் சுண்ணும்பும் சம்பந்தப்பட்ட விடத்தில் சிவப்பு உண்டாதற்போல சுக்கிலமுஞ் சுரோணிதமுஞ் சம்பந்தப்பட்ட விடத்திற் கரசரணாதி யவயவ முண்டாதல் சுபாவமாதலினால் செகத்காரணத்துக்கு வேறே தெய்வமில்லை யென்பது: மஞ்சளையுஞ் சுண்ணும்பையும் சேர்க்கிறதற்கு ஓராள் வேண்டுவது போலச் சுக்கில சுரோணிதத்தைச் சம்பந்தப் படுத்துகிறதற்கு வேறேயோரீசுவரன் வேண்டுதலின் கூடாது; சாருவாகன் பிராணனிருக்குங் காலத்தில் சகல தொழிலும் நடந்து பிராணனீங்கிய காலத்தி லொரு தொழிலு நடவாதிருத்தலால் பிராணன் அசைவினாலேயே சுக்கில சுரோணிதஞ் சேர்ந்து சிருட்டி யுண்டாகுவது வேறே தெய்வமில்லை பிராணனே செகத்காரண மென்பது :

மனமில்லாத சுழுத்தியில் பிராணனாலே யொரு தொழிலும் நடவாதிருத்தலாலும், மனமானது அத்தையடக்கி விடுதலாலும், பிராணனை தின்னபக்கத்தி லோடுகிறேனென் றறிவில்லாத சடமாதலால் சுக்கில சுரோணிதத்தை யறிந்து சேர்க்கிறதற்கு சித்தா யிருக்கின்ற வேறே யோரீசன் வேண்டுதலாலும், அபஞ்சீகிருத பூத ரசோகுணசமட்டியிற் பிராண னுண்டாயிறத்தலாலுங் கூடாது; உபாசகன் மனமிருக்கின்ற காலத்திற் சிருட்டி நடக்கிறது மனமில்லாத காலத்திற் சிருட்டி நடக்கவில்லை; ஆதலால் மனமே செகத்காரணம் வேறே தெய்வமில்லை யென்பது: புத்தி யில்லாதபோது மனம் ஆறலிக்கின்ற படியாலும் மனத்தைப் புத்தியானது சங்கற்பியாதிருக்கவும் செய்தலாலும், சிருட்டிக்கிறதற்கு தானே அறிவில்லாதிருத்தலால் சுதந்தரவறிவுடைய வேறே யோரீசன் வேண்டுதலாலும், மனது அபஞ்சீகிருதபூத சத்துவகுண சமட்டியில் உண்டாயிறத்தலாலுங்

கூடாது. க்ஷணிக விஞ்ஞானியானவன் புத்தியில்லாதபோது மனே சங்கற்பந் திரப்படாமல் சிருட்டியில்லாமல் போதலாலும் இருக்கும்போது சங்கற்பம் திரப்பட்டுச் சிருட்டி யுண்டாதலாலும் புத்தியே செகத்காரணம், வேறே தெய்வமில்லை யென்று கூறுவன்; பிரியமில்லாதபோது நிச்சயித்த தொழில் நடவாமலும் பிரியமிருக்கின்றபோது நிச்சயித்த தொழில் நடக்கின்றதாலும் சிருட்டிக்கிறதற்குப் புத்திக்குச் சுதந்தரவறிவில்லா திருத்தலால் சுதந்தர வறிவுடைய வேறேயோரீசுரன் வேண்டுதலாலும் அபஞ்சீகிருத பூதங்களின் சத்துவ குண சமட்டியிற் புத்தியுண்டா யிறத்தலாலுங் கூடாது.

பௌத்தனானவன் பிரியமிருக்குங் காலத்தில் சிருட்டி நடக்கிறது பிரியமில்லாத காலத்திற் சிருட்டி நடக்கவில்லையாதலால் ஆனந்தமே செகத் காரணம் வேறே யொரு தெய்வமில்லையென்று கூறுவன்; சுய ஆனந்தமாயில்லாது ஆத்ம பிரதி பிம்பானந்தமா யிருத்தலாலும் சிருட்டிக்கிறதற்கு அவ்வானந்தத்திற்குச் சுதந்தர வறிவில்லாதிருத்தலிற் சுதந்தர வறிவுடைய வேறேயோ ரீசுரன் வேண்டுதலாலுங் கூடாது. பிரசாபத்தியனானவன் ஆனந்தமயனான சீவன் கிஞ்சிக்ஞனானதினாலும் நினைத்தபிரகாரம் சிருட்டிக்கக்கூடா திருத்தலாலுஞ் சர்வக்ஞனாய் நினைத்தபிரகாரம் சிருட்டிக்கின்ற பிரமாவே செகத்காரணம் வேறே தெய்வமில்லை என்று கூறுவன்; பிரமாவானவன் அவனுடைய பஞ்ச சிரசில் ஒரு சிரசைக் கிள்ளின காலத்தில் அதைச் சிருட்டித்துக்கொள்ள வன்மையில்லாதவனாகையாற் கூடாது. வைஷ்ணவ பாகவதாள் விஷ்ணுவினது உந்திக்கமலத்திற் பிரமா பிறந்து செகசிருட்டி பண்ணுகின்றமையால் விஷ்ணுவே செகத்காரணம் வேறொரு தெய்வமில்லை என்று கூறுவர்; பிருந்தையை உண்டாக்கிக் கொள்ளச் சத்தி யில்லாததினால் விஷ்ணு செகத் காரணமென்பது கூடாது. சைவாகமக்காரர் சிவனது பாதம் விஷ்ணு காணாதபடியினால் சிவனே செகத்காரணம் வேறொரு தெய்வமில்லையென்று கூறுவர்; மாயையிற் றோன்றி யொடுங்குதலாற் கூடாதெனவும் அன்றியும் குலாலன் கடோற்பத்திக்கு உபாதான மண்ணை வேண்டுவதும் தன்னைப்போலன்னிய குலாலன் இருப்பதும்போலின்றி தன்னை (பிர்ஹமத்தைத்) தவிர அன்னிய நிமித்தோபாதான வஸ்துவில்லாத படியாலுங் கூடாதெனவும்.

பூன்றவென்ற பதத்துக்குத் தேசகால வஸ்துவா லபரிச் சின்னமெனா மூன்று விசேடம் யாதுக்கெனில் தேசத்தா லபரிச் சின்னத்துவ மென்றுற் போதாதோ வெனில் ஆகாயஞ் சகல தேசத்திலும் வியாபகமா யிருக்கின்றமையால் அதற்குத் தேசத்தா லபரிச் சின்னத்துவமாகின்ற அகண்டத்துவம் வரும். அதை நிராகரிக்குநிமித்தம் காலத்தினுலும் அபரிச் சின்னத்துவமெனும் இரண்டாம் விசேடமும் வேண்டும்.

அவ்வாகாயத்துக்குக் காலத்தினுல் அபரிச்சின்னத்துவ மில்லையாவெனில், அது சிருட்டி காலத்திலுண்டாய் பிரளய காலத்தில் இறத்தலால் இல்லை; ஆனுல் அவ்விரு விசேட மாத்திரம் போதாதோ வெனில் காலம் விபுவாயிருக்கின்ற படியால் தேசத்திலுைம் ஆகாசத்திலுைம் அபரிச் சின்ன மாயும் தன்னுலே தனக்குப் பரிச்சேதங் கூடாததாயு மிருக் கின்றமையா லதற் ககண்டத்துவம் வரும், அதை நிராகரிக்கு நிமித்தம் வஸ்துவினுலும் அபரிச் சின்னத்துவமெனும் மூன்றும் விசேடமும் வேண்டும். காலத்துக்கு வஸ்துவினு லபரிச் சின்னத்துவமில்லையாவெனில் அது ஆகாசாதி வஸ்து வல்லாதபடியாலில்லை. ஆகையால் * ஆத்மாவைத் தவிர ஆகாச காலங்கட்குத் திரிவித பரிச்சேத சூனியமான அகண்டத்துவங் கூடாது; அப்படியானுல் ஆத்மாவுக்கும் நான் இந்த தேசத்தில் இருக்கின்றேன் அந்த தேசத்தி லிருக்கவில்லை யென்று தேசத்திலுைம் நான் முன்வருடத்திற் பிறந்தேன் கொஞ்ச நாளைக்குப்பின் னிறந்துவிடுவேனென்று காலத்திலுைம் நான் பிருதிவியாதிகளல்ல என்று வஸ்து வினுலும் பரிச்சின்னத்துவ மிருக்கின்றதே யெனில் அத்தி யாசமாய் தேகத்தை யபேட்சித்து வருகின்றதே தவிர ஆத்மாவிற்கில்லை.

கடமிருக்கிறது படமிருக்கிறது பிருதிவி இருக்கிறது அப்பு இருக்கிறது என்று பூதபௌதிகமாகிய சமஸ்த பிரபஞ்சத்திலும் ஆத்மா வியாபகமாயிருப்பதால் தேசத்தினு லபரிச் சின்னத்துவமும், ஆத்மா அனுதியாயிருப்பதால் பூத காலத் தாலும், நித்தியனு யிருப்பதால் பௌஷிய காலத்தாலும்,

* இங்கு ஆத்மாவை என்றது பிர்ஹ்மாபின்னமெனும் அபேதத்தால்.

தேக விலட்சணமாயிருப்பதால் வர்த்தமான காலத்தாலும், பரிபூரணமாயிருப்பதால் காலத்தா லபரிச்சின்னத்துவமும், சர்வாத்மனு யிருப்பதால் சுசாதி விசாதி சுவகதமாகிய மூன்று பேதமுமில்லா திருப்பதினுலும் வஸ்துவா லபரிச்சின்னத்துவ மும் ஆத்மாவுக்கு இருக்கின்றது.

அப்படியல்ல கடமிருக்கிறது தேவதத்தன் சைத்தி ராத்மா விருக்கின்ருனென்று சுசாதிகமுஞ் சுசாதிகபேதமும் பிருதிவியாதி யென்றும் கடாதி யென்றும் விசாதிகமும் விசா திகபேதமும் இச்சாத் துவேஷசத்துவ ரசோதமசென்று சுவ கதமும் சுவகதபேதமும் இருக்கின்றதேயெனில், ஆகாசம் உபா தியினுல் கடாகாசாதியாகத் தோற்றல்போல ஆத்மாவும் சரீரவுபாதியால் தேவதத்தனுதியாகத் தோற்றலால் சுசாதிக பேதமும், பிரபஞ்சம் அசத்தாகையால் விசாதிக பேதமும், இச்சையாதி அந்தக்கரண சுபாவமாகையால் சச்சிதானந்த மாத்திரவாத்மாவுக்குச் சுவகத பேதமுமில்லை. சத்துச் சித்து ஆனந்தமென்னும் பேதமில்லையோவென்னில், குளிரிளகல் வெண்மைபோல் பேதமில்லை; இந்தப் பிரகாரமாய்ப் பிரமம் தேசகால வஸ்துவா லபரிச்சின்னமெனவும்,

முத்தனென்ற பதத்துக்கு கடமானது உண்டாகிறதற்கு முன்னு முடைந்த பின்னு மத்தியிலன்னிய கடத்திலும் எக் காலத்திலும் இன்றி மண் கடவுற்பத்திக்கு முன்னும் லயத் தின் பின்னும் மத்தியிலன்னிய கடத்திலும் எக்காலத்தினு மிருத்தல்போல, சீவேஸ்வர சகத்து சிருட்டிக்கு முன்னில் லாத பிராகாபாவமும், பிரளயத்தின் பின்னில்லாத பிரத் துவம்சா பாவமும், திதிகாலத்திலொன்றினிலொன்றில்லாத அன்னியோன்னியா பாவமும், எக்காலத்தினுமில்லாத அத்தி யந்தா பாவமுமுடையதும், தன்னிடத்திற் ருேன்று நினைவும் உதிக்குமுன்னும் ஒடுங்கின பின்னும் மத்தியி லன்னிய நினை விலும் எப்போது மில்லாததும், அவைகள்போலின்றிப் பிரமம் பிரபஞ்ச வுற்பத்திக் கேதுவாய்ச் சிருட்டிக்கு முன்னும் லயத்துக்கேதுவாய்ப் பிரளயத்தின்பின்னும் இருத்தற்காதார மாய்த் திதி காலத்திலும் எக்காலத்தினு மிருப்பதெனவும்,

இன்பப் புணரியென்ற பதத்துக்கு அழகிளமை ஆரோக் கியம்திடகர்த்திரம் சகலரையும் செயிக்கப் பலமுடையவனுய்ச்

சகல சாஸ்திரமும் வந்தவனும் சகலராலும் வாழ்த்தப்பட்டவனும் ஐம்பதுகோடி பூமண்டலமும் ஒரு குடைக்கீழ் ஆள்பவனுக்கு மநுடானந்தம். இதற்கு மேலான மநுட கந்தருவானந்தம், தேவ கந்தருவனானந்தம், பிதுர்தேவனானந்தம், ஆஜானு தேவனானந்தம், கருமதேவனானந்தம், தேவானந்தம், இந்திரனானந்தம், பிரகஸ்பதியானந்தம், விராட் புருடானந்தம், இரணிய கருப்பானந்தம் ஆகிய இவைகள் ஒன்றுக்கொன்று நூறுபங்கு அதிகமான அதிசயமுடைய அளவுபட்டதாய் அனித்தியமாய் அனர்த்தமாய் அன்னியமாய்ப் பங்கிட்டு அனுபவிக்கிறதாகையாற் பிரமானந்த சாகரத்தின் ஓர் திவலையெனவும்,

ஆதவனென்ற பதத்திற்கு உலகத்திற் பிரகாச வஸ்துவென்னு மின்னல் நக்ஷத்திர மக்கினி சந்திரன் சூரியன் இவைகளின் உதயாஸ்தமனம் அறியும் இந்திரியங்கள், அவைகளின் அன்வய வெதிரேகங்களையறியும் அந்தக்கரணம், அவைகளின் விகாச சங்கோசங்களையறியும் சீவன், இவைகள் சுயமாய் விளங்காததாய் ஆத்மாவின் சுயம்பிரகாச ஏகதேசப் பிரதிபிம்பமாய் ஆத்மப்பிரகாச அகண்டானுபவத்திற் குன்றுவதாயிருப்பதாற் பிரமப் பிரகாசத்தில் அற்பமெனவும்; நாளுந் தோன்றிய வென்ற பதத்திற்கு பழுதையினிடத்தில் ஆரோபமாய்த் தோற்றும் பாம்பானது புருடனுடைய பிராந்தி காலத்துக்குப் பூர்வமும் பிராந்தி காலத்திலேயும் பிராந்தி நீங்கிய பின்னும் இல்லாமல் அதிட்டானப் பழுதை அம் மூன்று காலத்திலு மிருப்பதுபோல, பிரமத்தில் ஆரோபமாய்த் தோற்றும் சீவேஸ்வர சகத்து அவிசாரகாலத்துக்கு முன்னும் அவிசார காலத்திலும் அவிசார நீங்கிய பின்பும் இல்லாது அதிட்டானப் பிரமம் அம் மூன்று காலத்தினும் அவத்தாத்திரய காலத்திலும் தேக உற்பத்தித் திதி லய காலத்தினுமிருப்பதாற் பிரமசத்தைக் குறித்து அசத்தெனவும்,

விமலமென்ற பதத்துக்குச் சரும முதிர மாமிசஞ் சநாயு அஸ்தி மச்சை யென்னு மாறுதத்துவமான தூல சரீரத்துக்குக் குரும்பி பீளை சளி கோழை வேர்வை மலம் சலமும், இருபது *தத்துவமான சூட்சும சரீரத்துக்குக் காமக் குரோத செவிடு ஊமையாதியும், அவித்தைக்கு வாசனையும், சீவனுக்கு

* அந்தக் கரணத்தை ஐந்தாகக் கொண்டு சூட்சும சரீரம் இருபது தத்துவம்.

அவித்தையும், பிருதிவிக்கு உச்சிட்டம் சேறு மயானாதியும், அப்புவிற்குக் கலங்கலாதியும், அக்கினிக்குப் புகையாதியும், வாயுவுக்கும் ஆகாயத்துக்கும் நற்கந்தாதி தூளியாதியும், மாயைக்குச் செகத் காரணமும், ஈசுரனுக்குக் கிருபையாதியும் மலமெனவும், ஆகாயமானது பிருதிவி அப்பு தேயு வாயு பூதங்களும் பௌதிகமும், மண்ணானது கட்சார்வகுட்டியகுசூல மும், கடலானது அலை திவலை நுரை குமிழியும், சூரியனானது மழை பனியாதியும், பழுதையானது பாம்பு தடி மாலையாதி யாகிய அவைகளிலொன்று நாசமானால் அவ்வாகாய மண்ணாதி நசியாததுபோல், சத்துச் சித்தானந்த நித்திய பூரணசொரூப மும் அனந்த மூர்த்தியாகியும் அவைகள் நாசமாயின் நாச மாகாதெனவுங் கொள்க.

(தா - ம்) தட்த்த விருத்தியால் சலட்சணமாயுஞ் சொரூப விருத்தியால் சலட்சண விலட்சணமாயும் தம் சகசத்தில் விளங்கிய அதர்வண வேத மகா வாக்கியார்த்த சொரூபத்தை வணங்கியதாம்.

(அ - கை) முற்கூறிய பிரம சொரூபமே வடிவமான அருளிறையைத் துதிக்கின்றார்.

எவருடை யருளால் யானே யெங்குமாம் பிரம மென்பால்
கவருடைப் புவனமெல்லாங் கற்பித மென்றறிந்து
சுவரிடை வெளிபோல்யானென் சொரூப சுபாவமானேன்
அவருடைப் பதுமபாத மனுதினம் பணிகின்றேனே 3.

(இ – ள்) எவருடையருளால் – யாருடையகிருபையினால், சுவரிடைவெளிபோல் – குட்டியத்தின் கண்ணிருக்கும் ககனம் போல், யானே – அகம்பத லெட்சியார்த்தமான நானே, எங்குமாம் பிரமம் – பிரமபத லெட்சியார்த்தமாகிய எவ்விடத்திலு நிறைந்திருக்கும் சர்வசாட்சி, என்பால் – இப்படிப்பட்ட என்னிடத்தில், கவருடைப் புவனமெல்லாம் – துவைதமாகக் காணப்பட்ட பிரபஞ்ச முழுவதும், கற்பிதமென்றறிந்து – மித்தையென்றுள்ளபடி சாட்சாத்கரித்து, என் சுபாவ சொரூபம் – கூடஸ்தராகிய எனது வாஸ்தவ சொரூபம், ஆனேன் – ஆயினேனே, அவருடைப் பதுமபாதம் – அக் கருணாமூர்த்தியினுடைய தாமரைமலர் போலும் திருவடியை, அனுதினம் பணிகின்றேன் – எப்பொழுதும் வணங்குகின்றேன்.

(ப – ம்) பஞ்சகோச விலட்சணமாகிய அகம்பதார்த்தமான கூடத்தரே தனது சொரூபமென்பார் "சுவரிடை ... சொரூப சுபாவ" மெனவும், கூடத்தராகிற நானே பிரமபதவர்த்தமாகிய சருவசாட்சி ஆனேன் என்பார்,"யானே...பிரம" மெனவும், சருவசாட்சியாகிய என்னிடத்தில் கானற்சலம்போல அத்தியாசமாய்த் தோற்றுஞ் சரா்சரப்பிரசஞ்ச மெல்லாம் மித்தையென்றறிந்து இருந்தேனென்பார் "என்பால் ... கற்பித" மென்றறிந் தெனவும், அஸ்மிபதவர்த்தமாகிய அயிக்கிய சொரூப மானேனென்பார் "ஆனேன்" எனவும், சீவ காருண்ணியமுதல் நான்குந் திருமேனியானவரது பிரமானந்தமுடைய திருவடியென்பார்"அவருடைப்பதுமபாத"மெனவும், அத்திருவடியை மறவாது சிந்தித்துக்கொண்டு அவரால் பெற்ற சகசானுபவத் திருக்கின்றே னென்பார் "அநுதினம் பணிகின்றே" னெனவுங் கூறினர்.

(வி - ரை) சுவரிடை வெளிபோலென்ற பதத்துக்குச் சுவரைக்கெல்லி எங்குமுள்ள வாகாசத்தைக் காட்டுதல் போற் பஞ்சகோசத் தசத்தாதிகூறி நியதிகளைந்து அவற்றுள் எங்கும் வியாபித்துள்ள வாத்மாவைக் காட்டல் எனவும், அவருடைப்பதும பாதமென்ற பதத்துக்குத் தாமரைப் பூ பெரிது மிகக் குளிர்ச்சி முள்ளின்மை கண்டு அடுத்திருக்கச் சுகம், வண்டு தேடிவரத் தவளை யறியாமைபோல, குரு திருவடியை பிரமானந்தம் தாபநிவர்த்தி இராகாதி யின்மை கண்டு அடுத்தடையச் சுகம், பக்குவர் தேடிவர, மற்றோர் அறியாமை எனவும், சுபாவ சொரூப மென்றதனுல் புண்ணிய பாவநீக்கம், கற்பித மென்றதனுல் நரகபய நீக்கம், எங்குமாம் பிரமமென்றதனுல் ஈசுரபுத்தி (ஈசுரன் பரோட்ச மெனும் புத்தி) நீக்கம் எனவும் கொள்க.

(தா - ம்) தூலதேக முதற் சிவன்வரை தானென்னுங் கற்பிதாத் மத்துவம் போக்கி எசுர்வேத மகா வாக்கியார்த்தமான பிரத்திய கான்மாவாயும் பிரமமாயும் அத்துவிதமாயும் சாட்சாத்கார வனுபவம் வரப்பண்ணிய குருவைத் துதி செய்ததாம்.

(அ – கை) இதுவுமது

என்னுடை மனதுபுத்தி யிந்திய சரீர மெல்லாம்
என்னுடை யறிவினுலே யிரவிமுன் னிமமேயாக்கி

என்னுடை நீயுநானு மேகமென் றைக்கியஞ்செய்ய
என்னுடைக் குருவாய்த்தோன்று மீசனையிறைஞ்சினேனே

௧

(இ - ள்) என்னுடை மனதுபுத்தி - எனதுமனம் புத்தி களாகிய அந்தக்கரணமும், இந்தியம் - ஞான கருமேந்திரியங் களும், சரீரம் - தூலதேகமும், எல்லாம் - ஏனைய வனைத்தை யும், என்னுடையறிவினாலே - எனது சமாதி ஞானத்தினால், இரவிமுன் இமமேயாக்கி - சூரியனைக்கண்ட பனியைப்போலச் செய்து, நீயும் - கூடஸ்தராகிய நீயும், நானும் - பிரமமாகிய யானும், ஏகமென்று - ஒன்றே யென்று, என்னுடை ஐக் கியஞ் செய்ய - எனது அயிக்கியத்தை எனக்கு உபதேசிக்க, என்னுடைக் குருவாய்த் தோன்றுமீசனை - எனது குருமூர்த் தமாக வெழுந்தருளிய அருளிறையை, இறைஞ்சினேன் - வணங்கினேன்.

(ப - ம்) துவம்பத வாச்சியார்த்தமாகிய இருபத்தெட்டு தத்துவங்களும், தத்பத வாச்சியார்த்தமாகிய முப்பத்தைந்து தத்துவங்களு மென்பார், "என்னுடை ... சரீரமெல்லா" மென வும், அவ்வாச்சியார்த்தங்களைச் சமாதி ஞானத்தினால் நீக்கி என்பார், " என்னுடை ... யாக்கி " யெனவும், துவம்பதார்த்த கூடஸ்தரையுந் தற்பதார்த்த பிரமத்தையும், அசிபதார்த்த வயிக்கிய சொரூபமாக்கினு ரென்பார் " என்னுடை ... அயிக்கியஞ் செய்ய" வெனவும், கூடஸ்தருக்கும் பிரமத்துக்கு மேற்கனவே அயிக்கிய முண்டென்பார் என்னுடை அயிக்கிய மென்றார், தனது பிரியத்தடிப்பே குரு ரூபமாக ஆவிர்ப்ப வித்த தென்பார் "என்னுடைக் குருவெனவும்," தன்னை இரட் சிக்கு நிமித்தம் உதயமானது அருளிறை யென்பார் ஈசனென வும், சிவசாக்ஷி குறியாமற் றிருவடி சாட்சியாகத் திரிகரணம் ஒத்து வணங்குகின்றே னென்பார் இறைஞ்சினே னெனவுங் கூறினார்.

(வி - ரை) குருவென்னும் பதத்துக்கு, கு, வென்றது அஞ்ஞானம், ரு, வென்றது ஞானம், ஞானத்தால் அஞ்ஞானத் தைக் கெடுத்திருக்கின்றவர் குருவெனக் கொள்க.

(தா - ம்) மனமுதலிய தத்துவங்களனைத்தையுஞ் சமாதி ஞானத்தினாற் கரைத்து அதனில் உதயமாகும் ஆனந்த மாகிய அஃதே இஃது இஃதே அஃது என்னும் சாமவேத மகா

வாக்கியார்த்தமான அத்துவித சொரூபத்தைத் தரிசிப்பிக்கும் பொருட்டுப் பூரணமே யோருருவாக வெழுந்தருளிய வாசிரியரை வணங்கியதாம்.

(அ – கை) தமதாசிரியரை வணங்கி அவரருளினுற் கூறப் புகுந்த விந்நூலின் முகப்பிற் கூறப்படும் விடயமும். இதனுல் உண்டாகும் பயனும், இந்நூற்கும் இதிற் கூறப்படுவதாகிய விடையத்திற்கு முள்ள சம்பந்தமும், இது கேட்டற்குரிய அதிகாரியும், ஆகிய அநுபந்த சதுட்டயம் இந்நூல் கற்கும் மாணுக்கன் உணரும்பொருட் டுரைக்க வேண்டுதலின்; அவற்றுள் அதிகாரியும் விடயமும் இதிற் கூறுகின்றுர்.

அந்தமு நடுவுமின் றி யாதியு மின்றிவான்போல்
சந்தத மொளிருஞான சற்குரு பாதம்போற்றிப்
பந்தமும் வீடுங்காட்டப் பரந்தநூல் பார்க்கமாட்டா
மந்தரு முணருமாறு வத்துதத் துவஞ்சொல் வேனே. 5.

(இ - ள்) அந்தமு நடுவுமின்றி யாதியுமின்றி – ஆதி மத்தியாந்த ரகிதமாய், வான்போல் – ஆகாயத்தைப் போல, சந்ததமொளிரும் – சதோதயமாய் விளங்குகின்ற, ஞானசற்குரு பாதம்போற்றி – ஞானமயமான சற்குருவினுடைய திருவடிகளை வணங்கி, பந்தமும் வீடுங்காட்ட – பெத்த முத்திகளின் ஸ்வரூபத்தைத் தெரிவிக்கும் பொருட்டு, பரந்தநூல் – விரிவாகக் கூறப்படுகின்ற வேதாந்த சாஸ்திரங்களை, பார்க்கமாட்டா *மந்தரும் – ஆராய்ந்தறியச் சக்தியில்லாத மந்த அதிகாரியும், உணருமாறு – எளிதில் உணரும்படி, வஸ்துதத்துவஞ் சொல்வேன் – பரவஸ்துவினுடைய உண்மையைக் கூறுவேன்,

(ப - ம்) திரிகாலத்திலு நசியாத சத்தென்பார் அந்தமின்றியெனவும், எக்காலத்திலும் எத்தேசத்திலும் பிரகாசிக்குஞ் சித்தென்பார் நடுவுமின்றி யெனவும், எக்காலத்திலும் எத்தேசத்திலும் எவ்வஸ்துவிலும் பிரியமாயிருக்கு மானந்தமென்பார் ஆதியுமின்றி யெனவும், சொரூபம் வியாபகமாயும்

---

* மந்தரும் என்பதில் உம்மையால் ஏனைய அதிகாரிகளும் கொள்க.

நிரவயவமாயும் சூட்சுமமாயும் அமூர்த்தமாயும் விளங்குமென் பார், "வான்போல்" எனவும், இங்ஙனம் சதோதயமாய் விளங்கும் சைதன்னியமே குரு சொரூப மென்பார், "சந்ததம் ஒளிரும் ஞான சற்குரு" வெனவும், ஞானுதி ஆறுலட்சண முடையவ ரென்பார், "சற்குரு" வெனவும், தான் அதன் மயமாய் நிற்றல் என்பார், "பர்தம் போற்றி" யெனவும், ஞான நூலென்பார், "பந்தமும் வீடுங் காட்ட" வெனவும், மந்தம் மந்ததரம் தீவிரம் தீவிர தரமாகிய நால்வகைப் பக்குவரு மதிகாரியென்பார், "பரந்தநூல் ...... மந்தரும்" எனவும், சொரூபமே விடயமென்பார், "வஸ்து தத்துவ" மெனவுங் கூறினர்.

(வி – ரை) சற்குருவென்னும் பதத்துக்கு, சீவேஸ்வர அவித்தை மாயை நாலின் தோற்றமொடுக்கமும் ஞான விஞ் ஞான மிரண்டின் லட்சணமும் அனுபவமா யறிந்தவரெனவுங் கொள்க. "பந்தமும் வீடுமென்ற பதத்துக்கு" தனக்குரிய புல்லைவிட்டு உரித்தல்லாத பயிரைத் தின்னும் பசுவை, பசுவுக்குடையவன் கட்டிக் கதறினதின்பேரில் இரங்கி அவிழ்த்துவிடல் போல, தனக்குரிய பிரமானந்தத்தை விட்டு உரித்தல்லாத விடயானந்தத்தைப் புசிக்கின்ற பசுவாகிய சீவனைப் பசுபதியாகிற ஈசுரன் பஞ்சகோசத்தில் கட்டுப்படுத் தல் பந்தமெனவும், அப்பந்தத்தாற் சீவன் துன்புறுவதைக் கண்டுநீக்குதல் வீடெனவும், இங்ஙனமே திருடனை அரசன் கட்டி விடுதல்போலச் சீவனை ஈசுரன் கட்டிவிடுதல் பந்தம் வீடெனவுங் கொள்க.

"பரந்த ...... மந்தரு" மென்ற பதத்துக்குப் பாவை பண்ணுனின்ற கல்லைப்போலும், இரும்பைப்போலும், மரத்தைப்போலும்,வெண்ணெயைப்போலும், மந்தம் மந்ததரம் தீவிரம் தீவிரதரம் என்னும் நான்கு பக்குவரெனவும், நீர் தெளிதல்போல் குடும்பப்பிரபஞ்சத்தில் வெறுப்பும், தாமரைத் தண்ணீர் போல குடும்பத்தில் பற்றுது பிரபஞ்சங்கானற்சலத் திற்போல விருப்பின்மையும், குடும்பம் பொது மண்டபம் போலும் இந்திராதி வாழ்வு சொப்பனம் போலுந் தோன்று தலும், குடும்பத்திலும் பிரபஞ்சத்திலும் ஆசையில்லாமையும் இந் நால்வருக்கும் போதிக்குங் காலத்திலுண்டாம் பக்குவம் எனவும், வாழைத்தண்டையும் பச்சை மரத்தையும் கரியையும் பன்னிய பஞ்சையும் சுடுதல்போல ஞானம் உண்டாமெனவுங் கொள்க.

(தா - ம்) இது ஞான நூலெனவும் இந்நூற் கற்கும் அதிகாரி நால்வகைப் பக்குவரெனவும் விடயஞ் சொரூபமென வுங் கூறினதாம்.

(அ - கை) சம்பந்தமும் பிரயோசனமுங் கூறுகின்றார்.

படர்ந்தவே தாந்தமென்னும் பாற்கடன் மொண்டு
முன்னூற், குடங்களி னிறைத்துவைத்தார் குரவர்க
ளெல்லாங் காய்ச்சிக், கடைந்தெடுத் தளித்தேனிந்தக்
கைவல்ய நவநீதத்தை, அடைந்தவர் விடயமண்டின்
றலைவரோ பசியிலாரே. 6

(இ - ள்) படர்ந்த - விரிந்திருக்கின்ற, வேதாந்த மென்னும் - உபநிடதமென்கின்ற, பாற்கடன் மொண்டு - க்ஷீர சமுத்திரத்தின் முகந்து, முன்னூற் குடங்களில் - சூத்திர பாஷிய முதலிய புராதன கிரந்தங்களென்னும் கடங்களில், குரவர்கள் - வாதராயணர் முதலிய பூருவாசாரியர்கள், நிறைத்து வைத்தார் - பூரித்து வைத்தார்கள், எல்லாம் காய்ச்சி - சேகரித்துக்கொண்டதை யெல்லாம் காய்ச்சி, கடைந்து - மதனஞ் செய்து, இந்தக் கைவல்ய நவநீதத்தை - கைவல்ய நவநீதமென்னும் இந்த ஞான சாத்திரத்தை, எடுத் தளித்தேன் - திரட்டி எடுத்துக் கொடுத்தேன், அடைந்தவர் - இதைப் புசித்தவர்கள், பசியிலார் - நித்தியதிருப்தி அடைந் தவர்களாதலின், விடயமண்டின்று - விடயானந்தமாகிய மண்ணைப் புசித்து, அலைவரோ - பவ துன்பத்திற் சுழல் வார்களா (சுழலார்).

(ப - ம்) உபநிடதம் அநேகமாகையால் "படர்ந்த வேதாந்த" மெனவும், அவை கூறுவது அளவின்மையாற் "கட" லெனவும், உப்புக் கடலாதிக் கப்பாற்பட்டதுபோற் கன்மபத்தி காண்டத்திற்கப்பாற் பட்டதாற் "பாற்கட" லென வும், அவையிற் கூறியுள்ளதிற் கொஞ்சம் பூருவாசாரியர்க ளெடுத்துக்கொண்டா ரென்பார் "மொண்" டெனவும், அவர்கள் தாம் பெற்றபேறு உலகம் பெற முன்னூற்களில் பூர்வ சித்தாந்த மெல்லாம் குறைவற அமைத்தாரென்பார், "குடங்களி னிறைத்துவைத்தா" ரெனவும், அவைகளை யெல் லாஞ் சேகரித்துக்கொண்டதை "எல்லா" மெனவும், பூர்வ பட்சந்தள்ளிச் சித்தாந்தத்தை மிஞ்சவைக்க விசாரஞ் செய்த தைக் "காய்ச்சி" எனவும், அதிலும் திட்டாந்தக் கதைகளை

நீக்கி ஆரோப அபவாத சிவேஸ்வர அயிக்கியாதி கிரமமட்டும் மிஞ்சத் திர விசாரித்ததைக் "கடைந்" தெனவும், வெண்ணெயைக் கொடுத்தல் போல மிஞ்சிய கிரமத்தைக் கைவல்யமெனப் பெயரிட்டு இந்நூற் கூறியதை "எடுத்தளித் தேனிந்தக் கைவல்ய நவநீதத்தை" யெனவும், இதை யனுட் டித்துத் தத்துவ ஞானம் பெற்றவர் அடையவேண்டியதை எல்லா மடைந்தோமென்னும் நித்திய திருப்தியுடையவராவர் என்பார் "அடைந்தவர்...பசியிலர்" ரெனவும், இவ்வர்நுடர் விடயம் புசிக்குமிச்சையினுல் விடயத்துக் கேதுவான இகபர தொழிலிற் சுழலா ரென்பார், "விடய மண்டின் றலைவரோ" என்றுங் கூறினர்.

(வி – ரை)"பாற்கடலென்ற"பதத்துக்குஉப்புத்தண்ணீர் சாப்பிட்டால் திருப்தியின்றித் துன்பம் வருதல்போல, கர்ம பத்தியாற் றிருப்தியின்றிப் பவத் துன்பமடைதல், பால் திருப்திசெய்து சுகம் தருவதுபோல ஞானம் திருப்திசெய்து முத்தியின் பமளித்தலெனவும், "மொண்டு...குரவர்க"ளென்ற பதங்கட்கு, சமத்துள்ள புண்ணியவான் உப்புக் கடலாதி கடந்து போய்ப் பால்சாப்பிட்டு லோகோபகாரமாய் மொண்டு வந்து வைத்தல் எனவும், "எடுத்தளித்தேன்...நவநீதத்தை" யென்ற பதங்கட்கு, கர்மகாண்ட மப்பியாசித்து விடுத்து உபாசனு காண்ட மப்பியாசித்து விடுத்து ஞானகாண்ட மப்பியாசித்து அனுபவித்து நூல் செய்ததெனவும்; கேவல சம்பந்தங் கைவல்லியமாகையாலும் தயிர் கடைவதிற்றிரளு நவநீதம் போலச் சித்தாந்தத்திற் றிரட்டிய ஞானக் கிரமமுள்ளதாகையாலும், இதற்குக் காரணப் பெயராகக் கைவல்லிய நவநீதமெனப் பெயரிட்டதெனவும், அந்தக்கிரமமே நூலுக்குச் சம்பந்தமெனவும்,"அடைந்தோர் பசியிலா"ரென்ற பதங்கட்கு, பசியிலாமையே நூலுக்குப் பிரயோசன மென வும், "விடய மண்டின் றலைவரோ" வென்ற பதங்கட்கு, மண் போல விடயம் திருப்தியின்றிப் பவத்துன்பந்தரல், வெண்ணெ போலிது திருப்தியும் முத்தியின்பம் தரல் எனவுங் கொள்க.

(தா – ம்) இந்நூல் செய்த காரணமும், இதன் நாமங் கைவல்லிய நவநீத மென்பதும், சம்பந்தம் அத்தியாரோபா பவாதி ஞானக் கிரம மென்பதும், பிரயோசனம் தடையற்ற ஆனந்தமென்பதுங் கூறியதாம்.

(அ – கை) தனதாசிரியர் நாமங் கூறி வணங்கி இந் நூலின் படலவகை கூறுகின்றார்.

முத்தனை வேங்கடேச முகுந்தனை யெனையாட்கொண்ட
கர்த்தனை வணங்கிச்சொல்லுங் கைவல்லியநவநீதத்தைத்
தத்துவ விளக்கமென்றுஞ் சந்தேகந் தெளிதலென்றும்
வைத்திரு படலமாக வகுத்துரை செய்கின்றேனே. 7.

(இ – ள்) முத்தனை – பாசங்கள் விடுபட்டவனை, வேங்கடேச முகுந்தனை–வேங்கடமென்னும் மலைக் கிறைவனை நாராயணனை, எனையாட்கொண்ட கர்த்தனை – என்னை அடிமை கொண்ட கருத்தனை, வணங்கி – பணிந்து, சொல்லுங் கைவல்லிய நவநீதத்தை – உரைக்கும் கைவல்லிய நவநீத மென்னும் இந்த ஞான சாத்திரத்தை, தத்துவ விளக்க மென்றும் சந்தேகந் தெளிதலென்றும், வைத்து – நாமஞ் சூட்டி, இரு படலமாக வகுத்து – இரண்டு படலமாகப் பிரித்து, உரை செய்கின்றேன் – சொல்லுகின்றேன்.

(ப – ம்) அஞ்ஞானமும் அஞ்ஞான காரியமான பாசங் களும் விடுபட்டவ னென்பார், "முத்தனெனவும்" நீ ராலங் கட்டியாய்த் தடித்ததுபோல மானிடச் சட்டை சாத்தி நாராயண தேசிகனென்னும் நாமந் தரித்து எழுந்தருளிய வாக்கு மனதுக் கெட்டாத சொரூபமென்பார், "வேங்கடேச முகுந்த" னெனவும், தத்துவ ஞானிகளெல்லாம் குருவாயினும் தன் துயரை நீக்க அருளினால் தன்னைத் தடுத்தாண்ட வருளிறை யென்பார், "எனை யாட்கொண்ட கர்த்த" னெனவும், அதத்துவம் முப்பத்தைந்தும் நீக்கிப் பரதத்துவத்தைத் தெரிவிப்பதென்பார், "தத்துவ விளக்க" மெனவும், பிரமாண சமுசயம் பிரமேய சமுசயாதி நீக்கி அகண்டானந்தந் தருவ தென்பார் "சந்தேகம் தெளித" லெனவுங் கூறினார்.

(தா – ம்) குரு வருளுடையோர்க்கே சகலமும் நன்றாய் விளங்குமாதலால் தம் குருவை வணங்கிக்கொண்டு இந் நூல் படல மிரண்டென அவற்றி னுமங் கூறியதாம்.

பாயிரம் முற்றிற்று.

உ
கணபதி துணை.
சிவமயம.

# கைவல்லிய நவநீதம்

## முதலாவது
## தத்துவ விளக்கப் படலம்.

(அ—கை) இந் நூல் செய்த காரணத்தைக் கூறி, இந்த முதலாவது தத்துவ விளக்கப் படலத்தில் தத்துவத்தை விளக்கும் பொருட்டு முதலில் அது கேட்கு மதிகாரிக்குரிய சாதன சதுட்டய விலக்கணங் கூறுகின்றார்.

நித்திய வநித்தியங்க ணிண்ணயந் தெரிவிவேகம்
மத்திய விகபரங்கள் வருபோகங் களினிராசை
சத்திய முரைக்கவேண்டுஞ் சமாதியென் றாறுகூட்டம்
முத்தியை விரும்புமிச்சை மொழிவர்சா தனமிந்நான்கே.

(இ—ள்) நித்திய வநித்தியங்கள் — நித்தியா நித்திய வஸ்துக்களின், நிண்ணயந் தெரி விவேகம் — நிச்சயந் தெரிகின்ற விவேகமும், மத்திய — இடையிலுள்ள, இகபரங்கள் — இகலோக பரலோகங்களில், வரு போகங்களில்—உண்டாகின்ற போகங்களில், நிராசை — வெறுப்பும், சமாதியென் றாறு கூட்டம் — சமாதி சட்க சம்பத்தியும், முத்தியை விரும்பு மிச்சை — முமூட்சுத்துவமுமாகிய, இந் நான்கும் — இந்த நான்கையும், சத்திய முரைக்கவேண்டும் — உண்மையாய் அதிகாரிக் குரியனவாகக் கூறத்தக்க, சாதனம் — சாதனங்களாமென்று, மொழிவர் — சத்துக்கள் சொல்லுவார்கள்.

(ப—ம்) திருக்கு அமூர்த்தம் நிரவயவம் அகண்டம் சூட்சுமம் உற்பத்தியற்றதான பிரமமென்பார், "நித்திய" மெனவும், திரிசியம் மூர்த்தம் சாவயவம் கண்டம் தூலம் உற்பத்தியுள்ள பிரகிருதிமுதற் றேகம் வரை யென்பார், "அநித்திய" மெனவும், மயான விவேகத்தாலும் துறவிகள் கேள்வி தரிசனத்தாலும், பற்றிய விடய நட்டத்தாலும்

தட்சணத்தால் உண்டாவது போலல்ல. நித்தியாநித்தியத் தைச் சதா காலமும் நானுவிதமாய்ச் சிந்தித்த லென்பார் "நிண்ணயந் தெரி விவேக" மெனவும், உழவாதி யாகாதிகளால் உண்டாகும் சகல லோகத்திலுமுள்ள பொன்னுதி பெண்ணுதி அன்னுதியான அருந்தல் பொருந்தல் என்பார், "இகபரங்கள் வருபோகங்க" ளெனவும்,பிரசவ வைராக்கியமும் இஷ்டம் முடியாத போதுண்டாம் வெறுப்புப்போலின்றி போக வஸ்துவின் மித்தை யசுத்தம் துக்கம் அநித்தியங்களை எப்போதுங் கண்டு வெறுத்து நரக முதலானதுபோற் கண்டு விடுவது என்பார், "விராகை" யெனவும், புண்ணிய லோகாதி சிவசாயுச்சியாந்த மடைவதாயும் அன்னியமாயும் அநித்தியமாயு மிருக்கின்ற சரீர முத்தியல்ல, பிரமந் தானுகிற அநந்நியமாயும் நித்திய மாயும் இருக்கின்ற அசரீர முத்தியென்பார் "முத்தி" யெனவும், புராண சிரவண, வியாதி, துறவிகள் தரிசன கேள்வியா லுண்டா மிச்சையும், புளிச்சேப்பக்காரன் புசிப்பிச்சையும் போலல்ல. சில தின பட்டினிக்காரன் அன்ன விச்சையும், நாக்கு வறண்டவன், தலையில் நெருப்புப் பற்றிக் கொண்டவன், தண்ணீ ரிச்சையும் போல வென்பார் "விரும்பு மிச்சை" யெனவுங் கூறினர்.

(வி — ரை) நிண்ணயந் தெரி விவேக மென்ற பதத்துக்கு, நானுவிதமாய்ச் சிந்தித்தலாவது, கெர்ப்பந் தரிக்கும்போதே புழுத் தின்றலாதியாலும், பத்து மாதத்திற்குள்ளே யிடை யிடையும் பிறந்தபின் பசு பட்சியாதியாலும், வியாதியாலும் சைசவம் கௌமார யௌவன வார்த்திகத்தில் அடிக்கடி நசித்தலைப் பார்த்தலும், எழுவகைப் பிறவியிலும் முன்னிறந் ததையும் இப்போ திறக்கின்றதையும் இனி யிறப்பதையும் பார்த்தலெனவும், பிரளய காலத்திற் பனிரெண்டாதித்தாள் உதித்துப் பஞ்ச பூத பௌதிகங்கள் நசித்துப் பிரமாதி தேவர்கள் நசித்தலைச் சிந்தித்தலெனவும் கொள்க.

மோட்ச அதிகாரிக்கு வேண்டுமென்னு மிச்சாதனங்களுள் முதலாவது சாதனம் யாதுக்கெனில்? கிரியத்தின் அநித்தியமும் திருக்குவின் நித்தியமுந் தெரிதல். அது நன்ருய்த் தெரிய வந்தது போதாதோவெனில்? இரண்டாவது சாதனமும் வேண்டும். அஃது யாதுக்கெனில்? வேத சாஸ்திரிகள் தெரிந்துந் திரிசியங்களை வெறுக்காததால் வேண்டும், அவ் விரண்டும் போதாதோவெனில்? மூன்ருவது

சாதனமும் வேண்டும். அஃது யாதுக்கெனில்? தேகாதி திரிசியத்தை வெறுத்தவர்களும் பொறுமையின்றித் தவத்தை யிழக்கின்றதால் வேண்டும். அம் மூன்றும் போதாதோவெனில்? நான்காஞ் சாதனமும் வேண்டும். அஃது யாதுக்கெனில்? பொறுமையாதியுடைய யோகிகளுக்கும் சற்குரு வேதாந்த சிரவணாதித் தேட்டமின்மையால் வேண்டுமெனவும், இச் சாதன மில்லாவிடில் சற்குரு லாபம் சிரவண மனன தியான சமாதி ஞானம், அஞ்ஞான நீக்கம் சனன மரண நீக்கம் துன்ப நீக்கம் வாராவெனவுங் கொள்க

(அ – கை) சம தமாதிகளின் இலக்கணங்கூறல்

சமந்தமம் விடல் சகித்தல் சமாதானஞ் சிரத்தை யாறும்
சமமகக் கரண தண்டந் தமம்புறக் கரண தண்டம்
அமர்தரு கருமம் பற்று தறுத்தலே விடலென் றாகும்
மமர்செயுங் காம மாதி வரினடக் குதல் சகித்தல். 9.

(இ – ள்) சமம் – சமமெனவும், தமம் – தமமெனவும், விடல் – உபரதி யெனவும், சகித்தல் – திதிட்சை யெனவும், சமாதானம் – சமாதானமெனவும், சிரத்தை – சிரத்தை யெனவும், ஆறும் – ஆறின் நாமமாம், சமம் – சமமாவது, அகக் கரண தண்டம் – அந்தக் கரணத்தைத் தண்டித்தலாம், தமம் – தமமாவது, புறக்கரண தண்டம் – பாகிய இந்திரியங்களைத் தண்டித்தலாம், விடல் – உபரதியாவது, அமர்தரு கருமம் பற்றுது – பொருந்தியமனதியாற் செய்யாநின்ற பாவ மிசிர கருமங்களையும் புண்ணிய கரும பலனையும் விரும்பாமல், அறுத்தலே – நீக்குதலே, விடலென்றாகும் – உபரதியென்று சொல்லப்படுவ தாகும், மமர் செயும் – மயக்கத்தைச் செய்யா நிற்கும், காமமாதி வரின் – காம முதலியவை வந்தால், அடக்குதல் – பொறுத்தல், சகித்தல் – திதிட்சையாம்.

(ப – ம்) கர்த்தா போக்தா பிரமாத் துருவாய்த் திரிகாலத்தையும் நினைத் தெழாநின்ற மனதைச் சிரவண காலத்திலாவது. நிக்கிரகித்தலென்பார், "சம மக்கரண தண்ட" மெனவும், சுரோத்திரியாதி வாக்காதி பத்து இந்திரியமும் சத்தாதி வசனாதி பத்து விடயங்களிலும் செல்லாது சிரவண காலத்திலாவது தடுத்தலென்பார், "தமம் புறக் கரண தண்ட" மெனவும், மன வாக்கு காயத்தாற்

செய்யும் பாவமிசிர கன்மத்தையும் புண்ணிய கரும பலனையும் விடுதலே உபரதி யென்பார், "அமர்தரு ... விட" லெனவும், காமக் குரோதாதி சுக துக்கம் வரிற் பிராரத்தமென்று பொறுத்தல் திதிட்சை யென்பார் "காமமாதி வரின் ... சகித்த" லெனவுங் கூறினர்.

(வி – ரை) சமதமமில்லாவிடில் குருவசனங் கேளாது அர்த்தம் படாது அனுபவம் உண்டாகாது தத்துவ ஞானம் வாராது, அஞ்ஞான நீங்காது, சனன மரண நீங்காது, துன்ப நீங்காதெனவும், புறக் கரணத்தால் இங்கடைந்தோர் மான், அசுணப்புள், யானை, விட்டில், மீன், வண்டு, சிசுபாலன், ராஜ ஸ்திரீ, சண்டேசுரன் பிதா, கொக்கு, தேவேந்திரன் எனவும், (நீக்கவுபாயம்) முந்தின காலச் செயலை நினைத்தலால் பிரயோஜனமில்லை யென்றும், பிந்தின காலச் செயலை நினைப்பின், அது வரைக்கும் தேகம் நித்தியமன்று என்றும், தற்காலச் செயலை நினைப்பின், அது வினைப்படி சிவன் தருவனென்றும் கருதி நீக்கவேண்டுமெனவும், தீங்குற்ற விடத்து ஆமையைந்துறுப்பையு மடக்குகின்றது போல, தீதானவிடயத்து இந்திரியங்கள் செல்லும்போது நிராசையினாற் றடுத்தலெனவும், விடலென்ற பதத்துக்கு, பாவத்தால் முட்செடி முதற் பசு வரை உள்ள சென்மமும், மிசிரத்தால் நீசன் முதல் பிராமணன் வரை உள்ள சென்மமும், புண்ணியத்தால் பிசாசாதி இரணியகருப்பாந்தம் வரை சரீரம் வருமெனவும், கர்ம பலனை விடாவிடில் சித்த சுத்தி குரு லாபமுதற் றுன்ப நீக்கம் வரை வாராவெனவும், சகித்தலென்ற பதத்துக்கு. காமமாதி அடக்காது கெட்டோர், இராவணன், இரணியகசிபன், நரகாசூரன், பகாசூரன், துரியோதனன், தசரத மகாராசன், கார்த்தவீரியார்ச்சுனன், சிசுபாலன், அருணாட்சதன், பவுண்டரீக வாசுதேவன், நகூர்வ மகாராஜா, சதுமுக ராவணன், மதுகயிடவர் எனவும், நீக்காவிடில் சித்த சுத்தி குரு லாபமுதல் துன்ப நீக்கம் வரை வாராவெனவுங் கொள்க.

(அ – கை) இதுவுமது.

சிரவணப் பொருளைத்தானே சித்தஞ்சிந் திக்குமாறு
சரதமா வைக்குமித்தைச் சமாதானமென்பர் மேலோர்
பரமசற் குருநூ லன்பு பற்றலே சிரத்தையாகும்
வரமிகு சமாதியாறு வகையின்சொற் பொருளிதாமே.

(இ – ள்) சிரவணப் பொருளைத்தானே – வேதாந்த சிரவணார்த்தங்களையே, சித்தம் – உள்ளமானது, சிந்திக்குமாறு – கருதும்படி, சரதமாய் வைக்குமித்தை – சத்தியமாய் வைக்கா நின்ற விதனை, மேலோர் – ஞானிகள், சமாதான மென்பர் – சமாதான மென்று சொல்லுவார்கள், பரம சற்குரு – ஈசான், ஞானாசாரியரிடத்தும், நூல் – வேதாந்த சாத்திரங்களிடத்தும், அன்பு பற்றலே – பக்தி விசுவாசம் வைத்தலே, சிரத்தையாகும் – சிரத்தையாம், வரமிகு – மேன்மை மிகுந்த, சமாதியாறு வகையின் – சம முதலிய ஆறு பிரிவுகளின், சொற்பொருளிதாம் – மொழிப் பொருளிவையேயாகும்.

(ப – ம்) திரிகாலத்தையு நினைய்ாதடக்கி யிருக்குமனது வாதனு வசத்தால் விடயத்திற் செல்வதைத் தடுத்துச் சிரவணார்த்தங்களைச் சத்தியமாய்க் கருதும்படி செய்தலென்பார், "சிரவணப் பொருளை ... சமாதான" மெனவும், வயது முதலியவற்று லுயர்ந்தவரல்லர், அத்துவித ஞானவப் பிரதிபக்தாபரோட்ச ஞானிகளென்பார், "மேலோர்" ரெனவும், தலைக்கன்று போட்ட பசுவைப் போலவும், விட புருடன் போலவும், ஈசன் சற்குரு ஞான சாத்திரத்தினிடத்திற் பக்தி விசுவாசஞ் செய்தலென்பார், "பரம சற்குரு ... சிரத்தை" யெனவும் மற்ற சாதனங்கள் வன்மையடைவதற் கேதுவானதால் மேலான வென்பார், "வரமிகு சமாதி" எனவுங் கூறினார்.

(வி – ரை) மேலோரென்ற பதத்துக்கு, வயது முதலியன வாவது, வயது செல்வஞ் சாதி ஆச்சிரமம் வித்தை கன்மம் பக்தியோகம் நித்தியா நித்தியாதி சாதனம் சிரவணம் மனனம் நிதித்தியாசனம் சமாதியெனவும், பரம சற்குருவென்னும் பதத்துக்கு, தனுவாதி கொடுத்து அவதாரங்களாற் சித்த சுத்தி முதல் மோட்சம் வரை ஏதுவாயிருத்தலால் ஈசுரனிடத்திலும், கொடிய பாவிகள் மதமூடர்கள்கூட வீட்சணத்தால் பிராந்தி நீங்கி முத்தியடைதலாலும், நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமானந்தாத்துவித சொரூபமாயும், மோகாந்த காரத்துக்கு ஞான சூரியனாயும், மாயா மேகத்துக்குப் பிரசண்ட மாருதமாயும் இருப்பதாற் சற்குருவினிடத்திலும், பவசாகரக் கப்பலாயும், தாபநீக்கு மமிர்த வருஷமாயும், சமுசய நீக்கி மோட்சத்தைக் காட்டுவதாயு மிருப்பதால், வேதாந்த சாத்திரத்திலும் சிரத்தை வேண்டுமெனவுங் கொள்க.

(தா – ம்) இந்த மூன்று கவிக்கும் அநித்திய வஸ்துக்க ளிவையெனக் கண்டு நித்திய வஸ்துவையடைதற் கேதுவான குணங்களையே, சாதன சதுஷ்டயமாகக் கூறினதாம்.

(அ – கை) சற்குருவை யடைந்து, தத்துவஞானம் பெறக் கூடாதோ? சாதனம் எதற்கெனில்?

சாதன மின்றி யொன்றைச் சாதிப்பா ருலகி லில்லை
ஆதலா லிந்த நான்கு மடைந்தவர்க் கறிவுண் டாகும்
நூதன விவேகி யுள்ளி னுழையாது நுழையுமாகில்
பூதசென் மங்கள் கோடி புனிதனும் புருட னுமே. 11.

(இ – ள்) சாதனமின்றி–மண்வெட்டி முதலிய சாதனங்க ளில்லாமல், ஒன்றை – மண் வெட்டுதல் முதலிய ஒரு தொழிலை, சாதிப்பார் – நடத்துபவர், உலகிலில்லை – பூமியின் கண் ணொருவரு மில்லை, ஆதலால் – ஆகையால், இந்த நான்கு மடைந்தவர்க்கு – இச் சாதனங்கள் நாலையு மவதி பரியந்தம் பெற்றவர்களுக்கு, அறிவுண்டாகும் – சொரூப ஞானமுண்டாகும், நூதன விவேகியுள்ளினுழையாது – புதிய விவேகியின் மனதில் ஞானமேறாது, நுழையுமாகில் – ஏறுமாயின், பூத சென்மங்கள் கோடி – பூர்வம் அனந்த சென்மங்களில், புனிதனும் புருடனுமே – சித்த சுத்தியுள்ளவ னாகிய பூமானும்.

(ப – ம்) பதினலு இந்திரியத்தாலு மறிந்து செய்யத்தக்க வெட்டல் எழுதுதல் சமைத்தலாகிய தொழில்களே மண்வெட்டி எழுத்தாணி நெருப்பாகிற வொவ்வொரு சாதன மில்லாமல் நடவாமையால் பதினலிந்திரியத்தினலு மெட்டி யறியக்கூடாத சொரூபத்தை யறியு ஞானம், இந் நான்கு சாதன மில்லாவிடில் வாராதென்பார், "சாதனமின்றி ... அறிவுண்டாகும்" எனவும், இச் சென்மத்தில் சாதன வப்பியாச மின்மையாற் புது விவேகியாய்க் கர்ம பத்தி யோகத்திற் சிரத்தையுற் றிருப்பவனுக்கு, சற்குரு கிருபையினு லனுக்கிரகஞ் செய்யினு மவன் மனதில் ஞானமேறாதென்பார், "நூதன ... நுழையா" தெனவும், சிலபேருக்குண்டாயிருக் கிறதே யெனில், பூமியில் மறைபட்டிருக்கும் வித்து மழை பெய்தவுடன் முளைப்பது போலவும், கடன் வாங்கினவன் கொடுத்தவன் மறந்திருக்கும்போது கொடுப்பது போலவும்,

பூர்வ சென்மங்களில் அப்பியசித்த சாதனங்கள் பிரதி பந்தத்தால் மறைபட்டிருந்து, இச் சென்மத்திற் பிரதிபந்தம் நீங்கினவுடன், ஆசிரிய ருபதேசத்தால் ஞானம் உதயமா மென்பார், "நுழையுமாகில் ... புருடனுமே" எனவுங் கூறினர்.

(தா — ம்) இச் சாதன சதுஷ்டய முள்ளவர்க்கே அப் பிரதிபந்தா பரோட்ச ஞான முண்டாகும்; அஃதில்லாதோர்க்கு அந்த ஞான முண்டாகாதென்பதாம்.

(அ — கை) முற்கூறிய சாதனங்கள் நிறைந்த ஒருவன் அதி தீவிர பக்குவத்தைக் கூறல்.

இவனதி காரி யானே னிந்திரி யங்க ளாலும்
புவனதெய் வங்க ளாலும் பூதபௌ திகங்க ளாலும்
தவனமூன் றடைந்து வெய்யிற் சகித்திடாப் புழுப்போல்
பவமறுஞான தீர்த்தம்படிந்திடப்பதறினனே. [வெம்பிப்

(இ — ள்) இவன் — இச் சாதன சதுஷ்டயமுள்ளவனே, அதிகாரியானேன் — இந் நூலுக் கதிகாரி யாவன், இந்திரியங்க ளாலும் — ஆதியாத்மீகத்தினாலும், புவன தெய்வங்களாலும் — ஆதி தெய்வீகத்தினாலும், பூத பௌதிகங்களாலும் — ஆதி பௌதிகங்களாலும், தவன மூன்றடைந்து — தாபத்திர யாக்கினியை யடைந்து, வெய்யிற் சகித்திடாப் புழுப்போல் — சூரியனது உஷ்ண கிரணத்துக்குச் சகிக்கமாட்டாத கிருமியைப்போல, வெம்பி — சகியாதவனாய், பவமறு — பிறவியை நீக்குவதான, ஞான தீர்த்தம் படிந்திட — ஞான சலத்தில் மூழ்க, பதறினன் — விரைந்தான்.

(ப — ம்) அக்கினியால் வெப்பமுற்ற வோர் புருடன்போல, சரீரத்தை யனுசரித்துக்கொண்டு வாராநின்ற சயரோகம் வயிற்றுவலி சுரம் சிரங்கு கண்வலி முதலான ஆதியாத்மீகத் துன்பத்தினாலும், மனிதர் புலியாதி மிருகம், கழுகு முதலான பட்சி, பாம்பு முதலான ஊர்வன, முதலை முதலான நீர் வாழ்வன வாகிற பிராணிகளால், வாராநின்ற ஆதி பௌதிகத் துன்பத்தினாலும், பனி மழை காற்று வெய்யிலாதியினாலும், கோபுரம் சுவர் இடிந்து வீழ்தல், மர முறிந்து வீழ்தல், கல்லிடறல், முள் தைத்தலால், வாராநின்ற ஆதி தெய்வீகத் துன்பத்தினாலும், தாபத் திரயமுற் றென்பார், "இந்திரியங்க

ளாலும் ... அடைந்" தெனவும், எருமை மாடு, குஞ்சா யிருக் கின்ற பறவை, தண்ணீர்ப் பாம்பு போல, சிறிதாவது சகிக்க வில்லை யென்பார், "புழுப்போல் வெம்பி" யெனவும், அக்கினி யால் உஷ்ண முற்றவன் மண்ணையுஞ் சேற்றையும் விட்டு, இறங்கு துறையில் முழுகும்படியான சலம் தேடி விரைதல் போல, அத் தாபத் திரயமுற்றவன் கன்ம பத்தியை விட்டுச் சமுசார நீக்குவ,தான அத்துவித ஞானத்தை அடையத் தீவிரபக்குவமுற்று னென்பார், "பவமறு ... பதறி" னெனவுங் கூறினர்.

(வி – ரை) ஞான தீர்த்தமென்ற பதத்துக்குக் கேட்ட போதுஞ் சுகங்கொடுத்தல், மாசகற்றல், திருப்தி செயதலாதி யெனக் கொள்க.

(தா – ம்) தாபத் திரயாக் கினியாகிய துன்பங்களுக் காற்றாதவனே அவை நீங்கிப் பிரமானந்தமடைய விரைவ னென்பதாம்.

(அ – கை) தீவிரமுற்ற பக்குவ னென்செய்தா னெனின்,

ஆனவிம் மனைவி மக்க ளர்த்தவே டணைகண் மூன்றில்
கானவர் வலையிற் பட்டுக் கைதப்பி யோடு மான்போற்
போனவன் வெறுங்கையோடே போகாதவண்ணஞ்சென்று
ஞானசற் குருவைக் கண்டு நன்றாக வணங்கி னானே. 13.

(இ – ள்) ஆனவிம் மனைவி–தனக்கான விவ் வில்லாளும், மக்கள் – புத்திரரும், அர்த்தம் – செல்வமும், ஏடணைகள் மூன்றில் – ஆகிய ஈடணாத் திரயத்தினின்றும், கானவர் வலையிற் பட்டு – வேடர்களுடைய வலையிற் சிக்கி, கைதப்பி யோடு மான்போல் – அவர்கள் கைவசமாகாமல் தவறிச் செல்லும் அரிணத்தைப் போல், போனவன் – துறந்து ஞானாசாரியரைத் தேடி யோடினவன், வெறுங் கையோடே போகாத வண்ணம் – சும்மா செல்லாதபடி, சென்று – அன்பு தோத்திரம் புஷ்பம் இவைகளைக் கொண்டுபோய், ஞான சற்குருவைக் கண்டு – ஞானாசாரியரை தெரிசித்து, நன்றாக – திருவடி சாட்சியாக அட்டாங்காதியுடன், வணங்கினான் – பணிந்தான்.

(ப – ம்) வேடர் வலையைத் தப்பி நல்ல காடு நோக்கிச் செல்லு மான்போல், அருந்ததிபோல் ஸ்திரீ, சுப்பிரமணியர் போல் புத்திரர், குபேரன் செல்வம் போல் செல்வங்களாகிய ஈடணாத் திரயத்தைத் துறந்து, மற்றோர் ஸ்திரீயா தியையும், சரியையாதியைப் போதிக்கின்றவராயும் பொருளாதியைக் குறித்து ஞானசாத்திரம் போதிக்கின்றவராயு மிருக்கின்ற அனுசாரியரையும், நீக்கிச் சென்றவனென்பார் "ஆன...போனவன்" எனவும்,தெய்வ முதலானவரிடத்துச் சும்மா போகக் கூடாதாகையால் மனதில் அன்பும் வாக்கிற் றோத்திரமும் கரத்தி லாரார்த்தனைக்குரிய புஷ்பாதியுங் கொண்டு சற்குருவைத் தேடிப் போனானென்பார், " வெறுங்கை ... சென்" றெனவும், பிரமஞானாதி நான்குமே திருமேனியா யுடையவராய் மேகம்போற் கைமாறின்றி மகாவாக்கிய முபதேசிக்கின்றவரா யிருக்கின்ற ஞானாசாரியரைத் தரிசித்துச் சீவ சாட்சிகுறியாமல் திருவடிசாட்சியாக அட்டாங்காதியுடன் பணிந்தானென்பார், "ஞானசற்குரு...வணங்கினா" னெனவுங் கூறினார்.

(தா – ம்) ஈடணாத் திரயமான துன்பங்களினின்று நீங்கி ஞானாசாரியரைத் துதித்து வணங்கினானெனக் கூறியதாம்.

(அ – கை) வணங்கின சீடன் பின்னியாது செய்தானெனில்?

வணங்கிநின் றழுதுசொல்வான் மாயவாழ் வெனுஞ் சோகத்தால், உணங்கினே னையனேயென் னுள்ளமே குளிரும் வண்ணம், பிணங்கிய கோசபாசப் பின்னலைச் சின்னமாக்கி, இணங்கிய குருவே யென்னை யிரட்சித்தல் வேண்டு மென்றான். 14.

(இ – ள்) வணங்கி நின்று – பணிந்து எழுந்துகைகூப்பி நின்று, அழுது சொல்வான் – கண்ணீர் சொரிய வழுது விண்ணப்பம் செய்வான், மாய வாழ்வெனும் – பொய்யான குடும்ப வாழ்க்கை யென்னும், சோகத்தால் – துக்கத்தால், உணங்கினேன் – வாடினேன், அய்யனே – குருவே, என்னுள்ளமே குளிரும் வண்ணம் – என்மனம் சீதளமாகும்படி, பிணங்கிய – ஒன்றினொன்றாக நெருங்கிய, கோசபாசப் பின்னலை – பஞ்ச கோசங்களாகிய பந்தபின்னல் கட்டை, சி ன் ன மா க் கி –

கெடுத்து, இணங்கிய குருவே – அகண்டானந்தந்தர, சம்மதித்திருக்கிற தேசிகரே, என்னை – அடியேனை, இரட்சித்தல் வேண்டுமென்றான் – மோட்ச தீரத்தில் ஏற்ற வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தான்.

(ப – ம்) பிறரால் அடிபட்ட வெப்பத்துடன் வந்து பிதாவைக்கண்டவுடன் அழுகின்ற குழந்தையைப்போல, தாபத்திரயத்தால் வருத்தமுற்று வந்தவன், அதைநீக்குஞ் சற்குருவைக் கண்டவுடன், துக்கக் கண்ணீர் சிந்தினானென்பார், "அழு"தெனவும், நித்தியமான வகண்டானந்தத்தை விட்டு, அநித்தியமாயனந்த துக்கத்துடனிருக்கும் பொய்வாழ்வைச் சத்தியமாய்க் கருதி வாடினானென்பார், "மாயவாழ்வு...உணங்கினேன்" னெனவும், வாக்கு மனதுக் கெட்டாத சொரூபம் தனக்கு குருவாய் வந்ததென்பார், "அய்யனே" எனவும், திரிகரணத்துள் முக்கியமான மனங்குளிராவிடின் துன்ப நீங்காதென்பார், "உள்ளமே...வண்ண" மெனவும், எளிதில் அவிழ்க்கக் கூடாதபின்னல்கட்டுக்குட்பட்டவன், அவிழ்த்துக்கொள்ளுஞ் சுவாதீனமின்றி வருந்தச்செய்யுங் கட்டினையவிழ்த்து விட்டுச் சுகம் செய்விக்கும் அருளுடையோர்போல, தத்துவஞானம் வருகிறவரை கெடாததாகியபஞ்சகோசத்தை நானென்னும் புத்தியாகிய பின்னலுக்குட்பட்டு நீக்கிக்கொள்ளுஞ் சுவாதீனமின்றித் துன்புறுவேனை, அப்பின்னலினின்று நீக்கி, அகண்டானந்தந்தர சம்மதித்திருக்கும் தேசிகரே யென்றானென்பார், "பிணங்கிய...குருவே" யெனவும், கடலில் இருப்போனைக் கரையில் ஏற்றுவதுபோல, பவ சமுத்திரத்திலிருக்கும் என்னை, மோட்ச தீரத்திலேற்ற வேண்டுமென்றானென்பார், "இரட்சித்தல்வேண்டு" மெனவுங் கூறினார்.

(தா – ம்) அறிவின்மையால் வரும் பவத் துன்பத்தை நீக்கி, அறிவினால் வரும் இன்பத்தின் மூழ்கும்படி செய்விக்க வாசிரியரை வேண்டிக் கொண்டதாம்.

(அ – கை) சீடன் வேண்டிக் கொண்டபின்னாசிரியர் யாது செய்தாரெனில்,

அன்னைதன் சிசுவையைய னமைமீன் பறவை போலத்
தன்னகங் கருதி நோக்கித் தடவிச்சந் நிதி யிருத்தி

உன்னது பிறவி மாற்று முபாயமொன் றுண்டு சொல்வேன்
சொன்னது கேட்பாயாகிற்றொடர் பவந்தொலையுமென்றார்.

(இ – ள்) அன்னை – தாயையொத்த, அய்யன் – குருவானவர், தன் சிசுவை – தன் சீடனை, ஆமை போல் – கூர்மத்தைப் போல, தன்னகங் கருதி – தனதுள்ளத்தில் சிந்தித்து, மீன்போல் – மச்சத்தைப் போல, நோக்கி – பார்த்து, பறவை போல் – பட்சியைப் போல, தடவி – வியாபித்து, சந்நிதியிருத்தி – எதிரிலிருக்கச் செய்து, உன்னது பிறவி மாற்றும் – உனது சமுசாரத் துன்பத்தை நீக்கும், உபாயம் ஒன்று உண்டு – ஓர் தந்திரம் உளது, சொல்வேன் – அதை உனக்கு உபதேசிப்பேன், சொன்னது கேட்பாயாகில் – உபதேசித்தபடி கேட்டு அப்பியாசிப்பாயாகில், தொடர் பவம் – அநாதி காலமாய்த் தொடர்ந்து வந்துள்ள சமுசார துன்பம், தொலையு மென்றார் – நிவர்த்தியாகு மென்று கூறினார்.

(ப – ம்) மருந்து கொடுத்து வியாதியை நீக்கி யமுதூட்டி யுடலை வளர்க்குந் தாய்போல, மயித்திரியாதி குணங்களைக் கொடுத்து இராகாதிகளை நீக்கி உபதேச மொழியால் அறிவை வளர்க்கு மியல்பினர் என்பார், "அன்னை" யெனவும், ஆமையானது கரைக்கண் ணீன்ற முட்டையைக் குஞ்சாகும்படி தன் உள்ளத்தில் சிந்திப்பது போல, சீடன் விஷயத்தை நினைக்கும் ஆகாமியத்தைக் கெடுத்து, அறிவை யுணரும்படி சிந்தித்தா ரென்பார், "ஆமைபோற் கருதி" யெனவும், மீனானது தனது சினையைக்குஞ்சாகும்படிபார்ப்பதுபோல, சீடன் முன் பந்தப் பட்டிருக்கின்ற சஞ்சித மொழிந்து தனது சத்தா மாத்திரமான திருஷ்டி வரும்படி பார்த்தா ரென்பார், "மீன்போல் நோக்கி" யெனவும், பறவையானது தன் முட்டையைக் குஞ்சாகும்படி தன் சிறகினால் தடவுவதுபோல, பிராரத்தமாக வந்த பௌதிக வடிவம் நித்தியானந்தமாக விளங்கத் தமது பூர்ணானந்தமாக வியாபித்தா ரென்பார், "பறவை போலத் தடவி" யெனவும், விவகாரத்திற் றனக்குண்டாகிய அஞ்ஞானத்தை ஞானத்தால் நீக்கி யிருப்பதால், அந்த ஞானநுபவம் இருக்கிறது உபதேசிக்கிறே னென்றாரென்பார், "உபாயம் ... சொல்வேன்" எனவும், கெருட்த் தியானம், மந்திராதி நம்பிக் கேட் டனுஷ்டித்தல், புலியாதி மீது தற்

சுதந்திரமின்றி யேவினபடி செல்லல் போல, உபதேசித்தபடி நம்பி யப்பியாசிக்கவேண்டு மென்பார், "சொன்னது கேட்பா யாகில்" எனவுங் கூறினர்.

(வி – ரை) ஆறுவித தீட்சையில் நினைத்தலுடன் தியானித்தலைச் சேர்த்துக்கருதல், நோக்கல், தடவலாகிய மூன்று மிதிற் கூறப்பட்டதெனக் கொள்க.

(தா – ம்) மூவகை தீட்சை செய்து உபதேசிப்பதற்காக வகங்கார மறியாமைக ளுளவோவென வாராய்ந்தாரென்பதாம்

(அ – கை) ஆசிரியர் வசனங் கேட்டசீடன் யாது செய்தா னெனில்,

தொடர்பவந்தொலையுமென்று சொன்னதைக்கேட்டபோ
தடமடு மூழ்கி னன்போற் சரீரமுங் குளிர்ந்துள் ளாறி[தே
அடருமன் பொழுகு மாபோ லானந்த பாஷ்பங் காட்டி
மடன்மலர்ப்பாதமீண்டும்வணங்கிநின்றீதுசொல்வான். 16.

(இ – ள்) தொடர்பவம் – அநாதியாய்த் தொடர்ந்து வந்த சமுசாரமானது, தொலையுமென்று – நீங்குமென்று, சொன்னதை – அருளியதை, கேட்டபோதே – கேட்ட மாத்திரத்தில், தடமடு–விசாலமான மடுவாகவுள்ள சலத்தில், மூழ்கினன் போல் – முழுகினவனைப் போல, சரீரமுங் குளிர்ந்து – தேகமும் சீதளமாய், உள்ளாறி – மனதும் சுக முற்று, அடருமன் பொழுகுமாபோல் – நிறைந்த அன்பானது பொங்கி வடிதல்போல, ஆனந்த பாஷ்பங் காட்டி – ஆனந்தக் கண்ணீரை அன்பானது காட்டி, மடன் மலர்ப் பாதம் – இதழ்களையுடைய தாமரை மலர் போன்ற திருவடியை, மீண்டும் வணங்கி – குருவுக்குத் தயவுண்டாக வடிக்கடி நமஸ்கரித்து, நின்று – எழுந்திருகரம் கூப்பி நின்று, ஈது சொல்வான் – இதனை விண்ணப்பஞ் செய்வான்.

(ப – ம்) புண்ணிய பாவம் சுக துக்கம் செனன மரண சமுசாரம் அநாதியென்பார், "தொடர்பவ" மெனவும், தாக முற்றவன் தண்ணீர் இருக்கிறதெனக் கேட்டல், ஸ்திரீ, புருடன் வரவு கேட்டல், குளத்து மீன் சிறிதளவு மழையாற் சுகமுறல் போல, சாமானியசுகமுற்றெனென்பார், "சொன்னதை.

உள்ளூறி" யெனவும், நிறைந்த மதுக்குடம் வெய்யிற்பட்டால் பொங்கி வடிதல் போல, நிறைந்த வன்பானது குருவுபதேசிக்கிறேமென்றதைக் கேட்ட மாத்திரத்தில் ஆனந்தக் கண்ணீர் காட்டிய தென்பார், "அட்ரு மன்பு ... பாஷ்பங் காட்டி" எனவும், இச்சை மிகுதியால் இஷ்டம் நிறைவேற குருவுக்குத் தயவுண்டாக, அடிக்கடி வணங்கினு னென்பார், "மீண்டும் வணங்கி" எனவுங் கூறினர்.

(தா – ம்) ஆசாரியர் வசனத்து அகமகிழ்ந்து வணங்கி விண்ணப்பஞ் செய்யத் தொடங்கினதாம்.

(அ – கை) சீடன் விண்ணப்பஞ் செய்ததி யாதெனில்,

சொன்னது கேட்கமாட்டாத் தொண்டனுனுஞ் சுவாமி
நின்னது கருணையாலே நீரென்னை யாளலாமே
உன்னது பிறவிமாற்று முபாயமொன் றுண் டென் றீரே
இன்னதென்றதைநீர்காட்டியீடேற்றல்வேண்டுமென்ருன்.

(இ – ள்) சொன்னது கேட்கமாட்டா – தேவரீர் உபதேசித்தைக் கேட்டு அப்பியாசிக்க மாட்டாத, தொண்டனுனும் – அடிமையாக இருந்தாலும், சுவாமி – குருவே, நின்னது கருணையால் – தேவரீருடைய பேரருளால், நீரென்னை ஆளலாமே – தேவரீர் அடியேனை இரட்சித்து ஆளலாகுமே, உன்னது பிறவிமாற்றும் – உனது சமுசாரத்தைக் கெடுக்கும், உபாயம் – தந்திரம், ஒன்றுண்டென்றீரே – ஒன்று உளதென்று அனுக்கிரகித்தீரே, இன்னதென்று – இப்படிப்பட்டதென்று, அதை – அவ்வுபாயத்தை, நீர்காட்டி – தேவரீர் உபதேசித்து, ஈடேற்றல் வேண்டுமென்ருன் – என்னை சமுசார துன்பத்தினின்றும் இரட்சித்தல் வேண்டுமென்று வேண்டிக் கொண்டான்.

(ப – ம்) அகமு மட்டுமின்றிக் கேட்கத்தக்கவனென்பார், "சொன்னது ...... தொண்டனுனும்" எனவும், உபாசித்த தெய்வம், உபாசகன் மறந்திருந்தாலும், உதவி செய்தல் போல, சீடன் தனக்கு வேண்டியதைக் கேளாதிருந்தாலும் வலிய அனுக்கிரகஞ் செய்யுங் குருவென்பார், "சுவாமி" யெனவும், வாழையைச் சுடல்போலவும் மண்ணை வேதித்தல் போலவும் மரத்தை வளைத்தல் போலவும் மேகம் போலக்

கைம்மாறின்றி உமது பேரருளால் என்னை ஆளலாமே யென்றூ னென்பார், "கின்னது ...... ஆளலாமே" யெனவும், பசியால் அன்னஞ் சீக்கிரங் கேட்டல் போல, தாபத்திரய மிகுதியால் உபதேசிக்கிறூமென்று கூறியிருக்கவும், விரைந்து வேண்டிக் கொண்டானென்பார், "இன்னதென்று... ஈடேற்றல்வேண்டு" மென்றூனெனவுங் கூறினர்.

(வி – ரை) கேட்கமாட்டா வென்றதனல், கேட்பேன் கேட்கமாட்டேனெனவுங் கூறவில்லை எனவும், கேட்கமாட்டாத் தொண்டனுலும் என்றதனல், அகங்கார மறியாமையின் றெனக் காட்டியதெனவும் கொள்க.

(தா – ம்) அகமட்டின்றெனக் குறிப்பாலறிவித் துபதே சிக்க வேண்டிக் கொண்டானென்பதாம்.

(அ – கை) வேண்டிக்கொண்ட சீடனுக் காசிரியர் செய்தது யாதெனில்,

அடங்கிய விருத்தியானென் றறிந்தபின் செறிந்தமண்ணின்
குடம்பையுட்புழுமுன் னூதுங்குளவியின் கொள்கைபோலத்
தொடங்கிய குருவுமான்ம சொரூபமே மருவவேண்டி
உடம்பினுட் சிவனைப்பார்த் துபதேச மோதுவாரே. 18

(இ – ள்) அடங்கிய விருத்தியானென்று – இராகாதி விருத்தி யொடுங்கினவனென்று, அறிந்தபின் – சோதித்துத் தெரிந்த பின்னர், செறிந்த – நெருங்கிய, மண்ணின் குடம்பை யுள் – மண்ணினலாகிய கூட்டினுள் இருக்கின்ற, புழுமுன் – கிருமியின் முன்னே, ஊதும் குளவியின் – அதை நோக்கிச் சத்திக்கும் பிரமரத்தினுடைய, கொள்கை போல – தன்மை யைப் போல, தொடங்கிய குருவும் – சோதித்து உபதேசிக்க ஆரம்பித்த ஆசாரியரும், ஆன்ம சொரூபமே மருவவேண்டி – சீடன் ஆத்மசொரூபத்தை அடையும்படி, உடம்பினுள் – தேகத்துக்குள் இருக்கும், சிவனைப்பார்த்து – விசிட்டனை சிவனை நோக்கி, உபதேசமோதுவார் – உபதேசஞ் செய்வார்.

(ப – ம்) இராகாதி நீக்கஞ் சோதித்து அறிந்து உபதே சிக்க வேண்டுமென்பார், "அடங்கிய ...... அறிந்தபின்" னெனவும், குளவி சோதித்தெடுத்த புழுவை நோக்கித் தன்

னுருவமாகும்படி சத்தித்தல் போல,யுத்தி இன்மை குய்யுத்தி விட்டு, சையுத்தி யுடையவனெனச் சோதித்தறிந் தாட் கொள்ளப்பட்ட சீடன், ஆத்ம சொரூபத்தை யடையும்படி, சாட்சி தேகத்தை விட்டு, சிவனை நோக்கி என்பார், "செறிந்த மண்ணின் ...... சிவனைப் பார்த்"தெனவுங்கூறினூர்.

(வி – ரை) குளவியின் கொள்கை போல வென்ற பதத் துக்கு, குளவியானது புழுவைக் கொட்டிப் பார்த்து மிகத் துடிப்பதையும் துடியாமற் கிடப்பதையும் ஒழித்து, மத்திய துடிப்பதை எடுத்து அது தன்னுருவமாகும்படி சத்தித்தல் போல எனவும், அறுவித திட்சையில் பாடஞ் சொல்லலுடன் உபதேசித்தலைச் சேர்த்து ஓதுவாரென இதிற் கூறப்பட்ட தெனவுங்கொள்க.

(தா – ம்) சிட்டனைவன் தனதெதார்த்த சொரூபத்தைப் பார்த்து, அஃதாக விளங்கும் பொருட்டு அனுக்கிரகிக்கத் தொடங்கினதாம்.

(அ – கை) அவ்வாசிரியர் பவமுண்டான காரணமும் அது நீங்கும் கால வளவையுங் கூறல்,

வாராயென்மகனே தன்னை மறந்தவன் பிறந்திறந்து
தீராதசுழற்காற் றுற்றசெத்தை போற்சுற்றிச் சுற்றி
பேராத காலநேமிப் பிரமையிற் றிரிவன்போதம்
ஆராயுந் தன்னைத்தா னென்றறியுமவ் வளவுந்தானே.

(இ – ள்) என் மகனே – எனது புத்திரனே, வாராய் – கேளாய், தன்னை மறந்தவன் – தனது எதார்த்த சொரூ பத்தை மறந்தவன், பிறந்து இறந்து – எழுவகைப் பிறவி யிலும் சனித்து மரித்து, தீராத சுழல்காற்றுற்ற – ஓயாத சுழல் காற்றிலகப்பட்ட, செத்தைபோல் – துரும்பைப்போல் சுற்றிச் சுற்றி – சுழன்று சுழன்று, பேராதகால நேமிப்பிரமை யில் – நீங்காத காலச் சக்கிரமென்னும் பிராந்தியில், திரிவன் – அலைவன், போதம் ஆராயும் – ஞானத்தாலறியும, தன்னைத் தானென்றறியும் அவ்வளவுந்தான் – சிவனை சத்திய ஞான வனந்தானந்த சொரூபமென்றறிகிற வரைக்கும்.

(ப — ம்) எதிரே சீடன் கேட்டுக்கொண்டிருந்தாலும் விசேடமாய்க்கூறு முபதேசத்தை வேறு சிந்தையற்றுக் கேட்கும்படியாய் அபிமுகப் படுத்தும் பொருட்டுக் கேளாய் என்பார் "வாராய்" எனவும், தன்மனதின்படி நடக்கின்ற புத்திரனை என் மகன் என்பதுபோலத் தன்னையடைந்து அனுகூல விருத்தியாய் நடப்பவனென்பார் "என்மக" னெனவும், செல்வத்தை மறந்தவன் பிச்சைக்காரனாய்த் திரிவதுபோல அகண்டானந்த சொரூபத்தை மறந்து எழுவகைப் பிறவியிலுஞ் செனித்து மரித்துச் சுழன்றனென்பார் "தன்னை மறந்தவன் ... சுற்றி" யெனவும், உற்பத்தி திதி லயங்களையுடைய தென்பார் "போராத காலநேமி" யெனவும், சிலவருடத்தின் முன் பிறந்தேன், சில வருடத்தின் பின் இறப்பேன் என்னும் பிராந்தியென்பார் "பிரமையி"லெனவும், கரும பத்தியினாலின்றி ஞானத்தாலறியும் சரீரத்திரய விலட்சணமான சிவனைச் சத்தியஞானவனந்தானந்த சொரூபமென்றறிகிற வரைக்கும் என்பார் "போதமாராயும் ... அவ்வளவும்" எனவும் கூறினார்.

(தா — ம்) அறிவின்மையாலுண்டான பவ, மறிவுதயமாய்த் தன்னைத் தானென வுணருமட்டு மிருக்கு மென்பதாம்.

(அ — கை) தன்னையறியும் வகை யாதென்று கேட்பாயானால்,

தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங் கண்டானேல்
பின்னையத் தலைவன்றானாய்ப் பிரமமாய் பிறப்புத்தீர்வன்
உன்னைநீ யறிவாயாகி லுனக்கொரு கேடுமில்லை
என்னைநீ கேட்கையாலே யிதுபதேசித்தேனே. 20

(இ — ள்) தன்னையும் — சீவனையும், தனக்கு — சீவனான தனக்கு, ஆதாரத் தலைவனையும் — ஆதாரமாகிய கூடஸ்தனையும், கண்டானேல் — ஒருவன் தரிசிப்பானாயின், பின்னை — தரிசித்தபின், அத்தலைவன் றானாய் — அக்கூடஸ்தனே தானாய் பிரமமாய் — கூடஸ்தனான தானே சர்வ சாட்சியான பிரமமென்னு மனுபூதியுடையவனாய், பிறப்புத் தீர்வன் — சமுசாரத்தினின்றும் நீங்குவன், உன்னை நீ யறிவாயாகில் — பிரத்தியக்கபின்ன பரமான்மாவான உனது சொரூபத்தை நீ யறிந்து கொள்வாயானால், உனக்கொரு கேடுமில்லை — உனக்கொரு துன்பமும் உளதாதலில்லை, என்னை — எம்மை, நீ கேட்கை

யாலே – சரண் அடைந்து நீ கேட்டபடியால், ஈதுப்தேசித்தேன் – அதிரகசியார்த்தமான இவ்வுபதேசத்தை கூறினேன்

(ப – ம்) சரீரத்திரய விலட்சண சீவனையும் சச்சிதானந்த கூடஸ்தரையும் அறிந்தால் அந்த சச்சிதானந்த கூடஸ்தன் தானாகுமென்பார் "தன்னையும் ... தலைவன் றானாய்" எனவும், கூடஸ்தரே சருவ சாட்சியான பிரமமாய்ச் சமுசாரத்தினின்று நீங்குவனென்பார் "பிரமமாய்ப் பிறப்புத்தீர்வ" னெனவும், தாபத்திரயாதி துன்பத்தி லொன்றுமில்லை என்பார் "ஒரு கேடுமில்லை" யெனவும், இது வலியக்கூறக்கூடாத ரகசியார்த்த மென்பார் "நீ கேட்கையாலே யீதுபதேசித்தே" னெனவுங் கூறினார்.

(தா – ம்) பிரமத்தையறியும் வகையும் அறிந்தால் சமுசாரந் தீருமென்பதுங் கூறியதாம்.

(அ – கை) இவ்வுபதேசத்தினால் சீடன் அமைவுபெறாது வாசிரியரை வினாவுதல்.

என்னைத்தான் சடனுவுள்ளத்தெண்ணியோசொன்னீரையா
தன்னைத்தானறியா மாந்தர் தரணியி லொருவருண்டோ
பின்னைத்தா னவர்களெல்லாம் பிறந்திறந் துழலுவானேன்
நின்னைத்தா னம்பினேற்கு நிண்ணய மருளுவீரே. 21

(இ – ள) அய்யா – எனதாசிரியரே, என்னை – அடியேனை சடனு – மூடனாக, உள்ளத்தெண்ணியோ – திருவுளத்தில் கருதியோ, சொன்னீர் – உன்னை நீ யறிவாயாகில் உனக்கொரு கேடுமில்லை யென்று அருளினீர், தன்னைத்தா னறியாமாந்தர் – தம்மைத் தெரிந்து கொள்ளாத மனுடர், தரணியில் – பூமியின்கண், ஒருவருண்டோ – ஒருவருளரோ இல்லை, பின்னை – பின்பு. அவர்களெல்லாம் – அவர்களனைவரும், பிறந்திறந்து – சனித்து மரித்து, உழலுவானேன் – சுழலா நிற்பது என்னை, நின்னைத்தான் – தேவரீரையே, நம்பினேற்கு – மாதாபிதாகுரு தெய்வமாக விசுவசித்த அடியேனுக்கு, நிண்ணயம் அருளுவீர் – அவ்வுண்மையை உள்ளவாறு உபதேசிப்பீராக.

(ப – ம்) ஆசிரியர் தமதனுபவப்படி தேகத்திற் றானாய் இருந்த தன்னை யறியவேண்டுமென்ன, வஃதனுபவமர்காத

சீடன், தேகமே தானெனக் கருதி என்னையான் அறியவில்லையோ வென்றானென்பார் "என்னை ... சொன்னீ" ரெனவும், வருணாச் சிரமமாதியாகத் தன்னையறிந்த யாவர்க்கும் சனன மரணமே னீங்கவில்லை என்றானென்பார் "பின்னை ... உழலு வானேன்" எனவும், தானென்பதிஃதென வுண்மை வெளியாக தெரிவிக்க வேண்டு மென்றானென்பார் "நின்ணயம் அருளுவீ" ரெனவுங் கூறினர். (நின்னை...அருளுவீர்) என்றது ஒருமை பன்மை மயக்கம்.

(தா – ம்) தன்னை அறியவேண்டு மென்பதை எல்லோரும் சாதாரணமாகக் கொள்ளும் தேகமெனக் கருதியஃதை யறிந்தவர்கள் பவ நீங்காமையாற் றானென்ப தனுபவமாகும் பொருட்டுத் தன் இயல்பை விசாரித்ததாம்.

(அ – கை) தானென்ப தனுபவமாகும் பொருட்டு விசாரித்த சீடனுக் காசிரியருத்தரஞ் சொன்னதைக் கூறல்,

இன்னது தேகந்தேகி யிவனெனவுணர்வன் யாவன்
அன்னவன் றன்னைத்தா னென்றறிந்தவனாகு மென்றார்
சொன்னபின் றேகியாரித் தூலமல்லாம லென்றான்
பின்னது கேட்டவையர் பீடையும் நகையுங்கொண்டார்

(இ – ள்) இன்னது தேகம் – கடம்போல அறியப்படுவதான இது ஸ்துலாதி சரீரம், இவன் தேகி – இவைகளுக்கு விலட்சணமாக இவைகளை அறிபவனான இவன் தேகி, என வுணர்வன் யாவன் – என் றிவ்வாறு சிற்சடங்களைப் பிரித்து சித்தாகிய தன்னை அபரோட்சமாக அறிந்தவன் யாவனோ, அன்னவன் – அப்படிப்பட்டவனே, தன்னைத் தானென்று – தன்னைப் பிரமமென்று, அறிந்தவனாகுமென்றார் – தெரிந்தவனாகுமென்று ஆசாரியரருளினார், சொன்னபின் – இவ்வாறு ஆசாரியர் தன்னை யறியும் நிர்ணயத்தை யருளியபின்னர், இத் தூலமல்லாமல் – இந்த தூல தேகமே தானல்லாமல், தேகி யாரென்றான் – வேறே சரீரியாவன் காணேன் இருந்தால் காணப்படானா காணப்படாமையின் இல்லை என்று சீடன் கூறினான், பின் – பின்னர், அது கேட்ட வையர் – அவ் வனுபவத்தைக் கேட்ட ஆசாரியர், பீடையும் – மன வருத்தமும், நகையும் – மகிழ்ச்சியும்,கொண்டார் – கொண்டனர்.

(ப – ம்) சருமாதி தத்துவம் 6-ம், மனமாதி அந்தக் கரணம் 5-ம், பிராணுதி வாயு 5-ம், சுரோத்திராதி ஞானேந்திரியம் 5-ம், வாக்காதி கருமேந்திரியம் 5-ம், அவித்தை சீவன் 2-ம் ஆகிய இருபத்தெட்டு தத்துவமும் எனதென்று அறியப்படுவதால் தேகியல்ல தேகமே, இவை களுக்கு விலட்சணமான சச்சிதானந்த வாத்மாவே தேகி என வபரோட்சமா யறிந்தவ னென்பார் "இன்னது தேகம் ... அன்னவன்" எனவும், கண்டாகண்டம் மூர்த்தாமூர்த்தத்துள் ஒரு விதமாயாவது இத்தேகத்தை விட்டுத் தேகியில்லையே என்றுனென்பார் "தேகியா ரித்தால மல்லாம" லெனவும் இத் தேகம் தானுயிருப்பவனை எங்ஙன முய்விக்கலாமென வாலோசிக்கும் மன வருத்தமும், தேகந் தானென வறிந்தவன் தேகியையும் தானென வறிவனென மகிழ்ச்சியும், நம் மிட்த்திலே வந்தும் தெரியவில்லையே என வருத்தமும், இப்படியும் அறியாமையுளவோ வெனப் புன்சிரிப்பும் கொண்டாரென்பார், "பீடையும் ... கொண்டா" ரெனவுங் கூறினர்.

(தா – ம்) ஆசாரியர் தமதனுபவமான சுத்த சைதன்னி யத்தைத் தானெனக் கூறச் சீடன் தனக்கனுபவமான தேகம் தானன்றித் தான் வேறுளதோ வென வினவினதற்காக வாசிரியர் வருத்தமுற றிரங்கியதாம்.

(அ – கை) வருத்தமுற்ற வாசிரியர் சீடன் தானென்பது அறியும் பொருட்டு அவனை வினவுதல்.

தேகமல்லாமல் வேறே தேகியார் காணே னென்றாய்
மோகமாங் கனவில் வந்து மூனைத்திடு மவனூர் சொல்வாய்
சோகமாங்கனவுதோன்றச் சுழுத்திகண்டவனூர்சொல்வாய்
ஆகநீ நனவி லெண்ணு மறிவுதா னேது சொல்வாய். 23.

(இ – ள்) தேகமல்லாமல் – நான் மனுடன் நான் பிராமணன் என்னு மனுபவத்தால் தேகமே தானென்பதற்கு பொருளல்லாமல், வேறே – அதற்கன்னியமாக, தேகியார் – சரீரி என்பவன் யாவன், காணேன் என்றாய் – இருந்தாற் காணப்படானு காணப்படாமையின் இல்லை என்று சொன்னுய், (அங்ஙனமாயின்) மோகமாம் கனவில் வந்து –(ஆத்மாவென்று

உனக் கபிமதமான தேகம் சேட்டையற்றுக் கிடக்கவும்) நித்திரா மயக்க வறிவினால் சொப்பனத்தின்கண் முன்னுள்ள வருணாச்சிரமங்களை மாறுபடக் காட்டி வந்து, மூளைத்திடு மவனார் சொல்வாய் – உதித்து அஸ்திரமான சத்தாதி விடயங்களை யறிபவன் யாவன் நீ சொல்லு, சோகமாம் கனவு தோன்று – சத்துரு சர்ப்பாதிகளால் துன்ப முளதாகும் அச் சொப்பனமுந் தோன்றாத, சுழுத்தி கண்டவனார் சொல்வாய் – சுழுத்தியிற் சூனியமாகத் தரிசித்தவனார் சொல்லுவாயாக, நீ நனவி லெண்ணும் – சொப்பன சுழுத்தியில் பிரேதம்போலக் கிடந்த இத் தேகத்தைத் தூக்கிக்கொண்டு சாக்கிரத்தில் தன் உண்மை நிலை வருணாச்சிரமமாதியைக் கருதும் அறிவு தான் ஏது சொல்வாய் – பிரக்ஞை யாது சொல்.

(ப – ம்) மதுபானம் போல வருணாச்சிரமமாதியை மாறு படுத்திக் காட்டு மயக்கவறிவென்பார் "மோகமாங்கன" வெனவும், சர்ப்பாதிபய சரீரத்தால் துன்பங் கொடுக்கப்பட்டதென் பார் "சோகமாம் கன" வெனவும் சுபாவ அறிவும் மயக்க அறி வும் இல்லாதவென்பார் "சுழுத்தி" யெனவும், மூங்கிலால் கட்டிச் சாத்தியிருக்கும் பூதத்துட் புகுந்தாட்டும் புருடன் போல, நித்திரையிற் பிரேதம்போல் கிடக்கும் உடலைத் தூக் கிக்கொண்டு சாக்கிரத்தில் அதன் தத்துவ நிலை வருணாச்சிரம மாதியைக் குறித்துச் சுபாவவறிவுடன் கருதும் பிரக்ஞை யென்பார் "நீ நனவில் எண்ணும் அறிவு" எனவுங் கூறினார்.

(தா – ம்) தேகத்தைத் தவிர தேகியொருவனுளனென் பது சீடன் அறியும் பொருட்டு அவத்தாத்திரயங்களையறிகின் றவனாரென வாசிரியர் வினவித் தனக்குத் தானே தோன்றத் தடஸ்த லட்சணங் கொண்டு அறிவித்ததாம்.

(அ – கை) இவ்வுபதேசத்தினால் சீடன் தனதாத்ம சொரூபத்தை நன்றாய்த் தெரிந்துக்கொள்ளாமலதை விளக்கவேண்டுமெனல்.

நனவுகண்டது நான்கண்ட நனவுள நினைவுநீங்கிக்
கனவுகண்டதுஞ் சுழுத்தி கண்டதும் வேறென்றேபோல்
தினமனுபவித்த தொக்குந் தெரியவுமில்லை சற்றே
மனதினி லுதிக்கும் பின்னை மறைக்கும தருளுவீரே. 24

(இ - ள்) நனவு கண்டதும் - சாக்கிரத்தில் சுபாவவறிவுடன் ஸ்திரமான சத்தாதி விடயங்களை யறிந்ததும், நான் கண்ட - யானறிந்த, நனவுள நினைவு நீங்கி - சாக்கிரத்தின் ஸ்திர பிரபஞ்சத்தினெண்ண மொழிந்து, கனவு கண்டதும் - சொப்பனத்தின் மயக்கவறிவுடன் அஸ்திரமான பிரபஞ்சங்களை யறிந்ததும், சுழுத்தி கண்டதும் - இவ்விரு வவஸ்தைகளின் நினைவின்றிய, சுழுத்தியில் சூன்யத்தை தெரிசித்ததும் வேறொன்றேபோல் - இவைகட்கு அன்னியம்போல் தினமநுபவித்த தொக்கும் - நாடோறு மநுபவிப்பதினால் தேவரீர் தேகியொருவ னிருக்கிறானென்றருளிய தொவ்வும், (அவ்வநுபவத்திலிரு என்னின்), தெரியவுமில்லை - அது நன்றாகச் சருவகாலமும் விளங்கவில்லை, சற்றே மனதினிலுதிக்கும் - இமைப்போது சுவாமிகளி னுபதேசத்தினா லுண்டான விவேகத்தில் தேகியிருப்பதாக விளங்குகிறது, பின்னை மறைக்கும் - மறுநிமிஷத்தி லஞ்ஞானமானது மறைக்கின்றது, அதருளுவீர் - தேகியின் சொரூபம் நன்றாக சர்வகாலமும் விளங்கும்படியாக வுபதேசிப்பீராக.

(ப - ம்) அவத்தாத்திரயத்துக்கு விலட்சணமாய் தேகி எந்நாளுமிருப்பது சுவாமி யறிவிக்கத் தெரிந்ததென்றானென்பார், "நனவு கண்டது ... ஒக்கு" மெனவும், அர்த்தப் பிராப்தி விவேகமுடையவனாதலால் மழைக் காலச் சூரியன் போலத் தேகியின் சொரூபந் தோன்றி மறைகிறதென்றானென்பார், "மனதினி லுதிக்கும் பின்னை மறைக்கு" மெனவுங் கூறினார்.

(தா - ம்) தேகத்தின்கண் அவத்தைகளை யறிகின்ற தேகியொருவனுளனென வொருவாற்றானறிந்த சீடன், அஃது மின்மினிபோலத் தோன்றி மறைதலின், தன்னொதார்த்த சொரூபம் இஃதென விளக்கவேண்டுமென வேண்டிக்கொண்டதாம்.

(அ - கை) வேண்டிக்கொண்ட சீடனுக்காசிரியர் விளக்குகின்ற விதத்தைக் கூறல்.

தூலத்தின் மரங்கள்காட்டித் தனிப்பிறைகாட்டுவார்போல்
ஆலத்தினுடுக்கள் காட்டி யருந்ததி காட்டுவார்போல்
தூலத்தை முன்புகாட்டிச் சூக்கும சொருபமான
மூலத்தைப் பின்புகாட்ட முனிவரர் தொடங்கினாரே. 25

(இ – ள்) தூலத்தின் மரங்கள் காட்டி – பூமியின் கண்ணுள்ள விருட்சத்தின் சாகை நுனியை முன்னே தெரிசிப்பித்து, தனிப்பிறை காட்டுவார்போல் – பின்னால் புலப்படாத சூட்சுமமான மூன்றாம் பிறையை தெரிசிப்பிப்பவர்களைப் போலவும், ஆலத்தின் னுடுக்கள் காட்டி – ஆகாயத்தின் கண்ணுள்ள வசிட்டாதி தூல நக்ஷத்திரங்களைக் காட்டி, அருந்ததி காட்டுவார்போல் – பின்பு சாதாரணமாக புலப்படாத சூட்சுமமான வருந்ததியை தெரிசிப்பிப்பவர்களைப் போலவும், தூலத்தை முன்பு காட்டி – தூலமாகிய சீவேசுர சகத்தை முன்னே தெரிசிப்பித்து, சூக்கும சொரூபமான மூலத்தை – சூட்சும ரூபமான தேகாதி பிரகிருதிவரை காரணமான பிரமத்தை, பின்பு காட்ட – பின்னால் தெரிசிப்பிக்க, முனிவரர் – மகா மௌன முடையோர், தொடங்கினர் – ஆரம்பித்தார்.

(ப – ம்) ஆறிந்திரியத்தா லறியப்படாத்தாயும், அணுவாகிய சீவனுக்குள் ளணுவாயு மிருக்கும் சொரூபமென்பார் "சூக்கும சொரூப" மெனவும், தேகமுதற் பிரகிருதிவரைக்கும் காரணமல்ல, சத்திய ஞான வனந்தானந்த பிரமமே காரணமென்பார், "மூல" மெனவும், மேலான மகா மௌனமுடையோரென்பார், "முனிவர்" எனவுங் கூறினர்.

(வி – ரை) முனிவரென்ற பதத்துக்கு வாக்கு மௌனம் ஞானேந்திரிய நிக்கிரகமாகிய கரண மௌனம், தேகமசையாமையாகிய காட்ட மௌனம், யோகத்தா லயிக்கிறதாகிய மனோ மௌனம், இவை பயனற்றது; இதற்கு மேலான மகா மௌனமாவது சகலமும் பிரமமாய்க் காணலெனவுங்கொள்க.

(தா – ம்) ஆசாரியர் விசேடமா யுபதேசிக்க வேண்டி முன்பு சீவேசுர சகத்தைக் காட்டி அவைகளை நீக்கிப் பின்பு சித்தைத் தெரிசிப்பிக்கத் தொடங்கினதாம்.

(அ – கை) ஆரோப யுக்தியால் பந்தம், அபவாத யுக்தியால் மோட்ச மென்று வேதாந்த சாஸ்திரங்கள் கூறுகின்றதெனக் கூறல்.

அத்தியா ரோபமென்று மபவாதமென்றுஞ் சொல்லும்
உத்தியாற்பந்தம் வீடென்றுரைக்கும்வேதாந்தமெல்லாம்
மித்தையாமா ரோபத்தாற் பந்தமா மபவாதத்தான்
முத்தியா மிவ்விரண்டின் முந்தியா ரோபங்கேளாய். 26

(இ – ள்) அத்தியாரோபமென்று சொல்லு முத்தியால் பந்தமென்றும், அபவாதமென்று சொல்லு முத்தியால் வீடென்றும், வேதாந்த மெல்லாம் – ஞான காண்டமாகிய வுபநிடதங்களனைத்தும், உரைக்கும் – கூறுநிற்கும், ஆதலால் மித்தையா மாரோபத்தால் – இல்லாத ஆரோபத்தினால், பந்தமாம் – கட்டாம், அபவாதத்தால் முத்தியாம் – அபவாதத்தினால் வீடாம், இவ்விரண்டில் – இந்த விருவகையில், முந்தியாரோபங் கேளாய் – முன்பு ஆரோபக் கிரமத்தைக் கூறக் கேட்பாய்.

(ப – ம்) கரும பத்தி காண்டத்தில் விவர்த்தமா யுற்பத்தி கூறிப் பந்த மோட்சங் கூறுதென்பார் "அத்தியாரோபமென்றும் ... வேதாந்த மெல்லாம்" எனவும், அறியாமையால் பஞ்சகோசத்தையும் சகத்தையும் சத்தியமாய் யானெனதெனக் கருது மயக்கமே கட்டென்பார், "பந்த" மெனவும், ஞானத்தினால் பஞ்ச கோசத்திற்கும் சகத்திற்கும் விலட்சணமான சச்சிதானந்த சொரூபந்தானென் றறிவதுவே வீடென்பார் முத்தியெனவுங் கூறினார்.

(தா – ம்) தானாகிய சித்தைத் தனியே தெரிசிப்பிக்கு நிமித்தம் தன்னைச் சகசீவபரமாகத் தோற்றுவித்த வாரோப வுத்தியும், கூடஸ்த பிரமாத்துவிதமாகத் தோற்றுவிக்கு மபவாத வுத்தியுமாகிய இரண்டில், முந்தியாரோப வுத்தியைக் கூறத் தொடங்கினதாம்.

(அ – கை) ஆரோப உத்திக்குத் திருட்டாந்தங் கூறல்

ஆரோப மத்தியாசங் கற்பனையாவ வெல்லாம்
ஓரோர்வத்துவினில் வேறேயோரோர் வத்து வினையோர்தல்
நாரூடுபணியாய்த் தோன்ற னரனாகித்தறியிற் றோன்றல்
நீரூடுகானற் றோன்ற னிறந்தலம் வெளியிற் றோன்றல்

(இ – ள்) ஆரோபம், அத்தியாசம், கற்பனை, ஆவவெல்லாம் – ஆகிய அனைத்தும், ஓரோர் வத்துவினில் – ஒவ்வொரு வத்துவினிடத்து, வேறே – அன்னியமான, ஒரோர் வத்துவினை – ஒவ்வொரு பொருளை, ஓர்தல் – உணர்தலாம், நாரூடு – பழுதையினிடத்து, பணியாய்த் தோன்றல் – சர்ப்பம் தோற்றுதல், தறியில் – கட்டையினிடத்து, நரனாகித் தோன்றல் –

மகனுகத் தோற்றுதல், கானலூடு – கானலிட்த்து, நீர் தோன்றல் – சலம் தோற்றுதல், வெளியில் – ஆகாயத்தில் நிறம்தலம் தோன்றல் – கருநிறமும் கூட்டாரம்போல்லிடமும் தோற்றுதல்.

(தா – ம்) அத்தியாரோபத்துக்குப் பரியாய் நாமங்கூறி அதனிலக்கணத்தைத் திட்டாந்தமாகக் கூறினதாம்.

(அ – கை) தாட்டாந்தத்தில் அத்தியாரோபமானதைக் கூறல்.

இப்படிப் போலநாம ரூபங்களிரண்டு மின்றி
ஒப்பமாயிரண்டற்ருென்ரு யுணர்வொளிநிறைவாய்நிற்கும்
அப்பிரமத்திற் ருேன்றுமைம்பூத விகார மெல்லாம்
செப்புகற் பனையினுலே செனித்தவென் றறிந்துகொள்ளே

(இ – ள்) இப்படிப் போல – இத் திட்டாந்தங்களைப் போல, நாம ரூபங்களிரண்டு மின்றி – ஓர் நாமமு மோருருவமும் தன்னிடத்தில்லாமல் நித்தியமாய், ஒப்பமாய் – சமமாய், இரண்டற்று – ஆனந்தமாய், ஒன்ருய் – அத்துவிதமாய், உணர் – சித்தாய், ஒளி – சுயம்பிரகாசமாய், நிறைவாய் – பூரணமாய், நிற்கும் – திரிகாலத்திலு மிருக்கும், அப்பிரமத்தில் – அந்தப் பிரமத்தில், தோன்றும் – காணப்படும், ஐம்பூத விகாரமெல்லாம் – பிரகிருதிமுதல் பஞ்சபூத காரியம்வரை யெல்லாம், செப்பு கற்பனையினுலே – சொல்லா நின்ற வாரோபத்தால், செனித்தவென்று – உண்டாயினவை யென்று, அறிந்துகொள் – தெரிந்துகொள்வாய்.

(ப – ம்) உற்பத்தி நாசமில்லாத நித்தியமென்பார் "நாம ரூப மிரண்டுமின்றி" யெனவும், சருவசமமென்பார் "ஒப்பமா" யெனவும், ஆனந்தமென்பார், "இரண்டற்" றெனவும், அத்துவித மென்பார் "ஒன்றெனவும்," சித்தென்பார், "உணர் வெனவும்", சுயம்பிரகாச மென்பார், "ஒளி" யெனவும், மூன்று பரிச்சேதமற்ற பூரண மென்பார், "நிறைவா" யெனவும், திரிகாலத்து மிருக்கும் சத்தென்பார், "நிற்கு" மெனவும், பூதகாரியமும் பிரகிருதிவரையிலும் காரணமென்பார் "விகாரமெல்லா" மெனவுங் கூறிஞர்.

(தா – ம்) முற்கூறிய திட்டாந்தம்போ லுள்ளதான சுத்த சைதன்னியத்தில், சடமா யில்லாததான சக சீவபரம் தோன்றியதென சங்கிரகமாகக் கூறியதாம்.

(அ – கை) பிரமத்திற் கற்பிதமாக சீவேசுவர சகத் துண்டான முறையை விஸ்தாரமாய்க் கூறுகின்றார்,

அதுதானெப் படியென் றக்கா லநாதியாஞ் சீவரெல்லாம்
பொதுவான சுழுத்திபோல பொருந்துமவ்வியத்தந்தன்னில்
இதுகால தத்துவப்பே ரீசனுட் பார்வையாலே
முதுமூல சுபாவம்விட்டு முக்குணம் வியத்தமாமே. 29

(இ – ள்) அதுதா னெப்படி யென்றக்கால் – அக் கற்பனைக ளெப்படி யுண்டாயிற்றென்று, அதன் கிரமத்தைக் கேட்பாயானல், அநாதியாஞ் சீவரெல்லாம் – ஆதியில்லாத சீவர்களனைவரும், பொதுவான சுழுத்தி போல – ஏற்றத் தாழ்ச்சியற்ற சுழுத்தி யவத்தையைப்போல, அவ் வியத்தந் தன்னில் – மூலப் பிரகிருதியில், பொருந்தும் – கரும வாசனை யுடன் அடங்கியிருக்கும், இது – தன்னிடத்து அத்தியாசயிக்க மாயிருக்கும் அவ்வியத்த சத்தியானது, கால தத்துவப் பேர்– கால தத்துவமென்னு நாமத்தை யடைந்த, ஈச னுட் பார்வை யாலே – பிரம சொரூபத்தின் வீட்சணையினால், முது மூல சுபாவம் விட்டு – முன்னுள்ள பிரகிருதித் தன்மை யொழிந்து, முக்குணம் வியத்தமாம் – மூன்று குணங்களாக வெளிப்படும்.

(ப – ம்) பிச்சைக்காரன் இராசன் முதலானவர்க்கேற்றத் தாழ்ச்சியற்ற தென்பார் "பொதுவான சுழுத்தி" யெனவும், ஒருகுருண்டையில் சொர்ண ரேணுவைப் போல, ஆதி யில்லாத சீவர்களனைவரும் பூருவ சிருட்டி கரும வாசனை யுடன் அடங்கியிருப்பா ரென்பார், "அநாதியாம் ... அவ் வியத்தந் தன்னி" லெனவும், சத்திய ஞான பூரண சொரூப மான தன்னிடத்தி லத்தியாசயிக்கியமா யிருக்கும், அவ் வியத்த சத்தியைப் பிரித்துப் பார்க்க கால தத்துவமென்னும் பெயரை யடைந்த தென்பார் "கால தத்துவப் பேர் ... பார்வையாலே" எனவுங் கூறினார்.

(தா – ம்) பரிபூரணமான பிரம சொருபத்தின் வீட்சணை யினால் அவ்வியக்த சத்தி முக்குணங்களாய் வியக்தமாயின வென்பதாம்.

(அ – கை) அந்த முக்குணங்களி னுமாதி யாவை யெனில்,

உத்தம வெளுப்புச் செம்மை யுரைத்திடு கறுப்பு மாகும்
சத்துவ குணத்தி னோடு ரசோகுணந் தமோகு ணந்தான்
சுத்தமோ டழுக் கிருட்டாச் சொல்லுமுக் குணமு மூன்றாய்
ஒத்துள வேனுந் தம்மு ளொருகுண மதிக மாமே. 30.

(இ – ள்) உத்தம வெளுப்பு – முதலாவதான வெண்ணிறமும், செம்மை – மத்திமமான செம்மை நிறமும், உரைத்திடு கறுப்பு – அதமமாகச் சொல்லும் கரு நிறமும், சத்துவ குணத்தினோடு ரசோ குணந் தமோ குணந்தானும் – முறையே சத்துவ குணமும் ரசோ குணமும் தமோ குணமு மாகும், சுத்தமோ டழுக் கிருட்டா – பரிசுத்தமாயும் மாசுள்ளதாயும் அந்தகாரமாயும், சொல்லு முக்குணமும் – கூறுகிற்கும் மூன்று குண களும், மூன்று யொத்துள வேனும் – மூன்றாகி ஒத்திருப்பவைக ளாயினும், தம்முள் – அக்குணங்களுள், ஒரு குணம் அதிகமாம்–சத்துவ குணம் மேலானதாம்.

(ப – ம்) படிக்க் கற்போல் பரிசுத்தமாய் ஆத்ம ஞானத்தை விளக்கி ஆனந்தமுண்டாக்குவதென்பார் "சுத்த" மெனவும், காவிக் கற்போல மாசுள்ளதாய் ஆத்ம ஞானத்தை மயக்கி ஆசையுண்டாக்குவ தென்பார், "அழுக்" கெனவும், நீலக் கற்போல வந்தகாரமாய் ஆத்ம ஞானத்தைப் போக்கிச் செகஞ் சத்தியமெனக் காட்டித் துன்பத்தைத் தருவதென்பார், "இருட்" டெனவும், பிரமமே நாமென்னும் ஞானத்துடன் செகத் காரணமா யிருக்கின்ற வீசுரனுக் கேதுவான சத்துவ குணமென்பார் "ஒரு குண டிகமெனவுங்" கூறினார்.

(தா – ம்) முக்குணங்களி னுமமும் நிறமும் சுபாவமும் கூறியதாம்.

(அ – கை) மற்றொரு வகை சிருட்டியின் மரபு கூறு கின்றார்.

ஒருவழி யிதுவா மித்தை யொருவழி வேறுச் சொல்வர்
மருவுமவ் வியத்தந் தானே மகதத்வ மாகு மந்த
அருண்மக தத்து வந்தா னகங்கார மாகு மென்றும்
கருவகங் கார மூன்றுக் காட்டிய குணமா மென்றும். 31

(இ – ள்) ஒருவழி யிதுவாம்–சிருட்டி கிரமங்களுள் இது வொரு கிரமமாம், இத்தை – இச் சிருட்டிக் கிரமத்தை, வேறொரு வழியர்ச் சொல்வர் – மற்றொரு மார்க்கமாகவும் பெரியோர் கூறுவர், மருவுமவ் வியத்தந்தானே – சீவர்க ளடங்கி யிருக்கு மவ் வியத்த சத்தியே, மக தத்துவமாகும் என்றும் – மகதத்துவமாகத் தோன்றுமெனவும், அருண் மகதத்துவந்தான்–சொல்லிய மகதத்துவமே, அகங்காரமாகு மென்றும்– அகங்கார தத்துவமாக விளங்குமெனவும், கருவகங்காரம்–செகத்துக்குக் காரணமாகிய வகங்கார தத்துவ மானது, மூன்றுக் காட்டிய குணமாமென்றும்– வைகரி தைசத பூதாதி மூன்று அகங்காரமாகு மெனவும்,

(ப – ம்) மழை பெய்தபின் வித்தானது பொருமினது போல, அவ்வியத்தமு மகங்காரமுமின்றி யிரு குமென்பார், "மருவுமவ்யத்தந் தானே மகதத்துவ மாகு" மெனவும், பொருமின வித்தில் முளை கிளம்புவதுபோல மகதத்துவத்தி லிருந்து நானென்னும் தோற்றமாகிய வகங்காரமுண்டா மென் பார், "அருண் ... அகங்காரமாகு" மெனவும், செகத்துக்குக் காரண வகங்காரமென்பார் "கருவகங்கார" மெனவும், அவ் வகங்காரம் வைகரி தைசத பூதாதி அகங்காரமாகு மென்பார் "மூன்றுக் காட்டிய குணமா" மெனவுங் கூறினார்.

(தா – ம்) முக்குணங்களுண்டா மவசரத்தில் வேறொரு விதசிருட்டி யுண்டான கிரமத்தைக் கூறினதாம்.

(அ – கை) முற்கூறிய குணங்களிற் சக சீவ பரவுற்பத்தி யைக் கூறுவான் றொடங்கி முன்னர் பரனுற்பத்தியைக் கூறுகின்றார்.

இக்குணங்களிலேவிண்போன் றிருக்குஞ்சிற்சாயைதோன்
முக்குணங்களினுந்தூய்தா முதற்குணமாயையாகும் [றும்
அக்குணப் பிரமச் சாயை யந்தரி யாமி மாயை
எக்குணங் களும்பற் றுதோ னிமித்தகா ரணனு மீசன். 32.

(இ – ள்) இக் குணங்களில் – (அதுதானெப்படி யென்ற செய்யுளிற் கூறிய) சத்துவாதி குணங்களில், விண்போன் றிருக்கும் – ஆகாயத்தைப் போல (நிரவயவமாயும், வியாபகமாயும், அதி சூட்சுமமாயும், அசங்கமாயும்) இருக்கும், சிற்சாயை – சித்தின் பிரதிபிம்பம், தோன்றும் – பிரதிபலிக்கும், முக்குணங்களிலும். – சத்துவாதி மூன்று குணங்களிலும், தூய்தாம் முதற் குணம் – சொச்சமான சத்துவ குணம், மாயையாகும் – மாயையென்று சொல்லப்படும், அக் குணப் பிரமச்சாயை – அச் சுத்த சத்துவத்தில் பிரதிபலிக்கும் பிரம சைதன்னியப் பிரதிபிம்பமானது, அந்தரியாமி – அந்தரியாமியாகும், மாயை யெக்குணங்களும் – மாயையிலும், முக்குணத்திலும் முக்குண காரியங்களிலும், பற்றுதோன் – சம்பந்தப்படாதவனும், நிமித்த் காரணனும் ஈசன் – சிருட்டிக்குக் குலாலன்போல நிமித்த காரணனாகிய ஈசனுமாம்.

(ப – ம்) செகத் காரணமென்பார், "மாயை" யெனவும், சர்வஞ்ஞத்துவாதி சட்குண வைசுவரிய சம்பன்னனென்பார், "ஈச" னெனவும், காரண சரீரத்தை யபிமானித்துக்கொண்டு சகல சரீரவுள்ளீடாயிருந்து ஆட்டுகிறவ னென்பார் "அந்தரியாமி" யெனவும், முக்குணங்களிலும் முக்குணங்களின் காரியங்களிலும் பற்றற்றிருப்பவ ரென்பார். "மாயை யெக்குணங்களும் பற்றுதோன்" எனவும், கடத்துக்குக் குலாலன் போலச் சிருட்டியாதி தொழிலைச் செய்கின்றவ னென்பார், "நிமித்த காரண" னெனவுங் கூறினர்.

(அ – கை) ஈசுவர னவத்தையாதியும் சீவன் தோற்றமும் நாமமுங் கூறல்.

ஈசனுக் கிது சுழுத்தி யிதுவே காரண சரீரம்
கோசமா னந்த மாகுங் குணமிரா சதம வித்தை
தேசறு மவித்தை தோறுஞ் சிற்சாயை சீவகோடி
நாசமா முயிர்க்கப்போது நாமமும்பிராஞ்ஞனுமே. 33.

(இ – ள்) ஈசனுக்கு – ஈசுவரனுக்கு, இது – இம் மாயையே, சுழுத்தி – சுழுத்தி யவத்தையாம், இதுவே – இஃதே, காரண சரீரம் – காரண சரீரமாம், கோசமானந்த மாகும் – இதுவே ஆனந்த மய கோசமாம், குணம் இராசதம் –

இரசோ குணம், அவித்தை – அவித்தையாம், தேசஅறு மவித்தை தோறும் – விளக்கமில்லாத வவித்தைகடோறும், பிரதிபலித்த, சிற்சாயை– ஞானப் பிரதி பலனமே, சீவகோடி– சீவராசிகளாம், நாசமா முயிர்க்கு – கெடுவதான சீவர்களுக்கு, அப்போது – அந்தக் காலத்தில், நாமமும் – பெயரும், பிராஞ்ஞனும் – பிராஞ்ஞனென்று சொல்லப்படுவதாகும்.

(ப – ம்) சகலரையும் தான் சிருட்டித்து ஒருவரால்லுஞ் சிருட்டிக்கப்படாதவ னென்பார், "ஈச" னெனவும், சகல பிரபஞ்ச வாசனையு மடங்கி யிருக்கின்ற லயத்தான மென்பார், "சுழுத்தி" யெனவும், பசைப்படம்போல வீசுரன் றோன்றின தற்கும் மேல் தோன்றுஞ் சகத்துக்கும் மூலமென்பார், "காரண சரீர" மெனவும், பிரளய காலத்தி லானந்தத்தையுஞ் சர்வஞ்ஞத்துவாதி குணத்தோடுங் கூடிக்கொண்டு இரணிய கர்ப்பாதி சுகத்தையு மநுபவிக்கின்ற தென்பார், "ஆனந்தமய கோச" மெனவும், மூங்கிலில் பிறந்த வக்கினி மூங்கிலைத் தகிப்பதுபோல, வித்தையினாற் கெடுவதென் பார், "அவித்தை" யெனவும், ஆத்மசொரூபத்தை மறைத்து அநாத்மாகாரத்தைத் தோற்றுவித்து அந்தகாரமா யிருக் கின்ற தென்பார், "தேசஅறு மவித்தை" யெனவும், கர்த்தா போக்தா ஞர்தாவாக சீவனம் பண்ணுகின்றவர்களென்பார், "சீவகோடி" யெனவும், கெடுவதான சாக்கிர வவத்தை முதல் மோட்சம் வரை சீவனுக்குத் தொழிலென்பார், 'நாச' மெனவும், மனமாதி யிந்திரியங்களை யசைக்கின்றவ னென்பார், "உயி" ரெனவும், வியட்டி காரண சரீரத்தை யபிமானித்துக்கொண்டு சுழுத்தியி லஞ்ஞானத்தையும் அதி லானந்தத்தையும் கரண சகாயமின்றி அறிகின்றவ னென்பார் "பிராஞ்ஞ" னெனவுங் கூறினர்.

(அ – கை) சீவனது காரணத்தியாசத்தைக் கூறி சூக்கும அத்தியாசத்தைக் கூறுகின்றார்.

அழுக்கொடு பற்றுஞ்சீவர்க் கதுவேயா நந்தகோசம்
சுழுத்திகா ரணசரீரஞ் சொன்னதிம் மட்டுமோக
முழுக்குணத்திரண்டால்வந்த மூலவாரோபஞ் சொன்னோம்
வழுத்துசூக் குமவாரோப வழியுநீ மொழியக்கேளாய். 34

(இ – ள்) அழுக்கொடு பற்றும் – அவித்தை யவித்யா காரியங்களிற் பொருந்துகின்ற, சீவர்க்கு – சீவர்களுக்கு, அதுவே – அவ்வவித்தையே, ஆனந்தமயகோசம் – ஆனந்த மயகோசமாம், சுழுத்தி – அஃதே சுழுத்தியவத்தையாம், காரண சரீரம் – அஃதே காரணசரீரமாம், சொன்னதிம்மட்டும் – சொல்லிய விதுபரியந்தம், மோகம் – மயக்கமாகத் தோற்றிய பிரகிருதியின், முழுக்குணத் திரண்டால் வந்த – முழுதுமான சத்துவ ரசோ குணத்தாலுண்டான, மூலவா ரோபம் – காரண வத்தியாசத்தை, சொன்னோம் – உரைத்தோம், வழுத்து – இனிக் கூறுகின்ற, சூக்கும வாரோப வழியும் – சூட்சும சரீர வத்தியாசமுண்டான கிரமத்தையும், மொழிய – யாம் சொல்ல, நீ கேளாய் – நீ கேட்பாய்.

(ப – ம்) படிகம் அடுத்த வண்ணமாவதுபோல வவித்தை அவித்தையா காரியங்களில் பொருந்தி அவ்வண்ணமாவது சீவன் சுபாவமென்பார் "அழுக்கொடு பற்று" மெனவும், சுழுத்தியிலுண்டாகும் சுகத்தையும் சாக்கிர சொப்பனவத்தையில் காமாதி விருத்திகளோடு கூடிப் பிரிய மோதப் பிரமோதமாக வுண்டாகுஞ் சுகத்தையும், நான் சுகிக்கிறேனென்கிறதென்பார்; "ஆனந்தமய கோச" மெனவும், சாக்கிர சொப்பன வவத்தை அடங்கியிருக்கின்ற லயஸ்தான மென்பார், "சுழுத்தி" யெனவும், சீவன் றோன்றினதற்கும் தூல சூட்சும சரீரமுண்டாவதற்கும் மூல மென்பார், "காரண சரீர" மெனவுங் கூறினார்.

(தா – ம்) சிற்சாயை பொருந்திய சத்துவராசத குணம் மாயை அவித்தை யெனவும், அந்தப் பிரதி விம்பங்களின் நாமம் ஈசன் சீவனெனவும், அவர்களுக்கந்த மாயை யவித்தையே காரண சரீரமும், சுழுத்தியவத்தையும் ஆனந்தமய கோசமு மெனவும், அக்காரண சரீரங்களை யபிமானித்த வலவர்களுக்குண்டான நாமம் அந்தரியாமி பிராஞ்ஞ னெனவும் அவர்களுக்கு சிருட்டியாதி சாக்கிராதி தொழில்களில் முறையே பற்றற்றிருக்கிறதும் பற்றுகிறதும் சுபாவமெனவும், இவையனைத்தும் காரணாத்தியாசமெனக் கூறினதாம்.

(அ – கை) சீவேசுரர்களுக்கு சூட்சும சரீரத்தி யுண்டான முறைமையைக் கூறுவான் றொடங்கி முன்பு சத்திகளின் தோற்றமுரைக்கின்றார்.

ஏமமா யாவினோத வீசனா ருளினாலே
பூமலி யுயிர்கட்கெல்லாம் போகசாதன முண்டாகத்
தாமத குணமிரண்டு சத்தியாய்ப் பிரிந்துதோன்றும்
வீமமா மூடலென்றும் விவிதமாந் தோற்றமென்றும். 35

(இ – ள்) ஏமமாயாவினோத – இன்பமாகிய மாயையும் விளையாட்டினையுமுடைய, ஈசனாருளினாலே – ஈசுரனுடைய பேரருளினால், பூமலி – பொலிவு மிகுந்த, உயிர்கட்கெல்லாம் – சீவர்களனைவருக்கும், போகசாதன முண்டாக – போகத்துக்குச் சாதனமாகிய சூட்சும தேகங்களுளவாதற் பொருட்டு, தாமத குணம் – மூலப் பிரகிருதியின் தமோகுணம், வீமமா மூடலென்றும் – பயங்கரமான ஆவரணமெனவும், விவிதமாந் தோற்றமென்றும் – நானாவிதமாகும் விட்சேப மென்றும், இரண்டு சத்தியாய் – இருவித சத்திகளாக, பிரிந்து தோன்றும் – பிரிவுபட்டுக் காணப்படும்.

(ப – ம்) அமிர்தம் போலத் தானும் சுகமா யிருந்து கொண்டு சகலருக்கும் சுகஞ் செய்கின்ற மாயையை யுடையவனைக், குழந்தையைப் போலச் சிருட்டியாதியை வருத்தமின்றிச் செய்கின்றவனென்பார், "ஏமமாயாவினோத" னெனவும், குழந்தை கூபத்தில்விழ மாதாவானவள் விழுதல்போல பேரருளால் சீவரை இரட்சிக்கும் நிமித்தம் பிரமாதி யவதாரமெடுத்தலென்பார், "ஆரு" ளெனவும் இராக்காலம் திருட்ர் முதலியோரால் துன்பமுண்டாக்குவதுபோல், பிரம சொரூபத்தை மறைத்துப் பிரபஞ்சமாகத் தோற்றுவித்துப் பிறப்பிறப்புண்டாக்குவ தென்பார், "வீ ம மா மூ ட" லெனவுங் கூறினார்.

(வி – ரை) உயிர்கட்கெல்லாம் போகசாதன முண்டாக வென்பதனால் சீவர்கள் சமட்டியே ஈசுரனாதலின் அவ் வீசுரனுக்குங் கொள்க.

(தா – ம்) சிற்சாயை தங்கிய தமோகுணமானது அறிவு விளங்காததாகிய ஆவரண சத்தியாகவும் அறிவு விளங்குவதாகிய விட்சேப சத்தியாகவும் தோற்றிய தென்பதாம்.

(அ – கை) விட்சேப சத்தியிற் றன் மாத்திரையான சூட்சும பூதவுற்பத்தி கூறல்.

தோற்றமாஞ் சத்திதன்னிற் சொல்லியவிண்ணும்விண்ணிற்
காற்றதாங் காற்றிற்றீயாங் கனலினீர் நீரின்மண்ணும்
போற்றுமிவ் வைந்துநொய்ய பூதங்களென்று பேராம்
சாற்றுமற் றிவற்றிற்போக சாதனதநு வுண்டாகும். 36

(இ – ள்) சொல்லிய தோற்றமாஞ் சத்திதன்னில் –முன் சொல்லிய விட்சேப சத்தியில், விண்ணும் – சத்ததன் மாத்திரையான ஆகாயமுண்டாம், விண்ணில் – அவ்வாகாயத்தில் காற்றதாம் – பரிசதன் மாத்திரையான வாயுவுண்டாம், காற்றில் – அவ்வாயுவில், தீயாம் – ரூபதன் மாத்திரையான அக்கினியுண்டாம், கனலில் – அவ்வக்கினியில், நீர் – ரசதன் மாத்திரையான அப்புவுண்டாம், நீரில் – அவ்வப்பில், மண்ணும் – கந்ததன் மாத்திரையான பிருதிவியுண்டாம், போற்றும் – சொல்லப்பட்ட, இவ்வைந்தும் – இத் தன்மாத்திரைகளைந்தும், நொய்ய பூதங்களென்றும் – சூட்சும பூதங்களென்றும், பேராம் – நாமமாம், சாற்றும் – சொல்லாநின்ற, இவற்றில் – இத் தன்மாத்திரைகளில், போகசாதன தநுவுண்டாகும் – அநுபோகத்துக்குச் சாதனமான சூட்சும தேகந் தோன்றும்.

(ப – ம்) தன்மாத்திரை வாக்கு மாத்திர மென்பார் "போற்று" மெனவுங் கூறினர்.

(அ – கை) தன்மாத்திரையின் சத்துவகுணத்தில் அந்தக் கரண ஞானேந்திரிய வுற்பத்தி கூறல்.

ஆதிமுக் குணமிப் பூத மடங்கலுந் தொடர்ந்து நிற்கும்
கோதில்வெண் குணத்தி லைந்து கூறுணர் கருவி யாகும்
ஓதிய பின்னை யைந்து மூளம்புத்தி யிரண்டா ஞான
சாதன மாமிவ் வேழுஞ் சற்குணப் பிரிவி ணலே. 37.

(இ – ள்) ஆதி முக்குணம் – தன்மாத்திரைகளுக்குக் காரணமான தமசில் உள்ள சத்துவாதி முக்குணங்களும், இப் பூத மடங்கலும் – இத் தன்மாத்திரைகளைந்திலும், தொடர்ந்து நிற்கும் – கூடியிருக்கும், கோதில் – குற்றமற்ற, வெண் குணத்தில் – சத்துவ குணத்தில், ஐந்து கூறு – வியட்டியான வைந்து பங்கும், உணர் கருவியாகும் – ஞானேந்திரியங்களாம்,

ஓதிய பின்னை யைந்தும் – சொல்லப்பட்ட சத்துவ் குணத்தில் சமஷ்டியான வைந்து பங்கும், உளம் புத்தி யிரண்டாம் – மனம் புத்தி என்னு மிருவித பரிணாமமுடைய அந்தக்கரணமாம், இவ் வேழும் – இந்த ஏழு தத்துவங்களும், சற்குணப் பிரிவினாலே – சத்துவ குணாம்சமாதலால், ஞான சாதனமாம் – அறி கருவிகளாம்.

(ப – ம்) அந்தக்கரணம் ஞானேந்திரியங்கள், கருமேந்திரிய பிராணன்களைப் போலத் தொழிற் கேதுவல்ல வென்பார், "ஞான சாதனமா மிவ் வேழும் சற்குணப் பிரிவினாலே" யெனவுங் கூறினார்.

(அ – கை) தன்மாத்திரையின் ரசோகுணத்தில் வாயு கன்மேந்திரியங்களி னுற்பத்தி கூறல்.

இராசத குணத்தில் வேறிட் டெடுத்தகூ றைந்து மைந்தும்
பிராணவாயுக்களென்றும் பெருந்தொழிற்கருவியென்றும்
பராவிய பெயரா மிந்தப் பதினேழு மிலிங்க தேகம்
சுராசுரர்நரர்விலங்காய்த் தோன்றியவுயிர்கட்கெல்லாம். 38

(இ – ள்) இராசத குணத்தில் – ரசோகுணக் கூற்றில், எடுத்த கூறைந்தும் – எடுத்தொன்றாக வைத்த பங்கைந்தும், பிராணவாயுக்க ளென்றும் – பிராணாதி பஞ்ச வாயுக்க ளென்றும், வேறிட்டு எடுத்த கூறைந்தும் – தனித்தனியே எடுத்து வைத்த பங்கைந்தும், பெருந்தொழிற் கருவி யென்றும் – பெரிய கர்மேந்திரியங்க ளெனவும், பராவிய பெயராம் – பரவிய நாமங்களாம், இந்தப் பதினேழும் – இப் பதினேழு தத்துவங்களும், சுரர் – தேவர், அசுரர் – அவுணர், நரர் – மனிதர், விலங்காய் – மிருகங்களுமாகி, தோன்றிய – உண்டாகிய, உயிர்கட்கெல்லாம் – சீவர்களனைவர்க்கும், இலிங்க தேகம் – சூட்சும சரீரங்களாம்.

(ப – ம்) பிரமாதி ஸ்தம் பாந்த வுயிர்க்கெல்லாம் ஏற்றத் தாழ்ச்சியற்று அடையாளமாயும் பிரகாசமாயு மிருக்கின்றது சூட்சும சரீர மென்பார், "இலிங்க தேகம் ... வுயிர்கட் கெல்லாம்" எனவுங் கூறினார்.

(வி – ரை) பதினேழு மிலிங்க தேகமென்ற பதத்துக்குச் சில நூலாசிரியர் சூட்சும தேகம், 25, 24, 20, 19 தத்துவ

மென்றதை, விட்யமைந்தையும் ஞானேந்திரியத்தி லடக்கியுஞ் சித்தத்தையு மகங்காரத்தையும் மனம் புத்தியி லடக்கியும் (உள்ளத்தை பொதுவாகவைத்து) 17 தத்துவமாகக் கூறினு ரெனக் கொள்க.

(அ – கை) சூக்கும தேகத்தினுல் சீவேசுரர்களுக்கு வரு மபிமான நாமாதியைக் கூறல்.

இவ்வுடன் மருவுஞ் சீவ னிலங்குதை சதனென் ருவன்
இவ்வுடன் மருவு மீச னிரணிய கர்ப்ப னுவன்
இவ்வுட விரண்டு பேர்க்கு மிலிங்கசூக் குமச ரீரம்
இவ்வுடற் கோச மூன்று மிதுகனு வவத்தை யாமே. 39

(இ – ள்) இவ்வுடல் – இவ் வியஷ்டி சூக்கும தேகத்தில்' மருவுஞ் சீவன் – சேர்ந்தபிமானிக்குஞ் சீவன், இலங்குதைசத னென்ருவன் – விளங்காநின்ற தைசதனென்று சொல்லப் படுவன், இவ்வுடல் – இச் சமஷ்டி சூக்கும தேகத்தில், மருவு மீசன் – சேர்ந்தபிமானிக்கின்ற ஈசுரன், இரணியகருப்பனுவன்– இரணியகருப்பனென்று சொல்லப்படுவன், இவ்வுடல் – இச் சரீரமான பதினேழு தத்துவமே, இரண்டு பேர்க்கும் – சீவேச ரிருவர்க்கும், இலிங்க சூக்கும சரீரம்–இலிங்கதேக மென்கின்ற சூட்சும தேகமாம், இவ்வுடல் – இவ் விலிங்க தேகமே, மூன்று கோசமாம் – பிராணமய மனோமய விஞ்ஞானமயமென மூன்று கோசங்களாகும், இது கனு வவத்தையாம் – இது சொப்பனு வவஸ்தையாகும்.

(ப – ம்) வியட்டி சூட்சும சரீரத்தை யபிமானித்துக் கொண்டு பிரகாசமாயிருக்கின்ற அந்தக்கரணத்துடன் சம்பந்தப்பட்டிருப்பவ னென்பார், – "தைசத" னெனவும், சமட்டி சூட்சும சரீரத்தை யபிமானித்துக்கொண்டு ஞான சத்தியுடன் கூடிச் சகல வந்தக்கரணத்தையும் பிரகாசிப்பிக் கின்றவ னென்பார், "இரணியகருப்ப" னெனவும், காரண சரீரத்தைப்போலத் தெரியாதிராமலும், தூல சரீரத்தைப் போலப் பிரத்தியட்சமாய்த் தெரியாமலும், லாஞ்சன பட்ம் போல வநுமானத்தினு லறியப்படுகின்றது; சீவேசுரர்களுக் குச் சூட்சும சரீரமென்பார், 'இவ்வுட விரண்டுபேர்க்கு மிலிங்க சூக்கும சரீர'' மெனவும், நான் கிரியாவான், நானிச்சாவான்

நான் ஞானவான், நான் பெலவான், நான் சங்கற்பவான், நான் மதிமானென்று, சிவனுடைய யெதார்த்த சொரூபம் தெரியாமல் சீவனுக்கும் இப்படியே வுளனென்று ஈஸ்வரனுடைய யெதார்த்த சொரூபம் சீவன் தெரிந்துகொள்ளாமல் ஈசுவரனிடத்தும், பிராண மனோவிஞ்ஞான மறைப்பென்பார், "இவ்வுடற்கோச மூன்று" மெனவும், வாசனா ரூபமாய் சூட்சுமமாயிருந்து மனோராச்சியஞ் செய்தல் சீவேசுராளுக்குச் சொப்பனாவத்தை யென்பார், "இது கனாவவத்தை" எனவுங் கூறினார்.

(தா – ம்) இந்த நாலு கவிக்கும் விட்சேப சத்தியிலுண்டான தன் மாத்திரைகள் சூக்குமமாதலின் அவற்றைச் சூக்கும பூதமெனவும், அவற்றின் சத்துவ ரசோகுண சமட்டி வியட்டியிலுண்டான சரீர சமஷ்டி வியஷ்டியே ஈசுவர சீவர்களுக்குச் சூட்சும சரீரம், சொப்பனாவத்தை, பிராண மனோ விஞ்ஞான கோசமெனவும், அச் சூட்சும சரீரத்தை அபிமானித்ததனால் அவர்களுக்குண்டான நாமம் இரணியகருப்பன் தைசதனெனவும், இவையனைத்தும் சூக்கும அத்தியாச மெனவுங் கூறினதாம்.

(அ – கை) பஞ்சபூத பௌதிகமான சகத்துற்பத்தியைக் கூறுவான் ஒருட்ங்கி . யஃதுண்டானதற் கேதுவுங் கூறுகின்றார்.

சூக்குமசகமிம் மட்டுஞ் சொல்லினோ மிப்பாற்றூலம்
ஆக்குமா ரோபந்தானு மடைவினின் மொழியக்கேளாய்
தாக்குமிவ் வுயிர்க்குத்தூல தநுவும்போகமு முண்டாகக்
காக்குமவ் வீசன்பஞ்சீ கரணங்கள் செய்தான்றானே. 40

(இ – ள்) சூக்கும சகமிம்மட்டுஞ் சொல்லினோம் – சூட்சும சரீர பிரபஞ்ச வத்தியாசத்தை இதுபரியந்தங் கூறினோம், இப்பால் – இனிமேல், தூலமாக்கு மாரோபந்தானும் – தூல தேக முதலாகிய தூலப் பிரபஞ்சமுண்டாக்கும் அத்தியாசத்தையும், அடைவினின் மொழியக்கேளாய் – கிரமமாகச் சொல்லக்கேட்பாய், தாக்குமிவ் வுயிர்க்கு – சூட்சும தேகத்தில் சம்பந்தித்துள்ள இச்சீவர்கட்கு, தூலதநுவும் – கர்மத்துக்குத் தக்கதாகத் தூல தேகங்களும், போகமும் – விடய போகங்

களும், உண்டாக — உளவாதற்கு, காக்குமவ்வீசன் — இரட்சிக்கின்ற இறைவன், பஞ்சீகரணங்கள் செய்தான் — தன்மாத்திரைகளின் தமோமாம்ச மைந்தினையும் பஞ்சீகரணஞ் செய்தான்.

(ப — ம்) மூத்தவ னிளையவனுக்கு முதல்கொடுத்த லாதி போலத் தனுவாதி கொடுத் திரட்சிக்கின்ற இறைவனென்பார், "காக்குமவ்வீச" னெனவுங் கூறினார்.

(அ — கை) பஞ்சீகரணமு மவற்றிலாய காரியமுங் கூறல்.

ஐந்துபூதமும் பத்தாக்கி யவைபாதி நன்னான்காக்கி
நந்துதம் பாதிவிட்டு நான்கொடு நான்குங்கூட்ட
வந்தன தூலபூத மகாபூத மிவற்றினின்றுந்
தந்தன நான்காந்தூல தநுவண்ட புவனபோகம். 41

(இ — ள்) ஐந்து பூதமும் பத்தாக்கி — அபஞ்சீகிருத பூதங்களு ளொவ்வொன்றையும் இரண்டிரண்டு பாகம் பண்ணி, அவை பாதி நன்னான்காக்கி — அவைகளி னொவ்வொரு பாதியைவைத்து மற்ற வொவ்வோர் பாதியை நான்கு நான்கு பாகங்களாக்கி, நந்துதம் பாதிவிட்டு — பெரிய அரைப் பாகங்களில் தத்தம் பாகத்தை விட்டு, நான்கொடு நான்குங் கூட்ட — மற்ற நான்கு பூதங்களினரைப் பாகங்களோடு தத்தம் நான்கு அரைக்கால் பாகங்களைக் கூட்ட, தூலபூதம் வந்தன — தூல பூதங்களுண்டாயின, மகாபூத மிவற்றினின்றும் — பஞ்சீகிருத மகா பூதங்களான இவைகளினின்றும், அண்டம் — பிரமாண்டங்களும், புவனம் — சதுர்த்தச புவனங்களும், போகம் — அன்னாதிகளும், நான்காந் தூலதநு — நான்கு யோனியிற் பிறக்கிற தூல சரீரங்களும், தந்தன — சிருட்டிக்கப்பட்டன.

(ப — ம்) பிரமாண்டத்தினுள்ளே பூலோகம் புவலோகம் சுவலோகம் சனலோகம் தபோலோகம் மகாலோகம் சத்திய லோகம் முதலிய மேலேழு புவனங்களும், அதலம் விதலம் சுதலம் தராதலம் இரசாதலம் மகாதலம் பாதாளம் முதலிய கீழேழு புவனங்களும் என்பார், "புவன" மெனவும், சராயுசம் அண்டசம் சுவேதசம் உற்பீசமாகிய நால்வகை யோனியிற் பிறக்கின்றது தூல சரீரமென்பார், "நான்காந் தூலதநு" எனவுங் கூறினார்.

(அ—கை) தூலதேகத்திற் சீவேசுரருக்குவரும் அபிமான நாமமாதிகளைக் கூறல்.

தூலமே மருவுஞ்சீவன் சொல்லிய விசுவனாகும்
தூலமே மருவுமீசன் சொலும்விராட் புருடனாகும்
தூலமே யன்னகோசந் துன்னுஞ்சாக் கிரவவத்தை
தூலகற் பனையிதென்று தொகுத்தது மனத்திற்கொள்வாய்.

(இ—ள்) சொல்லிய தூலமே மருவுஞ் சீவன் — முன் சொல்லிய தூலதேகத்தில் பொருந்துஞ் சீவனானவன், விசுவனாகும் — விசுவனென்று சொல்லும் நாமமுடையவனும், தூலமே மருவும் ஈசன் — அத் தூலதேக சமட்டியிற் பொருந்து மீசுரன், சொலும் விராட்புருடனாகும்—சொல்லாநின்ற விராட் புருடனென்னும் நாமமுடையவனும், தூலமே அன்னகோசம்— தூலதேகமே அன்ன வீரியத்திலுண்டாய் அன்னத்தினால் விருத்தியாதலால் அன்னமய கோசமாம், துன்னுஞ் சாக்கிர அவத்தை — சர்வ இந்திரியங்களும் பூரணமாக விவகரிக்கும் சாக்கிரவவத்தைக் கிடமென்று சொல்லப்படும், தூலகற்பனை யிதென்று — தூலப் பிரபஞ்ச அத்தியாச மிதுவாமென்று, தொகுத்தது — சுருக்கமாகக் கூறியதை, மனத்தில் கொள்வாய் — மனத்தின்கண் கிரகிப்பாய்.

(ப—ம்) வியட்டி தூலசரீரத்தை யபிமானித்துக்கொண்டு விசுவத்தைப் பற்றுகின்றவ னென்பார் "விசுவ" னெனவும், சமட்டி தூலசரீரத்தை அபிமானித்துக்கொண்டு விசுவாகார மாய் பரிணமிப்பவ னென்பார் "விராட் புருட" னெனவும், இரஞ்சித படம்போலப் பஞ்சபூத பௌதிகமாய்த் தோற்று கின்றது சீவேசுரானுக்குத் தூல சரீரமென்பார் "தூல சரீர" மெனவும், சகல இந்திரியங்களாலும் சகல விவகாரமும் செய் வது சீவேசுரானுக்கு நனவென்பார், "சாக்கிரவவத்தை" யெனவும், சீவேசுரானுடைய எதார்த்த சொரூபம் தெரியா மல் சருமாதிகளை நானெனவும், சராசரப் பிரபஞ்சங்களே பரம தத்துவ மெனவும், மறைப்பதென்பார் "அன்னமய கோச" மெனவும், சீவேசுர சகத்தைப் பிராந்தியென் றறிந்துகொள் ளென்பார் "தொகுத்தது மனத்திற் கொள்வாய்" எனவுங் கூறினார்.

(தா – ம்) இந்த உ. கவியாலும் தமோகுண தன்மாத்திரை பஞ்சீகரணமானதைத் தூல பூதங்களெனவும், அவற்றின் காரியமான சரீரத்தையே சீவேசுரானுக்குத் தூல சரீரஞ் சாக்கிரவவத்தை அன்னமய கோசமெனவும், அத் தூல சரீரத்தை அபிமானித்ததனால் அவர்களுக்குண்டான நாமம், விசுவன் விராட் புருடனெனவும், இவையனைத்தும் தூல வத்தியாச மெனவுங் கூறினதாம்.

(அ – கை) சீவேசுரானுக்குப் பேதந்தெரிய வினவிய தற்கு உத்தரங் கூறல்.

சீரிய வீசனுர்க்குஞ் சீவர்க்கு முபாதியொன் றேல்
ஆரிய குருவேபேத மறிவதெப்படி யென்றக்கால்
காரிய வுபாதிசீவன் காரணவுபாதி யீசன்
வீரியமிகு சமட்டி வியட்டியாற் பேதமாமே. 43

(இ – ள்) சீரிய வீசனுர்க்கும் சீவர்க்கும் – சிறந்த ஈசுரனுக்கும் சீவர்களுக்கும், உபாதியொன்றேல் – தூல சூட்சும வுபாதியொன்றாக விருக்குமானால், ஆரிய குருவே – சன்மார்க்கத்திருக்கும் ஆசாரியரே, பேதமறிவதெப்படி யென்றக்கால் – இவரீசுவரன் இவன் சீவனென்று வேறுபாடறிவது எப்படியென்று கேட்பாயானால், காரியவுபாதி சீவன் – தூல சூட்சும காரிய வுபாதியை யுடையவன் சீவன், காரணவுபாதி ஈசன் – தூல சூட்சும காரண வுபாதியை யுடையவன் ஈசன், வீரியமிகு சமட்டி வியட்டியால் பேதமாம் – மகத்துவமிக்க சமட்டியினாலும் வியட்டியினாலும் வேறுபாடுடையவராவர்.

(ப – ம்) பரிபூரண ஞானத்துடன் பலசீவர்க்குஞ் சுகத்தை விளைவிப்பவனென்பார் "சீரியவீச" னெனவும், ஆடு கரும்பின் இலையைத் தின்று குட்டிக்குங் காட்டுவதுபோலச் சரியை கிரியை யோகங்களை அப்பியாசித்து அதை உபதேசியாது, யானை கரும்பைத்தின்று அதைக் கன்றுக்குங் காட்டுவது போலத் தத்துவ ஞானத்தைப் பெற்று அதைச் சீடருக்கும் அநுக்கிரகிப்பவ ரென்பார் "ஆரியகுரு" வெனவுங் கூறினர்.

(தா – ம்) சூட்சும தூலமாகின்ற வுபாதிகளின் காரண காரியத்தினாலும் சமட்டி வியட்டியினாலும் பேதமென்பதாம்.

(அ — கை) சமட்டி வியட்டியின் இலக்கணங் கூறல்.

மரங்கள்போல் வியட்டிபேதம் வனமெனல் சமட்டிபேதம்
சரங்கடா வரங்கள்பேதத் தனியுடல் வியட்டியென்பார்
பரம்பிய வெல்லாங்கூட்டிப் பார்ப்பதே சமட்டியாகும்
இரங்கிய பலசிவர்க்கு மீசற்கும் பேதமீதே. 44

(இ — ள்) மரங்கள்போல் வியட்டிபேதம் — தனித்தனி விருட்சமென்பதுபோல வியட்டி பேதமாம், வனமெனல் சமட்டிபேதம் — எல்லாஞ் சேர்த்துத் தோப்பென்பது போலச் சமட்டி பேதமாம், சரங்கடா வரங்கள் பேதத்து — சராசரங் களின் வேறுபாட்டில், தனியுடல் — தனிதனி தேகத்தை; வியட்டியென்பார் — வியட்டியென்று பெரியோர் சொல்வர், பரம்பிய எல்லாங்கூட்டிப் பார்ப்பது — விரிந்துள்ள சகல தேகங்களையும் கூட்டிக் காண்பது, சமட்டியாகும் — சமட்டி யென்று சொல்லப்படுவதாகும், இரங்கிய — வருந்துகின்ற, பல சீவர்க்கும் — அநேக சீவர்களுக்கும், ஈசர்க்கும் — ஈசுவர னுக்கும், பேதமீதே — வேறுபாடு இதுவேயாம்.

(ப — ம்) அவித்தையினு லருந்தல் பொருந்தலைக் குறித் தெப்போதும் வருந்துகின்றவர்களென்பார் "இரங்கிய பல சீவ" ரென்றார்.

(தா — ம்) சிவேஸ்வர பேதத்தை வற்புறுத்திக் கூறிய தாம்.

(அ — கை) அத்தியாரோப யுத்தியினாற் றன்னிடத்தி லாரோபமாகத் தோற்றின சகசிவபரங்கள் மித்தையென் றுணர மித்தையா திருஷ்டியைக்கூறி அதத்துவா விருத்தி இலக்கணையால் அவைகளுண்டான கிரமப்படி லயிக்கும் அப வாத யுத்தியைச் சங்கிரகமாகக் கூறத்தொடங்கினார்.

கற்பனைவந்தவாறு காட்டினோங் காண்ப வெல்லாஞ்
*சொற்பனம் போலுமென்றே துணிந்தவன் ஞானியாவன்
செற்புதை மழைக்காலம்போய்த் தெளிந்தவாகாசம் போல
வற்புத முத்திசேரு மபவாத வழியுங்கேளாய். 45

* "சொப்பனம்" என்னும் வடமொழி எதுகை நோக்கிச் சொற்பனம் எனத் திரிந்தது.

(இ – ள்) கற்பனை வந்தவாறு – அத்தியாரோப முண்டான வழியை, காட்டினோம் – அறிவித்தோம், காண்பவெல்லாம் – தோற்றும் சீவேஸ்வரசகத்து முழுவதும், சொப்பனம் போலுமென்று – சொப்பன பிரபஞ்சத்தைப் போல மித்தையாமென்று, துணிந்தவன் ஞானியாவன் – சமுசயமின்றி யநுபவமாக வறிந்து நிச்சயித்தவனே ஞானியாவான், செல்புதை மழைக்காலம் போய் – மேகம் நெருங்கிய வருடா கால மொழிந்து, தெளிந்த வாகாசம்போல – சரற்காலத்தில் தெளிந்துள்ள விண்ணைப்போலும், அற்புத முத்திசேரும் – நிரதிசயானந்த மோட்சமடைவதற்குக் காரணமாகும், அபவாத வழியுங்கேளாய் – அபவாத மார்க்கத்தையுங் கேட்பாய்.

(ப – ம்) சொப்பனத்திற் கண்ட பிரியமான பெண் முதலியவைகளும் அப்பிரியமான புலி முதலியவைகளுமான நாமரூபம், மனதிற்குத் தோற்றிக்கொண்டு வாக்கினுல் சொல்ல வந்தாலும்அதில் விருப்புவெறுப்பின்மைபோல், சாக்கிரத்தில் நல்லது பொல்லாததாய் தோற்றும் சராசரப் பிரபஞ்சத்தில் மித்தையா புத்தியினுல் விருப்பு வெறுப்பில்லாதவனே ஆத்ம சொரூபத்தை அநுபவமாகக்கண்ட தத்துவ ஞானியென்பார் "காண்பவெல்லாம் ... ஞானியாவ" னெனவும், தூளி மேக மில்லாத ஆகாசம்போலச் சகல கேவலமற்றிருக்கும் அகண்ட சொரூபந் தானுகின்ற பரமுத்தியென்பார் செற்புதை...முத்தி" யெனவுங் கூறினுர்.

(தா – ம்) மித்தையா திருட்டியாற் சகசீவபர மில்லையென்று திடநிச்சயமா யறிந்தவனே ஞானியென்பதாம்.

(அ – கை) அதிட்டானத்தைத் தவிர ஆரோபமில்லையென்று அபவாத இலக்கணங் கூறல்.

அரவன்று கயிறென்றுற்போலாளன்றுதறி யென்றுற்போல்
குரவன்சொல்லுபதேசத்தாற்கூறு நூலொளியைக்கொண்டு
புரமன்று புவனமன்று பூதங்களன்று ஞானத்
திரமென்னும் பிரமமென்று தெளிவதே யபவாதங்காண்.

(இ – ள்) அரவன்று – சர்ப்பமன்று, கயிறென்றுற் போல் – இரச்சுத்தானென் றறிந்தாற்போலும், ஆளன்று –

புருடனன்று, தறியென்றுற்போல் – கட்டைதானென்றறிந் தாற் பேர்லும், குரவன் சொல்லுபதேசத்தால் – ஆசிரியர் அநுக்கிரகித்த வுபதேச வலியைக்கொண்டும், கூறு நூலொளி யைக் கொண்டு – ஆசாரியர் வாக்கியப்படி பிரதிபாதிக்கும், அத்துவித ஞான சாஸ்திர வலியைக்கொண்டும், புரமன்று புவனமன்று பூதங்களன்று – இது சரீரமன்று புவனமன்று பூதங்களல்ல, ஞானத்திர மென்னும் பிரமமென்று – சத்திய ஞானமென்னும் பிரமசொரூபமென்று, தெளிவதே அபவர்தங் காண் – சமுசயமின்றி அநுபவமாக அறிவதே அபவாதவிலக் கணமாம். காண் – முன்னிலையசை.

(ப – ம்) ஆசிரியருபதேசமும் அத்துவித ஞான சாத்தி ரமுமில்லாமல் தேகாதி முப்பத்தைந்து தத்துவமுமில்லை, சத்திய ஞானமாய்ப் பிரத்தியக்கபின்னமான பிரம சொரூப மாகின்ற நாமே இருக்கிறோமென்று, அநுபவமா யறியக்கூடா தென்பார் "குரவன் ... தெளிவதே" எனவுங் கூறினர்.

(வி – ரை) புவனமென்பது சகளீகரித்திருக்கும் கைலாச முதலிய ஸ்தானமும் பூதங்களென்பது விராட்டுருவமு மெனக் கொள்க.

(தா – ம்) தீவிரன் அபவாத திருட்டியாற் சுருதி மூலமாய் ஆரோபத்தை நீக்கி அதிட்டானத்தைத் தரிசிப்பனென் பதாம்

(அ – கை) காரணத்தைத் தவிர காரியமில்லை என்னும் அபவாத யுத்திகூறல்

படமுநூ லும்போற் செய்த பணியும் பொன்னும் போற் பார்க்கில், கடமுமண் ணும்போ லொன்றுங் காரிய கார ணங்கள், உடன்முதற் சுபாவமீறு வொன்றிலொன் றுதித்த வாறே, அடைவினி லொடுக்கிக் காண்ப தபவாத வுபாய மாமே.

(இ – ள்) காரிய காரணங்கள் பார்க்கில் – காரியங்களான சக சீவ பரத்தையும், காரணமாகிய பிரமத்தையும், உத்தி யினால் விசாரிக்குமிடத்து, படமும் நூலும்போல் – வஸ்திரமும்

அதற்குக் காரணமான தந்துவும் போலவும், செய்த பணியும் பொன்னும் போல் — செய்யப்பட்ட ஆபரணமும் அதற்குக் காரணமாகிய சொர்ணத்தையும் போலவும், கடமும் மண்ணும் போல் — குடமும் அதற்குக் காரணமாகிய மிருத்துவும் போலவும், ஒன்றும் — காரியமும் உபாதான காரணமும் ஏகந் தான், உடன் முதற் சுபாவ மீறு — தூல தேகமுதல் பிரகிருதி யந்தமாக, ஒன்றிலொன் றுதித்தவாறே — ஒன்றினின் றொன் றுண்டானபடியே, அடைவினி லொடுக்கிக் காண்பது — முறையே யொடுக்கிப் பார்ப்பது, அபவாத வுபாயமாம் — அபவர்தம் என்னும் உத்தியாம்.

(ப — ம்) பிரமத்தி லுண்டானதெல்லாம் பிரமந்தா னென்று தட்த்தமா யறிதலினால் அநுபவமுண்டாகா தென பார் "உடன் முதல் ... உபாய" மெனவுங் கூறினர்.

(தா — ம்) பிறவி லாப திருட்டியால் தன்னிடத்திற் கற்பிதமான சகசீவ பரங்களைத் தனது உருவமாக வொடுக்கிக் காண்பதே அபவாத வுத்தியாம்.

(அ — கை) முற்கூறிய ஆவரண சத்தியி னிலக்கணம் யாதென வினுதலுக்கு உத்தரங் கூறத் தொடங்கல்.

தூடண தமத்தில் வந்த தோற்றமாஞ் சத்தி செய்யும்
ஏடணை விகாரஞ் சொன்னீ ரிரண்டுசத் திகளென் றீரே
மூடலாஞ் சத்தி செய்யு மோகமுஞ் சொல்லு மையா
கேடறக்குருவேயென்னக்கிருபையோடருளிச்செய்வார்.

(இ — ள்) தூடண தமத்தில் வந்த — நிந்திக்கத்தக்க தமப்பிரதான பிரகிருதியினின்று முண்டான, தோற்றமாஞ் சத்தி செய்யும் — விட்சேப சத்தியுள்ளாக்கும், ஏடணை விகாரஞ் சொன்னீர் — இச்சா ரூபமான பிரபஞ்ச விகாரத்தைத் தேவரீ ரருளிச் செய்தீர், இரண்டு சத்திக ளென் றீரே — முன்னம் தாமதகுணம் இரண்டு சத்தியாய்ப்பிரிந்து தோன்று மென்றீரானதால், மூடலாஞ் சத்தி செய்யும் மோகமும் — ஆவரண சத்தியானது செய்யும் மயக்கத்தையும், கேடற — சமுசார துன்பம் நீங்க, ஐயா குருவே — பிதாவாகிய ஆசிரியரே, சொல்லுமென்ன — உபதேசித்தருள வேண்டு

மென்று சீடன் கேட்க, கிருபையோ டருளிச் செய்வார் – தயவோடு அநுக்கிரகிப்பார்.

(ப – ம்) தீமைசெய்தவனை யாவரும் நிந்திக்கின்றதுபோல ஆவரண விட்சேப மென்னும் இரண்டு சத்தியாகித் துன்பப் படுத்துவதால் யாவராலும் நிந்திக்கப்பட்ட தென்பார் "தூடணதம" மெனவும், இச்சை யுண்டானாற் பிரபஞ்சமுண்டு அதில்லாவிடில் பிரபஞ்சமில்லை ஆகையால் இச்சாசொரூபமே பிரபஞ்சாகார மென்பார், "ஏடணை விகார" மெனவும், மிகுந்த மதுவானது, பானம் பண்ணினவன் புத்தியை மயக்கி நன்மை தீமைகளைப் பகுத்தறிய முடியாமற் செய்வதுபோல, ஆத்ம ஞானத்தைமறைத்து ஆத்மானாத்மாக்களின் பேதந்தெரியாது மயக்குவ தென்பார் "மூடலாம் ... மோக" மெனவும், சமுசார நீங்கிச் சத்தா மாத்திர சொரூபமே தானாகும்படி செய்ய வேண்டுமென்று னென்பார் "கேட்ட" வெனவுங் கூறினார்.

(தா – ம்) பிரபஞ்ச முழுவதும் விட்சேப சத்தியே தோற்றிக்கொண்டிருப்பதால் அதைத் தவிர ஆவரண சத்தி இவ்வித மிருக்குதென் றறியவேண்டுமெனக்கருதி வினாவினான் என்பதாம்.

(அ – கை) ஆவரண சத்தியின் றன்மை கூறல்.

தானிகர் தனக்கா மீசன் றனையுந்தங் களைத்தாங் கண்ட
ஞானிக டமையு மன்றி நாஸ்திநபாதி யென்னும்
ஊனிடையுயிர்களுள்ளத் துணர்விழி குருடாம்வண்ணம்
வானிலந் திசைகண் மூடு மழைமுகி லிருள்போன் மூடும்.

(இ – ள்) தானிகர் தனக்கா மீசன் றனையும் – பரிபூரண ஞானம் சருவஞ்ஞத்துவாதி குண மிவைகளில் தனக்குத் தானே சமானமாகிய ஈசுவரனையும், தங்களைத் தாங் கண்ட ஞானிக டமையும் – தங்கள் வாஸ்தவ சொரூபத்தை யறியும் பரமாத்துவித ஞானத்தை யடைந்த ஞானிகளையும், அன்றி – அல்லாமல், நாஸ்தி – பிரமமில்லை, நபாதி – பாநமாகவில்லை, என்னும் – என்கின்ற, ஊனிடை உயிர்கள் – உடலின்கண் உடலே நானென்றிருக்கும் மற்ற சீவர்களின், உள்ளத் துணர் விழி – அந்தக்கரணத்தின் ஞானதிருஷ்டி, குருடாம்வண்ணம் –

குருடாகும்படிக்கு, வான் நிலம் திசைகள் மூடும் – ஆகாசம் பூமி திக்குகள் நேத்திரத்துக்குத் தோன்றாதபடி மறைக்கும், மழை நிசி யிருள்போல் – மழைக்காலத் திராக்கால இருட்டைப் போல, மூடும் – ஆவரண சத்தி மறைக்கும், இதுவே ஆவரண சத்தியின் மோகமாம்.

(ப – ம்) சத்திய ஞான வனந்தா னந்த சொரூபமே நாமென்னும் பரிபூரண ஞானத்துடன் சருவஞ்ஞத்துவாதி சட்குண வைசுவரியமுடையவனாய்ச் சகல சீவர்களை யும் இரட்சிக்கும் பொருட்டுச் சிருட்டியாதி செய்கின்றதனால் இணையற்றவ னென்பார் "தானிகர் ... ஈச" னெனவும், துவித விசிட்டாத்துவித ஞானமின்றிப் பரிபூரண பரப்பிரம சொரூபமாயிருக்கின்ற தன்னையறியும் பரமாத்துவித ஞானத்தை அப்பிரதிபந்தாபரோட்சமா யடைந்தவர்க ளென்பார் "தங்களைத் தாம் ... ஞானிக" ளெனவுங் கூறினார்.

(தா – ம்) ஆவரண சத்தியானது ஈசுவரனையும் தத்துவ ஞானியையும்தவிர மற்றைச்சீவர்களுடைய ஞானதிருஷ்டியை மறைக்கு மென்பதாம்.

(அ – கை) ஆவரண சத்தி மறைக்கின்றவிதம் யாதெனில்?

பூன்றமாம் பிரமத்துக்கும் புறத்துள விகாரங்கட்கும்
ஆன்ற கூடஸ்தனுக்கு மகத்துள விகாரங்கட்கும்
தோன்றிய பேதஞ்சற்றுந் தோன்றாமன் மறைத்துமூடும்
ஊன்றிய பவவியாதி யுண்டாக்கு முபாதியீதே. 50

(இ – ள்) பூன்றமாம் பிரமத்துக்கும் – பரிபூரணமாகிய பிரமத்திற்கும், புறத்துள விகாரங்கட்கும் – புறம்பிலுள்ள முப்பத்தைந்து தத்துவங்களுக்கும், ஆன்ற கூடஸ்தனுக்கும் – அறிவுருவமான கூடஸ்தனுக்கும், அகத்துள விகாரங்கட்கும் – இருபத்தெட்டு தத்துவங்களுக்கும், தோன்றிய பேதம் – சுபாவ சித்தமாகக் காணப்பட்ட சச்சிதானந்த அசத்து சட துக்கங்களை, சற்றும் – கிஞ்சித்தும், தோன்றாமல் மறைத்து – உணர்விழிக்கு விளங்காமல் ஒன்றின் இலட்சணத்தை ஒன்றின் மேலேற்றி வாஸ்தவ சொரூபத்தைக் காட்டாது, மூடும் – மறைக்கும், ஊன்றிய பவவியாதி – கெடாத சமுசார நோயை, உண்டாக்கு முபாதியீதே – கொடுக்கின்ற வுபாதி இவ்வாவரண சத்தியே; வேறொன்றில்லை.

(ப – ம்) நிரவயவமாய் சூட்சுமமாய் ஒருதேசத்தி லொரு தேசமும் ஒரு காலத்தி லொருகாலமும் ஒரு வஸ்துவிலொரு வஸ்துவும் இல்லாதது போலின்றி எல்லாத் தேசத்திலும் எல்லாக் காலத்திலும் எல்லா வஸ்துவிலும் நிறைவாய் பெரிதுக்கெல்லாம் பெரிதாயிருக்கின்ற சொரூப மென்பார் "பூன்றமாம் ... பிரம" மெனவும், அடைகல்லுப் போல வைராக்கியாதி காமாதி மயக்கமர்தி தன்னிடத்திற் றோன்றி யொடுங்கவும் தான் நிருவிகாரியா யிருப்பதாயும் ஞானம் வைராக்கியாதி சற்குணமாகின்ற மலையினுச்சியில் விளங்குவதாயும் பிரத்தியட்சமாகியு மிருக்கின்ற சொரூப மென்பார் "ஆன்ற கூடஸ்த" னெனவும், அசத்து சடந்துக்கமான முப்பத்தைந்து தத்துவங்களுக்கும், சச்சிதானந்த சொரூபமான பிரமகூடஸ்தருக்கும், கிஞ்சித்தும் பேதந் தெரியாமல் ஒன்றின் இலட்சணத்தை ஒன்றின்மேலேற்றித் தனதெதார்த்த சொரூபத்தைக் காட்டாதென்பார் "தோன்றிய ... மூடு" மெனவும், தத்துவ ஞானம் வருகிறவரையில் கெடாத ஐம் பெருந்துயராதி துன்ப வடிவமான சமுசார நோயைக் கொடுக்கின்றது ஆவரண சத்தியைத் தவிர வேறில்லை யென்பார் "ஊன்றிய ... ஈதே" யெனவுங் கூறினர்.

(தா – ம்) அதிட்டான ஆரோபங்களின் பேதந் தெரியாமல் ஒருமைப்பாடாக மறைக்கின்றது ஆவரண சத்தியின் றன்மை யென்பதாம்.

(அ – கை) அதிட்டான வாரோபங்களின் பேதத்தை மறைக்கு மென்றதைச் சீடன் ஆதாரத்தை மறைக்குமெனக் கருதிக்கொண்டு வினுதலுக் குத்தரங் கூறல்.

ஆதார மறைந்து போனு லாரோப மெங்கே தோன்றும்
ஆதார மறையா தாகி லாரோப மிலையே யென்றால்
ஆதாரஞ் சமட் விசேட மாமென விரண்டு கூறும்
ஆதாரஞ் சமமா மெங்கு மாரோபம் விசேட மாமே. 51

(இ – ள்) ஆதார மறைந்துபோனுல்–காட்ாந்தகாரத்தில் இரச்சுப்போல ஆதாரமான பிரமமானது தோன்றுமல்

* ஐம்பெரும் துயர் – கெர்ப்பவாச துக்க முதலியன.

மறைந்து போமாயின், ஆரோப மெங்கே தோன்றும் — பிராதி பாசிக சர்ப்பம் போல ஆரோபமான ஜீவேஸ்வர சகத்து முண்டாக மாட்டாதே, ஆதார மறையாதாகில் — மத்தியான வெய்யிலில் இரச்சுப்போல வாதாரமான பிரமமானது மறைபடாமல் விளங்குமாயின், ஆரோப மிலேயே யென்றால் — பிராதி பாசிக சர்ப்பம் போல் ஆரோபமான ஜீவேஸ்வர சகத்துண்டாக நியமமில்லையே யென்று சங்கிக்கில், ஆதாரம் சமம் விசேடமாமென விரண்டு கூறும் — ஆதாரமானது சாமானிய விசேடமென இரண்டு கூறுடையதாம், (அதாவது) எங்கும் ஆதாரம் — அதிககாலம் அதிக-தேசத்திலுள்ள வாதாரம், சமமாம் — சாமானிய வாதாரமாம், ஆரோபம் — அற்ப தேசம் அற்ப காலத்திலுள்ள வாதாரம், விசேடம் — விசேடமாம்.

(ப — ம்) ஆதாரமான பழுதை மறையினும் மறையாதிருக்கினும் ஆரோபமான பாம்பு தோன்றற் கிடமின்மை போல, ஆதாரமான பிரம மறைந்துபோனாலும் மறையாதிருந்தாலும் ஆரோபமான ஜீவேசுவர சகத்துத் தோன்றற் கிடமில்லையே யெனக் கேட்பாயாகில் என்பார் "ஆதார மறைந்து...இல்லையே" யெனவும், சாமானியம், ஒன்று விளங்குமிடத் தொன்றுமறைதல்போலின்றி எப்போதும் அதாவது பிராந்தி காலத்தும் விளங்குதலினால் ஆதாரமென்பார் "ஆதாரம் சமமாம் எங்கு" மெனவும், விசேடம் ஒன்று விளங்குமிடத்து ஒன்று மறைதல் போலப் பிராந்தி காலத்துத் தோன்றாது பிராந்தி நீங்கின சொற்ப காலத்து விளங்குதலின், அதிட்டான மென்பார் "ஆரோபம் விசேட மெனவும்" கூறினார்.

(தா — ம்) ஆதாரம் மறைபடும்போதும் மறைபடாத போதும் ஆரோபந் தோன்றக் கணக்கில்லையே என்ற ஜீவனை நோக்கி அவ்வாதாரத்தை ஆதார வதிட்டானமாகப் பிரித்து ஆதாரம் சமமெனவும் அதிட்டானம் விசேடமென்வும் கூறினதாம்.

(அ — கை) ஆதார அதிட்டானங்களில் ஆவரண சத்தி அதிட்டானத்தைத் தெரியவொட்டாமல் மறைக்குமேயன்றி ஆதாரத்தை மறைக்காதென்று திருஷ்டாந்த மூலமாகத் தெரிவிக்கின்றார்.

சகமதி லிதுவென் சுட்டாஞ் சமானந்தான் மறைந்தி டாது
மிகவிது கயிரு மென்னும் விசேடந்தான் மறைந்து போகும்
அகமெனுஞ் சமானந் தன்னை யஞ்ஞான மறைத்தி டாது
பகர்விசே டமதாஞ் சிவன் பரமெனு மதனை மூடும். 52.

(இ - ள்) சகமதில் - உலகில், இதுவென் சுட்டாம் - மந்தாந்தகாரத்தில் எதிரே கிடக்கு மிரச்சுவில் இது சர்ப்ப மென்ற விடத்து இதுவென்று சுட்டப்படுவதான, சமானந் தான் மறைந்திடாது - சாமானிய ரூபம் ஒன்று மறைக்க அதனால் மறைபடாது, இது கயிரும் என்னும்—இது இரச்சுவா மென்கின்ற, விசேடந்தான்— விசேட ரூபமாகிய அதிட்டானம், மறைந்துபோகும்—மறைந்து விளங்காததுபோல, அகமெனுஞ் சமானந்தன்னை - நான் உளனெனும் சத்தாகிய சாமானிய ரூபமாகிய ஆதாரத்தை, அஞ்ஞான மறைத்திடாது—ஆவரண சத்தி மறைக்காது, பகர் விசேடமதாம் - சொல்லிய விசேட ரூபமாகிய *சிவன் பரமெனும் - நான் சித்து ஆனந்தம் அசங்க நித்திய பூரண பிர்ஹ்மமென்னும், அதனை மூடும் - அதிட்டா னத்தை விளங்கவொட்டாமல் மறைக்கும்

(ப - ம்) இது வென்பது இது சர்ப்பமென்ற பிராந்தி கால்த்தும் இது பழுதை என்ற ஞான காலத்தும் விளங்கு கின்ற சாமானிய ரூபமென்பார் "இது ... ... மறைந்திடா" தெனவும், இரச்சுவென்பது ஞான காலத்தில் மட்டும் விள்ங்கு கின்ற விசேட ரூபமென்பார் "இது கயிரும் ... மறைந்து போகு" மெனவும், இத் திருஷ்டாந்தம் போல, நான் உள னென்னும் ஞானி அஞ்ஞானி யாவரும் விவகரிக்கின்ற உபாதி ரகிதமாய்ப் பிரமாதி உயிர்களிடத்தில் நானென்பது பேதப் படாத சாமானிய ரூபமென்பார், "அகமெனும்...மறைத்திடா', தெனவும், நான் அசங்கன் சின்மாத்திரன் என்று கேவலம் ஞானி மட்டும் விவகரிக்கின்ற விசேஷ ரூப மென்பார் "பகர் விசேடமதாம்...மூடு" மெனவுங் கூறினர்.

(தா - ம்) ஆத்மாவுக்கு சத்து ரூபம் சாமானியமென்றும், சேதனாதி விசேஷ ரூபமென்றும், அவித்தையினால் தோற்று வதால் உளதுபோல் கூறப்பட்டதென்றும், மந்தாந்தகாரத்

* பாதசாமானாதி கரணியத்தால் ஜீவன் என்பதை அகம் சப்தார்த்த ஆத்மாவெனக் கொள்க.

தில் சர்ப்ப அத்தியாசம் உண்டாவதுபோல், சாமானிய ரூபம் விளங்கி விசேஷ ரூபம் விளங்காத விடத்துச் சிவேஸ்வர சகத் தாரோபங் கூடுமெனவும் கூறியதாம்.

(அ — கை) ஆத்ம ஞானத்தை விட்சேப சத்தியானது அன்னமய முதலியனவாகத் தோற்றி மறைத்ததே யன்றி ஆவரண மெங்கே மறைத்ததென்ற வினாதலுக் குத்தரங் கூறத் தொடங்கல்.

கேவல நிலைதோன் ருமற் கெடுத்தது பஞ்ச கோசம்
சிவனுஞ் சகத்து மாகிச் செனித்தவிட் சேப மன்ரே
ஆவர ணந்தா னேபா ழனர்த்தமென் றுரைத்த தேதோ
மேவருங்குருவேயென்று வினவிடின் மகனேகேளாய் 53

(இ — ள்) கேவல நிலை தோன்ருமல் கெடுத்தது — (பிர மான்ம ஐக்கிய ஞான இருப்பை இரச்சுவின் விசேஷ ரூபத்தை மறைத்த சர்ப்பம்போலும்) விளங்கவொட்டாமல் மறைத்துக் கெடுத்தது, பஞ்சகோசம் சிவனும் சகத்துமாகி — அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமய மென்னும் பஞ்ச கோசங்களும் அவைகளை யபிமானிக்குஞ் சிவனும் ஆகாசாதி பிரபஞ்சமுமாகி, செனித்த விட்சேபமன்ரே — உண்டான விட்சேப சத்தியன்ரே, ஆவரணந்தானே — ஆவரண சத்தியே, பாழ் அனர்த்தமென்று — பாழென்றும் அனர்த்தமென்றும், உரைத்ததேது—அருளிச் செய்தது யாது காரணம், மேவரும் குருவே யென்று — கிடைத்தற்கரிய ஆசிரியரே என்று, வினவிடின் — கேட்பாயாளுல், மகனே கேளாய் — மைந்தா அதற்கு விடை சொல்வோம் கேட்பாய்.

(ப — ம்) பிரமான்ம ஐக்கிய ஞானத்தைச் சூனியம் பண்ணிச் சமுசார துன்பம் கொடுப்ப தென்பார், "பாழ் அனர்த்த" மெனவும், முமூட்சுக்கள் அடைதற்கெளிதாயினும் அஞ்ஞானிகளடைதற்கரிய குருவென்பார் "மேவருங்குருவே" யெனவுங் கூறிஞர்.

(வி — ரை) ஆனந்தமய கோசமுஞ் சிவனும் விட்சேப காரியங்க ளல்லாதனவா யிருக்க அங்ஙனம் கூறிய தென்னை யெனின்? அவித்யா காரியமான அவற்றின் அநுபவம் விட்சேப காரியமான அந்தக்கரணத்தில் வெளிப்பட்டதால்

அங்ஙனங் கூறிய தெனவும், 49-ம் கவியில் உணர் விழி மூடு மென்றதைப் "பாழ்" என்றும், 50-ம் கவியில் பவ வியாதி உண்டாக்கு முபாதி யிதே என்றதை, "அனர்த்த" மென்றும் கூறியதெனவுங் கொள்க.

(தா – ம்) ஆவரண சத்தியின் திங்கை நன்காகவும் விட்சேப சத்தியின் நன்கைத் தீங்கெனவுங் கருதிக்கொண்டு வினாவினதாம்.

(அ – கை) விட்சேப சத்தி ஆவரண சத்திகளின் நன்மை தீமை கூறல்.

தோற்றமாஞ் சத்திதானுந் துன்பமாம் பவமானாலும்
ஆற்றலான் முத்திசேர்வார்க் கநுகூல மாகுங்காணீ
ஊற்றமாம் பகற்காலம்போ லுபகார நிசியினுண்டோ
மாற்றமென் றுரைப்பேன்மைந்தா மறைப்பது மிகப்
[பொல்லாதே. 54

(இ – ள்) தோற்றமாம் சத்திதானும் – விட்சேப சத்தியும், துன்பமாம் பவமானாலும் – அஞ்ஞானிகளுக்குச் சமுசார துன்பம் கொடுப்பதானாலும், ஆற்றலான் முத்திசேர்வார்க்கு – சிரவணாதி முயற்சி வலியால் முத்தியடைய விரும்பும் முமூட்சுக்களுக்கு, அநுகூலமாகும் காண் நீ – குரு சாஸ்திர ரூபமாக சகாயமாவதை நீயறிதி, சுருதி. இனியுத்தி, ஊற்றமாம் பகல் காலம்போல் – அஞ்ஞானி முமூட்சுக்க ளிருவருக்கும் நித்திரை ஆலசியாதிகளைப் போக்கித் துற்பிரவிர்த்தி நற்பிற விர்த்திக் கேதுவாயிருந்து சுகம் செய்யும் பகற் காலத்தைப் போல், உபகாரம் நிசியினுண்டோ – அவ்விருவர்களுக்கும் நித்திரையை விளைவிப்பதால் உதவியானது இராக்காலத்தில் உண்டா, மாற்றமென் னுரைப்பேன் – உன் வினாவிற் கிவ்வுப மானமேயன்றி வேறு யாது மறுமொழி கூறுவேன், மைந்தா – மைந்தனே, மறைப்பது – ஆவரண சத்தியே, மிகப் பொல்லாது – மிகவுங் கொடியது.

(ப – ம்) பகற்காலமானது துற்பிரவிர்த்திக் கேதுவா யிருந்து துன்பஞ் செய்வதாயிருந்தாலும் நற்பிரவிர்த்திக் கேதுவாயிருந்து சுகம் செய்வதாயிருப்பதுபோல், விட்சேப சத்தியானது ஆத்மஞ்ஞானமடைய முயற்சி செய்யாத வஞ்ஞா

னிக்கு இகபரத் தொழிற் கேதுவாயிருந்து சமுசாரத் துன்பங் கொடுத்தாலும், முமூட்சுக்களுக்குச் சிரவணாதிக் கேதுவா யிருந்து முத்தியின்பங் கொடுக்கும்; இராக் காலமானது பிரவிர்த்திக்கு உபயோகப்படாது நித்திரைக் கேதுவாயிருப் பதுபோல, ஆவரண சத்தியானது மறைப்புக் கேதுவா யிருந்து துன்பங் கொடுக்குமேயன்றிச் சிரவணாதிக் கேதுவா யிருந்து முத்தியின்பம் கொடுக்காதென்பார் "தோற்றமாம்... நசியினுண்டோ" வெனவும், ஆவரண சத்திபோல் அன்று விட்சேப சத்தி என்பார் "மறைப்பது ... பொல்லா" தென வுங் கூறினார்.

(தா – ம்) விட்சேப சத்தி அஞ்ஞானிகளுக்குச் சமுசாரத் துன்பமும் முமூட்சுக்களுக்கு மோட்சவின்பமும், ஆவரண சத்தி இருவருக்கும் துன்பம் கொடுக்குமெனச் சுருதி யுத்தி யால் அறிவித்ததாம்.

(அ – கை) இன்னும் அநுபவத்தால் அதன் கொடுமை கூறல்.

சுழுத்தியிற் பிரளயத்திற் றோற்றமாஞ் சகங்கண் மாண்டும்
அழுத்திய பவம்போய்முத்தி யடைந்தவரொருவருண்டோ
முழுத்தவிட் சேபமெல்லா முத்தியிற் கூட்டுகிற்கும்
கொழுத்த வாவரணமுத்தி கூடாமற் கெடுத்தகேடே. 55

(இ – ள்) சுழுத்தியில் – தினப் பிரளயத்திலும், பிரள யத்தில் – பிரமப் பிரளயத்திலும், தோற்றமாம் சகங்கள் மாண்டும் – விட்சேப ரூபமான சகங்கள் நசித்தும், அழுத்திய பவம்போய் – அப்போது தங்களைத் துன்பத்தில் முழுகப் பண்ணிய சனனமானது நீங்கி, முத்தியடைந்தவர் – மோட்ச மடைந்தவர், ஒருவருண்டோ – ஒருவருமில்லை, ஆனதால், முழுத்த விட்சேபமெல்லாம் – ஆக்கையாதி குருவாதியாக முழுதுமான விட்சேபங்கள் அனைத்தும், முத்தியிற் கூட்டுகிற கும் – பரம சுகத்தைக் கொடுக்கும், கொழுத்த ஆவரணம் – மறைப்பதில் பலமான ஆவரண சத்தியானது, முத்தி கூடா மல் – பரமசுகத்தை யடையாமல், கெடுத்த கேடே – கெடுத்த கெடுதியாம்.

(ப – ம்) தினப் பிரளயமான சுழுத்தியிலும் பிரமப் பிரள யத்திலும் விட்சேபத் தோற்றம் மறைந்துபோயும் அச் சுழுத்

தியினு லகத்த வாதனைநீங்கி முத்தியுண்டாகாத படியினாலும், அந்தப் பிரமப் பிரளயத்தினின்றும், கர்ம வாசனைகளோடு சராயுசாதி நால்வகை யோனியிற் செனித்திருப்பதினாலும், ஆவரண சத்தியால் முத்திபெற்றாரில்லை என்பார் "சுழுத்தி யில் ... உண்டோ" வெனவும், தேகாதி சாதனங்களா யிருந்து பரம சுகத்தைக் கொடுக்குமென்பார், "முழுத்த ... கூட்டு விற்கு" மெனவும் கூறினார்.

(தா – ம்) அறிவு விளங்கும் விட்சேபம் முத்தியின்பத்துக்குச் சாதனமும் அறிவு விளங்காத ஆவரணம் பவத்துன்பத்துக்குச் சாதனமுமாமென அநுபவத்தினாலும் அறிவித்ததாம்.

(அ – கை) மித்தையான விட்சேப சத்தியினால் வெளிப்படும் முத்தியும் மித்தையாமெனில்,

சுத்தியில் வெள்ளிபோலத் தோன்றிய தோற்றமான
சத்தியும் பொய்யேயென்றாற் சத்திசா தனமாவந்த
முத்தியும் பொய்யாமென்னின் மோகநித்திரை விலங்கால்
நித்திரை தெளியுமாபோனிருவாண நிலைமெய்யாமே. 56

(இ – ள்) சுத்தியில் வெள்ளிபோல – இப்பியில் ஆரோபமான விரசதம் போல, தோன்றிய தோற்றமான சத்தியும் – பிரமத்தில் ஆரோபமான விட்சேப ரூபமான சத்தியும், பொய்யே யென்றால் – மித்தையே யென்று சொன்னால், சத்தி சாதனமாவந்த முத்தியும் – விட்சேப சத்தி ரூபமான குரு சாஸ்திராதி சாதனங்களாலும் உண்டான மோட்சமும், பொய்யாமென்னில் – மித்தையே யாகுமென்று நிச்சயிப்பாயாகில், மோக நித்திரை விலங்கால் – மயக்கமான நித்திரையில் கண்ட பொய்யான சிம்மத்தினால், நித்திரை தெளியுமா போல் – நித்திரை நீங்கி சாக்கிரம் மெய்யாவது போல, நிருவாணநிலை மெய்யாம் – மோட்சமும் உண்மையாம்.

(வி – ரை) "மோக நித்திரை ... மெய்யா" மென்ற பதத்துக்குச் சொப்பனத்தில் ஸ்திரீயைக் கூடுதல் பொய்யாயிருக்க இந்திரிய கலினமானது மெய்யாயிருத்தல் போலவும், திரவியம் கொடுவென்ற வசனம் பிரதித்தியட்ச மில்லாதிருக்க கொடுக்கின்ற திரவியம் பிரத்தியட்சமா யிருப்பது போலவும், எனத் திருஷ்டாந்தமாகச் சேர்த்துக்கொள்க.

(தா – ம்) மித்தையான சொப்பன பிம்பத்தினு லுண்டான சாக்கிரம் சத்தியமானது போலத் தேகாதிகளாய்த் தோற்றிய மித்தையான விட்சேப சத்தியாலுண்டான வீடும் சத்தியமேயாம் என்பதாம்.

(அ – கை) இச் சத்திகளை நீக்குகின்ற அடைவைக் கூறல்,

இம்பரி னஞ்சைநஞ்சா லிரும்பினை யிரும்பா லெய்யும்
அம்பினை யம்பாற்பற்று மழுக்கினையழுக்கான் மாய்ப்பர்
வம்பியன் மாயைதன்னை மாயையான் மாய்ப்பர் பின்னைத்
தம்பமா மதுவுங்கூடச் சவஞ்சுடு தடிபோற்போமே. 57

(இ – ள்) இம்பரில் – இவ்வுலகில், நஞ்சை – விஷத்தை, நஞ்சால் – அதற்குப் பிரதிகூல விஷத்தினாலும், இரும்பினை – இரும்பை, இரும்பால – பிரதிகூல அரத்தினாலும், எய்யு மம்பினை – எய்யாநின்ற அம்பை, அம்பால் – பிரதிகூல அம்பினாலும், பற்றுமழுக்கினை – புடவையினில் பொருந்திய அழுக்கை, அழுக்கால் – பிரதிகூல வுவர்மண்ணினாலும், மாய்ப்பர் – கெடுப்பர், அதுபோல், வம்பியல் மாயைதன்னை – நழுவுதல் சுபாவமுடைய அசுத்த மாயையை, மாயையால் – பிரதிகூலமான சுத்த மாயையால், மாய்ப்பர் – கெடுப்பர், பின்னை – பின்பு, தம்பமாமதுவும் – நிலையாயிருந்த சுத்த மாயையும், கூட – அசுத்த மாயையோடுங் கூட, சவஞ்சுடு தடிபோற் போம் – பிணம்சுடு தடிபோல் கெடும்.

(ப – ம்) தினந்தோறுங் குறைந்து வருகின்ற படியால் நழுவுதல் சுபாவமான அஞ்ஞானாதி அசுத்த மாயையைச் சிரவணாதி சுத்தமாயையால் கெடுப்பாரென்பார் "வம்பியல்... மாய்ப்ப" ரெனவும், சொரூபத்தை மறைத்த அஞ்ஞானத்தைக் கெடுத்த ஞானமும் மேற்கெடுப்பதற்கு வேறொன்றின்மையால் அச்சொரூபாகார மாகுமென்பார் "தம்பமாம்...போ" மெனவுங் கூறினார்.

(தா – ம்) அறியாமையாயும் மறைப்பாயும் பெண்ணாதி பொன்னாதி மண்ணாதி யன்னாதியாயு மிருக்கின்ற அசுத்த மாயையை குரு சாஸ்திராதியாயும் சிரவணாதியாயு மிருக்கின்ற சுத்த மாயை கெடுத்துத் தானு நீங்குமென்பதாம்.

(அ – கை) சீவாத்மாக்களுக்கு இவ் விருவிதமான மாயைகளால் சப்தாவத்தைகள் வருமாறும் அவற்றினுமாறுங் கூறல்.

இந்தமா யையினுற் சிவர்க் கேழவத்தைகளுண்டாகும்
அந்தவேழவத்தை தம்மையடைவினின் மொழியக்கேளாய்
மூந்தவஞ் ஞானமூடன் மூளைத்தல் காணுதஞானம்
சந்ததங் கண்டஞானந் தழல்கெடல் குளிர்மையாதல். 58

(இ – ள்) இந்த மாயையினுல் – சுத்தாசுத்தங்களான இம் மாயைகளால், சீவர்க்கு – சீவாத்மாக்களுக்கு, ஏழவத்தைகளுண்டாகும் – சப்தாவத்தைகளுளவாகும், அந்த ஏழவத்தை தம்மை – அச் சப்தாவத்தைகளையும், அடைவினில் – கிரமமாக, மொழியக் கேளாய் – சொல்லுகிறேருங் கேட்பாய், மூந்தவஞ்ஞானம் – முதலாவதஞ்ஞானம், மூடல் – ஆவரணம், மூளைத்தல் – விட்சேபம், காணுத ஞானம் – பரோட்ச ஞானம், சந்ததம் கண்டஞானம் – அபரோட்ச ஞானம், தழல் கெடல் – துக்க நிவர்த்தி, குளிர்மையாதல் – தடையற்றவானந்தம்.

(ப – ம்) ஆவரணாதி அவத்தைகள் அஞ்ஞானத்தி லுண்டாகியதுபோல் அஞ்ஞானம் அவைகளி லுண்டாகாமையால் "மூந்த அஞ்ஞான" மெனவுங் கூறினர்.

(வி – ரை) சந்ததங் கண்ட என்ற பதத்துக்குப் பிரதிபந்தமில்லாமல் காணுதலெனவுங் கொள்க.

(அ – கை) அச் சப்தாவத்தைகளின் றன்மையைக் கூறல்

பிரமமாந் தனைமறந்த பேதைமையே யஞ்ஞானம்
பரனிலை காணேமென்று பகர்தலா வரணமூடல்
நரனெருகருத்தாற்சீவ னெனை மூளைத்தருேற்றம்
குரவன்வாக் கியத்தாற்றன்னைக் குறிக்கொளல் பரோட்ச
[ஞானம் 59

(இ – ள்) பிரமமாந் தனை மறந்த பேதைமையே – பிரமசொரூபமாகிய பிரத்தியகாத்மாவைச் சீவன் மறந்த அறியாமையே, அஞ்ஞானம்–அஞ்ஞானமாம், பரனிலை காணே

மென்று பகர்தல் — பிரமமில்லை தோற்றமில்லை என்று சொல்லுதல், ஆவரண மூடல் — ஆவரண மறைப்பாம், நான் ஒரு கருத்தால் சீவன் நானென முளைத்தல் — நான் மநுடன் என்றும், கர்மங்களைச் செய்கிறே னென்றும், பலனைப் புசிக்கிறேனென்கின்ற ஒரு எண்ணத்தினால் சீவன் என வுண்டாதலே, தோற்றம் — விட்சேபமாம், குரவன் வாக்கியத்தால் — ஆசிரியர் உபதேசிக்கும் அவாந்தர வாக்கியத்தால், தன்னை — பரமாத்மாவாகிய தன்னை, குறிக்கொளல் — உண்டு என்று அறிந்துகொள்வதே, பரோட்ச ஞானம்— பிரமமில்லையென்னும் அசத்தாவரணத்தைப் போக்கும் பரோட்ச ஞானமாகும்

(ப — ம்) சச்சிதானந்த பரிபூரணந் தானு யிராமலும், ஆவரணத்தினால் தேகாதி தானென்று வாராமலும், மத்தியில் மௌட்டியமான நிலையே அறியாமை யென்பார், "பிரமமாம் ... அஞ்ஞான" மெனவும், விவேகிக்கும் அவிவேகிக்கும் ஆத்மப் பிரசங்கம் வந்தவிடத்தில் ஆத்மா வில்லையெனக் கூறுகின்ற தசத்தாவரணம், பகிர் முகத்தில் விசாரித்து இருந்தாற் றோற்றுரோ வென்று கூறுகின்ற தபானுவரண மென்பார், "பானிலை...மூட" லெனவும், தாரித்திரியாதி துன்பம் நீக்க உழவாதி இகலோக கிருத்தியமும், நரகாதி துன்பம் நீக்க மது பானாதி நீக்கி யாகாதி பரலோகக் கிருத்தியமும், செய்ய வேண்டுமென்னும் கவலையினால் ஞாதாவா யறிந்து, கர்த்தா வாய்ச் செய்து, போக்தாவாய்ப் புசிக்கு மனிதனை, சீவனுனென வுண்டாகும் தோற்றம் விட்சேப மென்பார், "நானொரு ... தோற்ற" மெனவும், பூர்வ சென்ம புண்ணிய பரிபாகத்தால், சித்த சுத்தி சாதன சதுட்டயம் பெற்றுச் சற்குருவை யடைந்து, அவருபதேசிக்கும் சத்திய ஞானனந்தம் பிரம மென்னும் அவாந்தர வாக்கியத்தைப் பெற்று அஞ்ஞானி களில் ஆஸ்திகள் சொர்க்கம் உண்டெனக் கேட்டு நம்புவது போல ஆத்மா வுண்டென அறிதல் காணுத ஞானமென்பார், "குரவன்...பரோட்ச ஞான" மெனவுங் கூறினர்.

(வி — ரை) குறிக்கொளல் பரோட்ச ஞானம் என்னும் பதத்திற்கு சிந்தாமணி உண்டென்னும் கர்மகாண்ட வாக்கியத்தில் நம்பிக்கை வைத்தல் போல ஞானசாரியர் உபதேசிக்கும் அவாந்தர வாக்கியத்தில் நம்பிக்கை வைத்தலால் உண்டாவது பரோக்ஷ ஞானம்.

(அ — கை) இதுவுமது.

தத்துவ விசாரஞ் செய்து சகலசந் தேகமும் போய்
அத்துவி தந்தா னுத லபரோட்ச ஞான மாகும்
கர்த்தனுஞ் சீவ பேதங் கழிவதே துக்கம் போகல்
முத்தனு யெல்லாஞ் செய்து முடிந்ததா னந்த மாமே. 60

(இ — ள்) தத்துவ விசாரஞ் செய்து — ஆசிரியர் உபதேசிக்கும் நீயே பிரமமென்னும் மகா வாக்கியத்தால் தற்பத துவம்பத விசாரணை செய்து, சகல சந்தேகமும் போய் — அஞ்ஞான சமுசய விபரீதங்கள் அனைத்தும் நீங்கி, அத்துவிதம் தானுதல் — ஐக்கிய சொரூபம் தானுவதே, அபரோட்ச ஞானமாகும் — பிரமம் தோற்றவில்லை யென்னும் அபானுவரணத்தைக் கெடுக்கும் பிரத்தியட்ச ஞானமாம், கர்த்தனும் சீவ பேதம் கழிவதே — கூடஸ்தரிடத்தில் ஆரோபிக்கப்பட்ட நான் ஞாதா கர்த்தா போக்தா வென்னும் சீவத்துவம் நீங்குவதே, துக்கம் போகல் — துக்க நிவர்த்தியாம், முத்தனு யெல்லாஞ் செய்து முடிந்தது — சகல பந்தங்களினின்றும் விடுபட்டவனுய்க் கிருத கிருத்திய சர்வ காமாப்தி பிராப்தப் பிராயப் பியத்தினு லுண்டான சந்தோஷமே, ஆனந்தமாம் — தடையற்ற வானந்தமாம்.

(ப — ம்) தத்பத துவம்பத வாச்சியங்களை விசாரித்துச் சீவாதி ஈஸ்வராதி வாச்சியங்களை நீக்கி லட்சியமான கூடஸ்த பிரம ஐக்கியத்தை அசம்பாவனை சமுசய பாவனை விபரீத பாவனையன்னியில் அறிந்து அவ் வயிக்கிய சொரூபந் தானுதல் பிரத்தியட்ச ஞானமென்பார், "தத்துவ ... ... ஞானமாகு" மெனவும், யோக போக்தரு வின்றிச் சாட்சியானென்னும் ஞானத்தால் தூல தேகத்தில் வயிற்றுவலி முதலிய வியாதியும் சூட்சும தேகத்தில் காமாதியும் காரண தேகத்தில் வாசனையுமாகிய இகலோக துக்கமும், நெருப்பில் கட்டையில்லாதது போலவும் பாலை நிலத்தில் மான் செல்லாதது போலவும் புண்ணிய பாவ கருமப் பற்றின்றிச் சின்மாத்திர சொரூபமா யிருக்கின்ற அநுபவத்தால் புண்ணியமென்று வரும் பாவ மென்று போமென்னும் சிந்தனையாகிற பரலோக துக்கமும் நீங்குதலே, துன்ப நிவிர்த்தியென்பார் "கர்த்தனும் ...போக" லெனவும்,

உழவாதி இகலோகக் கிருத்தியமும் யாகாதி பரலோகக் கிருத்தியமும் சிரவணாதி மோட்சக் கிருத்தியமும் செய்து முடிந்த கிருத கிருத்தியத்திஞலும், பரமானந்த சாகரத்திஞேர் திவலையாகிய பதிஞெரு வகை யானந்தமும் இத்தனை பேராயிருந்து புசிக்கின்றது நாமொருவன்ருனே என்னும் சர்வ காமாப்தியிஞலும், புண்ணிய பரிபாகமுதல் நிசானந்தப் பேறு வரையடைந்த பிராப்த பிராப்பியத்திஞலும் உண்டான சந்தோஷமென்பார் "முத்தஞ ...... ஆனந்தமா" மெனவுங் கூறிஞர், இந்த மூன்று கவியினும்

(தா – ம்) அஞ்ஞானம் ஆவரணம் விட்சேபம் மூன்றும் அசுத்த மாயா சம்பந்தமும், பரோட்ச ஞான முதலிய நான்கும் சுத்த மாயா சம்பந்தமுமாம். அவைகளில் பரோட்ச ஞானத்திஞல் அசத்தாவரணமும் அபரொட்ச ஞானத்திஞல் அபாஞவரணத்துடன் மூவாஞ்ஞானமும் துக்க நிவர்த்தியிஞல் விட்சேபமும் நீங்குமென்பதாம். அவைகள் நீங்கவே அவைகள் நாமங்களும் நீங்கித் தடையற்ற வானந்தமாகிய நிரதிசயானந்தந் தானே விளங்குமென்பதாம்.

(அ – கை) நித்தியா பரோட்சமாகிய வான்மாவிற்கு அஞ்ஞாஞதி சப்தாவஸ்தைகள் எங்ஙனம் உளதென் பதில் திருட்டாந்தங் கூறல்.

இதுநினக் கறியும் வண்ண மிப்படி யொருதிட் டாந்தம்
புதுமையாங் கதைகேள் பத்துப் புருடரோ ராற்றை நீந்தி
உதகதி ரத்தி லேறி யொருவஞென் பதுபே ரெண்ணி
அதஞெடு தசமன் ருனென் றறியாமன் மயங்கி நின்ருன்.

(இ – ள்) இது நினக் கறியும் வண்ணம் – ஆன்மா வொருவனுக்கே ஏழவத்தைகளு முண்டாகுமென்பது உனக்கே விளங்கும்படி, இப்படி – இவ்வாறு, திருஷ்டாந்தம் – திருஷ்டாந்தமாக, புதுமையாங் கதை கேள் – ஆச்சரியமாகிய ஒரு கதையினைக் கேட்பாய், பத்துப் புருடர் – தச புருடர்கள், ஓர் ஆற்றை நீந்தி – ஒரு நதியைக் கடந்து, உதக தீரத்தி லேறி – நதியின் கரையிலேறி, ஒருவ ஞென்பதுபே ரெண்ணி– அவர்களுள் ஒரு புருடன் நவ புருடர்களை எண்ணி, அதஞெடு– அவ் வெண்ணிக்கையுடன், தான் தசமனென்று – தானே பத்தாமவனென்று, அறியாமல் – எண்ணியறியாமல், மயங்கி நின்ருன் – பிரமித்து நின்றனன்.

(ப - ம்) அஞ்ஞானாதி யேழத்தையும்ஒரு புருடனுக்கே உண்டான ஆச்சரியமான கதை யென்பார், "புதுமையாங் கதை" யென்றார்.

(தா - ம்) ஒருவனுக்கே அஞ்ஞானாதி யுண்டாமென விளக்கு நிமித்தம் தசபுமான் கதையைத் திருஷ்டாந்தமாகக் கூறினதாம்.

(அ - கை) திருஷ்டாந்த தாஷ்டாந்தங்களுக்கு ஒப்புவமை காட்டல்.

அறியாத மயலஞ் ஞான மவனில்லை காணே மென்றல்
பிறியாவா வரண மாகும் பீழைகொண் டழல்விட் சேபம்
நெறியாளன் றசம னுண்டு நிற்கின்று னென்ற சொல்லைக்
குறியாக வெண்ணிநெஞ்சிற் கொள்வது பரோட்சஞானம்.

(இ - ள்) அறியாத மயல் - ஒன்பது புருடரை நன்றாகப் பார்ப்பவனாகத் தானிருந்தும் பிராந்தியினால் தன்னைப் பத்தாவானாக அறியாத மயக்கமே, அஞ்ஞானம் - அஞ்ஞானமாம், அவனில்லை காணே மென்றல் - தசமனாகிய தான் தசமனில்லை தோன்றவில்லை என்று சொல்லுதல், பிரியா வாவரண மாகும் - நீங்காத வசத்தாவரணம் அபானுவரணமாம், பீழை கொண்டு- பத்தாவா னிறந்தா னென்று துக்கமுடையவனாய், அழல் விட்சேபம் - அழுதல் முதலியவை விட்சேபமாம், நெறியாளன் - மார்க்கஸ்தனான ஓர் ஆப்தன், தசமனுண்டு நிற்கின்றானென்ற சொல்லை - தசமனிறந்திலன் உயிரோடு இருக்கிறானென்று கூறிய வசனத்தை, நெஞ்சில் - அந்தக் கரணத்தில், குறியாக - உண்மையாக, எண்ணிக் கொள்வது- கருதிக்கொள்வது, பரோட்ச ஞானம் - பரோட்ச ஞானமாம்

(ப - ம்) அபரோட்ச ஞானம் வருகிறவரை நீங்காத மூடல் என்பார், "பிறியா வாவரண" மெனவும், ஐயம் திரிபின்றி எதார்த்தத்தைக் கூறு மாப்தன் வாக்கியத்தை நம்புகின்றது காணாத ஞானமென்பார் "நெறியாளன் ... பரோட்ச ஞான" மெனவுங் கூறினர்.

(அ - கை) இதுவுமது.

புண்ணிய பதிகன் பின்னும் புருடரோன் பதின்மர் தம்மை
எண்ணுநீ தசம னைவை யென்னவே தன்னைக் காணல்

கண்ணினிற் கண்டஞானங்கரைதல்போவதுநோய்போதல்
திண்ணிய மனதிலையந் தெளிதலானந்த மாமே. 63.

(இ-ள்) புண்ணிய பதிகன் - தர்மவானும் மார்க்கத்தில் செல்லு மாப்தன், பின்னும் - மறுபடியும், புருடரொன் பதின்மர் தம்மை - நவ புருடரை, எண்ணு நீ தசமனுவை யென்னவே - எண்ணு நின்ற நீயே தச மனுவா யென்று அறிவிக்கவே, தன்னைக் காணல் - நானே பத்தாவானென்று தன்னை அபரோட்சமாக அறிதலே, கண்ணிற்கண்ட ஞானம்- அபரோட்ச ஞானம், "கரைதல் போவது - இறந்தனனென்று அழுத வழுகை நீங்கினதே, நோய் போதல் - துக்க நிவர்த்தி யாம், திண்ணிய மனதில் - திடமாகிய தனது சித்தத்தில், ஐயம் தெளிதல் - சந்தேகம் நீங்கித் திடமுண்டானதே, ஆனந்தமாம் - தடையற்ற ஆனந்தமாம்.

(ப-ம்) எண்ணிக்கை தெரிந்தவனும் காரியம் பிரதானம் பண்ணுதவனும் வருத்தம் பாராத இருபை யுடையவனுமிருக்கின்ற மார்க்கஸ்த னென்பார், "புண்ணிய பதிக" னெனவுங் கூறினர்.

(தா-ய்) இரண்டு கவிக்கும் தசமனுக்குத் தன்னை மறந்ததனுல் வந்த உபாதிகளையும் தத்தரிசனத்தால் அவை கள் நீக்கத்தையும் கூறி ஆதமாவுக்கே ஞான வஞ்ஞானுதி வரலாமெனவற்புறுத்திக் கூறியதாம்.

(அ-கை) தன்னைத் தரிசிப்பிக்கவேண்டுமென்று சீடன் வினுதலுக் குத்தரம்,

தசபுமான் றனைக்கண்டாற்போற் சற்குரு மூர்த்தியேயென்
நிசவடிவினை யான்காண நீர்காட்டல் வேண்டுமென்றான்
சுசிபெறு மிலட்சியார்த்தந் துவம்பதந் தற்பதங்கட்
கசிபத வைக்கியஞ்செய்யுமது செயுமுண்மை கேளாய். 64

(இ-ள்) தசபுமான் - பத்தாமவன், தனைக் கண்டாற் போல - தன்னைப் பத்தாவானுக அறிந்தாற்போல, சற்குரு மூர்த்தியே - தேசிகரான தலைவரே, என் நிசவடிவினை யான் காண - எனதெதார்த்த சொரூபமான கூடஸ்தரை நானுக அறியும்படி, நீர்காட்டல் வேண்டுமென்றான் - தேவரீர் தரிசிப்

பித்தல் வேண்டுமென்று சீடன் வினவினான், துவம்பத தற்பதம் – சாமவேத மகா வாக்கியமானது துவம்பத தற்பதங்களின், சுசிபெறு மிலட்சியார்த்தங்கட்கு – சுத்தம் பொருந்திய இலட்சியார்த்தங்களான கூடஸ்த பிரமங்கட்கு, அசிபத ஐக்கியஞ் செய்யும் – (அதுநீ) ஆகின்றாய் என்னும் அசிபதப் பொருளான ஐக்கிய சொரூபத்தைப் பாகத்தியாக இலட்சணையினால் போதிக்கும், அது செயும் உண்மை கேளாய் – அவ்வாக்கியம் அங்ஙனம் போதிக்கும் உண்மையை நாம் உபதேசிக்கக் கேட்பாய்.

(ப – ம்) தத்துவஞானம் வந்த தேசிகர்களுக்குள் சீடன் புத்தியறிந்து போதிக்கின்ற வல்லமையுடைய தலைவரென்பார் "சற்குரு மூர்த்தியே" எனவும், தேகாதி கற்பித வடிவங்களே யானென்றிருப்பதை விட்டு, நிருமல நிருவிகார நிற்குணமாயிருக்கின்ற எனதெதார்த்த வடிவத்தை என்னாலே காணக் கூடாத படியினாலும், எனக்கறிவிக்கின்றதற்குத் தங்களைவிட வேறில்லாமையாலும் தேவரீரே தெரிசிப்பிக்க வேண்டுமென்றானென்பார், "என்னிச வடிவினை ... வேண்டுமென்று" னெனவும், துவம்பத தத்பதவாச்சிய நீங்கிய லட்சியார்த்தமென்பார், "சுசிபெறும் ... பதங்கட்" கெனவுங் கூறினார்.

(தா – ம்) சாமவேத மகா வாக்கியம் நிரூபித்தபடி யத்துவிதமான ஆத்மசொரூபத்தை அறிவிக்கத் தொடங்கினதாம்.

(அ – கை) இது முதலாக 81-ம் செய்யுள் வரையும் மகா வாக்கிய விசாரம், இதில் அத்துவித சொரூபமே துவிதம் போலத் தோற்றுமெனல்.

விண்ணொன்றை மகாவிண்ணென்று மேகவிண்ணென் றும்
பாரின், மண்ணொன்று கடவிண்ணென்று மருவிய சவ
விண்ணென்றும், எண்ணுங்கற்பனைபோ லொன்றே யெங்
குமாம் பிரமமீசன், நண்ணுங் கூடஸ்தன்சீவ னென்குசை
தன்னியமாமே 65

(இ – ள்) விண்ணொன்றை – ஆகாச மொன்றையே மகா விண்ணென்றும் – மகா காயமென்றும், மேகவிண்ணென்றும் – மேகா காயமென்றும், பாரில் – உலகில், மண்ணொன்றும் – மண்ணாலாகிய, கடவிண்ணென்றும்–கடத்தில் வளையப்

பட்ட வாகாய மென்றும், மருவியசல விண்ணென்றும் – கடத்திலுள்ள சலாகாய மென்றும், எண்ணுங் கற்பனைபோல் – நான்காகக் கருதும் கற்பிதத்தைப் போல, ஒன்றே – அத்துவித சொரூபமே, எங்குமாம் பிரமம் – எங்கும் வியாபகமாக வுள்ள பிரம சொரூப மென்றும், ஈசன் – ஈசுரனென்றும், நண்ணும் கூடஸ்தன் – சரீரத்தில் வரைபட்டுள்ள பிரத்தியகாத்மாவென்றும், சீவன் – சீவனென்றும், நான்கு சைதன்னியமாமே – நான்கு சைதன்னியங்களாம்.

(ப – ம்) நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமானந்தாத்துவித சொரூப மென்பார் "ஒன்றே" யெனவும், சச்சிதானந்தமாய், சருவ சாட்சியாய்ப் பெரிதுக்கெல்லாம் பெரிதாயிருக்கும் சொரூப மென்பார், "எங்குமாம் பிரம" மெனவும் மாயா பிரதி விம்பனும் சிருட்டியாதி செய்பவனும், தான் சிருட்டித்ததைப் பிறரால் மாற்றக்கூடாத வலியுடையவனும் இருக்கின்ற இறைவனென்பார், "ஈச" னெனவும், அவித்தையில் வரைபட்டும் பற்றற்றிருப்பவனும் இருபத்தெட்டுத் தத்துவமாகிய பொய்யில் வசிப்பவனும் விவேகிகளுக்கு விளங்கினும் அவிவேகிகளுக்கு விளங்காதபடி பஞ்சகோச மறைப்புக்குள் இருப்பவனு மிருக்கின்ற பிரத்தியகாத்மாவென்பார் "நண்ணும் கூடஸ்த" னெனவும், அவித்யாப் பிரதிவிம்பனும் கர்த்தா போக்தா ஞாதாவாய்ச் சீவனம் பண்ணுகின்ற சிதாபாச னென்பார், "சீவ" னெனவும் கூறினர்.

(வி – ரை) மகா விண் என்ற பதத்துக்கு, பிரமாண்டங்களின் உள்ளும் புறம்புமுள்ள ஆகாய மெனவும், மேகவிண் என்ற பதத்துக்கு, மேகத்துக்கு இடங்கொடுத்திருக்கிற ஆகாயமும் மேக சலத்தில் பிரதிபிம்பித்த ஆகாயமும் சேர்ந்ததெனவும், கடவிண் என்ற பதத்துக்கு, கடத்தில் வரைபட்டுள்ள ஆகாயமெனவும், சலவிண் என்ற பதத்துக்கு, கட சலத்துக்கு இடம் கொடுத்திருக்கிற ஆகாயமும் கடசலத்தில் மேக நட்சத்திரங்களோடு பிரதி பிம்பித்திருக்கிற ஆகாயமுஞ் சேர்ந்ததெனவும், பிரமம் என்பது எங்கும் வியாபித்துள்ள சுத்த சேதனமெனவும், ஈசன் என்பது மாயைக் கதிஷ்டான சேதனமும், மாயையில் பிரதி பிம்பித்த சேதனமும் சேர்ந்ததெனவும், கூடஸ்தன் என்பது அவித்தையில் வரைபட்டுள்ள சேதனமெனவும், சீவன் என்பது அவித்தைக் கதிஷ்டான

சேதனமும் அவித்தையில் பிரதி பிம்பித்துள்ள சேதனமும் சேர்ந்ததெனவுங் கொள்க.

(தா – ம்) ஒன்றான சைதன்யமே பிரமம் கூடஸ்தன் ஈசன் சீவன் என நான்கு சைதன்யமாக விளங்குமென்பதாம்.

(அ – கை) இந் நான்கு சைதன்யங்களில் இலட்சியார்த்தம் யாது வாச்சியார்த்தம் யாதெனில்,

பூச்சிய வீசன் சீவன் புகல்பத மிரண்டி னுக்கும்
வாச்சிய மிலட்சியந் தான் மலமிலாப் பிரம மான் மா[கும்
காச்சியபாலினெய்போற் கலந்தொன்றாங்கடைந்தெடுக்
ஆச்சிய மென்னவுன்னை யறிந்துநீ பிரிந்துகொள்ளே. 66

(இ – ள்) பூச்சிய ஈசன் – யாவரா லும் பூசிக்கத்தக்க வீசுரனும், சீவன் – பூசிக்கிற சீவனும், புகல்பத மிரண்டினுக்கும் – மகா வாக்கியத்தில் கூறும் தத்பதம் துவம்பதங்கட்கு முறையே, வாச்சியம் – முக்கியார்த்தமாம், லட்சியந்தான் – இலக்கியார்த்தமாவது, மலமிலா – மாயா மலம் அவித்யா மல மிலாத, பிரமம் ஆன்மா – பிரமமும் கூடஸ்தனுமாம், காச்சிய பாலில் நெய் போல் – காச்சப்பட்ட பாலில் நெய் கலந்து ஒன்றாயிருப்பது போல, கலந்தொன்றும் – அவ் வாச்சிய லட்சியங்கள் கலந்து ஏகமா யிருக்கின்றன, கடைந்தெடுக்கும் ஆச்சியமென்ன–மத்தினாற் கடைந்தெடுக்கும் நெய்யைப்போல, உன்னை யறிந்து – இலட்சியார்த்தமான உன்னையறிந்து, நீ பிரிந்து கொள் – வாச்சியார்த்தத்தினின்றும் நீ வேறாவாய்.

(ப – ம்) கையினாற் பிரிக்கப்படாது கலந்திருக்கின்ற நெய்யை மத்தினாற் கடைந்தெடுக்கிறதுபோல, வாச்சியார்த்தத்திற் கலந்து கர்ம பத்தியினால் பிரிக்கக்கூடா திருக்கும் இலட்சியார்த்த சொரூபத்தைச் சிரவணாதியாற் பிரித்தறிய வேண்டு மென்பார் "அறிந்து...கொள்" ளென்றார்.

(வி – ம்) வாச்சிய இலட்சியம் என்ற பதங்களுக்குத் தத்பத வாச்சியன், மாயை மாயைக் கதிஷ்டான சேதனத் தோடு ஆபாச ரூபமான ஈசுவரன் எனவும், தத்பத லட்சியம் அதிஷ்டான சேதனமாகிய பிரமம் எனவும், துவம்பத வாச்சியன், அவித்தை அவித்தைக் கதிஷ்டான சேதனத்

தோடு ஆபாச ரூபமான சீவன் எனவும் துவம்பத இலக்ஷியம் அதிஷ்டான சேதனமாகிய கூடஸ்த னெனவுங் கொள்க.

(தா - ம்) தத்பத துவம்பதங்களில் வாச்சியார்த்தம் பர சிவரெனவும், இலட்சியார்த்தம் பிரம கூடஸ்த ரெனவும், அத்தியாசத்தினால் இரண்டு வாச்சியார்த்தமும் இரண்டு லட்சியார்த்தத்தில் கலந்திருக்குமெனவும், வாச்சியார்த் தத்தை நீக்கி இலட்சியார்த்தத்தை யறிந்துகொள் ளெனவுங் கூறியதாம்.

(அ - கை) வாச்சியார்த்தத்தை நீக்குகின்ற விதம் யாதெனில்,

பிறிவதெப்படியென்றக்காற் பிணமாகுமுடனென்னும்
அறிவினைக் கொல்லல் வேண்டு மைம்பூத விகார மன்றோ
வெறியதோர் துருத்தி மூக்கின் விடுவது போலுன் மூக்கால்
எறிபிரா ணனுநீ யல்லை யிராசத குணவி காரம். 67.

(இ - ள்) பிறிவதெப்படி என்றக்கால் - வாச்சியத்தில் நின்று நான் வேறுபடுவ தெவ்வாறென்று கேட்பாயாகில், பிணமாகுமுடல் நானென்னும் அறிவினை - சிலநாளில் பிண மாக நசித்துப்போகும் அன்னமய கோசத்தை ஆன்மா வென்று கருதும் பிராந்தியறிவை, கொல்லல் வேண்டும் - கெடுக்கவேண்டும், ஏனென்றால், ஐம்பூத விகாரமன்றோ - அது பஞ்சீகிருத பஞ்ச மகா பூதங்களின் காரியமாகலின், வெறியதோர் துருத்தி - வெறுமையான வோர் தோல் துருத்தி, மூக்கின் விடுவது போல - மூக்கினால் காற்றை விடுவதுபோல, உன் மூக்கால் - உனது நாசியினால், எறி பிராணனும் நீ அல்லை - வீசுகின்ற சடமான பிராணமய கோசமும் நீ யல்லை, ஏனென்றால், இராசதகுண விகாரம்-அது அபஞ்சீகிருத பூதங்களின் ரசோகுண காரியமாகலின்.

(ப - ) தன்னைச் சூழ்ந்த பதார்த்தங்களைத் தேகமே யறிகையாலும், சிற்குசந்தன வனிதாதி போகங்கள் தேகத்தி னிடத்தில் பிரயோசனமாகித் தேகமில்லாவிட்டாற் பிரயோசனமில்லாத படியாலும், நான் பருத்தேன் இளைத்தே னென்கையாலும், தூல சரீரமாகிற அன்னமய கோசமே ஆத்மாவென்னும் புத்தியை, மரண மூர்ச்சையாதி காலத்தில்

தன்னைச் சூழ்ந்த பதார்த்தத்தை அறியாமையினாலும், அக் காலத்தில் தேக மிருக்கவுஞ் சிற்குசந்தன வனிதாதிகள் பிரயோசனப் படாமையினாலும், பூதத்துளிருந் தாட்டுகிறவன் பூதத்துக் கன்னியமா யிருத்தல்போல, உடலை யாட்டும் பிராண னாகிய ஆத்மா வன்னியமாயிருத்தலினாலும், தேகத்திலிருந்து நீங்குகிற வுயிர் அதற் கன்னியமா யிருத்தலினாலும், என் வீடு என் மாடு என்பவன் அதற்குப் புறம்பாயிருத்தல் போல, என் தேகம் பருத்த திளைத்தது என்பதினாலும், பஞ்சபூதத்தி லுற்பத்தியானதினாலும், தேகம் அசத்து சடம் துக்கம் அநித்தியம் கண்டம் அசுத்தமாய்க் கடத்தைப் போலத் திருசியமாய், சட்பாவ விகாரமுடைய தாய் நம்மா லறியப் பட்டதாயும், நம்மை யறியாததாயு மிருப்பதாலும், தூல தேகமாகிய அன்னமய கோசம் நானல்லவென்று நீக்கவேண்டு மென்பார், "பிறிவ தெப்படி...விகாரமன்றோ" வெனவும்,

பிராணன், எல்லா மிறந்த சுழுத்தியி லிருப்பதினாலுங் காற்றுண்டானால்தான், நியமித்த விடத்துக்குக் கப்பல் செல் வதும், அஃதில்லாவிடில் அது செல்லாததுபோல, பிராண னுண்டானால் சிற்குசந் தன வனிதாதி பிரயோசனப் படுகிற தாயும், உழவாதி தொழில் நடக்கிறதாயும், பிராணனில்லா விடில் சிற்குசந் தன வனிதாதி பிரயோசனப் படாமலும், உழவாதி தொழில் நடவாம லிருப்பதினாலும், பிராணன் நீங்கி லுடல் பிணமாகிறதினாலும், இதற் கயலாய் ஆத்மா யில்லாத படியினாலும், நான் பலவான் பலவீனன் பசி தாக முடையவன் பேசினேன் கொடுத்தேன் என்பதினாலும், பிராணமயகோசமே ஆத்மாவென்னும் புத்தியை,

மனதடங்கிய சுழுத்தியில் உடலுக்குக் காவலாய்ப் பிராண னிருக்கவும், மூட்டை கடித்தல் மூக்குத்தி முதலியதைக் கழற் றல் அறியாததினாலும், அக் காலத்திலே கப்பலில் பாய் கட் டும் ஆளில்லாதபோது காற்றிருந்தாலும் பிரயோசனமின்மை போல, சிற்குசந்தன வனிதாதி பிரயோசனப்படாமலும் உழவாதி தொழில் நடவாம லிருப்பதினாலும், யோக மூற்சை காலத்தில் பிராணனில்லாதபோது உடல் பிணமாகாமையி னாலும், போகின்றவிடந் தெரியாது இரதத்தை யிழுத்துச் செல்லுங் குதிரையை யோட்டுகிறவன் அதற் கன்னியமா யிருத்தல்போல, வசனித்தலாதியும் மூச்சோடு மிட்டுமறியாது

மனமாகிய ஆத்மா நினைத்தாட்டியபடி யசைசின்ற பிராண னுக்கு ஆட்டுகின்ற அவ்வாத்மா அன்னியமா யிருத்தலி னுலும், என் தேகமென்பவன் அதற்குப் புறம்பா யிருத்தல் போல என் பிராணன் பலமாயிருக்கிறது பலவீனமா யிருக் கிறது பசி தாகமா யிருக்கிறது என் வாக்காதி வசனித்தலாதி செய்கிறது என்பதினுலும், பிராணமய கோசம் பஞ்ச தன் மாத்திரை ரசோகுண சமட்டி வியட்டியி லுற்பத்தியானதி னுலும், அசத்து சடம் துக்கா தியாய் நம்மா லறியப்பட்டதாயும் நம்மை யறியாததாயு மிருப்பதினுலும், பிராணமய கோசம் நானல்லவென்று நீக்கவேண்டு மென்பார், "வெறியதோர்... இராசத குண விகாரம்" எனவுங் கூறினர்.

(அ — கை) இதுவுமது.

கரணமா மனது புத்தி கருத்தாவா மவையான் மாவோ
தரமுள விரண்டு கோசஞ் சத்துவ குணவி காரம்
வரமறு துயிலா னந்த மயனையு நானென் ஞேதே
விரவிய தமவஞ் ஞான விருத்தியின் விகார மாமே. 68.

(இ — ள்) கரணமா மனது—கரணமாகிய மனதும், கருத்தா வாம் புத்தி, கருத்தாவாகிய புத்தியும், அவை யான்மாவோ— ஆகிய அவைகளும் நீயா அல்ல, (ஏனென்ருல்,) தரமுள இரண்டு கோசம் — சங்கற்ப ரூபம் நிச்சய ரூபமென்று தார தம்மியமுள்ள மனேமய கோசம் விஞ்ஞானமய கோசங்களாம், சத்துவ குண விகாரம் — பஞ்ச தன்மாத்திரையினது சத்துவ குண காரியங்களாம் (ஆகலின்,) வரமறு — சிரேஷ்டமில்லாத, துயில் ஆனந்த மயனையும் — சுழுத்தியிலுள்ள ஆனந்த மயனை யும், நானென்ஞேதே — ஆன்மாவென்று கருதாதே, விரவிய தம வஞ்ஞான விருத்தியின் விகாரமாம் — பொருந்திய தமோ ரூபமான அஞ்ஞான விருத்தியின் காரியமாகலின்.

(ப — ம்) மனம் தேகேந்திரிய பிராணனுதியை யறிந்து இரட்சிக்கையினுலும், ஆட்டுகிறவ னுண்டானுல் சூத்திரக் கயிறுள்ள பாவை ஆடுகின்றது அவனில்லாவிடி லாடாதது போல, மனமுண்டானுல் சிற்குசந் தன வனிதாதி பிரயோசனப் படுவதாயும், உழவாதி யாகாதி தொழில் நடப்பதாயும், இம் மனதில்லாவிடில் சிற்குசந்தன வனிதாதி பிரயோசனப் படாமலும், உழவாதி யாகாதி தொழில் நடவாம லிருப்பதி

ஞலும், மனம் தியானித்தபடி யாகின்றபடியஞலும், அதற் கன்னியமாய் ஆன்மா இல்லாதபடியினுலும், நான் காமி குரோதி லோபி என்பதினுலும், மனோமய கோசமே ஆத்மா வென்னும் புத்தியை,

பித்தமாதியால் புத்தி நிச்சயமில்லாத காலத்தில் மன மிருக்கவும் ஒன்றையும் அறிந்து இரட்சிக்காமையினுலும், பாவைக் கூத்துக்குத் தலைமையா யிருக்கிறவன் ஏவிவிடாத போது ஆட்டுகிறவ னிருந்தாலும் பாவை ஆடாததுபோல, சிற்குசந் தன வனிதாதி பிரயோசனப் படாமலும், உழவாதி யாகாதி தொழில் நடவாமலிருப்பதினுலும், நிலையாய் ஒன்றைத் தியானித்தற் கிடமின்மையாலும், இவ்விடத்துக்குக் குதிரையை நடத்தவேண்டுமெனத் தெரியாத சஞ்சலத்துடன் சுதந்திரமின்றி யிருக்கும் சாரதிக்கு எசமான் அன்னியமா யிருத்தல் போல, நினைவு முதலியவற்றை அறியாது புத்தி யாகிய ஆத்மா நிச்சயித்து ஏவினபடிக்கு நினைத்தன் முதலிய செய்கின்ற மனத்திற் கேவுகின்ற ஆத்மா வன்னியமா யிருத்தலினுலும், என் பிராணன் என்பவன் அதற்குப் புறம்பா யிருத்தல் போல, என் மனம் சங்கற்பிக்கிறது இச்சித்தலாதி செய்கிறது என்கிறதினுலும், மனோமய கோசம் பஞ்ச தன் மாத்திரை சத்துவகுண சமட்டி வியட்டியி லுற்பத்தியானதிஞ லும், அசத்து சடம் துக்காதியாய் நம்மா லறியப்பட்டதாயும், நம்மை யறியாததாயு மிருப்பதினுலும், மனோமய கோசம் நாமல்லவென்று நீக்கவேண்டு மெனவும்,

புத்தி சலனப்படும் மனதை உறுதிப்படுத்துகிறதினுலும் இகபர காரியங்களில் கர்த்தாவாய் நிரூபவிக்கையினுலும் ஏவும வாத்தியார் உண்டானல் சட்டாம்பிள்ளை பாட்ஞ் சொல்லுவித்துப் பிள்ளைகள் படித்தல் அவரில்லாவிடில் அஃதின்மை போல, புத்தி உண்டானுல் சிற்குசந் தன வனி தாதி பிரயோசனப் படுவதாயும், உழவாதி யாகாதி உபாசனை யாதி நடப்பதாயும், அஃதில்லாவிடில் சிற்குசந் தன வனிதாதி பிரயோசனப் படாமலும், உழவாதி யாகாதி உபாசனையாதி நடவாமலு மிருப்பதினுலும், இதற் கயலாய் ஆத்மா இல்லாத படியினுலும், நான் புத்தி மந்தன் கர்த்தா பண்டித னென் கிறதினுலும், விஞ்ஞான மய கோசமே ஆத்மா வென்கிற புத்தியை,

வியாதி முதலானவற்றால் பிரியமில்லாத காலத்தில் அப் புத்தி நிச்சயஞ் செய்துகொண்டிருக்கவும் சலனமுள்ள மனதை உறுதிப்படுத்தாமலும், இகலோக பரலோக காரியங்களி லொன்றையும் நிருபவிக்காம லிருப்பதினாலும், சம்பளப் பணத்தில் பிரியமில்லாவிடில் வாத்தியா ரிருந்தாலும் பிள்ளைகள் படித்தலின்மை போல, பிரியமில்லாவிடில் புத்தியிருந்தும் சிற்குசந்தன வனிதாதி பிரயோசனப்படாமலும், உழவாதி யாகாதி உபாசனையாதி நடவாம லிருப்பதினாலும், சாரதியை ஏவ தற்சுதந்திரமின்றிய எசமானனுக்குப் பிரயோசனம் அன்னியமா யிருத்தல் போல, நிச்சயஞ் செய்ய தற்சுதந்திர மின்றி ஆனந்தமாகிய ஆத்மா ஏவினபடி நிச்சயஞ் செய்கின்ற புத்திக்கு, அவ் வாத்மா அன்னியமா யிருப்பதினாலும், என் மனம் என்பவன் அதற்குப் புறம்பா யிருத்தல் போல, என் புத்தி நிச்சயக்கிறது என் புத்தி தீட்சணமா யிருக்கிறது என் புத்தி கலங்குகின்றது என் சுரோத்திராதி சத்தாதியை யறிகின்றன என்பதினாலும், விஞ்ஞானமய கோசம் பஞ்ச தன் மாத்திரை சத்துவகுண சமட்டி வியட்டியி லுற்பத்தியானதினாலும், அசத்து சடம் துக்காதியாய் நம்மா லறியப்பட்டதாயும், நம்மை யறியாததாயு மிருப்பதினாலும், விஞ்ஞானமய கோசம் நாமல்ல வென்றும், நீக்கவேண்டுமென்பார், "காரணமா மனது...சத்துவ குண விகார" மெனவும்

அறிகின்ற புத்தி முதலியவை சுழுத்தியில் நசித்துச் சூனியமும் சுகமு மிருத்தலினாலும் சம்பளத்தில் பிரியமுண்டானால் பிரதானியால் சீமை காரியம் நடத்தல் அஃதில்லா விடில் நடக்காமை போல ஆனந்தமுண்டானால் சிற்குசந் தன வனிதாதி பிரயோசனப்படுவதாயும் உழவாதி யாகாதி உபாசனையாதி தொழில் நடப்பதாயும், பிரியமாதி உண்டாவதாயும் இவ்வானந்த மில்லாவிடில் சிற்குசந் தனவனிதாதி பிரயோசனப்படாமலும், உழவாதி யாகாதி உபாசனையாதி நடவாலும், பிரியமாதி உண்டாகாமலு மிருப்பதினாலும், இவ் வானந்தத்துக்கு அன்னியமாய் ஆத்மா யில்லையாகையாலும், நான் சுகி அஞ்ஞானன் பிரியனென்கிறதினாலும் ஆனந்தமய கோசமே ஆத்மா வென்னும் புத்தியை, சுழுத்தியிலுள்ள சூனியமும் அஞ்ஞான சுகமும் துரிய முதலிய அவத்தையி லின்மையாலும், சம்பளம் கொடுக்கும் அரசனில்லாவிடில் பிரதானியால் காரியம் நடவாமை போல, பரமானந்த வாத்ம

சொரூபமன்றிச் சிற்குசந் தன வளிதாதி பிரயோசனப் படாம லும், பிரியமாதி உண்டாகாமலு மிருப்பதினாலும், அர்த்தத் தில் செல்வோன் குறித்துள்ள பிரயோசனத்துக்கு அதனைக் கொடுப்போன் அன்னியமா யிருத்தல் போல, புத்தியாதி தொழிலுக்கு ஏதுவான பிரியத்துக்கு அதிட்டான ஆத்மா வன்னியமா யிருத்தலாலும், என் அஞ்ஞானம் என் சுகம் நன் ருய்க் காணப்படுகின்றதென்கிறதினாலும், ஆனந்தமயகோசம் அவித்தையாவிருத்தியா லுற்பத்தி யானதாலும், அசத்து சடம் துக்காதியா யிருப்பதினாலும், நம்மாலே யறியப்பட்ட தாயும் நம்மை யறியாததாயுமிருப்பதினாலும், ஆனந்தமய கோசம் நாமல்லவென்று நீக்கவேண்டுமென்பார் "ஆனந்த மயனையும்...விருத்தியின் விகாரமாமே" எனவுங் கூறினார்.

(இரண்டு கவிக்கும் (தா — ம்) மூன்று தேகம் மூன் றவத்தை மூன்று அபிமானியுமாகிய பஞ்ச கோசங்களையும் தானன்றென நியதி களைந்ததாம்.

(அ — கை) இப் பஞ்சகோசங்கள் நான் அன்ருயின் நான் யார்? எனின் அதற்கு கூறுகின்றார்?

சத்தொடு சித்தாநந்தஞ் சமந்திரஞ் சாட்சியேகம்
நித்தியம் வியாபியான்மா நீயதுவா வறிந்து
பொத்தொடு சடந்துக்காதி பொருந்து பேதங்களான
குத்திர பஞ்சகோசக் குகைவிட்டு வெளியிலாவாய். 69

(இ — ள்) சத்தொடு சித்து ஆனந்தம் — சச்சிதானந்த மாய், சமம் — சமமாய், திரம் — ஸ்திரமாய், சாட்சி — சாட்சி யாய், ஏகம் — ஏகமாய், நித்தியம் — நித்தியமாய், வியாபி — வியாபகமான, ஆன்மா நீ — அகம்பத அர்த்தமாகிய பிரத்திய காத்மாவே நீ, அதுவாவறிந்து — அவ்வாத்மாவாகவே வுன்னையறிந்து, பொத்தொடு சடம் துக்காதி — அசித்த சட துக்க முதலியதாய், பொருந்து பேதங்களான — பொருந்து கின்ற ஆன்ம சுபாவத்திற்கு விபரீத சுபாவங்களை யுடைய அஞன்ம வர்க்கங்களாகிய, குத்திர பஞ்சகோசக் குகைவிட்டு — வஞ்சகமாகிய பஞ்சகோசக் குகைகளில் ஆன்ம புத்தியை ஒழித்து, வெளியிலாவாய் — விலட்சணனாவாய்.

(ப – ம்) ஆரோபமாய் பாம்பு தோற்றுங் காலத்தும், அதற்கு முன்னும் பின்னும், அதிட்டானமாகத் தானுமிருந்து அதற்கும் இருக்குந்தன்மை கொடுக்கின்ற பழுதையைப் போல, அப் பஞ்சகோசந் தோற்றுங் காலத்து மதற்கு முன்னும் பின்னும் அதிட்டானமாகத் தானுமிருந்து, அவை களுக்கும் இருக்குந் தன்மை கொடுக்கின்ற வுண்மையென்பார் "சத்" தெனவும், தானும் பிரகாசமா யிருந்துகொண்டு கடமுதலானவைகளையும் விளக்கி வைக்கின்ற சூரியனைப் போல, தானும் பிரகாசமாய் இருந்துகொண்டு பஞ்ச கோசத்தையும் பிரகாசிப்பிக்கின்ற அறிவென்பார், "சித்" தெனவும், தானின்ப வடிவா யிருந்துகொண்டு தன்னைக் கிட்டி னவைகளுக்கு இன்பங் கொடுக்கின்ற தேவாமிர்தத்தைப் போல, தானும் சுகமாயிருந்துகொண்டு தன்னைக் கிட்டின பஞ்சகோசங்கட்கு மின்பங்கொடுக்கின்ற சுகமென்பார், "ஆனந்த" மெனவும், சாதுர் பூதங்களிலும் ஒன்றிற் குழ்ச்சி யும் ஒன்றி லுயற்சியுமற்று, ஒரு படித்தாயிருக்கின்ற ஆகாசம் போல, சாக்கிர சொப்பனத்தில் உயர்ச்சியும் சுழுத்தியில் தாழ்ச்சியாயும் விளங்காமல், மூன்றவத்தையிலும் ஒருபடித் தாய் விளங்குகின்ற நடுவென்பார், "சம" மெனவும், கானல் ஜலம் பொய்யாய்த் தோன்றுங் காலத்திலும் அதற்கு முன் னும் பின்னும் நிசமா யிருக்கின்ற சூரிய கிரணம்போல, சரீரத் திரயம் பொய்யாய்த் தோற்றுங் காலத்திலும் அதற்கு முன் னும் பின்னுமிருக்கின்ற மெய்யென்பார், "திர" மெனவும், சண்டைக்காரரோடு கூட நின்றும் அவர் செய்யும் தொழில் களில் சேராமல் பட்சபாதமின்றி அவற்றை அறிந்திருக்கின்ற சாட்சிக்காரனைப் போல, சாக்கிராதி யவத்தைகளில் விசு வாதி யபிமானியோடுங் கூடி நின்று செய்யும் வியாபாரங்களுக் கும் விலட்சணமாய் நின்று அவற்றைத் தாரதன்மியமின்றி யறிகின்ற கரியென்பார், "சாட்சி" யெனவும், கடகலசம் குதிர் முதலான உபாதிகளினால் அநேக ஆகாசமாகத் தோற்றி னும் ஆகாசம் ஒன்றேயன்றி வேறில்லாதது போல, அவித்தை அந்தக்கரணாதி யுபாதிகளினால் அநேக அறி வாகத் தோற்றினும் அறிவு பலவல்ல ஒன்றே என்பார், "ஏக" மெனவும், கடகலசாதி தோன்றிநின் றழியவும் அங்ங னம் தோன்றி யழியாதிருக்கின்ற மண்ணைப் போல, சாக்கி ராதி அவத்தைகள் பஞ்சகோசங்கள் தோன்றிநின் றழியவும், அங்ஙனம் தோன்றி யழியாதிருக்கின்ற நிலையுள்ளதென்பார்,

"நித்திய" மெனவும், சாதுர் பூதங்களுள் தான் வியாப்பிய மின்றித் தன்னுள் அவற்றை வியாப்பியமாகவுடைய ஆகாசம் போல, தூலாதி தேகம் சாக்கிராதி அவத்தை விசுவாதி அபிமானிக்குள் தான் வியாப்பியமின்றித் தன்னுள் அவைகள் வியாப்பியமாக வுடைய விபுவென்பார், "வியாபி" யெனவும், அசத்தாதி 9 லட்சணமில்லாததாய் சத்தாதி 9 இலட்சண முடையதாய் அகம் பதத்துக்கு அர்த்தமாயிருக்கின்றதென் பார், "சத்தொடு ... ஆத்மா" வெனவும்,

பழுதையிற் றோற்றும் பாம்பானது தோற்றுங் காலத்தி லும் அதற்கு முன்னும் பின்னும் தானுமில்லாது மற்றொன் றுக்கு மிருக்குந் தன்மை கொடாதது போல, தூல சரீரமாதி 9 மானபஞ்ச கோசங்கள், சங்கற்ப முதிக்கும்போதும் அதற்கு முன்னும் பின்னும் தானுமில்லாது மற்றொன்றுக்கு மிருக்குந் தன்மை கொடாத அசத்தென்பார், "பொத்" தெனவும், தானும் விளங்காமல் மற்றொன்றையும் விளக்கி வையாமல் இருக்கின்ற கடாதிகளைப்போல, பஞ்சகோசங்கள் ஆத்மாவை யறியாமல், இவ்வாத்மாவினால் அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயம் என்று அறியப்படு கின்ற மூடமென்பார், "சடமெனவும், விஷமானது தானும் துக்கமா யிருந்துகொண்டு தன்னைக் கிட்டினவைகளுக்கும் துக் கத்தைக் கொடுக்கின்றதுபோல, இப்பஞ்சகோசங்கள் தானும் ஆதிவியாதியாகிற துக்க ரூபமா யிருந்துகொண்டு தன்னை அடுத்திருக்கின்றவைகளுக்கும் துன்பஞ் செய்யு மிடரென் பார், "துக்க" மெனவும், சாதுர் பூதங்களும் ஒன்றுக்கொன்று ஏற்றத் தாழ்ச்சியா யிருப்பது போல பஞ்சகோசங்க ளொன் றுக்கொன்று உயர்வு தாழ்வையுடைய விசமமும், கானல் சலமானது முன்பின் இல்லாமல் இடையிலும் பொய்யாய்த் தோன்றுவது போல, இப்பஞ்ச கோசங்கள் முன்பின் இன்றி மத்தியில் பொய்யாய்த் தோற்றும் அஸ்திரமும், சண்டைக் காரர் ஒருவருக்கொருவர் விவாதம் செய்து அவ்வாகாரமாய் அழுந்திப்போவது போல, பஞ்சகோசங்கள் ஒன்றின் தர் மத்தை ஒன்றின்மேலேற்றி அழுந்துகின்ற சாட்சியமும், கடகலசாதி பலவாயிருத்தல் போல, இப் பஞ்சகோசங்கள் பலவாயிருத்தலால் அநேகமும், மண்ணில் கடகலசாதி தோன்றி அழிதல்போல, ஆத்மாவினிடத்தில் தோற்றியழி யும் பஞ்சகோசங்கள் அநித்தியமும், சாதுர் பூதமும் ஆகாயத்

திலுல் வியாபிக்கப்பட்டிருப்பது போல இந்த பஞ்சகோசங்கள் ஆத்மாவினுல் வியாபிக்கப்பட்டிருப்பதால் வியாப்பியமும் என்பார் "பொத்தொடு ... ஆதி" எனவும், அனுத்மாவாக இருந்தும் ஆத்மாப்போலத் தோற்றுகின்ற பொய்யான அன்னமயமாதி கோசங்களென்பார் "குத்திர பஞ்சகோச" மெனவும், ஆத்மா வசிக்கும் தானமாதலால் "குகை" யென வுங் கூறினுர்.

(தா – ம்) சத்தாதி இலக்கணமுடைய ஆத்மாதானென் றறிந்து அசத்தாதி யிலக்கணமுடைய பஞ்சகோசத்துக்கு விலட்சணனுவாய் என்பதாம.

(அ – கை) ஆசாரிய ருபதேசித்தபடி அநுஷ்டித்த தற்குமேல் அச்சிடன் வினுதலைக் கூறல்.

பஞ்சகோசமும் விட்டப்பாற் பார்க்கின்ற பொழுதுபாழே
விஞ்சியத துவல்லாமல் வேறென்றும் தெரியக்காணேன்
அஞ்சன விருளோ நானகமென வநுபவிப்பேன்
வஞ்சமில் குருவேயென்ற மகன் மதிதெளியச் சொல்வார். 70

(இ – ள்) பஞ்சகோசமும் – அன்னமயமாதி ஐந்து கோசங்களையும், விட்டு – நியதிகளைந்து, அப்பால் பார்க்கின்ற பொழுது – மேல் நோக்குமிடத்து, பாழே விஞ்சியது – சூனியமே சேடித்தது, அதுவல்லாமல் – அச் சூனியத்தை யன்றி, வேறென்றும் – மற்றொரு பொருளும், தெரியக் காணேன் – தோன்றக் கண்டிலேன், ஆகலின், அஞ்சன விருளையோ – கரிய அந்தகாரம் போலும் சூனியத்தையோ, நான் – யான், அகமென – அகம் பதத்துக்கு அர்த்தமாக, அநுப விப்பேன் – அநுபவியா நிற்பேன், வஞ்சமில் குருவே – கபட மில்லாத ஆசாரியரே, என்ற மகன்மதி – என்று கேட்ட சீட னுடைய புத்தியானது, தெளியச் சொல்வார் – தெளிவடை யும்படி கூறுவார்.

(ப – ம்) நியதிகளைந்த தானிருக்க நியதி களையப்பட்ட பஞ்சகோசங்களைப்போல நாமரூபம் தோற்றுமையைக் குறித் துச் சூனியத்தையா? நானென்கின்ற பதத்துக்கு அர்த்தமா யநுபவிப்பேனென்று னென்பார். "அஞ்சன ... அநுபவிப் பேன்" எனவும், ஆத்ம சொரூபத்தை மறைத்து அனுத்ம

சொரூபத்தைத் தோற்றுவிக்கின்ற அஞ்ஞானத்தைக் கெடுத்திருக்கும் ஆசாரியரே யென்றுனென்பார், "வஞ்சமில் குருவே" யெனவுங் கூறினார்.

(வி – ம்) அஞ்சன விருளென்றது அவித்தையெனக் கொள்க.

(தா – ம்) பஞ்ச கோசங்களையும் நீக்கிய விடத்துத் தோற்றிய அவித்தையா வந்தகாரத்தைப் பார்த்து அஃது தானாகுமோ வெனக் கலங்கி வினவினனென்பதாம்.

(அ – கை) ஆசாரியர் திட்டாந்த மூலமாய்ச் சீடன் தெளியும்படி கூறல்.

முன்புகறசமன் புத்திமோகத்தா லெண்ணியெண்ணி
ஒன்பது பேரைக்கண்ட வொருவனுந் தனைக்காணாத
பின்பவ னிடையிற்கண்ட பெரியபாழவனே பாராய்
அன்புள மகனேகாண்ப தடங்கலுங் காண்பானீயே. 71

(இ – ள்) முன்புகல் தசமன் – முன் சொல்லிய தசமனானவன், புத்தி மோகத்தால் – புத்தியின் கண்ணுள்ள அஞ்ஞானத்தினால், எண்ணியெண்ணி – அடிக்கடி எண்ணி, ஒன்பது பேரைக்கண்ட – நவ புருடரை எண்ணிப் பார்த்த, ஒருவனும் தனைக்காணாத பின்பு – பத்தாமவனான தன்னைப் பத்தாமவனாகப் பாராதவிடத்து, அவனிடையில் கண்ட – அவனிடத்து அவனால் பார்க்கப்பட்ட, பெரிய பாழ் – பெருஞ் சூனியம், அவனே – அவனாவன், பாராய் – இதனை யூகித்துப்பார், அன்புள மகனே – இச்சையும் சிரத்தையுமுடைய சீடனே காண்பதடங்கலும் – உன்னால் காணப்பட்ட தூல முதலிய ஒன்பதையும் அவைகள் நீங்கிய விடத்துத் தோற்றிய சூனியத்தையும், காண்பான் நீயே – அறிகின்றவனே நீ.

(ப – ம்) மோட்சத்தில் இச்சையும் குருவினிடத்தில் சிரத்தையும் மாறாதுள்ளவ னென்பார் "அன்புள மகனே" யெனவும், தூல முதலிய ஒன்பதையும் அவைகள் நீங்கிய விடத்துத் தோற்றிய சூனியத்தையும் அறிகின்றவனே நீ என்பார், "காண்பதடங்கலும் காண்பான் நீயே" யெனவுங் கூறினார்.

(தா – ம்) அவித்தையை நீக்கிச் சுத்த சைதன்யமான தன்னைத் தரிசிப்பிக்கும் பொருட்டு அவ் விருளாகிய அறியாமை நீயன்று அதனையும் அதன் காரியத்தையும் கண்டசித்தே நீ யென்றறிவித்ததாம்.

(அ – கை) இப்போது சுவாமி தெரிவிக்க இப்பஞ்சகோச சூனியத்தை யறிந்ததே தவிர வேறே யாதை யறிந்தே னெனில்? கூறுகின்றார்.

தூலசூக்கும வஞ்ஞானந் தோன்றுமூன்ற வத்தைதாமும்
காலமோர் மூன்றுஞ்சன்மக் கடலெழுங் கல்லோலங்கள்
போலவே வந்துவந்து போனவெத்தனை யென்பேனுன்
ஆலமர் கடவுளாணை யவைக்கெலாஞ் சாட்சிநீயே. 72

(இ – ள்) தூல சூக்கும வஞ்ஞானம் – தூல தேகம் சூட்சும தேகம் காரண தேகமென மூவகைத் தேகங்களும், தோன்று மூன்றவத்தைதாமும் – அந்தத் தேகங்களைப் பற்றித் தோன்றா நிற்கும் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தியென்னும் மூவகை அவத்தைகளும், காலமோர் மூன்றும் – பூத பவிஷ்ய வர்த்தமானமென்னும் மூன்று காலங்களும், சன்மக் கடல் – சனனமாகிய சமுத்திரத்தின் கண்ணே, எழுங் கல்லோலங்கள் போலவே – எழுந்தழியும் அலைகளைப் போலவே வந்து வந்து போன – உண்டாகி யுண்டாகி யழிந்தனவற்றை நானெத்தனை என்பேன் – நானெவ்வளவென்று வரையறுத்துக் கூறுவேன், ஆலமர் கடவுளாணை – கல்லாலின் நிழலின் கண் ணெழுந்தருளிய சகலருக்கும் ஆதி குருவாகிய தட்சணாமூர்த்தியின்மீது சத்தியம், அவைக்கெலாம் சாட்சி நீயே – அவைகளனைத்திற்கும் நீயே சாட்சி.

(ப – ம்) கடலினிடத் தலையாதி தோற்றி யொடுங்குவதே யன்றி கடலலைகளிற் றோற்றி யொடுங்குவதில்லை யென்பார், "தூல ... எத்தனை" யென்பேனெனவும், தேகாதியை யறியும் சாட்சி நீயென்னும் குருவுபதேசத்தால் அதை நம்பி ஆத்மாவை யறிந்து கொள்பவனுக்கு, ஆணையிடத் தேவையில்லை அங்ஙனம் அறிந்துகொள்ளாதவனுக்கு, ஆத்மாமை யுரைத்தலால் பயனின்மை போல, ஆணையிடுவதால் பயனின்றெனில், நித்திரை செய்பவன் கூப்பிடுதலால் விழிக்காவிடில், விழிக்கும் பொருட்டு வலுவாய்க் கூப்பிடல் போலச், சீடன்

அஞ்ஞான நித்திரையில் இருப்பதால் அவனுத்ம சொரூபத்தை நன்கு யறிந்துகொள்ளும்பொருட்டு, ஆசாரிய ருபதேசித்ததுமன்றிச், சகலருக்கும் ஆதிகுருவாகிய தட்சணமூர்த்தி மீது சத்தியம் செய்தா ரென்பார் "ஆலமர் ... சாட்சி நீயே" யெனவுங் கூறினர்.

(தா – ம்) சென்மங்கடோறும் அனந்த தேகாதி தோன்றி நசித்ததை நசியாது கண்டுகொண் டிருக்கும் சாட்சி நீயென, ஆசாரியர் தமக்கு ஆதி குருவான தட்சிணமூர்த்தியின் மீது பிரதிக்ஞை வைத் தறிவித்தார்.

(அ – கை) எல்லா மறிந்த தன்னை யாதினு லறிதலெனும் வினவிற் குத்தரம்.

எல்லாங்கண் டறியுமென்னை யேதுகொண் டறிவேனென்று
சொல்லாதேசுயமாஞ்சோதிச்சுடருக்குச்சுடர்வேறுண்டோ
பல்லார்முன் றசமன் றன்னைப் பார்ப்பதுந்தனைக்கொண்டே
தான், அல்லாமற்பதினொன்றுனுமவனிடத்துண்டோபாராய்

(இ – ள்) எல்லாங்கண் டறியு மென்னை – சூனியமுதலிய அனைத்தையும் சாட்சியா யறியு மென்னை, ஏது கொண் டறிவே னென்று – வேறே யாது பிரகாசத்தைச் சாதனமாகக் கொண்டு அறிவே னென்று, சொல்லாதே – கூறற்க, சுயமாம் சோதிச் சுட்ருக்கு – சுயம்பிரகாச வறிவுக்கு, சுடர் வேறுண்டோ – வேறு பிரகாச மேது, பல்லார் முன் – ஒன்பது புருடர் முன்னே, தசமன் – பத்தாமவன், தன்னைப் பார்ப்பதும் – தன்னைப் பத்தாமவனென் றறிவதும், தனைக் கொண்டே தானல்லாமல் – தன்னுலேயே யன்றி, பதினொன் ருனும் – தனக் கன்னியமாகப் பதினொன்ருமவனும், அவனிடத் துண்டோ பாராய் – அந்த பத்தாமவனிடத் துண்டோ நீ யூகித்துப் பார்ப்பாய்.

(ப – ம்) சுழுத்தி சொப்பன மனோ ராச்சியத்தில், சூரியாதிப் பிரகாசங்க ளின்றி யிருக்கவும், விளக்குகின்ற சைதன்யமே, சாக்கிரத்திலும் விளக்குகின்றதனுல், சுயம் பிரகாச மென்பார், "சுயம் சோதி" யெனவும், ஒன்பது பேரை யறிந்த புருடனே பத்தாமவன் ஆனதே நவிர பதினொன்ரு மவன் பத்தாமவ னுகாதது போல, தூலாதி யொன்பதை

யறிந்த வறிவே, கூட்த்தராகின்றதே தவிர வேறொன்று கூட்த்தராகின்ற தன்று என்பார், "அல்லாமல்...பாராய்" எனவுங் கூறினர்.

(தா – ம்) சடமான வனைத்தையும் காணச் சித்து தேவை யானலும், சித்து ரூபமான தன்னை யறிய ஓர் சித்து தேவை யில்லாதபடியினலும், தன்னைத் தானே யறியவேண்டு மென்பதாம்.

(அ – கை) அறிவுக்கு மறிவு கொடுக்கும் வேறே யறி வுண்டோ வெனில் வரும் தோஷமும் எப்படி அறிவதெனில் விடையுங் கூறுகின்றார்.

அறிவுக்கு மறிவு செய்யு மறிவுவே றுண்டென் றெண்ணும்
அறிவற்ற குதர்க்க மூடர்க் கனவஸ்தை பலமாய்த் தீரும்
அறிபடும் பொருணீ யல்லை யறிபடாப் பொருணீ யல்லை
அறிபொரு ளாகு முன்னை யநுபவித் தறிவாய் நீயே. 74.

(இ – ள்) அறிவுக்கு மறிவு செய்யும் – கடாதி பிரபஞ் சத்தை யறியு மறிவுக்கும் அறிவு கொடுக்கிற, அறிவு வேறுண் டென் றெண்ணும் – வேறறிவு இருக்குமெனக் கருதா நிற்கும், அறிவற்ற குதர்க்க மூடர்க்கு – ஆத்மா சொப் பிரகாச மென்னும் ஞானமில்லாத குதர்க்கமுடைய அதமர்களுக்கு, அநவஸ்தை பலமாய்த் தீரும் – அநவஸ்தா தோஷமே பிரயோஜனமாக முடியும், அறிபடும் பொருணீயல்லை – கோர மூட மனதுக்கும் அவாந்தர வாக்கியத்துக்கும் எட்டாததினால், கோசரிக்கும் பொருளும் நீயாக மாட்டாய், அறிபடாப் பொருணீயல்லை – சத்துவ மனதிற்கும் மகா வாக்கியத்திற்கு மெட்டுவதால், கோசரிக்கக் கூடாத வஸ்துவும் நீயாக மாட் டாய், அறிபொருளாகு முன்னை – சூனியாதி பஞ்ச கோசங்களை வேறு பிரகாச வபேட்சையின்றி அறியாநின்ற சொப்பிரகாச வஸ்துவாகிய உன்னை, நீயே அநுபவித் தறிவாய் – சத்துவ விருத்தியோடு கூடி நின்று, சுவாநுபவத்தில் சாட்சாத் கரிப்பாய்.

(ப – ம்) உத்தம பக்குவர்களுக்காக உபநிடதங்களில் அத்துவிதமாய்ப் பூரணமா யிருக்கின்ற அறிவே, சடமான சகல பிரபஞ்சங்களையும் விளக்கிவைத் தறிகின்றதென்று

சொல்லா நின்ற சித்தாந்தத்தைக் கைவிட்டு, பிரபஞ்சத்தை யறியும் அறிவுக்கு அறிவு மொடுக்கிற வேறு அறிவு இருக்கு மெனவும், மேலும் வேறு அதற்கறிவு கொடுக்கிற அறிவு இருக்குமெனக் கருதும் அதமர்களுக்குச் சுருதிக்கு அநுகூல மில்லாத குதர்க்கத்தினல் சித்தம் அமைவு பிறவாமையாகிய, ஓயாத அநவஸ்தா தோஷமே பிரயோஜன மென்பார். "அறிவுக்கு...திரு" மெனவும், கோர மூட மனதுக்கும் அவாந்தர வாக்கியத்துக்கு மெட்டா தென்பார், "அறிபடும் பொருள் நீயல்லை" யெனவும், சத்துவ மனதுக்கும் மகா வாக்கியத்துக்கும் எட்டு மென்பார், "அறிபட்டாப் பொருள் நீ யல்லை" எனவுங் கூறினர்.

(வி — ரை) அதற்கறிவு கொடுக்கும் அறிவு என்று வருவதனல் அனவத்தை எனக் கொள்க.

(தா — ம்) கூடத்தராகிய சித்தே தானென்றும் தனக்கு வேருக வேறறிவின் றென்றும் தன்னைச் சுவாநுபவத்தால் அறியவேண்டுமென் றறிவித்ததாம்.

(அ — கை) ஆத்மாவாகிற தான் ஞான சொரூபமென்பதெங்ஙன மெனின்,

மதுரமாங் கட்டி சுட்ட மாப்பணி யார மெல்லாம்
மதுரமாக் கியவ தற்கு மதுரந்தான் சுபாவ மன்ருே
அதுவிது வெனுஞ் சடங்க ளறிவாக வறிவைத் தந்தே
அதுவிது விரண்டுமாகா வகம்பொரு ளறிவாய்நீயே.75.

(இ — ள்) மதுரமாம் கட்டி — மதுர சுபாவமாகிய வெல்லக் கட்டி சேர்த்து, சுட்ட — சுடப்பட்ட, மாப் பணியாரமெல்லாம் — மாவின் பலகாரங்களை யெல்லாம், மதுரமாக்கிய வதற்கு — தன் குணமான மதுரத்தை யுடையனவாகப் பண்ணின வெல்லத்திற்கு, மதுரந்தான் சுபாவமன்ருே — மதுரமானது சுபாவமல்லவா, (அதுபோல,) அது விதுவெனுஞ் சடங்கள் — தேகேந்திரியாதிகள், அறிவாக — அறிவை யுடையனவாக, அறிவைத் தந்து — ஞானத்தைக் கொடுத்து, அது விது விரண்டு மாகா — தேகேந்திரியாதிகளின் விகாரத்தை யடையாத பிரத்தியகாத்மாவே, அகம் பொருள் — அகம் பதத்துக் கர்த்தமாக, நீயே அறிவாய் — நீயே சாட்சாத்கரிப்பாய்.

(ப — ம்) தேகேந்திரியாதிகளுக்கு அறிவு கொடுத்து, அவைகளின் விகாரத்தை யடையாது, நிருவிகாரியாய் நிருபாதியாய் நிருமலமாய்ச் சைதன்யமே சுபாவமான, பிரத்தியகாத்மாவே அகம் பதத்துக் கர்த்தமென்பார், "அது விது ... அகம்பொரு" ளென்றார்.

(தா — ம்) அநாத்மாவான தேகேந்திரியாதிகளை விளக்கி வைக்கின்றபடியால், ஆத்மா, ஞான சொரூபமே எனவும், அவ் வாத்மாவே அகம் பதார்த்தமெனவும் அறிவித்ததாம்.

(அ — கை) ஆரோபமான வாச்சியார்த்தங் களுக்கு ஐக்கியமின்றெனக் கூறல்.

இந்தநீ துவம் பதத்தி னிலட்சியப் பொருளா மென்றும்
பந்தமில் பிரம மேத்த பதந்தனி லிலட்சியார்த்தம்
அந்தமாஞ் சீவ னீச னவர்களே வாச்சி யார்த்தம்
சந்ததம் பேத மாவார் தமக்கயிக் கியங்கூ டாதே. 76.

(இ — ள்) இந்தநீ — இவ்வித ஞானமே சுபாவ சொரூபமாக உள்ள நீ, துவம்பதத்தி னிலட்சியப் பொருளாம் — துவம் என்ற பதத்துக் கிலட்சியார்த்தமாம், என்றும் பந்தமில் பிரமமே — எப்போதும் பந்தமில்லாம லிருக்கின்ற பிரமமே, தற்பதந்தனி லிலட்சியார்த்தம் — தத் என்னும் பதத்திற்கு இலட்சியார்த்தமாம், அந்தமாஞ் சீவனீச னவர்களே— தள்ளப் படுவதாகிய சீவேசுரர்களே, வாச்சியார்த்தம் — முறையே அப் பதங்க ளிரண்டிற்கும் வாச்சியார்த்தங்களாம், சந்ததம் — எப்போதும், பேதமாவார் தமக்கு — பேதமுடையரா யிருக்கும் சீவேசுரர்களுக்கு, அயிக்கியங் கூடாது—அபேதம் சித்தியாது.

(ப — ம்) சரீரத் திரய விலட்சணராய், அவத்தாத் திரய சாட்சியாய் பஞ்ச கோச வெதிரித்தராய், சச்சிதானந்தமாய், நானென்னும் சொல்லுக் கர்த்தமாயிருக்கின்ற பிரத்தியகாத்மாவே, நீயென்னும் பதத்தி னிலட்சியார்த்த மென்பார், "இந்த நீ...பொருளா" மெனவும், விராட்டாதி விலட்சணராய் பெரிதுக் கெல்லாம் பெரிதாய் சருவ சாட்சியா யிருக்கின்ற சொரூபமே, அதுவென்னும் பதத்தி னிலட்சியார்த்த மென்பார், "என்றும் ... இலட்சியார்த்தம்" எனவும், தூல தேக முதலிய ஒன்பதும் விராட்டாதி ஒன்பதும் தானு யிருந்து

தள்ளப்படுவதாகிய சீவேசுரர்களே நீ யதுவென்னும் பதங்களின் வாச்சியார்த்தமென்பார், "அந்தமாம்...வாச்சியார்த்த" மெனவும், அபேதமாகிய கூடஸ்த பிரமத்துக்கு ஐக்கியமே தவிர எப்போதும் பேதமாகிய சீவேசுவரர்களுக்கு ஐக்கியமில்லை யென்பார், "சந்ததம்...கூடா" தெனவுங் கூறினார்.

(தா – ம்) மகா வாக்கியத்தி னிலட்சியார்த்தமான கூடஸ்த பிரமம், அபேத மாதலின் அவர்கட் கயிக்கியங் கூடுமென்பதாம்.

(அ – கை) சீவேசுவர பேதத்தைக் கூறவில்லையே யெனில்? கூறுகின்றார்.

பேதமா னதுவுங் கேளாய் பெயராலு மிடங்க ளாலும்
ஓதரு முபாதி யாலு முடலாலு முணர்வி னாலும்
பாதலம் விசும்பு போலப் பலதூர மகன்று நிற்பர்
ஆதலாலிவர்க்கெந்நாளு மைக்கியமென்பதுகூடாதே. 77

(இ – ள்) பேதமானதும் கேளாய் – சீவேசுவரர்க்குப் பேதமுண்டா யிருப்பதையுங் கேள், பெயராலும் – (சீவேசுவரரென்னும்) நாமங்களானும், இடங்களாலும் – (பிண்டாண்டமென்னும்) ஸ்தானங்களாலும், ஓதரு முபாதியாலும் – (ஒன்பது விதங்களாலும் நிச்சயித்துச் சொல்லக்கூடாத) அவித்தை மாயை என்னு முபாதிகளாலும்), உடலாலும் – (வியஷ்டி சமஷ்டி) சரீராபிமானங்களாலும், உணர்வினாலும் – கிஞ்சிஞ்ஞ சர்வஞ்ஞங்களாலும், பாதலம் விசும்பு போல – பாதாளமும் விண்ணுலகமும் போல, பலதூர மகன்று நிற்பர் – வெகுதூரம் வேறுபட்டு நிற்பர், ஆதலால் – ஆனபடியால், இவர்க்கெந்நாளும் – இச் சீவேசுரர்க் கெப்போதும், ஐக்கிய மென்பது கூடாது – அபேதம் சித்தியாது.

(ப – ம்) ஒன்பது விதத்தினாலும் நிச்சயித்துச் சொல்லக் கூடாத அவித்தை மாயை யென்பார் "ஓதரு முபாதி" யென்றுங் கூறினார்.

(தா – ம்) வாச்சியார்த்த சீவேசுரர்களுக்கு நாமமதியால் பேதமிருக்கின்றமையால் அபேதம் கூடாதென்பதாம்.

(அ-கை) கூட்டத்த பிரமத்துக் கிலக்கணையினு லயிக்கியஞ் செய்யும் பொருட்டு இச் செய்யுளில் சாஸ்திரங்களில் கூறுகின்ற மூவித விலக்கணையைக் கூறுகின்றார்.

வடநூல்வல்லவர்கள்சொல்லும் வாசகப்பொருள்சேராமல்
இடராகிற்பொருளாம்வண்ண மிலக்கணையுரையாற்கொள்
வார், திடமான வதுவுமூன்றுச் செப்புவார் விட்டதென்றும்
விடவிலா தென்றும்விட்டு விடாததென் றும்பேராமே. 78

(இ-ள்) வடநூல் வல்லவர்கள் - சமஸ்கிருத சாஸ்திரங்களில் நிபுணர்களான பண்டிதர்கள், சொல்லும் - சுருதிஸ்மிருதிகளில் கூறுகிற்கும், வாசகப் பொருள் - வாக்கியார்த்தங்கள், சேராமல் - பொருந்தாமல், இடராகில் - விரோதமானல், பொருளாம் வண்ணம் - விரோத மில்லாது அர்த்தமாகும்படி, இலக்கணை உரையாற் கொள்வார் - இலட்சணை வாக்கியத்தால் கொள்ளா நிற்பர், திடமான அதுவும் - திடமாகிய அந்த இலட்சணையும், மூன்றுச் செப்புவார் - மூவிதமாகச் சொல்லா நிற்பர், அவையும் - விட்டதென்றும் - ஜகல் லட்சணை யென்றும், விடவிலா தென்றும் - அஜகல் லட்சணை யென்றும், விட்டுவிடா தென்றும் - ஜகத்ஜகல் லட்சணை யென்றும் கூருகின்ற, பெயராம் - நாமங்களை யுடையனவாம்.

(ப-ம்) அருத்தம் பொருந்தாததைப் பொருந்தச் செய்தலால் திடமான வென்றார்.

(தா-ம்) அருத்தமாகாத பதங்களை மூன்றிலக்கணையால் அருத்தம் பண்ணிக் கொள்ளப்படு மென்பதும் அவைகளின் நாமமுங் கூறினதாம்.

(அ-கை) அவற்றிற் குதாரணங் கூறல்.

கங்கையிற் கோஷமென்றுங் கறுப்புச்சேப் போடுதென்றும்
தங்கிய சோயந்தேவ தத்தனென் றுஞ் சொல்வார்கள்
இங்குதா ரணங்களாக்கி யிந்தமூன் றுரைகளாலே
துங்கநூல் விரோதமான சொல்லெலாம் பொருளாந்தானே

(இ-ள்) கங்கையில் - பாகீரதியில், கோஷமென்றும் - கிராம மிருக்கிறதென்றும், கறுப்புத் தங்கிய சேப்போடு

தென்றும் — கறுப்பு நிற்க சிவப்பு ஓடுகின்றதென்றும், சோயந் தேவதத்த னென்றும் — அந்த இத் தேவதத்தனென்றும், இங்கு—அருத்தமாகாத விடத்தில், உதாரணங்களாக்கி— இம் மூன்றையும் உதாரணங்களாக வைத்து, சொல்வார்கள்— வட நூல் வல்லவர்கள் கூறுவார்கள், இந்த மூன்றுரைகளாலே — இம் மூவகை இலட்சண வாக்கியங்களாலே, துங்க நூல் — பெருமை பொருந்திய சாஸ்திரங்களில். விரோதமான சொல்லெலாம் — வி ரோ த மு டை ய வாக்கியங்களெல்லாம், தானே பொருளாம் — தானே அர்த்தமாகும்.

(ப — ம்) எந்தப் பதம் தன் வாச்சியார்த்த முழுவதும் விட்டு வாச்சியார்த்த சம்பந்தியை யுணர்த்துகிறதோ அது விட்ட லட்சணையானதால், கங்கையில் கோஷ மென்னும், வாக்கியத்திற்கு பாகீரதியின் பிரவாகத்தில் கிராம மிருக்கிறதென்பது வாச்சியார்த்தம், இது கூடாதாதலால் கங்கையென்னும் பதத்துக் கருத்தமாகிய பாகீரதியின் பிரவாகமென்னும் வாச்சியார்த்த முழுவதும் விட்டு, வாச்சியார்த்த சம்பந்தியாகிய தீரத்தை யுணர்த்துதலால், விட்ட லட்சணைக் குதாரணமாகக் கூறப்பட்டதென்பார், "கங்கையில் கோஷ" மெனவும், எந்தப்பதம் தன் வாச்சியார்த்தத்தோடு கூட வாச்சியார்த்தத்த சம்பந்தியை யுணர்த்துகிறதோ அது விடாத லட்சணையாதலால் கறுப்புத் தங்கிய சேப்போடு தென்னும் வாக்கியதிற்கு கறுநிறம் தங்கியிருக்கிற தென்றும், செம்மை நிறம் ஓடுகின்ற தென்றும் வாச்சியார்த்தம், இது தகாதாதலால், கறுப்பு செம்மைஎன்னும் பதார்த்தங்களாகிய கறுநிறம் செந்நிறம் என்னும் வாச்சியார்த்தங்களோடு கூட, வாச்சியார்த்த சம்பந்திகளான பசுவையும் குதிரையு முணர்த்துதலால், விடாத லட்சணைக் குதாரணமாகக் கூறப்பட்டதென்பார், "கறுப்புச் சேப்பு ஓடு" தென்றும், எந்தப் பதம் தன் வாச்சியார்த்தத்தில் ஓர் பாகத்தை விட்டு, ஓர் பாகத்தைக் கிரகிக்கிறதோ அது விட்டுவிடாத லட்சணையாதலால், சோயம் தேவதத்தனென்னும் வாக்கியத்திற்கு, அதீத காலத்தோடும் அன்னிய தேசத்தோடுங் கூடின தேவதத்தனே, வர்த்தமான காலம் சமீப தேசத்தோடும் கூடின தேவதத்தனு மென்னும் வாச்சியார்த்தமானது பொருத்தமாகா தாதலால், சோயம் தேவதத்தன் என்னும் பதார்த்தங்களில் ஓர்பாகமாகிய அதீத காலம் அன்னிய தேசம் வர்த்தமான காலஞ் சமீப தேசமென்

னும் வாச்சியத்தை விட்டு, மற்றோர் பர்கமாகிய தேவதத்த னுடைய தேக மாத்திரம் என்னும் வாச்சியத்தை, இரண்டு பதங்களும் உணர்த்துதலால் விட்டு விடாத லட்சணைக் குதாரணமாகக் கூறப்பட்ட தென்பார், "சோயம் ... ஆக்கி', யெனவும், இவ் விலக்கணு வாக்கியப்படி பொருள் கோடலே நூல்களனைத்தினுமுள்ள விரோதமாகத் தோன்றும் வாக்கியங்கட்குப் பொருத்தமாகப் பொருள் கோடல் என்பார், "இந்த மூன்று...பொருளா" மென்றார்.

(தா் – ம்) மூவித இலக்கணையின் திட்டாந்தங்களுக்கு அருத்தங் கொள்ளுகிறபடி, எந்த நூல்களினும் அருத்த மாகர்த பதங்களுக் குரை கொள்ளினும், அப் பதங்களுக் கருத்தமாகு மென்பதாம்.

(அ – கை) மூவித விலக்கணையில் இவ்விடத்திற் றேவை யான விட்டுவிடாத விலக்கணையின் திட்டாந்தத்துக்கு அர்த்தங் கொள்ளுகின்றதைக் கூறல்.

பன்னிய சோய மென்னும் பதங்களின் வாச்சியார்த்தம்
அன்னிய தேசங்கால மவனிவ னென்ப வெல்லாம்
சொன்னவிவ் விரோதம்விட்டுத் தொடரிலக் கியம்விடாமல்
உன்னிடிற்றேவதத்த னொருவனை வெளியாக்காட்டும். 80

(இ – ள்) பன்னிய – முன் கூறிய, சோ அயமென்னும் பதங்களின் – அவனிவ னென்னும் பதங்களினுடைய, வாச்சி யார்த்தம் – வாச்சியார்த்தமாவன, அன்னிய தேசங் காலம் – தூரதேசம் சமீப தேசம் அதீத காலம் வர்த்தமான காலம், அவன் இவன் – அந்த தேவதத்தன் இந்த தேவதத்தன், என்பவெல்லாம் – என்று கூறப்பட்ட வனைத்துமாகும், சொன்னவிவ் விரோதம் விட்டு – சொல்லிய விரோத தர்மங்க ளான வாச்சியார்த்தத்தை விட்டு, தொடரிலக்கியம் விடாமல் – அவைகளை யநுசரித்திரா நின்ற இலட்சியார்த்த மென்னும் தேக மாத்திரத்தை விடாமல், உன்னிடில் – ஆலோசிக்கில், தேவதத்த னொருவனை – தேவதத்தனாகிய வோர் புருடனையே, வெளியாக் காட்டும் – விரோத மில்லாமல் பிரத்தியட்சமாகக் காட்டா நிற்கும்.

(ப — ம்) அவிசாரத்திஞல் வேருய்த் தோற்றினும், விசாரத்தில் ஏகமாய்த் தோற்றுமென்பார், "உன்னிடில் ... காட்டு" மென்பார் எனவுங் கூறிஞர்.

(தா — ம்) இத் திட்டாந்தத்திற் கூறிய புருடன் ஒருவ ஞகுமெனத் தெரிவித்ததாம்.

(அ — கை) இத் திட்டாந்தப்படி மகா வாக்கியத்திற் கருத்தங் கொள்ளுகின்றதைக் கூறல்.

*தத்துவ மெனும் பதங்கள் பிரமமாய்ச் சாட்சியான*
*வத்துவை விடாமற் பேத வாச்சியார்த் தத்தை விட்டு*
*நித்தமு மதுநீ யாகு நீயது வாகு மென்னும்*
*அர்த்தமுமகண்டமென்றேயசிபதவைக்கியங்காட்டும் 81*

(இ — ள்) தத்துவ மெனும் பதங்கள் — சாம வேதத்தின் முடிவில் விளங்கிய மகா வாக்கியமானது அது நீ யென்னும் பதங்களின், பிரமமாய்ச் சாட்சியான — பிரமமாயும் சாட்சியாயு முள்ள, வஸ்துவை விடாமல் — லட்சியார்த்த வஸ்துவை விடாமல், பேத வாச்சியார்த்தத்தை விட்டு — பேத தர்மங்களை யுடைய வாச்சிய பாகங்களை விட்டு, நித்தமும — எந்தக் கால மும், அது நீ யாகும் — பிரமமே நீயாம், நீயது வாகும் — நீயே பிரமமாம், என்னும் அசிபத அர்த்தமும் — என்று கூறும் அசிபதப் பொருளும், அகண்டமென்றே — ஏகமென்று, ஐக்கியங் காட்டும் — ஐக்கியத்தைப் போதிக்கும்.

(ப — ம்) மாயை, மாயையில் பிரதி பிம்பித்த ஆபாசம், மாயைக் கதிஷ்டான சேதனம், இம் மூன்றுங் கூடி ஈஸ்வர ஞனதிஞலும், ஈஸ்வரனுக்குள்ள சர்வ சத்தி முதலிய தர்மங் கள் மாயா காரியமானதிஞலும், இவ் வீசுவரனையே தத்பதத் திற்கு வாச்சியார்த்தமாயும், வியட்டி அவித்தை, அதில் பிரதி பிம்பித்த ஆபாசம், அதினதிஷ்டான சேதனம், இம் மூன்றுங் கூடிய சீவஞனதிஞலும், சீவனுக்குள்ள அற்ப சத்தி முதலிய தர்மங்கள் அவித்யா காரியமானதிஞலும், இச் சீவனையே துவம்பதத்திற்கு வாச்சியார்த்தமாயுங் கூறி, இவ் விருவருக் கும் ஏகத்துவங் கூடாதாதலால், ஆபாச சகித மாயை, மாயா காரிய சர்வஞ்ஞத்துவாதி தர்மம், ஆகிய இவ்வளவு தத்பத வாச்சிய பாகங்களை விடுத்துச், சேதன பாக மாத்திரத்திலும்,

அப்படியே ஆபாச சகித அவித்தை, அவித்தையால் பண்ணப்பட்ட அற்பஞ்ஞத்துவாதித் தர்மம், ஆகிய இவ்வளவு துவம்பத வாச்சிய பாகங்களை விடுத்து, சேதன பாக மாத்திரத்திலும், விட்டுவிடாத லட்சணையால் சிரவணாதி ஆரம்பத்துக்கு முன்னுஞ் சிரவணாதி முடிந்த பின்னும் தான் ஏகம் என சாம வேதத்திலுள்ள சாந்தோக்கிய உபநிடதத்தில் விளங்கிய தத்துவ மசி மகா வாக்கியம் தெரிவிக்கின்றதென்பார், "தத்துவமெனும் ... ஐக்கியங் காட்டு" மென்றார்.

(தா – ம்) ஆசாரியார் தானுபதேசித்தபடி ஆரண நிச்சயமிருப்பது தோன்ற, அதின் முடிவான மகா வாக்கியத்தினிலக்கியார்த்தமான கூடஸ்த பிரமத்தின் ஒருமையை உணர்த்தியதாம். மேலும் அது நீயாகும் நீயது வாகுமென்று ஓதப் புரோத பாவமாக வபேதஞ் சொன்னது, முறையே பரோட்சப் பிராந்தியும் பரிச்சின்னப் பிராந்தியும் நிவர்த்தியாகும் பொருட்டுக் கூறியதாம்.

(அ – கை) அத்துவித சொரூபத்தை அநுபவத்திலும் அறியும்படி கூறுதல்.

கடநீரின் மேக நீரிற் கண்டவா னிரண்டும் பொய்யே
குடவானும் பெரிய வானுங் கூடியொன் றுமெப்போதும்
இடமான பிரமஞ்சாட்சி யிரண்டுமெப் போது மேகம்
திடமாகச் சுவாநு பூதி சிவோகமென் றிருந்தி டாயே.82

(இ – ள்) கடநீரில் – கட ஜலத்திலும், மேக நீரில் – மேக ஜலத்திலும், கண்ட பிரதிபலித்துள்ள, வானிரண்டும் – சலாகாசம் மேகாகாசம் இரண்டும், பொய்யே – உபாதிகளை முன்னிட்டுக் கற்பிதமாக விளங்குவதால் மித்தையே, குடவானும் பெரிய வானும் – கடாகாசம் மகாகாசம் இரண்டும், எப்போதும் – சர்வ காலமும், கூடியொன்றும் – பேதமில்லாமல் ஏகமேயாம், (அதுபோல) இடமான பிரமம் சாட்சியிரண்டும் – வியாபகமான பிரமமும் கூடஸ்தரும் ஆகிய இரண்டும், எப்போதும் – சார்வ காலமும், ஏகம் – ஐக்கியம், (அதனால்) திடமாக – துணிவாக, சிவோகமென்று – சிவமே நான் நானே சிவமென்று, சுவாநுபூதி – உன்னனுபவத்தில், இருந்திடாய் – அறிவாய்.

(ப – ம்) சுருதியினாலும் யுத்தியினாலும் ஆத்மாவை யறிந்ததனால், அசம்பாவனையாதி நீங்கார்தாகையால், துணிவாகத் தன்னநுபவத்தால் அறியவேண்டுமென்பார், "திடமாக...இருந்திடாயே" என்றார்.

(தா – ம்) உத்தியினாலும் வாச்சியார்த்தங்களை நீக்கி இலட்சியார்த்தத்தை ஏகமெனக் காட்டி, அவ் வயிக்சிய சொரூபந் தானாகக் காமாதி வாசனையின்றி நன்றாக வநுபவத்தினால் அறிந்திருக்கும்படி ஆசாரியர் அநுக்கிரகித்ததாம்.

(அ – கை) குருவுபதேசப்படி சீடன் அத்துவிதசொரூபத்தைச் சமாதியிற் றெரிசித்ததைக் கூறல்,

தஞ்சமாங் குருவுஞ் சொன்ன தத்துவ வழிதப் பாமல்
பஞ்சகோ சமுங்க டந்து பாழையுந் தள்ளி யுள்ளில்
கொஞ்சமா யிருப்பும் விட்டுக் கூடஸ்தன் பிரம மென்னும்
நெஞ்சமூநழுவியொன்றாய்நின் றபூரணத்தைக்கண்டான் 89

(இ – ள்) தஞ்சமாம் குருவும் சொன்ன – பெருந் துணையாகிய தன்னுடைய ஆசாரிய ருபதேசித்த, தத்துவ வழி தப்பாமல் – உண்மை மார்க்கத்தைத் தவறாமல், பஞ்ச கோசமும் கடந்து – அன்ன மயமாதி ஐந்து கோசங்களையுந் தானல்லவென்று பேதித்து, பாழையுந் தள்ளி – அவைகளுக் கன்னியமாகக் கண்ட சூனியமாகிய அவித்தையையும், அறியாநின்ற தானல்லவென்று நீக்கி, உள்ளில்– அந்தக்கரணத்தில், கொஞ்சமா யிருப்பும் விட்டு – இந்தத் துவிதங்களை அறியாநின்ற சாட்சியே தானென்றிருந்த அற்ப சாட்சி விருத்தியாகிய ஸ்திதியையும் விட்டு, கூடஸ்தன் பிரமமென்னும் நெஞ்சமும் நழுவி – கூடஸ்தராகிய தானே பிரமமென்கிற அகண்டாகார விருத்தியும் நிதித் தியாசன பரிபாகத்தா லுறங்கினவன் கையிலுள்ள பதார்த்தம்போல் நீங்கி, ஒன்றாய் நின்ற – அகண்டேக ரசமாயுள்ள, பூரணத்தைக் கண்டான் – பூரண சொரூபத்தைத் தெரிசித்தான்.

(ப – ம்) உயிரானது உடலுக்கு வரும் வியாதி முதலிய துன்ப நீக்கி இன்பஞ் செய்விக்கின்றதுபோல, சீடனுடைய அஞ்ஞானம் அஞ்ஞான துன்ப நீக்கி மோட்ச வின்பங்

கொடுக்கும் ஆசாரிய ரென்பார், "தஞ்சமாம் குரு" வெனவும், பஞ்சகோச சூனியங்களாகிய துவிதங்களைத் தானெனல் பந்த மாகலின் அந்தத் துவித விருத்தியைவிட் டென்பார், "பஞ்ச கோசமும் ... தள்ளி" யெனவும், சாட்சி தானெனல், பந்த மில்லாவிட்டாலும், புருஷார்த்த சாதன ஞானமல்லாததால், கூ ட ஸ் த ன் தானென்னுகின்ற சாட்சி விருத்தியையும் நீக்கி என்பார், "உள்ளில்...விட்" டெனவும், கூடஸ்தனுகிய தானே பிரமமென்கிற அகண்டாகார விருத்தி புருஷார்த்த சாதன ஞானமாயினும், சாத்தியமான பிரமாகார விருத்தியொழிந்த நிருவிகற்ப சமாதி அநுபவத்திற்குத தடையாதவின், அகண் டாகார விருத்தியும் விட்டென்பார், "கூடஸ்தன் ... நழுவி" யெனவும், அநேகவித துன்பங்களுக்குக் காரணமான சித்த விகற்பங்க ளனைத்தும் தொலைத்த அகண்டேக ரச விருத்தி யினுல், பாலில் கலந்த ஜலம்போல மூன்று பரிச்சேத ரகித மாய் அ த் து வி த மா யிருக்கின்ற சொரூபாகார மாயினு னென்பார், "ஒன்ருய்...கண்டா" னெனவுங் கூறினுர்.

(தா – ம்) சுருதி குரு வாக்கியப்படி பஞ்சகோசத்தையும் சூனியத்தையும் நீக்கி, கூ ட ஸ் த ன் அநுபவமும் விட்டு, பிரமத்தை தரிசித்ததையும் கடந்து, பூரண சொரூபத்தைத் தரிசித்தா னென்பதாம்.

(அ – கை) சீடனுடைய அநுபவ ஸ்திதியைக் கூறுதல்.

அனுபவா நந்த வெள்ளத் தழுந்தியே யகண்ட மாகித்
தனுகர ணங்க ளாதி சகலமு மிறந்து சித்தாய்
மனதுபூ ரணமாய்த் தேக மானசற் குருவுங் காண
நனவினிற் சுழுத்தி யாகி நன்மகன் சுபாவ மானுன். 84.

(இ – ள்) அநுபவானந்த வெள்ளத்து – சுவாநுபூதி வடிவமாயுள்ள பிரமானந்த சமுத்திரத்தில், அழுந்தி–படிந்து, அகண்டமாகி – ஏகாகாரமாய், தநுகரணங்களாதி – தேகேந் திரிய முதலிய, சகலமுமிறந்து – அனைத்தும் நீங்கி, சித்தாய் – சின்மாத்திரமாய், மனது பூரணமாய் – மனது பூரணுகாரமாய், தேகமான – பரிபூரண சொரூபமே மானிடச் சட்டை சாத்தி எழுந்தருளிய, சற்குருவுங் காண – சற்குருவும் திருக்கண்ணுல் பார்த்தருள, நனவினில் சுழுத்தியாகி – நனவினிற் சுழுத்தி

யுடையவனாய், நன்மகன் — நல்ல சீடன், சுபாவமானான் — அகண்ட சொரூப சுபாவ மாயினான்.

(ப — ம்) திரிபுடியுடன் கூடிய பதினொரு வகை யானந்தமும், ஓர் திவலையாகத்தக்க பிரமானந்த சாகரத்தில் படிந்து, அவ்வாகாரமானா னென்பார், "அனுபவானந்த ... அகண்டமாகி" யெனவும், தேகாதி முப்பத்தைந்து தத்துவமு நீங்கி யென்பார், "தநுகரண ... இறந்" தெனவும், மனம் ஊசியை நினைக்கில் ஊசியாகாரமும்மகாமேருவை நினைக்கில் அவ்வாகாரமுமாதல் போல, முன் றேகத்தை நினைத்து அவ்வாகாரமான மனம். பூரண சொரூபத்தைச் சிந்தித்து அவ் வாகாரமாயிற் றென்பார், "மனது பூரணமா" யெனவும், ஜலம் ஆலங்கட்டியாய்த் தடித்ததுபோல, பரிபூரணமாகிய சொரூபமே மானிடச் சட்டை சாத்தி எழுந்தருளிய தென்பார், "தேகமான சற்குரு" வெனவும், இந்திரியங்கள் தமது காரணமான அஞ்ஞானத்தில் சுழுத்தியில் போல, லீனமாகாமல் தன் தன் கோளகையி லிருக்க, அவற்றின் வியாபாரமாகிய விடயானுபவமற் றிருப்பவ னென்பார், "நனவினில்...சுழுத்தியாகி" யெனவும், அநுக்கிரகித்தபடி அநுட்டித்து ஆனந்தாநுபவத்துடன் அகண்ட சொரூபமானா னென்பார், "நன்மகன் ... ஆனான்" எனவுங் கூறினார்.

(தா — ம்) பிரமானந்தத் தழுந்திப் பிரபஞ்சத்தை நீக்கிப் பெரிதுக்கெல்லாம் பெரிதான சுபாவ நிலையைப் பெற்றிருந்தா னென்பதாம்.

(அ — கை) சுபாவ நிலை பெற்றிருந்த சீடன் பின்பு யாது செய்தானெனில் கூறுகின்றார்.

அளிமக னெடும்போ திவ்வா றனபின் மனது மெள்ள
வெளியில்வந்திடவுணர்ந்தான் விமலதேசிகனைக்கண்டான்
துளிவிழிசொரியப்பாதந் தொழுதுவீழ்ந்தெழுந்துசூழ்ந்தா
குளிர்முகச்சுவாமிகேட்கக் கும்பிட்டுநின் றுசொல்வான் [ன்

(இ — ள்) அளிமகன் — பிரமானந்தாநுபவம் பெற்றிருந்த சீடனானவன், நெடும்போது — வெகுநேரம், இவ்வாறனபின் — இந்தப் பிரகாரம் சமாதியி லிருந்த பிறகு, மனது — அந்தக் கரணமானது, மெள்ள வெளியில் வந்திட — மெதுவாக வெளிப்

பட்டு வர, உணர்ந்தான் – அறிந்தவனாகி, விமல தேசிகனைக் கண்டான் – அவித்யாமலம் மாயாமலம் நீங்கிப் பிரகாசமான ஆத்ம சொரூபமாக விருக்கிற ஆசாரியரைத் தரிசித்து, துளி விழி சொரிய – ஆனந்த பாஷ்பம் விழியுதிர்ப்ப, பாதம் வீழ்ந்து தொழுது–குருவின் திருவடியில் வீழ்ந்து நமஸ்கரித்து, எழுந்து சூழ்ந்தான் – எழுந்து பிரதட்சணம் செய்து, கும்பிட்டு நின்று – கைகூப்பி நின்று, குளிர்முகச் சுவாமி கேட்க– சீதளமான முக மலர்ச்சியுடன் குருசுவாமி கேட்டருள, சொல்வான் – விண்ணப்பஞ் செய்வான்.

(ப – ம்) வெய்யிலால் நொந்து மேய்ச்சல் சலமின்றி யிருந்த பசுவானது, குளிர்ந்த சோலையும் தெளிந்த சலமும் மிகுந்த புல்லும் உள்ள விடத்தில் சென்று, புசித்துத் திருப்தி யடைந்திருப்பது போல, மிகுந்த தாபத்திரயத்தால் துன்பமுற்று, அவை நீங்கும்படி ஞான சமாதி கூடிப் பிரமானந்தம் பெற்றிருந்தவ னென்பார், "அளிமக" னெனவும், அவ் வருத்தமுண்டா மெனப் பசுவானது, அவ் விடத்தை விட்டு நீங்காமலிருந்தது போல, அத் தாபத் திரயங்களால் வருத்தமுண்டாமென, இச் சமாதியில் மிகுந்த கால மிருந்தா னென்பார், "நெடும்போது...பின்" னெனவும், அப் பசுவை அந் நிழலை விட்டு வெய்யிலி விழுத்தால் சடுதியாய் வாராது பையப்பைய வருதல் போல, மற்ற யோகாதி மார்க்கங்களில் தாமத மிராசத குணத்துட னடங்கிய மனது ஆனந்தானு பவத்தினின்று மெதுவாக வெளிப்பட்டதென்பார், "மனது... வந்திட" வெனவும், அவித்யாமலம் மாயாமல மற்றுத் தான் பிரகாசமான ஆத்மசொரூபமாக இருந்துகொண்டு, முமூட்சுக் களினுடைய அவித்யாமலம் மாயா மலங்களை நீக்கிப் பிரகாச மான ஆத்ம சொரூபமாகச் செய்கின்றவ ரென்பார், "விமல தேசிக" ரெனவும், மனமானது ஆசை முதலிய வனைத்து நீங்கிப் பிரமானந்த மயமாய் நிறைந்திருத்தலால் வாக்குக் குளிர்ந்த வசனத்துடனும், முக மிகவும் மலர்ச்சியுடனும், விளங்குகின்ற வாசிரிய ரென்பார், "குளிர்...சுவாமி" எனவும் கூறினார்.

(தா – ம்) சகசானுபவம் வரும் பொருட்டுச் சமாதி யநுபவ சமஸ்காரத்தோடு வெளிப்பட்டு, சற் குருவைத் தரிசித்து வணங்கினா னென்பதாம்.

(அ – கை) சீடன் றனக் கநுபவம் வரும்படி அநுக்கிரகஞ் செய்த ஞானசாரியரைத் தோத்திரஞ் செய்தல்.

ஐயனே யெனதுள் ளேநின் றனந்தசன் மங்க ளாண்ட
மெய்யனே யுபதே சிக்க வெளிவந்த குருவே போற்றி
உய்யவே முத்தி நல்கு முதவிக்கோ ருதவி நாயேன்
செய்யுமா றொன் றுங்காணேன் றிருவடிபோற் றிபோற்றி 86

(இ – ள்) ஐயனே – பிதாவே, எனதுள்ளே நின்று – என துள்ளத்தின்கண் அறிவு சொரூபமாய் நின்று, அனந்த சன்மங்க ளாண்ட – கீழ்ப்போன வெகு சன்மங்களில் சரியை கிரியை யோகங்களில் செலுத்தித் தடுத்தாண்ட, மெய்யனே – சனனங்கள் நசித்தும் நசியாதிருக்கின்ற சத்திய சொரூபனே, உபதேசிக்க வெளிவந்த குருவே – ஞானத்தை யநுக்கிர கிக்கும்படி வெளிப்பட வந்த வாசிரியரே, போற்றி – நமஸ்காரம், உய்யவே முத்தி நல்கும் – சனன துன்பத்தி னின்றும் ஈடேறும்படி மோட்ச வின்பத்தை ஞான வாயிலாக் கொடுத்தருளிய, ஓர் உதவிக்குதவி – இணையற்ற உதவிக்குக் கைம்மாறு, நாயேன் – நாயடியேன், செய்யுமாறு – செய்யும் படிக்கு, ஒன்றுங் காணேன் – யாதொன்றையும் கண்டிலேன், திருவடி போற்றி போற்றி – திருப் பாதத்துக்கு வந்தனம் வந்தனம்.

(ப – ம்) நெடுங்காலத் தனந்த சென்மத்தி லெனதுள்ளத் தின்கண் அறிவு சொரூபமாய் நின்று, சரியை கிரியை யோகங் களில் செலுத்தித் தடுத்தாட்கொண்ட, சனனங்கள் நசித்தும் நசியாதிருக்கின்ற சத்திய சொரூபனே என்று னென்பார், "எனதுள்ளே...மெய்யனே" எனவும், வடிவமில்லாத ஆகாசம் வடிவமாகத் தடித்ததுபோல நிராகார சொரூபமே ஒருருவாய்த் தடித்து ஞானத்தை அநுக்கிரகிக்கும்படி வெளிப்பட வந்த வாசாரியரே என்று னென்பார், "உபதேசிக்க ... குருவே" எனவும், தநுகரண புவன போக நான்கும் விவகாரத்தில் உள்ளதாயிருந்தாலும் விசாரிக்கில் அவைகள் பொய்யாயிருப் பதாலும், நீர் செய்தது இணையற்ற உதவியாயிருத்தலாலும், கைம்மா றில்லையென்று னென்பார், "உதவிக்கு...காணேன்" எனவும், சுரர்முதற் ருவர மீறுயுள்ள எழுவகைப் பிறவித்

துன்பங்களையும் துடைத்து மோட்ச வின்பத்தைக் கொடுக்கும் பாதமென்று னென்பார், "திருவடி" எனவுங் கூறினார்.

(தா – ம்) தருமார்த்த காமங்களைக் கொடாது கருணையினால், பர மோட்சங் கொடுத்தற்குக் கைம்மாறு காணே னென்று துதித்ததாம்.

(அ – கை) கைம்மாறு காணேனென்ற சீடனை நோக்கி ஆசாரிய ரருளிச்செய்ததைக் கூறுதல்.

சிட்டனிவ் வாறு கூறத் தேசிகர் மகிழ்ந்து நோக்கிக்
கிட்டவா வென விருத்திக் கிருபையோ டருளிச் செய்வார்
துட்டமாந் தடைகண் மூன்றுந் தொடராமற் சொரூபஞான
நிட்டனா யிருக்கி னீதே நீசெய்யு முதவி யாமே. 87.

(இ – ள்) சிட்ட னிவ்வாறு கூற – நல்ல சீடனானவன் பிரதியுபகார மொன்றையும் கண்டிலேனென்று சொல்ல, தேசிகர் மகிழ்ந்து நோக்கி – ஆசாரியர் சந்தோஷமடைந்து கிருபையோடு பார்த்து, கிட்ட வாவென விருத்தி – இங்கே வாவென்று சமீபத்தில் வைத்து, கிருபையோ டருளிச் செய்வார் – கருணையோடும் அநுக்கிரகம் பண்ணுவார், துட்டமாம் தடைகள் மூன்றும் – தீமையாகிய பிரதிபந்தங்கள் மூன்றும், தொடராமல் – வந்து பொருந்தாமல், சொரூப ஞான நிட்டனாய் – தானென்ன அநுபவமான சுகபோதத்தில் ஆரூட ஸ்திதியுடையவனாய், இருக்கில் – இருப்பாயானால், ஈதே – இதுவே, நீ செய்யு முதவியாம் – நீ எனக்குச் செய்யாநிற்கும் பிரதியுபகாரமாகும்.

(ப – ம்) முன் றேகமே தானென் றிருந்த சீடன் தான் அநுக்கிரகித்ததை விணாக்காமல் அந்தப்படி அநுட்டித்து ஆத்ம ஞானத்தா லானந்தம் பெற் றுனென வாசிரியர் சந்தோஷ மடைந்தார் என்பார், "தேசிகர் மகிழ்ந்" தெனவும், அபரோட்ச ஞானத்தையும் பேதிக்கத்தக்க வலியுள்ள பிரதிபந்தமென்பார், "துட்டமாம் தடைகள்" எனவும், மேகம்போல பொருளாதியைக் குறியாது சீடன் பிழைப்பதே கருதிய பேரருளுடைய வாசிரியராதலின், "சொரூப...உதவியாமே" எனவுங் கூறினார்.

(தா - ம்) சமாதி அநுபவம் பெற்ற சீடனை நோக்கித் தானென அநுபவமான சுகபோதத்தைத் தவிர, அவன் வேறு கருதாம லிருக்கும் பொருட்டு உனதநுபவம், தடையின்றி விளங்குமெனில் அஃதே கைம்மாறெனக் கூறினதாம்.

(அ - கை) அத்துவித சொரூபத்தை யறிந்த ஞானம் பிரதிபந்தத்தினால் நீங்குமோவென்ற சீடனுக்குத்தரங் கூறல்:

நீநானென் றிரண்டி லாம னிறைந்தபூ ரணமா யெங்கும்
நானாகத் தெளிந்த ஞான நழுவுமோ குருவே யென்றான்
தானாகும் பிரம ரூபஞ் சற்குரு நூலாற் றோன்றும்
ஆனாலுந் தடைக ளுண்டே லநுபவ முறைத்தி டாதே.88.

(இ - ள்) நீ நானென் றிரண்டிலாமல் - நீ பிரமம் நான் கூடஸ்தன் என்னும் வேறுபாடு இன்றி, நிறைந்த பூரணமாய் எங்கும் - எவ்விடத்திலும் நிறைந்திருக்கின்ற பரிபூரண சொரூபமே, நானாகத் தெளிந்த ஞானம் - நானாக அநுபவமாகத் தரித்துள்ள அபரோட்ச ஞானமானது, நழுவுமோ குருவே - நீங்குமோ ஆசிரியரே, என்றான் - என்று சீடன் வினவினான், தானாகும் பிரம ரூபம் - தன் வடிவமான பிரம ரூபமானது, சற்குரு நூலால் தோன்றும் - சற்குரு வுபதேசத்தாலும் அத்தியான்ம சாஸ்திர விசாரத்தாலும் அநுபவம் உண்டாகும், ஆனாலும் - அப்படி பிரமாநுபவம் உண்டானாலும், தடைகள் உண்டேல் - பிரதிபந்தங்க ளிருக்குமானால், அநுபவ முறைத்திடாது - அவ்வநுபவம் ஸ்திரப்படாது.

(ப - ம்) கூடஸ்த பிரமமென்னும் வேறுபாடின்றி எவ்விடத்திலு மிருக்கின்ற பரிபூரண சொரூபமே நானாகத் தரித்த வபரோட்ச ஞானத்துக்கும், தடைக ளுளவோ வென்றானென்பார், "நீ நான்...குருவே யென்றா" னெனவும், மகாவாக்கிய உபதேசத்தாலும் வேதாந்த சாஸ்திரத்தினாலும் ஆத்மஞான முண்டானாலும் பிரதிபந்த முண்டென்பார், "தானாகும்...உறைத்திடாதே" எனவுங் கூறினார்.

(தா - ம்) அநுபவம் வாராதபடி பிரதிபந்த முண்டானாலந்த ஞானம் திரப்படா தென்பதாம்.

(அ – கை) பிரதிபந்தங்களின் நாமமும் அவற்றை நீக்கும் உபாயமும் கூறுகின்றார்.

தடைகளே தெனிலஞ் ஞான சந்தேக விபரீ தங்கள்
படர்செயு மிந்த மூன்றும் பலசன்மப் பழக்கத் தாலே
உடனுடன் வரும்வந் தக்கா லுயர்ஞானங் கெடுமி வற்றைத்
திடமுடன்கெடுப்பாய்கேட்டல் சிந்தித்தெறெளிதலாலே. 89.

(இ – ள்) தடைக ளேதெனில் – பிரதிபந்தங்கள் யாவை யென்று கேட்பாயானால், அஞ்ஞான சந்தேக விபரீதங்கள் – அஞ்ஞானமும் சந்தேகமும் விபரீதமுமாகும், படர் செயும் – துன்பத்தைக் கொடுக்கும், இந்த மூன்றும் – இப் பிரதி பந்தங்கள் மூன்றும், பல சன்மப் பழக்கத்தாலே – அநேக வித அனந்த செனனங்களில் பழகி வந்த வாசனையினாலே, உடனுடன் வரும் – அடிக்கடி உண்டாகும், வந்தக்கால் – அப்படி வருமாயின், உயர் ஞானம் கெடும் – மேலான ஞானம் நஷ்டமாகும், (ஆகலின்) இவற்றை – இவ் வஞ்ஞானாதி பிரதி பந்தங்களை, கேட்டல் சிந்தித்தல் தெளிதலாலே – சிரவண மனன நிதித்தியாசனங்களினாலே, திடமுடன் கெடுப்பாய் – தைரியமாக நின்று நாசம் பண்ணுவாய்.

(ப – ம்) ஆத்மாவை மறைத்து அநாத்மாவைத் தோற்றுவித்துத் தாபத்திரய துன்பம் கொடுப்ப தென்பார், "படர் செயு" மெனவும், துவித விசிட்டாத்துவித ஞானமின்றி, அத்துவித அபரோட்ச ஞானமென்பார், "உயர் ஞான" மெனவும், அசம்பாவனையாதி மீளமீளத் தோற்றினும், அதைரியப் படாம லிவற்றை எவ்விதத்திலும் கெடுத்துப் போடுவோ மென்னும், உற்சாகத்தினால், அத்தியந்தம் நீங்கும்வரை, சிரவணாதிகள் செய்து நீக்குவாயென்பார், "திடமுடன்...தெளி தலாலே" எனவுங் கூறினார்.

(தா – ம்) பிரதிபந்தங்களின் நாமம் அசம்பாவனையாதி என்றும், அவைகள் அநாதி வாசனையால் உதிக்குமென்றும், அதனால் ஞானம் நீங்குமென்றும், அவைகளைச் சிரவணாதி யால் நீக்கவேண்டு மென்றுங் கூறியதாம்.

(அ – கை) பிரதிபந்தத்தை நீக்காவிடினும் அந்த ஞானத் தால் பவம் நீங்காதோ எனில்? அவ்வசம்பாவனை யாதியை

நீக்கச் சிரவணாதிகளைக் கொஞ்ச மப்பியாசித்தால் போதாதோ வெனில்? கூறுகின்றார்.

அக்கினி கட்டுப்பட்டா லற்பமுஞ் சுடமாட்டாது
மக்கின ஞானத்தாலே வந்தபந்த மும்வேவாது
சிக்கெனப் பழகிக்கேட்டல் சிந்தித்த றெளிதலாலே
விக்கின மடஞ்சந்தேகம் விபரீதம் போக்குவாயே. 90

(இ — ள்) அக்கினி கட்டுப்பட்டால் — அக்கினியானது மணி மந்திர அவுஷதங்களினு லடக்கப்படுமாயின், அற்பமுஞ் சுடமாட்டாது — கொஞ்சமும் கட்டையை தகிக்க யோக்கிய மாகாது, (அதுபோல்) மக்கின ஞானத்தாலே — பிரதிபந்தங் களோடு கூடிய ஞானத்தாலே, வந்த பந்தமும் வேவாது — ஆரோபமாய்த் தோற்றிய சமுசாரமும் நாசமாகாது, சிக்கெ னப் பழகி — நெடுங்கால நிரந்தர நேசத்தோடு அப்பியசித்து, கேட்டல், சிந்தித்தல், தெளிதலாலே — சிரவண மனன நிதித் தியாசனங்களினாலே, விக்கினமடஞ்சந்தேகம் விபரீதம்போக்கு வாய் — மோட்சத்துக்குப் பிரதிபந்தங்களான அசம்பாவனை யாதிகளைக் கெடுப்பாய்.

(ப — ம்) அசம்பாவனையாதி பிரதிபந்தமுடைய ஞான மென்பார், "மக்கின ஞான" மெனவும், ஆரோபமாய்த் தோற் றிய சமுசாரம் நித்தியம்போ லிருக்குமென்பார், "வந்த பந்த மும் வேவா" தெனவும், நெடுங்கால நிரந்தர நேசத்துடனே அப்பியசித் தென்பார், "சிக்கெனப்பழகி" எனவுங் கூறினார்.

(தா — ம்) திருஷ்டாந்த முகத்தால் பிரதிபந்தமுள்ள ஞானம் சமுசாரத்தை நீக்கா தென்றும், அப் பிரதிபந்தத்தை நீக்கும் பொருட்டுச் சிரவணாதியைத் தான், நிரந்தரம் நெடுங் காலம் நேசத்துடனே, அப்பியாசிக்க வேண்டுமென்றுங் கூறியதாம்.

(அ — கை) ஆத்ம ஞானத்துக்குத் தடையான அசம்பா வனையாதிகளின் றன்மையைக் கூறல்,

பிரம பாவனையைமூடிப் பேதங்காட் டுவதஞ்ஞானம்
குரவன் வாக்கியநம்பாமற் குழம்புவதாஞ் சந்தேகம்

திரமறு சகமெய்யென் றுந் தேகநானென் றுமுள்ளே
விரவிய மோகந்தானே விபரீதமென்பர் மேலோர். 91

(இ – ள்) பிரமபாவனையையூடி – சத்திய ஞான வனந்தானந்த பிரமமே நானென்கிற சிந்தனையை மாற்றி, பேதங் காட்டுவது – ஜீவேஸ்வர சகத்துச் சிந்தனையைத் தோற்றுவிப்பது, அஞ்ஞானம் – அசம்பாவனை, குரவன் வாக்கிய நம்பாமல் – ஆசாரியர் வாக்கியத்திற் சிரத்தையில்லாமல், குழம்புவது – நான் கருத்தாவோ சாட்சியோ வெனக் கலங்குவது, சந்தேகமாம், சமுசய பாவனையாம், திரமறுசகம் மெய்யென்றும் – இல்லாத சகத்துச் சத்தியமெனவும், தேக நானென்றும் – அநான்மாவாகிய தேகம் நானெனவும், உள்ளே விரவிய மோகந்தானே – அகத்தில் பொருந்திய மோகமே, விபரீதமென்பர் மேலோர் – விபரீத பாவனை என்று பெரியோர் கூறுவர்.

(ப – ம்) சத்திய ஞான வனந்தானந்த பிரமமே நாமென்கிற சிந்தனையை மாற்றி, ஜீவேஸ்வர செகத்துச் சிந்தனையைத் தோற்றுவிப்பது அசம்பாவனை என்பார், "பிரம பாவனை... அஞ்ஞான" மெனவும், ஆசாரியர் வாக்கியத்தில் சிரத்தையில்லாமல் தான் கர்த்தாவோ சாட்சியோ, சாட்சியென்றாலும் கர்த்துத்துவாதி உண்டோ இல்லையோ, கர்த்துத்துவாதி இல்லாவிட்டாலும், தனக்குப் பூரணத்துவம் உண்டோ இல்லையோ, பூரணத்துவம் உண்டானாலும், தன்னை அப்படியறியலாமோ அறியக் கூடாதோ வென, இது முதலாய் வருகின்ற சித்த விருத்திகளே சமுசய பாவனை யென்பார், "குரவன் ...சந்தேக" மெனவும், பழுதையினிடத்தில் தோன்றின பாம்பு எப்படி யில்லையோ அப்படிப் போலத் தன்னிடத்தில் விவர்த்தமாய்த் தோற்றின ஜீவேஸ்வர சகத் தில்லாம லிருக்கவும் அதனைச் சத்தியமென்னவும், நான் மநுடன், நான் பிராமணாதி வருணத்தை யுடையவன், நான் பிரமச்சரியாதி ஆச்சிரமத்தை யுடையவன், நான் உழவாதி யாகாதி செய்பவன், நான் அன்னாதி புசிப்பவன், நான் கடாதி யறிபவன், என்றிது முதலாய் வருகின்ற சித்த விருத்திகளே, விபரீத பாவனை யென்பார், "திரமறு ... விபரீத" மெனவுங் கூறினார்.

(தா – ம்) ஆத்ம சிந்தனையை மறைப்பது அசம்பாவனை யெனவும், ஆத்மாவோ அனாத்மாவோ தானென்று மனங்

கலங்குவது சமுசய பாவனையெனவும், அனாத்மாவே தான் பிரபஞ்சம் சத்தியமெனத் தோற்றுவது விபரீத பாவனை யெனவும் கூறினதாம்.

(அ—கை) அத்தடைகளைக் கெடுக்கும் சிரவணாதிகளின் றன்மையைக் கூறுதல்.

தத்துவ வநுபோகந் தான் சாதித்தல் கேட்ட லென்பார்
ஒத்துள பொருளூ கத்தா லுசாவல்சிந் தித்த லென்பார்
சித்தமே காந்த மான தெரிசனந் தெளித லென்பார்
நித்தமிப்படிச்செய்தக்கா னிர்வாணம்பெறுவாய்நீயே. 92.

(இ—ள்) தத்துவ அநுபோகந்தான் — தனது அந்தக் கரணத்தி லுளதாகா நிற்கும் நான் பிரமமென்னு மைக்கிய ஞானமானது, சாதித்தல் — மறையாது அடிக்கடி வேதாந்த சாஸ்திரங்களைச் சிரத்தையுடன் அப்பியாசம் செய்தலே, கேட்டல் என்பார் — விசார ரூபமான சிரவணமென்று பெரியோர் கூறுவர், ஒத்துள பொருள் — சிரவணத்தால் மனதிற்குச் சம்மதமான அருத்தத்தை, ஊகத்தால் — அபேதத்தைச் சாதிப்பதும் பேதத்தை வாதிப்பதுமான சையுத்தியினால், உசாவல் — விசாரிக்கின்றதே, சிந்தித்த லென்பார் — மனன மென்று கூறுவர், சித்த மேகாந்தமான தெரிசனம் — சித்தமானது பிரமாகாரமா யிருத்தலே, தெளிதலென்பார் — நிதித்தியாசன மென்பார, நித்தம் — எப்போதும், இப்படிச் செய்தக்கால் — இவ்வண்ணம் சிரவணாதிகளைச் செய்து அசம்பாவனை யாதியை நீக்கில், நீ நிருவாணம் பெறுவாய் — நீ பர மோட்சத்தை அடைவாய்,

(ப—ம்) குருமுகமாய் ஆறு லிங்கத்தினாலும் கூட்ஸ்த பிரம ஐக்கிய ஞானத்தைப் பிரதிபாதிக்கிற, வேதாந்த சாஸ்திரத்தைச் சிரத்யையுடன் அடிக்கடி அவதி பரியந்தம் அப்பியாசம் செய்தலே, விசார ரூபமான சிரவண மென்பார், "தத்துவ வநுபோகம் ... கேட்டல்" எனவும், சிரவணத்தால் அத்துவிதமென்று மனதுக்குச் சம்மதமான அருத்தத்தைச் சூட்சும புத்தியினால் சாக்கிராதி அவத்தை முதலானதும் சடமாயும், பலவாயும், ஒன்றினி லொன்றில்லாமல் தோன்றி யழிகின்றதென்றும், அவற்றை யறிகின்ற ஆத்மா சச்சித்தாய்

ஏகமாய்ப் பூரணமாய் நித்தியமா யிருக்கின்றதென்றும், இது முதலாய் நானு பிரகாரமான சையுத்தியினுல், விசாரிக்கின்றது மனன மென்பார், "ஒத்துள...சிந்தித்த" லெனவும், சுத்த சத்துவ விருத்தியினுல் அகண்ட பரிபூரண சச்சிதானந்தப் பிரமமே நான், நானே அந்த அகண்ட பரிபூரண சச்சிதானந்த பிரமமென்று விச்சின்னமின்றி சந்ததம் தியானித்து வாகியாந்தரத்தில் சப்தாதி விடயங் தோற்ருது தியானமும் தியானிக்கின்றவனு மிறந்து பாலிற் கலந்த சலம் போல அவ் வஸ்துவில் அவ் விருத்தியடங்கி அவ் வாகாரமா யிருத்தலே நிதித்தியாசன மென்பார், "சித்தம் ... தெளித" லெனவும், எப்பொழுதும் மிகுந்த முயற்சியா லிவ்வண்ணம் சிரவணுதி செய்து அசம்பாவனையாதியை நீக்கினன்றிப் பர மோட்சம் கிட்டாதென்பார், "நித்தம்...பெறுவாய்" எனவுங் கூறினர்.

(தா — ம்) ஆத்மா நாத்மாக்களை அடிக்கடி அப்பியாசித்தல் விசார ரூபமான சிரவணமெனவும், அவ் வப்பியாசப்படி யுத்திகளுடன் விசாரித்து அநாத்மா தானல்லன், ஆத்ம சொரூபமே தானென்று நிச்சயித்து அறிவது மனனமெனவும், அங்ஙனம் நிச்சயித் தறிந்த பிரகாரம் ஆத்ம சொரூபமே தானென் றனவரதம் தியானித்துப் பாலிற் கலந்த ஜலம்போல அவ் வாத்ம சொரூபத்தில் கலந் தேக ரசமாயிருப்பது நிதித்தியாசனமெனவும், மோட்சமானது அபரோட்ச ஞானத்தாலும், அபரோட்ச ஞானம் சுரோத்திரத்திற்கும் வாக்கியத்திற்கு முளதாய சம்யோகரூப மகாவாக்கிய சிரவணத்தாலும், உளதாகு மெனவும், அசம்பாவனையாதி பிரதிபந்தங்கள் இருக்குமாயின் ஞானம் மோட்சத்தைக் கொடாதெனவும், விசார ரூபமான சிரவணுதிகளால் அசம்பாவனையாதிகளைப் போக்கில் மோட்சம் சித்தியா நிற்குமெனவும், பிரதம சிரவணம் ஞான வாயிலாக மோட்சத்திற்கும் விசார ரூப சிரவணமும் மனன நிதித்தியாசனங்களும், அசம்பாவனையாதி பிரதிபந்த நிவர்த்தி வாயிலாக மோட்சத்திற்கு ஏதுவா மெனவும் கூறியதாம்.

(அ — கை) இச் சிரவணுதி யப்பியாச மெது வரைக்கும் செய்யவேண்டும் இங்ஙனம் செய்யவேண்டியதெல்லாம் செய்து முடிந்த ஞானிகளடையும் முத்தி யாதெனில், கூறுகின்ருர்.

எத்தனை நாள் ஞாதாவு ஞானமு மிருக்கு முன்பால்
அத்தனை நாளும் வேண்டு மப்பாலோர் செயலும் வேண்டா
நித்தமும் வெளிபோற் பற்று ஞேயமாத் திரமாய்ச் சீவன்
முத்தரா னவர்வி தேக முத்திபெற் றிருப்பா ரென்றும்.93

(இ – ள்) எத்தனை நாள்—எவ்வளவு காலம், ஞாதாவும்—விட்யங்களை யபிமானிக்கின்ற ஞாதுருவும், ஞானமும்—விருத்தி ஞானமும், உன்பாலிருக்கும் – உன்னிடத்தி லிருக்குமோ, அத்தனை நாளும் வேண்டும் – அவ்வளவு காலமும் சிரவணாதிகள் வேண்டும், அப்பால்– ஆத்மா மாத்திரமாக ஆனபின்னர், ஓர் செயலும் வேண்டாம் – சிரவணாதிக ளொன்றும் வேண்டியதில்லை, நித்தமும் – நாடோறும், வெளிபோல் – ஆகாசம் போல, பற்று ஞேய மாத்திரமாய் – அசங்க சின்மாத்திரமாய், சீவன் முத்தரானவர் – சீவன் முத்தியை யடைந்தவர்கள், விதேகமுத்தி பெற்று – பிராரத்த தேக நாசத்தின் பின்னர் விதேக கைவல்யத்தை யடைந்து, என்று மிருப்பார் – சார்வ காலமு மிருப்பார்கள்.

(ப – ம்) விடயங்களை யறியாநின்ற ஞானமும், அவ் விடயங்களை அபிமானிக்கின்ற ஞாதுருவும், உள்ள பரியந்தம அசம்பாவனையாதி நீங்காமையால் சிரவணாதிகள் பண்ணத்தக்கன வென்பார், "எத்தனை...வேண்டு" மெனவும், சிரவணாதிகளைக் குறித்துக் கர்மத்தை விட்டிருப்பது போல, சிரவணாதிகளையும் தான் பிரமமாத்திரமாக ஆனபடியினால் விடவேண்டு மென்பார், "அப்பால் ... வேண்டா" மெனவும், பிரபஞ்ச விவகாரஞ் செய்யுங் காலத்து நிரவயவமாய் சூட்சும மாய் வியாபகமா யிருக்கின்ற சின்மாத்திரமே தானென் றிருப்பவ னென்பார், "நித்தமும்...முத்தரானவர்" எனவும், சிவ சாயுச்சியம் வரை சரீரமுத்தியை அடைந்தோர் திரும்பப் பிறப்பதுபோ லின்றி, அசரீர முத்தி பெற்றோர் அவ் வண்ணமே யெப்போது மிருப்பா ரென்பார், "விதேக ... என்றும்" எனவுங் கூறினார்.

(தா – ம்) மித்தையாதி, திருசியத்தைச் சத்தியமாக ஈதென்று சுட்டியறியு முணர்வும், சுட்டியறிந்த விஷயத்தை யபிமானிக்கின்ற சீவனும், இருக்கின்ற வரைக்கும் சிரவணாதி செய்யவேண்டுமென்றும், சிரவணாதி செய்து முடிந்தவர் சீவன்

முத்தரா யிருந்து பின் விதேக முத்தராவ ரென்றும் சங்கிரகமாகக் கூறியதாம்.

(அ – கை) அச் சீவன்முத்தர் எத்தனைவித மென்றும் அவர்களின் நாமமாதியுங் கூறுகின்றார்.

ஞானமார் சீவன் முத்தர் நால்வகை யாவர் கேளாய்
வானிகர் பிரம வித்து வரன்வரி யான்வ ரிட்டன்
ஆனவர் நாம மாகு மவர்களிற் பிரம வித்தின்
தானமு மற்றை மூவர் தாரதம் மியமுஞ் சொல்வேன் 94

(இ – ள்) ஞானமார் சீவன் முத்தர் – பரிபூரண ஞானமுள்ள சீவன் முத்தர்கள், நால்வகை யாவர்– நான்கு விதமாக இருப்பார்கள், கேளாய்– அந்த விதத்தைச் சொல்லக் கேள், வானிகர் பிரம வித்து – ஆகாசத்தை யொப்பான பிரமவித்தெனவும், வரன், வரியான், வரிட்டன் – வரனெனவும் வரியானெனவும் வரிட்டனெனவும், ஆனவர் நாமமாகும் – அவர்களின் பெயராம், அவர்களில்– அந் நால்வகைச் சீவன்முத்தர்களுள், பிரம வித்தின் தானமும் – பிரம வித்தின் ஸ்திதியும், மற்றை மூவர் – ஏனைய மூவர்களின், தாரதம்மியமும் – வேறுபாட்டையும், சொல்வேன் – இனிக் கூறுவேன்.

(ப – ம்) லோகாயதன் முதலான வாதிகள் சொல்லும் சீவன் முத்தி யுடையவரல்ல ரென்பார், "ஞானமார் சீவன் முத்தர்" எனவும், பிரபஞ்சத்தில் பொருந்தியும், பூரிப்பும் வாட்டமுமற் றிருக்கும் பிரம ஞானிக ளென்பார், "வானிகர்... வித்" தெனவும் கூறினர்

(தா – ம்) சீவன் முத்தர் ஞானத்தில் தாரதம்மியமின்றி விசிராந்தி சுகத்தில் தாரதம்மியமாய் இருப்பதால் நால்வகையெனவும், அவர்களின் நாமம் பிரம வித்தாதி யெனவும் கூறி, அவர்களின் தன்மையைக் கூறத் தொடங்கினதாம்.

(அ – கை) சீவன் முத்தர்களில் பிரம வித்தி னியல்பு கூறல்.

தீரராய்ப் பிரம வித்தாய்த் தெளிந்தவர் தெளியு முன்னம்
வாரமா யிருந்த தங்கள் வருணமாச் சிரமஞ் சொன்ன

பாரகா ரியமா ஞலும் பலர்க் குப காரமாக
நேரதாச் செய்வர் தீர்ந்த நிலைவிடார் சீவன் முத்தர். 95.

(இ – ள்) தீரராய் – வல்லமையுடையவராய், பிரம வித்தாய்– பிரம ஞானிகளாய், தெளிந்தவர்–சீவேஸ்வர சகத்தைச் சிவாகாரமாய்க் கண்டவர், தெளியுமுன்னம் – அப்படிச் சிவாகாரமாய்க் காணுவதற்கு முன், வாரமாயிருந்த – உரிமையாக விருந்த, தங்கள் – தங்களுடைய, வருணமாச்சிரமஞ் சொன்ன – வருணாச்சிரமங்களுக் குசிதமாகச் சாஸ்திரங்களில் சொல்லிய கர்மங்கள், பார காரியமாஞலும் – தங்களுக்குத் துன்பத்தைக் கொடுக்கத் தக்க பெரிய கர்மமாஞலும், பலர்க் குபகாரமாக – கர்மஞ் செய்யாத அஞ்ஞானி பலரும் கருமத்தைச் செய்து பரம்பரையாய் முத்தியடையும்பொருட் டவர்களுக்குச் சகாயமாய், நேரதாச் செய்வர் – மந்திர லோபம் கிரியா லோபம் தன லோப மின்றிச் சாஸ்திர விதிப்படி செய்யா நிற்பர், (அப்படிச் செய்தும்,) தீர்ந்த நிலை விடார் – தாங்கள் பிரமமென முடிந்த நிச்சயம் நீங்கா திருப்பார், சீவன் முத்தர் – சீவித்திருக்கும்போதே முத்தியடைந்தவர்கள்.

(ப – ம்) ஆற்றி லெதிர்த்து நீந்துவதுபோலக் காமாதியுண்டாகும் விவகாரத் திருந்தே மைத்திரியாதி சம்பாதிக்கும் வல்லபமும், சலத்தை யடைத்துத் திருப்பிப் பயிர்செய்தநுபவித்தல் போல, பகிர்முகமாய் ஈசுவரனுல் சிருட்டிக்கப்பட்ட இந்திரியங்களை மறித் தகமுகப்படுத்தி, ஆத்ம தரிசனம் செய்தானந்த மநுபவிக்கும் வல்லபமுடையவரா யிருந்தென்பார் "தீரராய்" எனவும், மண்சேர்ந்து கலங்கியிருந்த சலம் தேற்றும் வித்தால் தெளிந்ததுபோலத் தாமதவிராசத விருத்தியால் தோற்றிய சீவேசுவர சகத்தைச் சத்துவ விருத்தியால், சிவாகாரமாய்க் கண்டோ ரென்பார், "தெளிந்தவ" ரெனவும், பிரம சொரூபமான தங்களுக்குக் கருமஞ் செய்யத் தேவையில்லா திருக்கவும், செய்தாற் றுன்பம் வருகிறதா யிருக்கவும், கருமஞ் செய்யாத அஞ்ஞானிகள் தங்களைப் பார்த்துச் செய்து பரம்பரையாய் முத்தியடையும் பொருட்டு, தங்கள் வருணதிக் குரிய கருமத்தை மந்திரலோபம் கிரியாலோபம் தனலோப மின்றிச் செய்வா ரென்பார், "தெளியு முன்னம் – செய்வா" ரெனவும், பெண்வேடம் போட்டோனுக் கென்ன செய்யினும் தான் புருடனென்ற நிச்சயம் நீங்காதிருத்தல்போல, பிரபஞ்ச

விவகாரம் என்ன செய்யினும் தாங்கள் பிரமமென முடிந்த நிச்சயம் நீங்காதிருப்பா ரென்பார், "தீர்ந்த – விடாரெனவுங்" கூறினர்.

(தா – ம்) பிரமவித்து லோக வுபகார நிமித்தம் சற்கருமம் அநுட்டிப் பாரெனவும், அக் கரும மநுஷ்டிக்குங் காலத்தும் அவிகார அமல அக்கிரியமான அத்துவித சொரூபந் தானென்னு மநுபவஞானம்விட்டு நீங்காதிருப்ப ரெனவும் கூறியதாம்.

(அ – கை) அந்தப் பிரமவித்துக் கன்மஞ்செய்யில் காமாதி யுண்டாகாதோ வெனில்?

காமமாதிகள் வந்தாலுங் கணத்திற்போ மனத்திற்பற்றார்
தாமரை யிலைத்தண்ணீர்போற் சகத்தொடுங் கூடிவாழ்வார்
பாமர ரெனக்காண்பிப்பார் பண்டிதத் திறமைகாட்டார்
ஊமரு மாவாருள்ளத் துவகையாஞ் சீவன்முத்தர். 96

(இ – ள்) காமமாதிகள் – இச்சை முதலானவைகள், வந்தாலும் – பிராரத்தவசத்தாலுண்டானாலும், கணத்தில் போம் – க்ஷணத்தில் நாசமாம், மனத்திற் பற்றார் – மனதில் அஞ்ஞானிகளைப் போல வாசனையாகப் பற்றார்கள், தாமரையிலைத் தண்ணீர் போல் – கமல பத்திரோதகம் போல, சகத்தொடுங் கூடி வாழ்வார் – பிரபஞ்சத்தோடுங் கூடி வாழாநிற்பர், பாமரரெனக் காண்பிப்பார் – அறிவில்லாத பேதையர்களைப் போலக் காட்டாநிற்பர், பண்டிதத் திறமை காட்டார் – வித்துவத்துவ சாமர்த்தியத்தைத் தெரிவியார், ஊமருமாவார் – மௌனமாயு மிருப்பார்கள், உள்ளத்துவகையாஞ் சீவன் முத்தர் – நித்திய சந்தோஷ மனமுடையவர்கள்.

(ப – ம்) பிராரத்துவ மநுபவித்துத் தீரும்படி இச்சையாதிக ளொருபொழு தேகதேசமாக வுதிக்கினும் அவைகளாத்ம சுகத்தை வெஞ்சனமாக நின்று விளக்கி யுடனே நசித்தலினாலும், ஆகாயத்திற் றோற்றின தூளியும் மேகமுங் காற்றால் தொலைவது போல, சத்துவ மனதிலக் காமாதி யசுத்த வாதனைகள் ஏகதேசமாகத் தோற்றினும், முற் பழகியிருக்கின்ற வைராக்கியாதிகளான சுத்த வாசனையால் அக்கணமே நசித்தலாலும், காற்றானது தனக்கு நற்கந்தம் துற்கந்தம்

சுபாவமின்றி யிருந்தும் செல்லுமிடத்தில் கந்தங்களை யங்ஙனம் பற்றி யங்ஙனம் விட்டுவிடுவது போல, ஞானிகள் காமாதிகள் சுபாவமில்லாம லிருந்தும் தொழில் செய்யுமிடத்தில் அவைக ளுதிக்கில், அந்தந்தக் கணத்தில் நீங்கிப்போ மாதலாலும், "காமமாதிகள் ... போ" மெனவும், ஞானிகளினது மனம் சகலத்தையும் பூரணானந்தமாய்த் தெளிந்திருத்தலாலும், ஆகாயத்தில் வெய்யிலினுடைய சூடும் நிலவினுடைய குளிர்ச் சியு மொட்டாதது போல, ஞானிகளின் சத்துவ மனத்தில் காமாதியின் இன்ப துன்பம் தாக்காவாதலாலும், "மனத்திற் பற்று" ரெனவும்,

தாமரையில் சலம் பொருந்தியும் பொருந்தா திருப்பது போல, உலகத்தாருடன் ஞானிகள் வாக்குக் காயத் தால் சேர்ந்து மனத்தாற் சேராததனைச் சொரூபத்தினிடத் தில் வைத்திருப்பா ராதலால், "தாமரை ... வாழ்வா" ரென வும், யானையைப் பார்த்த குருடர் ஒவ்வோ ரவயவத்தை யானையெனக் கூறினுங் கண்ணுடையோர்க் கவை யாவும் யானையேயெனத் தெரிவது போல, எவரெவர் எங்ஙன மெங் ஙனம் வஸ்து நிச்சயங் கூறினும், அவையனைத்தும் பரமாத்து வித தமது சுவாநுபவத்திற் கொத்தலின், அந் நிச்சயங்களை மறுத்துக் கண்டிப்பதில் தமது அநுசந்தானத்துக்கு விரோத முண்டா மாதலினாலும், அவைகளை மறுக்கத் தெரியாத பேதையர்கள் போலக் காட்டுதலால், "பாமரரெனக் காண் பிப்பா" ரெனவும்,

முமூட்சுத்துவமில்லாத வாதிகளுக்கு, அந்த நிச்சய மனைத்தும் தமது அநுபவ வியாபகத்திற் கங்கமாகத் தாமவைகளி னங்கியாக விளங்கு மநுபவத்தை யறிவித்தால் இளைப்பு மாத்திர மிச்சமே தவிர, அவர்கள் புத்தியி லேறுதென்று தோற்றுவிக்கா திருத்தலால் பண்டிதத் திறமை காட்டா ரெனவும், மகா மௌனமா யிருத்தலி னாலும், ஆனந்தாநுபவத்திற்குத் தடை வருமென்று வாக்கு மௌனமா யிருத்தலினாலும், ஊமரு மாவாரெனவும், செய்ய வேண்டிய தெல்லாம் செய்துமுடிந் தடைய வேண்டியதெல்லா மடைந்தோ மென்னும் நித்திய சந்தோஷ மனமுடையவ ராதலால், "உள்ளத் துவகையரு சீவன் முத்த" ரெனவுங் கூறினர்.

(தா – ம்) பிரமவித்து பிராரத்துவ வசமாய்த் தொழில் செய்யுமிடத்து அவனுக்கு ராகாதிக ளேகதேசமுண்டாயின், உட்னே நசிக்குமெனவும், ராகாதி யுண்டாதற் கேதுவில்லாத படி இருப்ப ரெனவும், அவரநுபவ விலாசத்தைக் கூறின ராம்.

(அ – கை) பிரம வித்துக்கள் இங்ஙனம் நானாவிதமா யிருப்பானேன் எனில்,

பேதகர் மத்தால்வந்த பிராரத்த நாநாவாகும்
ஆதலால் விவகாரங்க ளவரவர்க் காவவாகும்
மாதவஞ் செயினுஞ்செய்வார் வாணிபஞ் செயினுஞ்செய்
பூதலம் புரப்பாரையம் புகுந்துண்பார் சீவன்முத்தர். [வார்

(இ – ள்) பேத கர்மத்தால் – பேதமாயுள்ள சஞ்சித கர்மங்களால், வந்த – உண்டான, பிராரத்தம் – பிராரத்துவ கர்மம், நாநா வாகும் – அநேக பிரகாரமாக இருக்கும், ஆத லால் விவகாரங்கள் அவரவர்க் காவவாகும் – விவகாரங்களும் அவரவர்க்குப் பிராரத்த கர்மத்துக்குத் தக்கனவா யிருக்கும், மாதவஞ் செயினுஞ் செய்வார் – பெருமையான தவத்தைச் செய்தாலும் செய்வார், வாணிபஞ் செயினுஞ் செயவார் – வியாபாரம் செய்தாலும் செய்வார், பூதலம் புரப்பார் – இரா ஜாவாகப் பூமியை இரட்சித்தாலும் இரட்சிப்பார், ஐயம் புகுந் துண்பார்–பிட்சை யெடுத்து உண்ணினு முண்ணுவார், சீவன் முத்தர் – சீவன் முத்தர்கள்.

(ப – ம்) தனக்கும் பிறருக்கும் தேக வருத்தமும் துன்ப மும் கொடுக்கும் பஞ்சாக்கினி மத்தியிவிருத்தன் முதலிய தாமத தவமும், ஆசையுடன் செய்யும் சிரவணாதியாகிய ராசத தவமும் அன்றி, தனக்கும் பிறருக்குந் தேக வருத்தமின்றி இன்பங் கொடுப்பதாய் நிராசையுடன் செய்யத் தகுந்த சிரவ ணாதியாகிய சத்துவ தவமா யிருத்தலின் மாதவ மென்றார்.

(தா – ம்) பிரம வித்துக்களுக்குப் பிரமஞான முண்டாகு முன் சஞ்சித கன்மத்தால் உண்டாயிருக்கின்ற பிராரத்த கன் மம் நானாவாகையால் அவர்கள் நானாவிதமாய் இருப்ப ரென் பதாம்.

(அ — கை) இதுவுமது

சென்றது கருதார்நாளைச் சேர்வதுநினையார் கண்முன்
நின்றதுபுசிப்பார் வெய்யி னிலவாய்விண் விழுதுவீழ்ந்து
பொன்றின சவம்வாழ்ந்தாலும் புதுமையா வொன்றும்பா
நன்றுதீ தென்னுர்சாட்சி நடுவான சிவன்முத்தர்: [ரார்

(இ — ள்) சென்றது கருதார் — முன்னிங்கினவைகளை நினைத்து வாடார்கள், நாளைச் சேர்வது நினையார் — எதிர் காலத்து வரும் பொருளை நினைத்து மகிழார்கள், கண்முன் னின்றது புசிப்பார் — வர்த்தமான காலத்தில் பிராரத்த வசத் தால் வந்து பொருந்தானின்ற போகங்களைப் பிராரத்வ மென் றநுபவியா நிற்பர், வெய்யில் — உஷ்ணமான சூரிய கிரண மானது, நிலவாய் — சீதளமான சந்திர கிரணமாகி, விண் விழுது வீழ்ந்தும் — ஆகாயத்தினின்றும் விழுதாக விறங்கினு லும், பொன்றின சவம் வாழ்ந்தாலும் — மரித்துப்போன பிரேதம் பின் சீவித்தாலும், புதுமையாய் — அதிசயமாக, ஒன்றும் பாரார் — யாதொன்றையும் நாடார்கள், நன்று தீ தென்னுர் — ஒரு பொருளை நல்லதென்றும் மற்றொரு பொரு ளைக் கெட்டதென்றும் சொல்லார், சாட்சி நடுவான சிவன் முத்தர் — சருவத்தையும் விலட்சணமாயிருந் தறிபவரான சத்துவா பத்தியில் விளங்கிய பிரம வித்தாகிய சீவன் முத்தர்கள்.

(ப — ம்) பரமார்த்தத்திற் சக சீவ பர மித்தையானபடியி னுலும், விவகாரத்திற் சென்றதை நினைத்து வாடுதலிற் பய னின்மையாலும், வருவதை நினைத்து மகிழ்தலிற் சரீர மனித்தியமா யிருப்பதாலும், நிகழ் காலத்தில் பிராரத்த வசத்தால் சாதி வருணாச்சிரமத்துக் குரித்தான போகத்தை கிராஸையுடன் புசிப்பா ராதலாலும், வீணை திண்டுவதற்கு முன்னும் பின்னும் சத்தியாதிருந்து, திண்டுமிடத்தில் சத்திக் கின்றது போல, பணிவிடைக்காரர் காரியக்காரர் வருவதற்கு முன்னும் பின்னு மொன்று நினையாது சுட்டற்றிருந்து, அவர்கள் வந்தவிடத்தி லவர்களுக்குத் தகுந்த உத்தரங் கூறித் தொழில் செய்து அருந்துவா ராதலினுனும், "சென் றது ...புசிப்பா" ரெனவும், வெல்லத்தினுற் செய்த கும்மட்டிக் காயையும் மாம்பழத்தையும் அவ் வெல்லமயமா யிருந்தலால்

நன்று தீதென்றதது போல, சருவமு மானந்தாகாரமாய் விளங்குதலால் நன்று தீதென்று றெனவும், சருவத்துக்கும் விலட்சணராயிருந் தறிபவராயும், அவைகளிற் சமத்துவ மாயும், முன் மூன்று பூமியுமின்றிப் பின் மூன்று பூமியுமின்றி, மத்தியாகிய சத்துவாபத்தியை யுடையவராயு மிருப்பா ரென்பார், "சாட்சி நடுவான சிவன்முத்தர்'' எனவுங் கூறினார்.

(வி – ரை) இந்த நான்கு செய்யுளும் முந்தின பிரம வித்தி னியல்பைக் கூறினவெனக் கொள்க.

(தா – ம்) பிரமவித்து, கோர மூடமன மடங்கி யநுபவ மாய் நிற்றலி னொன்றைக் கருதுதலும் வியப்புறுதலு மில்லை யென்பதாம்.

(அ – கை) மற்றை மூவரியல்பு யாதெனில்? கூறுகின்றார்

பின்னைமூ வரி லிரண்டு பேர்களுஞ் சமாதி யோகம்
தன்னையுற் றிருப்பார் தேக சஞ்சார நிமித்தந் தானாய்
உன்னுவோன்வரன்வேற்றோரா லுணர்பவன்வரியானுகும்
அன்னியர் தம்மாற்றன்று லறியாதோன் வரிட்டனுமே.99.

(இ – ள்) பின்னை மூவரில் – மற்ற மூன்று பேர்களில், இரண்டு பேர்களும் – பிரம வரன் பிரம வரியா னென்னும் இரண்டு சீவன் முத்தர்களும், சமாதி யோகந்தன்னை – சமாதி ஞானத்தை, உற்றிருப்பார் – அடைந்திருப்பார்கள், தேக சஞ்சார நிமித்தம் – தேகஞ் சஞ்சரிக்கும் பொருட்டு, தானு யுன்னுவோன் – சமாதியி னின்றும் தானே உத்திதனாகி உணவு முதலியவற்றை நினைப்பவன், வரன் – பிரமவரனும், வேற்றோரால் – சீடர் முதலானோரால், உணர்பவன் – முன் சொன்ன உணவு முதலியவற்றைக் கொள்ள அறிபவன், வரியானுகும் – பிரம வரியானுகும், அன்னியர் தம்மால் தன்னால் – பிறராலும் தன்னாலும், அறியாதோன் – உணவு முதலியவற்றைக் கொள்ள அறியாதவன், வரிட்டனும் – பிரம வரிட்டனுகும்.

(வி – ரை) பிரம வரிட்டன், சமாதியி லதீதமானவ னெனக் கொள்க.

(தா – ம்) உணவாதியைக் குறித்துத் தானே உண்டா கின்ற நினைப்புடையவன் பிரம வரனெனவும், தானே உண்டா

காமல் அன்னியரால் உண்டாகின்ற நினைப்புடையவன் பிரமவரியா னெனவும், தன்னாலும் அன்னியராலும் நினைப் பில்லாதவன் பிரம வரிட்ட னெனவுங் கூறினதாம்.

(அ – கை) தாரதம்மியமான இந் நால்வகை சீவன் முத்தர்களுக்கும் மோட்சமும் தாரதம்மியமா யிருக்குமோ வெனில்?

*அரிதாகு மிவர்க ளிவ்வா றநேகரா னாலு முத்தி*
*சரியாகும் பாடு பட்ட சமாதிக்குப் பலனே தென்றால்*
*பெரிதான திருஷ்ட துக்கம் பிரமவித் தநுப விப்பன்*
*வரியானும்வர னுமற்றைவரிட்டனுஞ்சுகமாய்வாழ்வார் 100*

(இ – ள்) அரிதாகு மிவர்கள்–திரிலோகத்திலும் துர்லப மாகும் இச் சீவன் முத்தர்கள். இவ்வா றநேக ரானாலும் – இவ்வண்ணம் பிராரத்த வசத்தால், நானு பேதமான நடையை யுடையவர்களா யிருந்தாலும், முத்தி சரியாகும் – அவர்கள் அடைந்துள்ள ஞானத்திற் றாரதம்மிய மின்மையின், ஞான பலமான வீடொருமைத் தாம், பாடுபட்ட சமாதிக்கு – வரன் முதலியோர் வருத்தமுற்றுச் செய்த நிருவிகற்ப சமாதிக்கு, பலனேதென்றால் – பிரயோசனம் யாதெனில், பெரிதான திட்ட துக்கம்–பெரிதான பிரத்தியட்ச துன்பங்களை, பிரமவித் தநுபவிப்பன் – விவகாரத்தில் பிரவிருத்தி வருதலின் பிரம வித் தநுபவியாநிற்பன், வரியானும் வரனு மற்றை வரிட் டனும் – பிரம வரியானும் பிரம வரனும் பிரம வரிட்டனும், சுகமாய் வாழ்வார் – வருத்தமுற்றுச் செய்த நிருவிகற்ப சமாதியினால், பிரவிருத்தியின்மையால் சீவன் முத்தி சுகத்தை யுடைவர்களாய் வாழ்வார்கள்.

(ப – ம்) சகத்திலுள்ள உயிர்களுக்கு மற்ற விருப்பம் நீங்கி மோட்ச விருப்பம் வருவது அரிது. வரினும், கன்ம சாத்திர முதலியவைகவிட்டு வேதாந்த சாத்திரத்தில் விருப்பம் வருவது அரிது. வரினும் அச்சாத்திர சிரவணஞ் செய்த லரிது. அங்ங னஞ் செய்யினும் அதிற் கூறிய பிரகாரம் அநுசந்தானம் பண் ணுதலரிது, அங்ஙனம் பண்ணினும், சுகாநுபவம் வருதல் மகா துர்லபம். ஆதலால், இவ்வநுபவம் பெற்றவர்கள் திரிலோகத் திலும் துர்லபமென்பார், "அரிதாகு மிவர்க" ளெனவும், அவ்

வறிஞர்கள் நானு பேதமான நடையை யுடைத்தானவர்களா யிருந்தாலும், பல நாமமும் பல நிறமுங் கோணலும் நேருமா யிருக்கிற கங்கை முதலிய பல நதிகளும், சமுத்திரத்தில் ஏகமாதல் போல, மோட்சத்தில் ஒரு தன்மையராவ ரென்பார், "இவ்வா றநேகராளுலு முத்தி சரியாகு" மெனவும், நித்திரையோடு வழிச் செல்வோனுக்கு முள் கல் வேர் முதலியவைகளால் நித்திரை வுண்டாகி அச் சுகத்துக்கு விக்கின முண்டாகுதல் போல, பிரம ஞானிகளுக்கும் பிராரத்தத்தினல் வருகிற தொழில்களினல் பிரவிருத்தியுண்டாகி தனதானந்தத்திற்கு விக்கின முண்டாகின்றமையால், "பெரிதா னதிட்ட துக்கம் பிரமவித் தநுபவிப்பன்" எனவும், துக்கத்தைக் கொடுப்பதாகிய பிரவிருத்தி யில்லாமையால், பிரம வரியானும், பிரமவரனும், பிரம வரிட்டனும், சுகமாய் வாழ்வா ரெனவும் கூறினர்.

(தா — ம்) இச் சீவன் முத்தர்கள் பிராரத்த வசத்தால் நானுவிதமா யிருக்கினும் மோட்சம் வேறுபாடின்றி ஒன்ருகவே இருக்கு மெனவும், விவகாரமுள்ள பிரம வித்துக்குந் துன்பமுண் டெனவும், விவகாரமற்று மிருந்த வாசனுட் சயம் மனேலயமுள்ள பிரம வரனுதி மூவரும் துன்பமின்றி பிரமானந்தத்தை யடைந்து சுகித்திருப்பா ரெனவுங் கூறினதாம்.

(அ — கை) பிரம வித்துக்க ளஞ்ஞானிகளைப் போல விவகாரஞ் செய்துகொண்டிருந்தால் சம்சார பந்த மெப்படி நீங்குமென்று வினுதலுக் குத்தரங் கூறல்.

பிரமஞா னிகளுங் கன்மப் பேதையர் போலே வாழ்ந்தால்
திரமுறுமஞ்ஞா னம்போய்ச் செனியாத வழியேதென்ருல்
பரவுமா காச மொன்றிற் பற்ருது மற்றை நாலும்
விரவின தோடுங் கூடும் விதம்இரு வோரு மாவார். 101.

(இ — ள்) பிரம ஞானிகளும் — பிரம வித்துக்களும், கன்மப் பேதையர் போலே வாழ்ந்தால் — கர்மிகளான அஞ்ஞானிகளைப் போல, விவகாரங்களை யுடையவர்களாய்ச் சீவித்திருந்தால், திரமுறு மஞ்ஞானம் போய்—நிலையாகத் தோற்றிய அறியாமை நசித்து, செனியாத வழி — இனிப் பிறவாத

மார்க்கம், ஏதென்றால் — யாதென்றால், பரவு மாகாசம் — வியாபித்திருக்கும் ககனமானது, ஒன்றில் பற்ருது — சாதுர் பூதங்கள் பௌதிகங்க ளொன்றிலாவது தோயாது நிற்க, மற்றை நாலும் — ஏனைய சாதுர் பூதங்களும், விரவினதோடுங் கூடும் — தம்மோடு கலவா நிற்கும் பொருள்களோடு கலக்கும், விதம் — இவ்விதமாக, இருவோரு மாவார் — ஞானி அஞ்ஞானிகள் இருவரு மாகுவார்,

(ப — ம்) ஞானிகளைத் தவிர முமூட்சுக்களுக்கு ஞானோதய மாகும் பரியந்தம் கேடின்றி அஞ்ஞானந் தோற்றிக்கொண் டிருக்குமென்பார், "திரமுறு மஞ்ஞான" மென்றார்.

(தா — ம்) ஞானி அஞ்ஞானிகளின் கிரியை யொன்றாயி னுங் கருத்து வேறாயிருக்கு மாதலால், பிரமவித்து அஞ்ஞான நீங்கி மோட்சமடைவர் என்பதாம்.

(அ — கை) கன்மத்திரய நீங்குவ தெவ்விதமெனில்,

பஞ்சினை யூழித்தீப்போற் பலசன்ம விவித வித்தாஞ்
சஞ்சித மெல்லாஞானத் தழல்சுட்டு வெண்ணீறாக்கும்
கிஞ்சிதா காமியந்தான் கிட்டாமல் விட்டுப்போகும்
விஞ்சின பிராரத்தத்தின் வினையநு பவித்துத்தீரும். 102

(இ — ள்) பஞ்சினை — பஞ்சை, ஊழித்தீப் போல் — வட வாநல மெரிப்பது போல, பல சன்மவிவித வித்தாம் — அனந்த பவங்க ளுண்டாதற்குப் பலவித விதைகளான, சஞ்சித மெல் லாம் — சஞ்சித கன்மங்க ளனைத்தையும், ஞானத் தழல் — ஞானாக்கினியானது, சுட்டு வெண்ணீறாக்கும் — எரித்து வெண் மையாகிய சாம்பலாக்கும், கிஞ்சித்து — அற்பமும், ஆகாமியந் தான் — ஆகாமிய கன்மமானது, கிட்டாமல் விட்டுப்போகும் — சம்பந்தியாமல் நீங்கும், விஞ்சின — சேடித்த, பிராரத்தத்தின் வினை — பிராரத்த கன்மமானது, அநுபவித்துத் தீரும் — மூன்று விதமாக அநுபவித்து நீங்கும்.

(ப — ம்) அக்கினியானது பிரகாசமும் பரிசுத்தமும் சகல பதார்த்தத்தையும் தகிக்குந் தன்மையு முடையது போல, பரிசுத்தமும் சஞ்சித கன்ம பலத்தை நாசஞ்செய்யுந் தன்மையு முடைய ஞானத்தினாலே, சர்வமும் தனது சித்து ரூபமாய்

விளங்கி, சஞ்சித கன்மங்களென வேறொரு பொருளில்லாமற் போய்விடு மென்பார், "பஞ்சினை...வெண்ணீருக்கு" மெனவும், சிவத்துவம் விந்து சின்மாத்திரமாயிருத்தலால் அப் புண்ணிய பாவத் தொடக்கற் றிருப்பா ரென்பார், "இஞ்சிதா காமியந்தான்...விட்டுப் போகு" மெனவும், புலி என்று விட்ட பாணம் பசுவென்று தெளிந்தபின் எப்படி நிற்காதோ அது போல, ஞானம் வருவதற்குமுன் நியமித்த பிராரத்த கன்மம் ஞானம் வந்தவுடனே நிறுத்தக் கூடாமல் இச்சை அனிச்சை பரவிச்சையாகப் புசித்துத் தீருமென்பார், "விஞ்சின ... அநுபவித்துத் தீரு" மெனவுங் கூறினர்.

(தா—ம்) சஞ்சித கன்மம் பரஞானத்தாலும், ஆகாமியம் ஜீவத்துவ நட்டத்தாலும், பிராரத்துவ கன்மம் அநுபவித்த தாலும், நீங்குமெனக் கூறினதா மென்க.

(அ—கை) சீவன் முத்தர் செய்யு மிருவினை எவ்வித நீங்குமென்ற வினாவுக் குத்தரங் கூறல்.

பொறுமையாற் பிராரத்தத்தைப் புசிக்குநாட் செய் யுங் கர்மம், மறுமையிற் றொடர்ந் திடாமன் மாண்டுபோம் வழியே தென்றால், சிறியவ ரிகழ்ந்து ஞானி செய்தபா வத்தைக் கொள்வார். அறிவுளோ ரறிந்து பூசித் தற மெலாங் கைக்கொள் வாரே. 103

(இ—ள்) பிராரத்தத்தை—பிராரத்த கன்மங்களை, மறுமையில் — மறுமையில்லாத சீவன் முத்தர்கள் சீவன் முத்தி தசையில், பொறுமையாற் புசிக்கு நாள் — சமத்துவ புத்தியோடு அநுபவிக்குங் காலத்தில், செய்யுங் கர்மம்—சீவன் முத்தர்கள் செய்யா நிற்கும் புண்ணிய பாவ கர்மங்கள், தொடர்ந்திடாமல்— அவர்களைத் தொடர்ந்து வராமல், மாண்டு போம் வழி — நசித்துப்போகும் மார்க்கம், ஏதென்றால் — யாதென்றால், சிறியவ ரிகழ்ந்து — மூடர்கள் நிந்தித்து, ஞானி செய்த பாவத்தை — ஞானவான் செய்த பாவங்களை, கொள் வார் — ஏற்றுக்கொள்வார்கள், அறிவுளோர் — விவேகிகள், அறிந்து — சிவ சொரூபமென் றறிந்து, பூசித்து — ஆராதித்து, அறமெலாம்—அவர்கள் செய்யும் புண்ணியங்க ளனைத்தையும், கைக்கொள்வார் — ஏற்றுக்கொள்வார்.

(ப — ம்) குழந்தையானது பழங் கொடுக்க அழைத்த போது விரைந்து முற்செல்வதும், தக்கைபோட அழைத்த போது விரைந்து பிற்செல்வதும் போல வின்றி, பிராரத்த கன்மத்தால் புலியாதி துக்க விடயம் வரின் விரைந்து பிற் செல்லாமல், சிவிகையாதி சுக விடயம் வரில் விரைந்து முற் செல்லாமல், அவ் விரு விடயங்களையும் சமத்துவ புத்தியோடு அநுபவிக்குங் காலத்தி லென்பார்' "பொறுமையால் ... புசிக்கு நா" ரெனவும், சாரத்தை விட்டுச் சக்கையைக் கொள் கின்ற பன்றுடை போல, மூடர்கள் மிகுதியான குணத்தை விட்டு ஏகதேசத்தில் பிராரத்த சன்மத்தால் உண்டாகிய அகுணத்தைக் குறித்து, நிந்தித்துப் பாவத்தைக் கைப் பற்றி நரகப் பிராப்தி யடைவா ரென்பார், "சிறியவ ரிகழ்ந்து... கொள்வா" ரெனவும், ஜலத்தை நீக்கிப் பாலைக் கொள்ளும் அன்னம் போலவும், மணலை நீக்கிச் சர்க்கரையைக் கொள்ளும் எறும்பு போலவும், சொரூபத்தை யறிய விரும்பிய முமூட்சுக் கள், மிகுந்த அகுணமிருக்கினும் அதை விட்டு அற்பமாகக் குணமிருக்கினும் அதை மிகுதியாக வெண்ணிச் சிவசொரூப மென் றறிந்து அருச்சனையாதிகள் செய்து புகழ்ந்து புண்ணியத்தைக் கைக்கொண்டு மோட்சப்பிராப்தி யடைவா ரென்பார், "அறிவுளோர் ... கைக்கொள்வா" ரெனவுங் கூறினர்.

(தா — ம்) சீவன் முத்தர் பிராரத்துவம் அநுபவிக்குங் காலத்தில் செய்யும் புண்ணிய பாவங்களை விவேகியும் அவிவேகியும் கொள்வா ரென்பதாம்.

(அ — கை) இங்ஙனம் கூறியவற்றிற்கு வேதமே பிரமா ணமெனக் கூறுகின்றார்.

சீவன்முத்தரைச் சேவித்தோர் சிவனயனெடு மாலான
மூவருமகிழ நோன்பு முழுவதுஞ் செய்துசன்ம
பாவன மாணுரென்று பழமறைமுழங்கு மிப்பான்
மேவருஞ் சீவன்முத்தர் விதேகமுத்தியுநீ கேளாய். 104

(இ — ள்) சீவன் முத்தரை — சீவன் முத்தர்களை, சேவித் தோர் — தெரிசித்தவர்கள், சிவன் — அரனும், அயன் — பிர மனும், நெடுமால் — திருமாலும், ஆன — ஆகிய, மூவருமகிழ

— மும்மூர்த்திகளுஞ் சந்தோஷிக்க, நோன்பு முழுவதுஞ் செய்து — தவங்களனைத்தையும் குறைவற முடித்து, சன்ம பாவனமானுரென்று — பவ பரிசுத்த மானுர்களென்று, பழ மறை முழங்கும் — அனுதியான வேதங்கள் பிரதிபாதிக்கும், இப்பால் — இனி, மேவருஞ் சீவன் முத்தர் — பொருந்துதற் கரிய சீவன் முத்தர்களையும், விதேக முத்தியும் — அசரீர முத்தியையும், நீ கேளாய் — நீ கேட்பாய்.

(ப — ம்) சீவத்துவ நீங்கிச் சிவமாக விளங்குகின்ற ஞானி களுக்கு, ஆத்தம், அங்கம், தானம், சற்பாவமான பணிவிடை களைத் திரிவிதகரணமு மொத்துச் செய்கின்றவர்கள், அந்த ஞானிகள் சருவாத்ம சொரூபமாய் விளங்குதலால் பிரமா, விஷ்ணு, ருத்திரன் சந்தோஷிக்கத் தவங்களையெல்லாஞ் செய்து முடித்தவர் போலாகி யென்பார், "சீவன் முத்தரை — முழுவதுஞ் செய்து" எனவும், சடசுபாவமனைத்தும் விட்டுச் சின்மாத்திரமே தனது சொரூபமாக விளங்குவா ரென்பார், "சன்மபாவனமானு" ரெனவும், மற்ற ஆகமாதிகள் போலச் சிருட்டியாதியி லுண்டாகாது பிரளயத்திலும் ஈஸ்வரனுடைய மூச்சுக் காற்ருக விருக்கின்றவனுதி யென்றும், மீமாம்சர் களால் நிச்சயம் பண்ணப்பட்டிருக்கும் வேதமென்பார், "பழ மறை" எனவும், லோகாயதன் முதலிய மதத்தினர் சொல்லும் விதேக முத்தியன்று, பற்றுதற்கரிய சீவன் முத்தரையும் அசரீர முத்தியென்பார், "மேவருஞ் சீவன் முத்தர் விதேக முத்தி" யெனவுங் கூறினுர்.

(வி — ம்) "சென்மபாவனமானு" ரென்பது ஞானதனுவா மெனவும், சேவிப்போர் சென்மபாவன மாவாரெனவே, இகழ் வோர் சன்ம விருத்தியடைவாரெனவுங் கொள்க.

(தா — ம்) சீவன் முத்தரைப் புகழ்ந்தோர் இகழ்ந்தோர் அடையும் நன்கு தீங்குகளை உலகத்தார் கூறுவதுமன்றி வேதமுங் கூறுகின்ற வென்பதாம்.

(அ — கை) சீவன் முத்தருக்குச் சரீரத்திரய நீங்கும் விதத்தைக் கூறல்.

அரியமெஞ் ஞானத்தீயா லவித்தையா முடனீருகும்
பெரியதூ லமுங்காலத்தாற் பிணமாகி விழுமந்நேரம்

உரியசூக்கும சரீரமுலையிரும் புண்டநீர் போல்
துரியமாய் விபுவாய்நின்ற சொரூபத்தி லிறந்துபோமே.

(இ – ள்) அரியமெஞ் ஞானத்தீயால் – துர்லபமான தத்துவ ஞானமென்னு மக்கினியினால், அவித்தையா முடல்நீரும் – காரண தேகம் வெந்து நீறாய்விடும், பெரிய தூலமும் – பருத்த தூல சரீரமும், காலத்தாற் பிணமாகி விழும் – கால நியமப்படி (பிராரப்தபோக வனந்தரம்) சவமாய் வீழாநிற்கும், அந்நேரம் – அப்போது, உரிய சூக்கும சரீரம் – தன்னையறிதற்குச் சாதனமான சூட்சும தேகமானது, உலையிரும்புண்ட நீர்போல் – கொல்லனுலையிற் காய்ந்த அயமானது கிரகித்த சலத்தைப் போல, துரியமாய் விபுவாய் நின்ற – துரியமாயும் வியாபகமாயு நிற்கின்ற, சொரூபத்தி லிறந்துபோம் – பிரம சொரூபத்தில் லயிக்கும்.

(ப – ம்) துவித விசிட்டாத்துவிதமின்றி அத்துவிதவப் பிரதிபந்தாபரோட்ச ஞான மென்பார், "அரிய மெஞ்ஞான" மெனவும், சட்வடிவமான தூல சரீரமும் அறியாமையே சொரூபமான காரண சரீரமும் தன்னையறிதற் கேதுவில்லை, சூட்சும சரீரமே தன்னை யறிதற்குச் சாதன மென்பார், "உரிய சூக்கும சரீர" மெனவும், சூட்சும சரீரம் பிரளயத்திற் பிரதம சரீரத்துடன் உண்மையாய பிரமத்தில் அத்தியாசயிக்கிய மாதலினால் மறுபடி சன்மித்தல் போல, அகண்ட அறிவு சொரூபத்தில் காய்ச்சின இரும்பு கிரகிக்கிற சலம் போல இறந்தபின் சன்மிக்கா தென்பார், "உலையிரும்புண்டநீர் ... சொரூபத்தி லிறந்துபோ" மெனவுங் கூறினார்.

(தா – ம்) சீவன் முத்தருக்குத் தத்துவ ஞானம் வந்தவுடன் காரண சரீரம் நீங்குமெனவும், பிராரத்த கன்மம் புசித்துத் தீர்ந்தவுடன் தூல சரீர நீங்குமெனவும், அக்காலத்தில் சூட்சும சரீரம் பரிபூரண சொரூபத்தி லயித்து நீங்குமெனவுங் கூறினதாம்.

(அ – கை) விதேக முத்தனியல்பு கூறல்.

கடமெனு முபாதிபோனாற் ககனமொன் றானாற்போல
வுடலெனு முபாதிபோன வுத்தரஞ் சீவன்முத்தர்

அடிமுடி நடுவுமின்றி யகம்புற மின்றிநின்ற
படிதிகழ் விதேகமுத்திப் பதமடைந் திருப்பரென்றும்.

(இ – ள்) கடமெனும்–குடமென்கின்ற, உபாதி போனால் – உபாதி நீங்கினால், ககனமொன் றானாற்போல – கடாகாசம் மகா காசத்தோடு ஏகமானது போல, உடலெனும் – மூன்று தேகமென்கின்ற. உபாதி போன உத்தரம் – உபாதிகள் நீங்கின அந்தக்ஷணம், சீவன் முத்தர் – சீவன் முத்தரானவர்கள், அடிமுடி நடுவுமின்றி – ஆதி மத்தியாந்த ரகிதமாய், அகம் புறமின்றி – உள்ளும் புறமுமின்றி, நின்றபடி திகழ் – இருந்த வண்ணம் விளங்குகின்ற, விதேக முத்திப் பதம் – விதேக கைவல்ய பதத்தை, அடைந்து – பெற்று, என்று மிருப்பர் – சதா அவ்வண்ணமாக இருப்பார்கள்.

(ப – ம்) அகண்டமாயும் அமூர்த்தமாயு மிருக்கின்றதினால், ஆதிமத்தியாந்த ரகிதமாயும், ஆகாசம்போற் சூட்சுமமாயும், வியாபகமாயு மிருக்கின்றதனால், உள்ளும்புறமு மற்றதாயும், உற்பத்தி நாசமின்றி இருந்தபடியே இருந்து விளங்குவதாயு முள்ள சுத்த சைதன்ய மென்பார், "அடி முடி நடுவுமின்றி ... பத" மென்றார்.

(தா – ம்) சீவன் முத்தர் சரீரத்திரயம் நீங்கின பின், ஆதிமத்தியாந்த ரகிதமான பிரமமா யிருப்ப ரென்பதாம்.

(அ – கை) சீவன் முத்தி விதேக முத்தியி னியல்பைச் சொல்லி முடித்து இச் செய்யுளில், முன் 88-வது செய்யுளில் சீடன் பரிபூரணமான ஆத்ம சொரூபம் தானெனை அறிந்த தாகக் கூறிய வநுபவம், நூதனமா யுதித்ததன்றெனக் கூறு கின்றார்.

சொல்லிய மகனேயெங்குஞ் சூழ்வெளியிருக்க மண்ணைக்
கெல்லிய பின்புதோன்றுங் கிணற்றினு காசம்போலே
ஒல்லையாம் பிரமநூலா லுற்றதுபோலே தோன்றும்
எல்லையி னுமெய்போது மேகமென் றிருந்து வாழ்வாய்.

(இ – ள்) சொல்லிய மகனே – முன் 88-வது செய்யுளில் அநுபவம் கூறிய புத்திரா, எங்கும் – எவ்விடத்தும், சூழ் வெளியிருக்க – சூழ்ந்த ஆகாசம் இருந்தபடி பரிபூரணமா

யிருக்க, மண்ணைக் கெல்லிய பின்பு – பூமியை யகழ்ந்த பின்பு, தோன்றும்– (ஆகாசம் இருக்கிறதென்றும் பூரணமாயிருக்கிற தென்றும் ஞானமில்லாதவனுக்கு, நூதனமாக அப்போது ஆகாசம் இருக்கின்றதென்றும், பூரணமா யிருக்கிறதென்றும், உண்டானது போல) தோற்றுகின்ற, கிணற்றி னுகாசம் போல – கூபாகாசம் போல, ஒல்லையாம் பிரமம் – அனுதியாக விளங்குகின்ற பிரத்தியக்கபின்ன பிரம சொரூபமானது, நூலால் – (குரு உபதேசத்தாலும்) வேதாந்த சாத்திர விசாரத்தாலும், உற்றது போலத் தோன்றும் – நூதனமாக அப்போது பிரத்தியேகாத்மாவே நாமென்றும் வியாபகமா யிருக்கிறுேமென்றும் அடையப்பட்டது போலத் தோற்றும், (அப்படித் தோற்றினும் அது பிராந்தியேயாம்,) எல்லையில் நாம் – பிரமாணுதீதமான சுத்த சைதன்ய சொரூபமான யாம், எப்போதும் – எக்காலமும், ஏகமென்று – அகண்டேக ரசமா யிருக்கிறுேமென்று, இருந்து வாழ்வாய் – இவ்வண்ணம் இருந்து அகண்டானந்தம் அநுபவிப்பாய்.

(ப – ம்) ஈவேசுவர செகத்து விவர்த்தமா யுண்டாதற்கு அதிட்டானமானதினுல் அநாதியான பிரம சொரூபம் இப்பொழுது குரு உபதேசத்தாலும், வேதாந்த சாத்திர விசாரத்தாலும், அடையப்பட்டது போலத் தோற்றுவது பிராந்தியென்பார், "ஒல்லையாம் பிரமம்...தோற்றும்" எனவும், சுவாநுபூதியினுலும், ஆகமப் பிரமாணத்தினுலும் அன்றி, மற்ற காட்சி முதலிய பிரமாணங்களினுல் அறியக்கூடாத சுத்த சைதன்ய சொரூபமென்பார், "எல்லையில் நா" மெனவும், காலத் திரயத்தும் ஈவேசுவர சகத்தான துவிதமில்லை; பிரத்தியக்க பின்ன சொரூபமான நாமே யிருக்கின்றேமென்று அகண்டானந்தத்தை யநுபவிப்பாய் என்பார் "எல்லையில் நாம்...வாழ்வாய்" எனவுங் கூறினுர்.

(தா – ம்) ஆகாயம் எப்பொழுதும் எங்கும் ஒனுய்ப் பூரணமாயிருக்கவும் அவ் வாகாயம் இல்லையென்றிருந்தவன் கிணறு தோண்டிய பின்னுள்ள கூபாகாசமும் அதற்கு முன் வெளியிலுள்ள மகாகாசமு மிருப்பதனைக் கண்டு இரண்டு மொன்றென வறிந்தபோது அவனுக்கு அப்போது அவ் வாகாசம் உண்டானதாகத் தோற்றுவது போல, அத்துவித மாய் அகண்டமாய், அனவரத மாத்மாவா யிருக்கவும், அதை

இல்லையென்று இருந்த நீ, குரு சாஸ்திர மூலமாய்த் தேகாதி பிரபஞ்சத்தை நியதி கழித்து, கூடஸ்த பிரமத்தைத் தரிசித்து ஒன்றென வறிந்த இப்போது அவ்வாத்மா நீயான தெனத் தோற்றினும், காலத்திரயத்திலு மங்ஙனமே இருக்கின்றதாய் அநுபவித்து இருப்பா யென்பதாம்.

(அ—கை) சத்தசத்தி னுண்மையைத் தெரிவித்து முற்செய்யுளில் கூறியபடி அநுபவித்து இருப்பாயென வற்புறுத்திக் கூறுகிறார்.

கானனீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர்க ளூர்
வானமை கயிற்றிற் பாம்பு மலடிசேய் முயலின் கோடு
பீனமாந்தறி புமானிற் பிரபஞ்ச மெல்லாம் பொய்யே
ஞானமெய் மகனே யுன்னை நம்மாணை மறந்தி டாதே. 109.

(இ—ள்) கானனீரில் — கானற் சலம்போலும், கிளிஞ்சில் வெள்ளியில் — சுத்திகா ரசிதம் போலும், கந்தர்ப்ப நகரில் — கந்தர்வ நகரம போலும், களூரில் — சொப்பன நகரம் போலும், வானமையில் — ஆகாய நீலம் போலும், கயிற்றிற் பாம்பில் — இரச்சு சர்ப்பம் போலும், மலடிசேயில் — வந்தியா சுதன் போலும், முயலின் கோட்டில் — சசவிஷாணம்போலும், பீனமாம் தறி புமானில் — பருத்ததாணு சோரனைப் போலும், பிரபஞ்சமெல்லாம் — ஈசுவர சகத்தனைத்தும், பொய்யே — மித்தையேயாம், ஞானம் — சுத்த சைதன்யமான பிரமமே, மெய் — உண்மையாம், உன்னை — இத்தன்மையான உனது ஆத்ம சொரூபத்தை, நம்மாணை — நம்மேலாணை, மறந்திடாதே — மறவாமல் அதுவாய் விளங்குவாய்.

(ப—ம்) ஈசுவர சகத் தத்தியந்தம் அசத்தென்பார், "மலடி சேய் முயலின் கோ" டெனவும், சிற்சடப் பிரபஞ்சம் பொருளல்ல தோற்றுமென்பார், "கிளிஞ்சில் வெள்ளி, கயிற்றிற் பாம்பு,பீனமாந் தறிபுமான், கந்தர்ப்பநகர"மெனவும், திரிகாலத்திலு மில்லாத தோற்றமென்பார், "கானனீர், வானமை" யெனவும், இல்லாமலே தோற்றி அநுபவத்துக்கும் வருமென்பார், "களூர்" எனவும், அநுபவத்துக்கு வந்த போதிலும் இல்லையென்று நிச்சயிப்பாய் என்பார், 'பொய்யே' யெனவும், கானல் சலமாதிகள் விசாரிக்குமிடத்தில் எப்படி

யில்லையோ அப்படியே விவர்த்த ரூபமாகத் தோற்றிய பிரபஞ்சம் விசாரிக்குமிடத்தில் திரிகாலத்திலு மில்லை பரிபூரண ஞானமாகிய சுத்த சைதன்யமே உண்மையென்பார், "கானனீர்...ஞானமெய்" யெனவும், அந்தப் பரிபூரணமான சுத்த சைதன்யமே நீயென்னு மநுபவத்தை விட்டு நீங்கா திருப்பா யென்பார், "உன்னை நம்மாணை மறந்திடாதே" எனவுங் கூறினர்.

(வி – ரை) "மலடிசேய் முயலின் கோடு" என்ற பதங்களுக்கு, சிவேசுவர சகத் தத்தியந்தம் அசத்து, பிரமமே யுள்ளதென்று சீடனுக்குக் குரு பிரதிக்ஞை கூறினா ரெனவும், "இளிஞ்சில் வெள்ளி, கயிற்றில் பாம்பு, பீனமரம் தறிபுமான், கந்தர்வ நகரம்" என்ற பதங்களுக்குச் சீடன் பிரமமே உள்ளது பிரபஞ்சம் அத்தியந்தம் அசத்தென்றால் வந்தியா சுதன் போலும் முயல் கொம்பு போலும் தோற்றுமலே இருக்க வேண்டும்; அப்படியின்றி தோற்றுவதால், எப்படிக் கூடுமென்று சங்கை செய்வானென்று கருதி, பிரபஞ்ச மசத்தென்பதற்கு மாத்திரம் "மலடிசேய்" முதலிய திட்டாந்தங்கள் கூறினதெனவும், பிரபஞ்சத் தோற்றம், சுத்திகா ரசிதம்போல, பொய்யாகிய தோற்றமெனக் கூறினா ரெனவும், "கானல்நீர் வானமை" யென்ற பதங்களுக்குக் இளிஞ்சிலைத் தவிர வெள்ளியும், கயிற்றைத் தவிர பாம்பும், கட்டையைத் தவிர சோரனும், சூனியத்தைத் தவிர கந்தர்வ நகரமும், இல்லை யெனத் தெளியின் பின்னர் வெள்ளி பாம்பு முதலியவைகள் தோற்றுதலில, அப்படியின்றி மண்ணையன்றிக் கடமென்னும் பொருளின்றென ஆய்ந்தறியினும் பெயர்த்தும் தோற்றுவது போல, பிரபஞ்சம், காரணமான பிரமத்தையன்றி இல்லையென் உணரினும் தோற்றுவதால், எப்படிக் கூடுமென்று சீடன் சங்கை செய்வானென்று கருதிப் பிரபஞ்சம் பொருளன்று என்பதற்கு மாத்திரம், "இளிஞ்சில் வெள்ளி" முதலிய திட்டாந்தங்கள் கூறினதெனவும், பிரபஞ்சம் பொய், பொருளன்றென வுணரினும், மறுபடியும் கானல் ஜலம்போல் தோற்றுமெனக் கூறினாரெனவும், "கனவூரென்ற பதத்துக்குக்" கானலினிடத்து நீரில்லையென்றும், ஆகாயத்தினிடத்துக் கருநிறமில்லையென்றும், தெளிந்த பின்னரும் தோற்றினும் அவைகள் அநுபவத்துக்கு வருவதில்லை, பிரபஞ்சமோ அப்படியன்றிச் சத்த ஸ்பரிச முதலாக அநுபவிக்கப்படுவ

தால் எப்படிக் கூடுமென்று சங்கை வருமென்று கருதி, பிரபஞ்சம் அசத்தென் றுணரினும் பெயர்த்தும் தோற்றுமென்பது மட்டுக்கும், "கானல்நீர், வானமை" என்ற திட்டாந்தங்கள் கூறினதெனவும், பிரபஞ்சம் பொய்யென உணர்ந்த பின்னரும் தோற்றி, சொப்பனப் பிரபஞ்சம் போல அநுபவத்துக்கும் வருமெனக் கூறினா ரெனவுங் கொள்க. முன் தட்சணாமூர்த்தி பேரி லாணை வைத்த ஆசாரியர் சுவாநுபவத்தைப் பெற்றதனால் தன்னைச் சிவ சொரூபமெனக் கண்டு மிகுந்த நம்பிக்கையுள்ள சீடனாதலால் இச் செய்யுளில் தம்மீது ஆணை வைத்தா ரெனவுங் கொள்க.

(தா - ம்) திரிசியமாய் அசத்தான சகத்துக் காலத்திரயத்திலும் இல்லையென்றும், திருக்காய், சத்தா மாத்திரமான ஆத்மா, திரிகாலத்திலு மிருக்கின்றதென்றும், அவ்வாத்ம சொரூபம் தானென்கின்ற வநுபவம் விட்டு நீங்காதிருப்பா யென்றுங் கூறினதாம்.

முதலாவது தத்துவ விளக்கப் படலம்

முற்றிற்று.

———

உ

சிவமயம்.

## இரண்டாவது

# சந்தேகந் தெளிதற் படலம்.

---

(அ — கை) இந் நூலாசிரியர் தத்துவ விளக்கப் படலத்தை முடித்துக்கொண்டு இந் நூல் கற்கும் முமூட்சுக்களுக்கு அப்படலத்தில் தத்துவமான சத்தியஞான அனந்தானந்த வஸ்துவைச் சமாதியிலுண்டாகும் அகண்டாகார விருத்தி ஞானத்தினால் விளக்கி இனிச் சகசாப்பியாசத்தினாலுண்டாகும் அகண்டைகரச ஞானத்தினால் முற்கற்பனையாக வருவித்த ஜீவேசுவர சகத்துப் பரிபூரண பரமாத்துவித சொரூபமாக விளங்கும் பொருட்டுச் சந்தேகந் தெளிதற் படலங் கூறுகின்றார்.

நரர்குழி பறித்துமெள்ள நாட்டிய நெடிய கம்பம்
உரமுறக் குத்திக்குத்தி யுறைப்பிக்கு முபாயம்போலே
பரமசிற் சொரூபந்தன்னிற் பற்றிய மனோவிருத்தி
திரநிலை பெறச்சந்தேகந் தெளிதலை மொழிகின்றேனே.

(இ — ள்) நரர் — உலகில் மநுடர், குழிபறித்து — குழியைத் தோண்டி, மெள்ள நாட்டிய — மெதுவாக அதில் நிறுத்திய, நெடிய கம்பம் — நீண்ட ஸ்தம்பமானது, உரம்உற — வலிமையடையும்படி, குத்திக்குத்தி — கெடித்து கெடித்து, உறைப்பிக்கும் — வலிமையுற செய்யா நிற்கும், உபாயம் போல — தந்திரத்தைப் போல, பரமசிற் சொரூபந்தன்னில் — மேலான சின்மாத்திர ஆத்ம சொரூபத்தில், பற்றிய மனோவிருத்தி — அபேதமாகப் பொருந்திய அகண்டாகார விருத்தி, திரநிலை — நிச்சலமான இருப்பை, பெற — அடைய, சந்தேகம் தெளிதலை — சந்தேகந் தெளிதற் படலத்தை, மொழிகின்றேன் — கூறுகின்றேன்.

(தா – ம்) சித்தினிடத் துதயமாய் பகிர்முகமின்றி அச் சித்திற் கரைந்த மனமானது சென்ற விடமெல்லாஞ் சிதா னந்தமாக ரமிக்கும் பொருட்டுச் சந்தேகந் தெளிதலைக் கூறத் தொடங்கினதாம்.

(அ – கை) முற்படலத்தி லாத்ம சொரூபமே நீ யென்று அநுபவித் திருப்பாயென ஆசிரியர் அநுக்கிரகித்ததை பெற்ற சீடன் செய்கையைக் கூறல்,

நற்கருத் துடையோனாகி ஞானவானாகி நின்றோன்
மர்க்கட நியாயம்போலே மகாபூத விகாரந்தொட்டு
நிற்குண விதேகமுத்தி நிலைபரி யந்தஞ் சொன்ன
சற்குரு வினைவிடாமற் சந்தத மநுசரித்தான் 2.

(இ – ள்) நற்கருத் துடையோனாகி – சுத்த சத்துவ விருத்தியை யுடையவனாகி, (அதனால்) ஞானவானாகி – அப ரோட்ச ஞானத்தை யுடையவனாகி, நின்றோன் – நின்ற சீடன், மர்க்கட நியாயம் போலே – மர்க்கட நியாயத்தைப் போலவே, மகா பூதவிகாரம் தொட்டு – தூல சரீர முதல், நிற்குண விதேக முத்திநிலை பரியந்தம் – சத்துவ குணமுமிறந்த விதேக கைவல்யம் வரை, சொன்ன – அநுக்கிரகித்த, சற்குருவினை விடாமல் – ஞானசாரியரை விட்டு நீங்காமல், சந்ததம் – சதா காலமும், அநுசரித்தான் – பணிவிடை செய்துவந்தான்.

(ப – ம்) பிரமானந்தமயமான சுத்த சத்துவ விருத்தியை யுடையவனாகி யென்பார், "நற்கருத்துடையோனாகி" யென வும், தேகாதி பிரபஞ்ச மில்லை யென்றும், சின்மாத்திரமே தானென்றும் அறிகின்றதான, அப் பிரதிபந்தாபரோட்ச ஞானத்தை யுடையவனாகி யென்பார், "ஞானவானாகி" யென வும், மார்ச்சால நியாயம் போலன்றிக் குரங்குக் குட்டியானது அந்தக் குரங்கு எந்த எந்த விடத்துச் செல்லினும் அக் குரங்கை விட்டு நீங்காததுபோல, உத்தம பக்குவனாதலாலும் அநுபவத்தை யடைந்ததனாலும் தூல சரீரமுதல் விதேக முத்திவரை அநுபவமுண்டாகும்படி அநுக்கிரகித்த ஞானா சாரியர் எந்த எந்த விடத்திற் சென்றாலும் விட்டு நீங்காது பணிவிடை செய்து வந்தானென்பார், "மர்க்கட நியாயம் ... அநுசரித்தா" னெனவுங் கூறினார்.

(தா — ம்) அநாத்ம வுணர்வை விட்டு ஆத்ம வுணர்வை அடைந்த சிட்டன் அத்தியாரோப அபவாத முதலானவற்றை அநுக்கிரகித்த ஆசாரியரை விட்டு நீங்காது பணிவிடை செய்து நின்ற னென்பதாம்.

(அ — கை) ஆசாரியர் சிட்னை அநுபவம் வினுதல்.

சந்ததம் புருடன்றன்னைச் சாயைபோல் விடாமலன்பாம்
மைந்தனை நோக்கிச்சாட்சி மாத்திரமாய் நின்றுயோ
சிந்தையிலைய மெல்லாந் தீர்ந்தவோ தெளிவினுள்ளே
அந்தரங் கலந்ததுண்டோ வநுபவமுறை செய்வாயே. 3.

(இ — ள்) புருடன் தன்னை சந்ததம் — புருஷனை எப்போதும் விட்டு நீங்காத, சாயைபோல் — நிழலைப்போல, விடாமல் அன்பாம் மைந்தனை நோக்கி — விட்டு நீங்காமல் அப்பிரியமின்றித் தன் கருத்துப்படி சிரத்தையுடன் நடந்துவந்த சிட்னைப் பார்த்து, சாட்சி மாத்திரமாய் நின்றுயோ — பிரத்தியக்கபின்ன சர்வ சாட்சி மாத்திரமாக விளங்குகின்றுயோ, சிந்தையில் ஐயம் எல்லாம் — அந்தக் கரணத்தின் கண்ணுள்ள பிரமாண பிரமேயாதி சமுசய பாவனைகள் முழுவதும், தீர்ந்தவோ — தீர்ந்து தெளிந்திருக்கின்றனையோ, தெளிவின் உள்ளே — தெளிந்த வுனது புத்தியின்கண்ணே, அந்தரம் கலந்ததுண்டோ — விபரீத பாவனை வுதித்துளதோ, அநுபவமுறை செய்வாய் — உனதநுபவ மெய்ப்படி சொல்லுவாய்.

(ப — ம்) புருஷன் நிழல் அவனை நீங்காது அவன் அசைத்தபடி அசைகின்றது போல, ஆசாரியரை விட்டு நீங்காது தற்சுதந்திரமின்றிச் சாதியாச் சிரமத்துக்கு வழுவான செய்கையிலேவிவிடினும் புலியாதி மீது செலுத்தியிடினும் அப்பிரியமின்றிச் சிரத்தையுடன் அவர் கருத்துப்படி நடந்துவந்த சிட்னென்பார், ''சந்ததம் — மைந்த'' னெனவும், அசம்பாவனை நீங்கிப் பிரத்தியக்கபின்ன சர்வ சாட்சி மாத்திரமாக விளங்குகின்றுயோ யென்பார், 'சாட்சி ... நின்றுயோ'' வெனவும், பிரமாண பிரமேயாதி சமுசய பாவனைகள் தீர்ந்து தெளிந்திருக்கின்றனையோ ! என்பார், ''சிந்தையில் ... தீர்ந்தவோ'' எனவும், சருவமும் பிரமமயமாய்க் கண்ட வுனது தெளிவின் கண் நீ நான் அது இது முதலான விபரீதபாவனை வுதித்துள

வேர்வென்பார், "தெளிவினுள்ளே ... கலந்ததுண்டோ" வெனவும் கூறினர்.

(தா – ம்) வேதாந்த வாக்கியம் அத்துவித பிரமத்தைப் பிரதிபாதிக்கின்றதா? இன்று வென்றது, பிரமாண சமுசயமெனவும், ஆத்மாவுக்கும் பிரமத்துக்கும் பேதமுண்டோ இன்று வென்றதும், ஞான சாதனம் எவை என்றதும் மோட்ச சாதனம் எவை என்றதும் ஆகிய இவைகள் பிரமேய சமுசய மெனவும், இவ்வித சமுசயங்களால் ஆத்மவுணர்வை மறைத்தலும் அதில் சமுசயமும் பேதமுமின்றிச் சின்மாத்திரமாய் விளங்குகின்றுயோவென வினாவினதாம்.

(அ – கை) அவ்வினு மூன்றிற்கு முத்தரமாகச் சீடன் விண்ணப்பஞ் செய்தல்.

எனவுரைத் தருளுமாசா னிருபதம் வணங்கியெந்தாய்
சனனவன் காட்டின்மோகத் தமத்தெழு பேதப்பேய்கள்
உனதரு ளுதயவெற்பி லுபதேச வருக்கன்றோன் றி
மனவிழி தெரியஞான வான்கதிர் பரந்தாலுண்டோ. 4

(இ – ள்) எனவுரைத் தருளும் – என்று கேட்டருளிய, ஆசான் – ஞானசாரியருடைய, இருபதம் வணங்கி – உபய பாதார விந்தத்தையும் நமஸ்கரித்து, எந்தாய் – எனது பிதாவே, சனனவன்காட்டில் – பிறவியாகிய கடத்தற்கரிய ஆரண்ணியத்தில், மோகத்தமத்து – அஞ்ஞானமாகிய இருளில், எழுபேதப் பேய்கள் – தோற்றுநிற்கும் விபரீத பிசாசுகள், உனதருள் உதய வெற்பில் – உம்முடைய கிருபையாகிய உதயகிரியில், உபதேச அருக்கன்றோன்றி – ஞானோபதேச மென்னும் சூரியன் உதயமாகி, மனவிழி தெரிய – உளக்கண் விளங்க, ஞானவான் கதிர் பரந்தால் – ஞானமாகிய பெருமையுள்ள கிரணங்களை வியாபிக்கச் செய்தால், உண்டோ – உளவோ இல்லை.

(ப – ம்) தச்சன் கோணலாகிய மரத்தை நூலைப்போட்டு ஒழுங்கு செய்து அதில் இராம கிருஷ்ணுதி செயவது போல், முமுட்சுக்களுடைய மனதில் காமாதியாகிய கோணலை ஞான சாத்திரமாகிய நூலைப் போட்டு, நேரான சுத்த சத்துவ மனதாகச் செய்து, அதில் ஆத்ம சொரூபம் விளங்கும்படி செய்

பவராதலால், "ஆசா" னெனவும், ஆசாரியரிடத்துச் சீடன் அறிவிக்க வேண்டியதை நமஸ்கரித்து விண்ணப்பஞ் செய்ய வேண்டுமெனும் வேதவிதிப்படி உபய பாதார விந்தத்தையும் நமஸ்கரித்தா னாதால், "இருபதம் வணங்கி" எனவும், அசாத்திர பிரபஞ்சத்தின் வழிச் செல்லாது தடுத்துச் சாத்திரப் பிரபஞ்சத்தின் வழியே செலுத்துகின்ற வராதலால், "எந்தா" யெனவும், தத்துவ ஞானத்தினாலன்றி மற்ற சரியை கிரியையாதிகளால் கெடுக்கக் கூடாததாம் (காடானது அளவிட்டப்படாததுபோல) எழுவகைப் பிறப்பில் ஒவ்வொரு வகையில் அநேக நாம ரூபமாக விரிந்திருப்பதால், "சனனவன் கா"டெனவும், இருளானது பதார்த்தங்களைத் தெரியவொட்டாமல் மறைப்பது போலச் சொரூபமே தானெனத் தெரிய ஒட்டாமல் மறைத்தலினால், "மோகத்தம" மெனவும், இருளிற் றோற்றுவதாயும் அவை நீங்கில் கெடுவதாயும் சகலருக்கும் பயங்கர ரூபமாக நின்று துன்பத்தைச் செய்வதாயு மிருக்கின்ற பிசாசத் தோற்றத்தைப் போல்,இப்பேதம் மயக்கத்தில் தோற்றுவதாயும் அவை நீங்கில் கெடுவதாயும் ஒன்றுக்கொன்று தாரதம்மியமாய் நின்று பிறவித் துன்ப முதலியவைகளைச் செய்விக்கின்றதாயும் இருத்தலால், "பேதப் பேய்" எனவும், மலையானது அசையாமல் நிறுத்தலள வாலளவு பட்டாமலிருக்கின்றது போல, அருளானது நீங்காமலும் அளவிட்டப்படாமலும் இருக்கின்றமையால், "அருளுதய வெற்" பெனவும், சூரியன் இருளை நீக்குவதுபோல, ஞானோபதேசம் அஞ்ஞான விருளை நீக்குகின்றமையால், "உபதேச வருக்க" னெனவும், சூரிய னுதித்தவுடனே இக் கண்ணுக்கு வஸ்து தோற்றுவதுபோல ஞான உபதேசமானவுடனே சத்துவ மனத்துக்குச் சொரூபம் தோற்றுகின்றமையால், "மனவிழி தெரிய" எனவும், சூரிய கிரணம் வியாபித்தபோது பிசாசத் தோற்றம் நீங்குவது போலச் சகச ஞானத்தால் சீவேசுவர சகபேதம் நீங்குமாதலால், "ஞானவான் ... உண்டோ" வெனவும் கூறினர்.

(வி — ரை) அருக்கன் தோன்றி . என்றதனால் அசம்பாவனையும், மனவிழி தெரிய வென்றதனால் சமுசய பாவனையும், ஞானவான் கதிர் [பாந்தாலுண்டோ வென்றதனால் விபரீத பாவனையும் நீங்கின வெனக் கொள்க.

(தா – ம்) ஆசாரியரை நமஸ்காரஞ் செய்து உமது அநுக்கிரகத்தால் அசம்பாவனையாதி நீங்கினவெனக் குறிப்பாக அறிவித்ததாம்.

(அ – கை) அசம்பாவனையாதி நீங்கிவிடின் யாம் உனக்கு உபதேசிக்க வேண்டுவதின்றே வெனக் கூறுவீராகில்,

மந்திர மூர்த்திதன்னுன் மாற்றிய பேய்போனாலும்
எந்திர மெழுதிக்கட்டி யினிவராவகை செய்வார்போல்
முந்தியுன் னுபதேசத்தான் மோகம்போனாலு மையா
புந்திநின் றுறைக்கவின்னம் புகலும்விண்ணப்ப முண்டே.

(இ – ள்) மந்திர மூர்த்தி தன்னுன் – உலகில் மந்திர மூர்த்தியினால், மாற்றிய பேய் போனாலும் – நீக்கிய பேயானது உடலை விட்டு நீங்கிப் போகினும், எந்திரமெழுதிக் கட்டி – மந்திர சக்கிரம் எழுதி அவ்வுடலில் பந்தித்து, இனிவராவகை – மீண்டும் அப் பிசாசு வராதபடி, செய்வார்போல் – செய்யா நிற்பவர்களைப் போல, முந்தி – பூர்வம், உன்னுபதேசத்தால் – தேவரீர் அநுக்கிரகித்த ஞானோபதேசத்தினால், மோகம் போனாலும் – அசம்பாவனையாதி மயக்கம் நீங்கினாலும், ஐயா – குருவே, புந்தி – சத்துவ மனம், நின்றுறைக்க, ஆத்ம சொரூபத்தில் நிட்டிலை பெற்று இருப்பதற்காக, இன்னம் – மேலும், புகலும் விண்ணப்பம் – அடியேன் தெரிவிக்க வேண்டியது, உண்டே – உளதே.

(ப – ம்) தேவரீர் அநுக்கிரகத்தால் அசம்பாவனையாதி மயக்கம் நீங்கினாலும் சத்துவ மனம் சங்கல்ப விகற்பமற்று ஆத்ம சொரூபத்தில் நிட்டிலை பெற்று இருப்பதற்காகச் சுவாமிகள் இன்னும் அநுக்கிரகிக்கும் பொருட்டு அடியேன் தெரிவிக்க வேண்டியதுளது என்று ளென்பார் "முந்தியுன் – உண்டே" யென்றார்.

(தா – ம்) சகசாநுபவம் வருகிறதற்குத் தடையாயுள்ள சந்தேகங்களை நீக்கும் பொருட்டு வினவத் தொடங்கினதாம்.

(அ – கை) அடியேன் தெரிவிக்க வேண்டியது என்னெனில்?

ஆகமப் பிரமாணத்தா லறியென்றும் வாக்குக்கெட்டா தேகமாம் பிரமமென்று மிதயத்தா லுணர்வாயென்றும் சோகமா மனத்திற்கெட்டா சுயஞ்சோதி யென்றுஞ்சொன் னீர், மோகமா மிரண்டுசங்கை முளைத்தன பறித்திடீரே. 6

(இ – ள்) ஆகமப் பிரமாணத்தால் அறி என்றும் – சுருதிப் பிரமாணத்தால் உனது நிஜ ரூபத்தை அறிவாய் என்றும், வாக்குக் கெட்டாது ஏகமாம் பிரமமென்றும் – அத்துவிதப் பிரமமானது சுருதி வாக்கியத்திற்கு அகோசர மென்றும், இதயத்தால் உணர்வா யென்றும் – மனதினால் உன்னை யறிவாயென்றும், சோகமா மனத்திற்கு எட்டா – துக்கமாகிய மனதிற்குக் கோசரிக்கக் கூடாத, சுயஞ்சோதி என்றும் – சொப்பிரகாச மென்றும், சொன்னீர் – தேவரீர் உபதேசித்தருளினீர், இதனால், மோகமாம் இரண்டு சங்கை– மயக்கமாகிய இருவித சந்தேகங்கள், முளைத்தன – எனது மனத்தின்கண்ணே உண்டாயின, பறித்திடீரே – அவைகளை நிவர்த்தி செய்வீராக.

(ப – ம்) பளிங்கு மண்டபத்தில் நாணுக்குத் தூண் தோற்றினாலும் ஒன்றேயல்லாமல் இரண்டில்லாதிருக்கின்றது போலவும், சொப்பனத்தில் பிரபஞ்சம் பல விதமாகத் தோற்றினாலும் புருடனொன்றேயாக (இரண்டில்லாது) இருக்கின்றது போலவும், சீவேசுவர சகத்து பலவிதமாகத் தோற்றினாலும் சச்சிதானந்தமாகச் சகலமுங் காணப்படுவதால் ஒன்றேயாக விருக்கின்ற பிரம சொரூபமென்பார், "ஏகமாம் பிரம" மெனவும், பஞ்சகோசமான பிரபஞ்சங்களைத் தானில்லா விட்டால் அறிவா ரில்லாதபடியினாலேயும் அறிவே வடிவாக இருக்கின்ற தன்னாலே சகலமும் அறியப்படுவதினாலேயும் இவைகள் எல்லாவற்றையும் அறிகின்ற தன்னை அறிதற்கு வேறே அறிவு வேண்டாதபடியினாலேயும், சொப்பிரகாச மென்பார் "சுயஞ்சோதி" யெனவும், பயிரினிடத்தி லுண்டான களைகளை நீக்கிப் பயிரை விருத்தியடையச் செய்வது போல எனக்கு உண்டாகிய மயக்கமான சமுசய மிரண்டையும் போக்கி எனது ஆத்மஞானத்தை விருத்தியடையச் செய்ய வேண்டுமென்று னென்பார், "மோகமாம் ... பறித்திடீரே" யெனவுங் கூறினர்.

(வி – ரை) முற்படலம் சத்தொடு சித்தானந்தமென்னும் 69-வது கவியில் "ஏக" மென்றும், எல்லாம் கண்டறியு மென்னும், 73-வது கவியில் "சுயஞ்சோதி" யெனவும் கூறி, அறிவுக்கு அறிவு செய்யுமென்னும் 70-வது கவியில் "அறிபடும் பொருள் நீயல்லை அறிபடாப் பொருளு மல்லை" என்றதைக் குறித்து இச் செய்யுளில் வினவினதெனக் கொள்க.

(தா – ம்) முற்படலத்தில் ஆசாரியர் சுயம்பிரகாசமாய் அத்துவிதமான வஸ்து வாக்குக் கெட்டுமெனவும், எட்டா தெனவும் மனத்திற் கெட்டு மெனவும் எட்டாதெனவும் கூறி யதைக் குறித்து அங்ஙனம் இரு பிரகாரமா யிருக்கலாமோ வென் உண்டாகிய ஐயத்தை நீக்கும் பொருட்டு இச் செய்யுளில் வேண்டிக்கொண்டதாம்.

(அ – கை) பிரமம் வாக்குக் ககோசரமாயும் கோசரமா யும் இருக்குமோவென்னு முதற் சங்கை தெளியும் பொருட்டு இச் செய்யுளில் பிரமம் வாக்குக் ககோசரமாமென்றறியும் படி ஆசாரியர் கூறுதல்.

மற்றைமுப் பிரமா ணத்தால் வத்துநிண் ணயங்கூ டாதே
உற்றதோர் விடயம் பூத முபயமன் றுத லாலே
குற்றமாம் குணவி சேடங் கூடாம லிருக்கை யாலே
இற்றது வாக்குக் கெட்டா தென்பது மறிவாய் நீயே. 7.

(இ – ள்) உற்றதோர் விடய மன்று—பிரத்தியக்ஷமின்ன பிரமமானது சுரோத்திராதி இந்திரியங்களோடு சம்பந்திப்ப தான சப்த முதலிய ஓர் விஷயமு மன்று, பூதமன்று – சீவ னன்று, உபயமன்று – துவிதமு மன்று, ஆதலாலே— ஆதலி னாலே, மற்றை முப்பிரமாணத்தால் – பிரத்தியட்சம், அநு மானம், உபமானமென்னும் ஏனைய மூன்று பிரமாணங்களால், வத்து நிண்ணயங் கூடாது— பிரம நிச்சயம் எப்படிக் கூடாதோ அப்படி, குற்றமாம் குண விசேடம் – குற்றமாகிய குண விசேஷங்களை, கூடாம லிருக்கையாலே – பொருந்தாம லிருத்தலினாலே, இற்றது – இப் பிரகாரமான அப் பிரமம், வாக்குக் கெட்டா தென்பதும் – வாக்குக் ககோசர மென் பதையும், நீயே அறிவாய் – நீயே தெரிந்துகொள்வாய்.

(ப — ம்) காட்சிப் பிரமாணத்தால் அறியப்படும் திரிசிய மல்லாதிருக்கின்ற அதிர்சியமான திருக்கென்பார், "உற்ற தோர் விடயமன்" றெனவும், தேகேந்திரியாதிகளை அபிமானித்து அசைத்துச் சுட்டி யறிகின்ற அநுமானத்தால் அறியப்படும் சீவனல்லா திருக்கின்ற நிர்ச்சீவனே பேரறிவென்பார், "பூதமன்" றெனவும், உபமானப் பிரமாணத்தினு லறியப்படும் துவிதமல்லா திருக்கின்ற அத்துவித மென்பார், "உபயமன்" றெனவும், அவாந்தர வாக்கியத்தால் அறியப் படும் குண குணி விசேட விசேடியமல்லா திருக்கின்ற நிர்க் குண நிர்விசேட மென்பார், "குண விசேடம் கூடாமலிருக்கை யாலே" எனவுங் கூறினர்.

(வி — ரை) அன்றென்பதை மூவிடத்துங் கூட்டிக்கொள்க.

(தா — ம்) பிரமம் வாக்குக் ககோசர மென்பதை உறுதிப் படுத்து நிமித்தம் பிரமம் அதிர்சியமான திருக்காயும், நிர்ச்சீவனே பேரறிவாயும், அத்துவிதமாயும், நிர்க்குண நிர்விசேட மாயும் இருப்பதால், பிரத்தியட்ச அநுமான உபமானப் பிரமாணங்களினாலும் அவாந்திர வாக்கியத்தினாலும் அறியப் படாததென அறிவித்ததாம்.

(அ — கை) பிரமம் வாக்குக் ககோசரமா மெனத் தெளியும் பொருட்டு ஆசாரியர் கூறுதல்.

வாக்கியந் தனக்கெட் டாது வத்துவென் றுரைத்த வேதம்
வாக்கிய விருத்தி யாலவ் வத்துவைக் காட்டிற் றன்றோ
வாக்கியங் களிலே மான மாவதே தென்று யாகில்
வாக்கியமிரண்டும்மெய்யேமறைகள்பொய்யாதுகேளாய். 9

(இ — ள்) வத்து—பிரமமானது, வாக்கியம் தனக்கெட்டா தென் றுரைத்த வேதம் — யாதொரு வாக்கியத்திற்கும் எட்டாதென்று பிரதி பாதித்த சுருதியானது, வாக்கிய விருத்தியால் — மகா வாக்கியத்தின் லட்சணை விருத்தியால், அவ் வத்துவை — அந்தப் பிரமத்தை, காட்டிற்று அன்றோ — தெரிவித்தது அல்லவா, வாக்கியங்களிலே— சுருதி வாக்கியங் கள் இரண்டில், மானமாவது — பிரமாணமாக அங்கீகரிக்கத் தக்கது, ஏதென்றுயாகில் — யாதென்று கேட்பாயானால்,

வாக்கிய மிரண்டும்— சுருதி வாக்கியங்கள் இரண்டும், மெய்யே— உண்மையே, மறைகள் பொய்யாது — சுருதிகள் அசத்தியம் கூறாது, கேளாய் — இன்னும் கேட்பாய்.

மறைகள் பொய்யாது—ஒருமை பன்மை மயக்கம்.

(ப — ம்) தொம்பத தற்பத வாச்சியார்த்தங்களை நீக்கி லட்சியார்த்தமான கூடஸ்தராகிய நீயே பிரமமென்று முற் படலத்தில் மகா வாக்கியம் அறிவித்தது என்பார், "வேதம்... அன்றோ" வெனவும், வேதம் பூர்வ மீமாம்சகர்கள் சம்மதப்படி அனாதியாதலாலும் தார்க்கிகர் சம்மதப்படி சர்வஞ்ஞத்வாதி ஐசுவரியமுடைய ஆப்தனான பரமேசுவர வாக்கிய மானதாலும் அசத்தியங்களைக் கூறாதென்பார், "மறைகள் பொய்யா" தெனவுங் கூறினார்.

(வி — ரை) காட்டிற்று அல்லவை என்றது முற் படலம் 81-வது "தத்துவமெனும்" கவியில் கூறினதெனக் கொள்க.

(தா — ம்) பிரமத்தை மகா வாக்கியம் முற் படலத்தில் அறிவித்ததே யெனக் கூறி "வாக்குக் கெட்டும் எட்டா" தென்பதை வேறொரு பிரகாரமாகத் தெரிவிக்கத் தொடங்கினதாம்.

(அ — கை) பிரமம் சுருதி வாக்கியங்களுக்கு அகோசர மும் கோசரமு மாமெனக் கூறுதல்.

தன்பதி யல்லாப் பேர்க டமையல்ல னல்ல னென்றாள்
அன்பனைக் கேட்ட நேர மவள்வெட்கி மௌன மானாள்
என்பது போல நீக்கி யிதன்றிதன் றெனச்சே டித்த
பின்பரப் பிரமந் தன்னைப் பேசாமற் காட்டும் வேதம்.

(இ — ள்) தன்பதி அல்லாப்பேர்கள் தமை—ஓர் உற்சவத் திற்குப்போய் வாரானின்ற ஓர் நாயகனையுடைய ஓர் நாயகியை மற்றொருத்திபார்த்து, உன்புருஷன்யாரென்றுகேட்க அதற்கு அவள் தனது நாயகனல்லாதவர்களை, அல்லன் அல்லன் என்றாள் — இவன் அல்லன் இவன் அல்லன் எனக்கூறினாள். அன்பனைக் கேட்ட நேரம் — நாயகனைச் சுட்டிக் கேட்ட காலத்தில், அவள் வெட்கி — அந் நாயகி நாணமுற்று, மௌன

மானுள் – சும்மா விருந்தாள், என்பதுபோல – இந்த நியாயம் போல, இதன்று இதன்று என நீக்கி – பிரமமல்லாத அசத்துக்களை இது பிரமமன்று இது பிரமமன்று என்று தள்ளி, பின் – பின்பு, சேடித்த பரப்பிரமந் தன்னை – சேதனரூபமாக அவசேஷித்த பரப்பிரமத்தை, பேசாமல் – மௌனமாக, வேதம் காட்டும் – சுருதி தெரிவிக்கும்.

(ப – ம்) பிரமம் இன்ன லட்சணமுடையதெனச் சுட்டிக் காட்டாது அசத்து சடம் துக்காதி லட்சணமுடைய தேகாதி சகத்தைப் பிரமம் அல்லவென்று நீக்குகிறதினால் அதை வேதம் குறிப்பாகக் காட்டுமென்பார், "நீக்கி ...வேதம்" என்றார்.

(தா – ம்) தூல தேகாதி ஒன்பதையும், விராட்டாதி ஒன்பதையும் நேதி களைந்து அவைகட்கு விலட்சணமான பிரம சொரூபத்தை வேதம் காட்டாமல் காட்டுமென்பதாம்.

(அ – கை) பிரமம் மனத்துக்கு அகோசரமாயும் கோசரமாயும் இருக்குமோவென்னும் இரண்டாஞ் சங்கை தெளியும் பொருட்டு ஆசாரியர் இச் செய்யுளில் உத்தரங் கூறுவான் றொடங்கி உகபற் சிருட்டியாக மனோ உற்பத்தி கூறுகின்றார்.

முந்திய சங்கை தீர மொழிந்ததை யறிந்து கொள்வாய்
பிந்திய சங்கை தீரப் பேசுமுத் தரநீ கேளாய்
இந்தியங் களுக்கி ராச னிதயமா மதினெண் ணங்கள்
புந்தியு மனமு மென்றே புறத்தகத் துலாவி யாடும். 10

(இ – ள்) முந்திய சங்கை தீர – பிரமம் வாக்குக் கெட்டு மெட்டாதென்ற சந்தேகம் நிவர்த்தியாகும்படி, மொழிந்ததை அறிந்து கொள்வாய் – நாம் கூறிய உத்தரத்தை அறிந்து தாரணை செய்வாய், பிந்திய சங்கை தீர – சுயஞ்சோதியாகிய பிரமம் மனத்துக்கு எட்டும் எட்டாதென்றது எவ்விதமென்ற சந்தேகம் நிவர்த்தியாகும்படி, பேசும் உத்தரம் நீ கேளாய் – நாம் அருளாநிற்கும் உத்தரத்தையும் நீ கேட்பாய், இந்தியங்களுக்கு – சர்வேந்திரியங்களுக்கும், இதயம் – ஆத்மா, இராசனும் – இராஜனுகும், அதினெண்ணங்கள் – அதன் ஸ்மரணமே, புந்தியும் மனமுமென்றே – புத்தியும் மனமுமென்றே, புறத்தகத்து – தேகத்திற்கு வெளியிலும் உள்ளிலும், உலாவி ஆடும் – சஞ்சரித்துக் கூத்தாடா நிற்கும்.

(ப — ம்) பசுவின் சரீரமெங்கும் பாலிருக்கினும் முலைக் காம்பில் பால் காணப்படுதல் போலச் சரீரமெங்கும் வியாபித் திருக்கினும் முக்கியமாய் இதயத்தில் விளங்கும் ஆத்மா வென்பார், "இதய" மென்றார்.

(தா — ம்) ஆத்ம ஸ்மரணமே மனமும் புத்தியுமாய்த் தோன்று மென்பதாம்.

(அ — கை) சீவ னுற்பத்தி கூறல்.

உன்முகம் போற்கண் ணாடிக் குள்ளொரு முகங்கண் டாற்போற், சின்மய வடிவின் சாயை சித்துப்போல் புத்தி தோன்றும், நின்மல விருத்தி யந்த நிழல்வழி யாயு லாவும், தன்மநன் மகனே யித்தைத் தானன்றோ ஞான மென்பார்.

(இ — ள்) உன் முகம்போல்—உனது வாஸ்தவ முகத்தைப் போல், கண்ணாடிக்குள் — தர்ப்பணத்தினுள்ளே, ஒரு முகம் கண்டாற்போல — வேறே ஒரு பிரதிபிம்ப முகத்தைப் பார்த்தாற் போல, சின்மய வடிவின் சாயை — சித்து ரூபமான ஆத்ம சாயை, சித்துப்போல் — வேறொரு சேதனம் போல், புத்தி தோன்றும் — புத்தியில் பிரதிபலிக்கும், நின்மல விருத்தி — களங்கமில்லாத விருத்தியானது, அந்த நிழல் வழியாய் — அந்தப் பிரதி பிம்பத்தை அனுசரித்து பகிர் முகமாய், உலாவும் — விஷயங்களில் செல்லும், தன்ம நன் மகனே — ஆனந்தாநுபவம் பெற்று இருக்கின்ற சீடனே, இத்தைத்தா னன்றோ — இவ் விருத்தியை யல்லவா, ஞானமெனபார் — விருத்தி ஞானமென்று பெரியோர் கூறுவர்.

(ப — ம்) புந்தியிற் பிரதி பிம்பித்த ஆத்ம சாயை சிதாபாச னென்பார், "சின்மய வடிவின் ... தோன்று" மெனவும், வேறுபாட்டறு அந்தர்முக நாட்டமாய் இருக்கின்ற மனமென்பார், "நின்மல விருத்தி" யெனவும், விட்ட பொருளைப் பற்றாது 'தேகாபிமானமின்றிச் சிவத்தைத் தவிர வேறொன்று நாடாது ஆனந்தாநுபவம் பெற்றிருக்கின்ற சீடனென்பார், "தன்ம நன்மக" னெனவும், சிதாபாசனுடன் சேர்ந்து பகிர் முகமாய் நாடுகின்ற இந்த விருத்தியே ஞான மென்பார், "இத்தைத்தான் ... ஞான" மெனவுங் கூறினார்.

(தா – ம்) விருத்தி ஞானமும் சிதாபாசனும் இனைய வெனக் கூறினதாம்.

(அ – கை) ஞேய உற்பத்தியும் ஒரு விடயத்தை விளக்க 'இரண்டு ஏதுக்கெனில் கூறுகின்றார்.

உருக்கிய தராநீர் நாநா வுருவங்க ளானுற் போல
விருத்திகள் கடப டாதி விடயமாய்ப் பரிண மிக்கும்
அருப்பல விடய மெல்லா மாபாசன் றோற்று விக்கும்
இருட்டினில் விளக்குங் கண்ணு மில்லாமற் பொருள்கா
[ணுதே. 12

(இ – ள்) உருக்கிய தராநீர் – உருக்கச்செய்த தராசலமானது, நாநா வுருவங்கள் ஆனுற்போல – அச்சில் விட்டவுடனே அந்த அந்த உருவங்களுக்குச் சமான வுருவங்கள் ஆவது போல, விருத்திகள் – மனோசங்கல்பங்கள், கடபடாதி விடயமாய் – கடமும் படமுமாகிய விஷய ஆகாரமாய், பரிணமிக்கும் – பரிணமித்து அந்த அந்த விஷயங்களின் மறைப்பைப் போக்கும், விடயமெல்லாம் – விஷயங்களையெல்லாம், அருப்பல ஆபாசன் றோற்றுவிக்கும் – அருவமான ஸ்புரணமென்னும் ஆபாசன் தோற்றுவிப்பன், இருட்டினில் – அந்தகாரத்தில், விளக்கும் கண்ணும் இல்லாமல் – தீபமும் நேத்திரமும் இன்றி, பொருள் காணுதே – பதார்த்தங்கள் எப்படிப் பிரகாசிக்கப்படமாட்டாதோ, அப்படி (ஆவரணத்தைப் போக்க விருத்தியும் ஸ்புரண ரூபப் பிரயோஜன நிமித்தம் சிதாபாசனும் இல்லாமல்) அநான்ம பதார்த்தங்கள் பிரகாசியாவாம்.

(ப – ம்) மனோ சங்கற்பங்களே சகத்தாகத் தோற்றுதலின் "விருத்திகள்...பரிணமிக்கும்" எனவும் கூறினார்.

(தா – ம்) மனோ விருத்தியே ஞேயமாகுமெனவும், அந்த ஞேயத்தைச் சிதாபாசன் விருத்தியுடன் கூடி விளக்கிவைக்குமெனவும் கூறினதாம்.

(அ – கை) பகிர்முக அந்தர்முக ஞானத்தால் அறிவது இவை எனத் திட்டாந்த மூலமாக நியாயம் கூறல்.

எரிகின்ற விளக்காற் கண்ணு லிருட்பொருள் காணல் வேண்டும், தெரிகின்ற பரிதி காணச் சென்றிடில் கண்ணே போதும், விரிகின்ற சகத்தைக் காண விருத்தியும் பலமும் வேண்டும், புரிகின்ற விருத்தி யொன்றே போதுமெய்ப் பொருள்காண் போர்க்கே. 13.

(இ – ள்) எரிகின்ற விளக்கால் கண்ணால் – பிரகாசியா நின்ற தீபத்தினாலும் நேத்திரத்தினாலும், இருள் பொருள் – இருட்டின்கண்ணுள்ள பதார்த்தங்களை, காணல் வேண்டும் – பார்க்க வேண்டும், தெரிகின்ற பரிதி காணச் சென்றிடில் – விளங்காநின்ற சூரியனைப் பார்ப்பதற்கு, கண்ணே போதும் – நேத்திரம் ஒன்றே போதுமானது, (அதுபோல்) விரிகின்ற சகத்தைக் காண – அனேகமாக விரிந்திருக்கின்ற பிரபஞ்சத்தை அறிவதற்கு, விருத்தியும் – விருத்தி ஞானமும், பலமும் வேண்டும் – சிதாபாசனும் வேண்டியது, மெய்ப் பொருள் காண்போர்க்கு – ஆத்மாவைத் தரிசிப்பவர்களுக்கு, புரிகின்ற விருத்தி ஒன்றே போதும் – முமூட்சுக்கள் விரும்புகின்ற விசார ரூபமான விருத்தி ஒன்றே வேண்டும்; சிதாபாசன் வேண்டுவதின்று.

(ப – ம்) பொய்யாயும் சடமாயும் இருக்கின்ற விடயத்தின் அஞ்ஞானத்தைப் போக்கிறதற்கு விருத்தி ஞானமும் அதை அறிதற்குப் பல ரூபமான சிதாபாசனும் வேண்டுமென்பார், "சகத்தைக் காண...வேண்டு" மெனவும், சன்மாத்திரமாயும் சுயம்பிரகாசமாயும் இருக்கின்ற ஆத்மாவைத் தரிசித்தற்கு முமூட்சுக்கள் விரும்புகின்ற விசார ரூபமான விருத்தி மாத்திரம் வேண்டுமென்பார், "புரிகின்ற ... காண்போர்க்" கெனவும் கூறினர்.

(தா – ம்) சடமான சகத்தை யறிய மனமும், சீவனும் வேண்டுமெனவும், சித்து ரூபமான ஆத்மாவை அறிய முன் சொல்லிய சத்துவ விருத்தி மாத்திரம் வேண்டு மெனவும், கூறியதாம்.

(அ – கை) மனத்தின் உருவம் கூறிப் பிரமம் மனத்திற்கு அகோசரமும் கோசரமுமெனத் தெளியும் பொருட்டு உத்தரங் கூறி முடித்தல்.

விருத்தியும் பலமூங் கூடும் விகாரமே மனமென் பார்கள்
கருத்தெழு விருத்திவேண்டுங் கணக்கினுன் மனத்திற்கெட்
வருத்தியபலமாமிந்த மனத்திற்கெட்டாதுகண்டாய் [டும்
அருத்தமிப் படியென்றைய மகன்றுநீ தெளிந்திடாயே.14.

(இ - ள்) விருத்தியும் பலமுங் கூடும் விகாரமே- அந்தக் கரண விருத்தியும் சிதாபாசனும் சேர்ந்த பரிணுமமே, மன மென்பார்கள் - மனமென்று சொல்வார்கள், கருத்தெழு விருத்தி வேண்டும் கணக்கினுல் :- அந்தக்கரணத்தில் எழா நிற்கும் சுத்த சத்துவ விருத்தி மாத்திரம் வேண்டுமென்னும் நியாயத்தால், மனத்திற் கெட்டும் - பிரமமானது மனதிற்கு விஷயமாம், வருத்திய் பலமா மிந்த மனத்திற்கு - துன்பத்தைச் செய்த சிதாபாசனேடு கூடிய மனத்திற்கு, எட்டாது கண்டாய் - பிரமத்தை யறியக்கூடாது, அருத்த மிப்படி யென்று - மனதிற்கு எட்டும் எட்டாதென்று சுருதி கூறின தற்குப் பொருள் இவ்விதமாமென்று, ஐயம் அகன்று - உனக்குண்டான சந்தேகம் ஒழிந்து, நீ தெளிந்திடாயே - நீ தெளிவாயாக.

(ப - ம்) பகிர்முக நாட்டமாய் சிதாபாசனுடன் கூடி இருக்கும் விருத்தியே மனமென்பார், "விருத்தியும் ... விகாரமே மன" மெனவும், வெய்யிலில் விளக்குப் போலச் சிதாபாசன் குன்றி அகமுகமாய் இருக்கின்ற சுத்த சத்துவ மனத்தினுல் பிரமத்தை யறியலா மென்பார், "கருத்தெழு ... எட்டு" மெனவும், விடயத்தைச் சத்தியமாய் நல்லது பொல் லாத தென்று பகுத்தறிந்து துன்பங் கொடுக்கின்ற சிதாபாசன் சேர்ந்த மனத்தினுல் பிரமத்தை யறியக்கூடா தென்பார், "வருத்திய...எட்டா" தெனவுங் கூறினுர்.

(தா - ம்) பிரம சொரூபம் சகத்தைச் சத்தியமாய் அறிகின்ற மனத்திற்கெட்டா தெனவும், சகத்தை மித்தையா யறிகின்ற மனத்திற் கெட்டுமெனவுங் கூறியதாம்.

(அ - கை) முற் கூறிய கடாவிடைகளாலும் கோசரா கோசரமில்லாத சுத்தப் பிரமமே தானென்றறிந்து அதில் உதிக்கும் மனத்தை அதில் கரைக்கும் பொருட்டு ஓர் சங்கை வினுதல்.

(வேறு.)

வஞ்சகமில் பரமார்த்த குருவே சொன்ன
வழிகளறிந் தேனினியோர் வசனங் கேளீர்
சஞ்சலமற் றகண்ட பூரணமாய்ச் சித்தந்
ததாகார மாவதன்றோ சமாதி யோகம்
உஞ்சலையொத் தலைவதுதன் சுபாவ மாகி
யொருகணத்திற் பலவுலகா யுதிக்கு மிந்த
நெஞ்சகம்வத் துவிலசையா நிவாததீப
நிலையடைவ தெப்படியோ நீர்சொல்வீரே. 15

(இ – ள்) வஞ்சகமில் பரமார்த்த குருவே – கபட மின்றி எதார்த்த சொரூபத்தைப் போதிக்கின்ற ஆசாரியரே, சொன்ன வழிகள் அறிந்தேன் – பிரமம் வாக்குக்கும் மனத்துக்கும் எட்டும் எட்டாதென்பதைப் பற்றி அநுக்கிரகித்த ஏதுக்களைத் தெரிந்துகொண்டேன், இனியோர் வசனங் கேளீர் – இனிமேலும் யான் கேட்டுக்கொள்ளும் ஓர் விண்ணப்பத்தைத் தேவரீர் கேட்டருளுவீர், சஞ்சலமற்று – நிச்சலமாய், அகண்ட – ஒன்றிலும் கண்டிக்கப்படாத, பூரணமாய் – அபரிச் சின்னமாய் உள்ள, ததாகாரம் – பிரமாகாரம், சித்தம் – மனமாவது, ஆவதன்றோ – ஆகுவதல்லவா, சமாதி யோகம் – சமாதியென்ற சித்த நிரோதம், உஞ்சலை யொத்து – ஊசல் சமானமாக, அலைவது – சலிப்பது, தன் சுபாவமாகி – தன்னுடைய இயற்கையாய், ஒரு கணத்தில் – ஒரு க்ஷணத்தில், பல உலகாய் உதிக்கும் – நாநா பிரபஞ்சாகாரமாய்ப் பரிணமிக்கும், இந்த நெஞ்சகம் – இச் சித்தமானது, வஸ்துவில் – பிரமத்தில், அசையா – சலியாத, நிவாத தீபநிலை – நிவாத தீபத்தின் ஸ்திதியை, அடைவது எப்படியோ – பொருந்துவது எவ்வண்ணமோ, நீர் சொல்வீர் – தேவரீர் அநுக்கிரகிப்பீர்.

(ப – ம்) ஆத்மாநுபவம் இல்லாதிருக்கப் பொருளாதியைக் குறித்து உளதுபோல் காட்டுதலின்றி எதார்த்த சொரூபாநுபவம் பெற்றுக் கருணையினால் எதார்த்த சொரூபத்தைப் போதிக்கின்ற ஆசாரியரே என்றான் யென்பார், "வஞ்சகமில் ... குருவே" யெனவும், அருகன் முதலியவராகம மாதிகள் போல மேலொன்றினால் கண்டிக்கப்படாத உபநிடத்துக்

களால் நிச்சயித்த சச்சிதானந்த நிறைவான பிரமாகாரமாய் மனமாகவேண்டு மென்பார் "அகண்ட...அன்றே" வெனவும், பிரபஞ்சமானது, கசப்புக்கு உவமையில்லாத வெல்லம் கசக்கின்றதென்னும் பிராந்தி போல, பிரமமாகிற பொருளிடத்தில் ஆரோபமான படியினாலும், அவ் வாரோபமான பிரபஞ்சத்திற் கதிட்டானப் பொருள் தன்னைவிட் வேறு இல்லாத படியினாலும், பொருளென்பார் "வஸ்து" வெனவுங் கூறினர்.

(வி—ரை) அகண்டம் என்னும் பதத்துக்கு உலோகாயுதன் சித்தாந்தம் அருகன் புத்தனாதி ஆகமத்தினாலும், அது தேவ கந்தருவ ராகமத்தினாலும், இச் சித்தாந்தங்க ளெல்லாம் பிரமாவின் ஆகமத்தினாலும், இது விஷ்ணுவின் ஆகமத்தினாலும் இது உருத்திராகமத்தினாலும். இவ் வாகமங்க ளெல்லாம் புராணத்தினாலும், இவை பாரதத்தினாலும், நீதி சாஸ்திரத்தினாலும், இவை வேதத்தின் கன்மகாண்டத்தினாலும், இது யுபாசனா காண்டத்தினாலும் கண்டிக்கப்படும். இத்தனை சித்தாந்தங்களையும் கண்டிப்பதாயும் வேறதிசயப் பிரமாணமின்றி சர்வ பிரமாணங்களுக்கும் கொடுமுடியா யிருக்கும் உபநிடதங்களால் நிச்சயித்ததாய் ஒன்றினாலும் கண்டிக்கப்படாததாய் இருக்கும் சச்சிதானந்தப் பிரமமே அகண்டமெனக் கொள்க.

(தா — ம்) மனமமைசயாம லிருத்தற் குபாயம் வினாவினதாம்.

(அ — கை) அச் சங்கைக் குத்தரங் கூறும் பொருட்டு ஆசாரியர் மனத்தின் முக்குணமும் அவைகளின் காரியமும் கூறல்.

கருதுமனோ குணமூன்று மூன்றிலொன்று
  கதித்தெழுந்தான் மற்றிரண்டுங் கரந்துநிற்கும்
தருமமிகுஞ் சத்துவமே லானபோது
  சன்மார்க்க மானதெய்வ சம்பத்துண்டாம்
மருவுரசோ குணமாகி லுலகதேக
  வாதனையாஞ் சாத்திரவா தனையுமாகும்
அருமகனே தமோகுணமே லானபோதி
  லசுரசம்பத் துண்டாகு மறிந்துகொள்ளே. 16

(இ — ள்) கருதும் — விஷயங்களைக் கருதும், மனோகுணம் மூன்றும் — மனதின் குணம் மூவிதமாம், மூன்றில் ஒன்று — அம் மூன்றில் ஒரு குணம், கதித்தெழுந்தால் — ஓங்கியெழு மாயின், மற்றிரண்டும் — ஏனைய இரண்டு குணங்களும், காந்து கிற்கும் — அடங்கியிருக்கும், தருமமிகும் — நிஷ்காமிய புண்ணியம் அதிகரித்ததால், சத்துவ மேலானபோது — சாத்வீக, குணம் அதிகரித்தபோது, சன்மார்க்கமான தெய்வ சம்பத் துண்டாம் — நன் மார்க்கமாகிய தேவ சம்பத்து உண்டாகும் மருவுராசோ குணமாகில் — காமிய புண்ணியத்தால் பொருந்தா கிற்கும் இராசத குணம் அதிகரித்தபோது, உலக் தேக வாதனையாம் சாத்திர வாதனையுமாகும் — உலக வாசனை தேக வாசனை சாத்திர வாசனையாகிய மூன்றுண்டாகும், அருமகனே — நன்மார்க்கமுள்ள சிட்டனே, தமோகுணம் மேலான போதில் — பாவ கன்மத்தினால் தாமத குணம் மிகுந்தபோது, அசுர சம்பத்துண்டாகும் — அசுர சம்பத்தாம், அறிந்துகொள் — இதனைத் தெரிந்துகொள்ளுதி.

(ப — ம்) நிட்காமிய புண்ணியத்தால் சத்துவ குணம் மிகுந்தபோது உற்பத்தி திதி லயதுன்பத்தை விசாரித்தல், மூட சங்கம் நீங்கல், ஆசை கோபம் மானம் முதலியவற்றை நீக்கல், பஞ்சேந்திரியங்களை யடக்கல், சாது சங்கத்திற் சேர் தல், குரு சேவை செய்தல், சிரவணாதி யப்பியாசித்தல், முத லிய தெய்வ சம்பத்துண்டாகு மென்பார் "தருமமிகு ...தெய்வ சம்பத்துண்டா" மெனவும், காமிய புண்ணியத்தால் இராசத குணம் மிகுந்தபோது உலகத்திலுள்ள சனங்களெல்லாம் இகழாது புகழவேண்டுமென்பது முதலாகிய சிந்தனையாகிய உலக வாசனையும் தேகம் நெடுநாளிருக்க வேண்டும் ஆரோக் கியமா யிருக்கவேண்டும் அழகா யிருக்கவேண்டு மென்பது முதலாகிய சிந்தனையாகிற தேக வாசனையும், உலகத்திலுள்ள சாஸ்திரங்களெல்லாம் படிக்கவேண்டும் அவைகளின் அருத்த மெல்லாம் அறியவேண்டும் அதில் கூறியபடியெல்லாம் அநுஷ்டிக்க வேண்டு மென்பது முதலாகிய சிந்தனையாகிற சாஸ்திர வாசனையும் உண்டா மென்பார் "மருவு ... சாஸ்திர வாசனையுமாகு" மெனவும், நன்மார்க்கத்தை யநுஷ்டித் திருக் கின்ற சிட்டனே யென்பார் "அருமகனே"யெனவும், பாவகன்மத் தினால் தாமதகுண மிகுந்தபோது ஒன்றை ஆகும் ஆகா தென்று பகுத்தறிதலின்மை ஒருக்காலும் லபியாத பொருளை

வாஞ்சித்தல், விருதாக் கோபஞ் செய்தல், அசத்தியங் கூறல், ஈசுரன், புண்ணிய பாவம், சுவர்க்க நரகம், இல்லையெனல்; யாரிடத்தினும் கடினமாக வசனித்தல், அநுசாரமாயிருத்தல், அவசியம் செய்யத்தக்க காரியத்துக்கும் பொருள் செலவு செய்யாதிருத்தல், கருமி உபாசகன் ஞானிபோல நடித்துப் பொருள் சம்பாதித்தல், முதலாகிய அசுர சம்பத்துண்டாகு மென்பார், " தமோ...அசுர சம்பத் துண்டாகு" மெனவுங் கூறினர்.

(தா – ம்) மனத்திற்கு சத்துவ் ராசத தாமதமெனு முக் குணங்களுள வெனவும், அவற்றி னொன் றதிகரிக்கின் மற்ற இரண்டு மடங்கு மெனவும், சத்துவ மிகுந்தபோது வைராக்கியாதி சிரவணாதி யுண்டா மெனவும், இராசத குண மிகுந்தபோது புகழை விரும்புதலும் தேகாபிமானமும் கரும சாஸ்திரம் படித்தலாதியு முண்டாகு மெனவும், தாமத குண மிகுந்தபோது காமாதி சிந்தனை அசத்தியம் கூறலாதி கொலையாதி செய்தல் உண்டாகுமெனவும் கூறியதாம்.

(அ – கை) மனோலய உபாயம் கூறல்.

மனது சத்துவ சொரூபமற் றிரண்டும்
வந்து கலந்தன வவற்றைமாற் றினற்போம்
தனது சன்மார்க்கத் தைவிடா திருந்தபோது
தமோகுணமும் ரஜோகுணமுஞ் சமிக்கும்பின்னைக்
கன பரிணமஞ் சலனம்போம் போனக்காற்
களங்க மற்றுநின்ற வாகாசம் போலும்
நினதுள மப்படியா மப்பிரமத் தொன்றாய்
நிருவிகற்ப சமாதியிலே நிற்குந் தானே. 17.

(இ – ள்) மனது சத்துவ சொரூபம் – மனதிற்கு சத்துவமே சொரூபமாம், மற்ற இரண்டும் – ஏனைய இரண்டு குணங்களும், வந்து கலந்தன – இடையே வந்து பொருந்தின, அவற்றை மாற்றினல் போம் – அவைகளை நீக்கினல் நீங்கும், (நீக்கும் உபாயம் யாதெனில்) தனது சன்மார்க்கத்தை – மனத்தின் சுபாவமான நன்மார்க்கமுள்ள தெய்வ சம்பத்தை, விடாது இருந்தபோது – நீக்காது அநுஷ்டிக்கும்போது, தமோ குணமும் ரசோ குணமும் சமிக்கும் – தேக தரும தூல

மாகிய் தாமத குணமும், பிராண தரும சலனமாகிய ராஜத குணமும் நீங்கும், பின்னை – பின்பு, கன பரிணமஞ் சலனம் போம் – கனமாகிய விஷய் பரிணமமும் ஒரு விட்யத்தினின்று மற்றொரு விட்யத்தில் தாவுகிற சலனமும் நீங்கும், போனக் கால் – அவைகள் நீங்கவே, களங்கமற்று நின்ற ஆகாசம் போலும் – மேக படலம் முதலிய் ஒழிந்த வானம் போல அதி சூட்சுமமாய் அசஞ்சல சொச்சமாக, நினது உளம் ஆம் – உன் மனமானது ஆகும், (அப்படி ஆகவே) அப்படியா மப் பிரமத்து – அவ்வித சூட்சுமமாகிய அந்தப் பிரமத்தில், ஒன்ருய் – ஏக ரசமாய், நிருவிகற்ப சமாதியில் – யாதொரு விகற்பமு மற்ற சமாதி நிட்டையில், தானே நிற்கும் – பிர யத்தின மின்றியே நிலைபெறும்.

(ப – ம்) நிச்சலமாய்ச் சூட்சும்மான சத்துவ குணமுடைய் மனத்திற்குப் பிராண தரும சலனமாகிய ரஜோ குணமும், தேக தரும தூலமாகிய தாமத குணமும் இடையி லுண் டாயின வாதலால் நீக்கினல் நீங்கு மென்பார், "மனது சத்துவ சொரூபம்...மாற்றினல் போம்" எனவும், மைத்திரி யாதி சற்குணங்களுடன் நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமானந்த அத்துவித சொரூபமே நானென்கின்ற சிந்தனை யாதி அனவரதம் செய்யில் இராஜதம் தாமதம் நீங்குமென்பார் "தனது சன்...சமிக்கு" மெனவுங் கூறினர்.

(தா – ம்) ஞானப்பியாசம் செய்யில் ரஜோ தமோ குணம் நீங்கிச் சத்துவ மனம் பாலிற் கலந்த சலம் போலப் பிரம சொரூபத்தில் லயிக்கு மென்பதாம்.

(அ – கை) திட்டாந்தத்துடன் உத்தரங் கூறி முடிக் கின்றார்.

களங்கமற்ற கண்ணடி தன்முன் வேருர்
களங்கமற்ற கண்ணடி காட்டும் போது
விளங்கியதன் மயமாகி யபேத மாகி
விகற்பமின்றி நிருவிகற்ப மானற் போல
அளந்தறியப் படாவிடிவாய்ச் சத்தாய்ச் சித்தா
யானந்த மாம்பிரமத் தைக்கிய மான
உளந்தெளிந்த படியிருந்தா லுலக மெங்கே
யுலேவெங்கேயென்றுசங்கையொழித்திடாயே. 18

(இ – ள்) களங்கமற்ற கண்ணுடி தன்முன் – சொச்சமான ஒரு தர்ப்பணத்தின் நேரே, வேறு ஓர் களங்கமற்ற கண்ணுடி காட்டும்போது – அந்நியமான ஒரு சொச்சமாகிய தர்ப்பணத்தைக் காண்பிக்கும்போது, விளங்கிய தன்மயமாகி – சொச்சமாகப் பிரகாசியாநின்ற அந்தக் கண்ணுடி மயமாய், அபேதமாகி – பேத ரகிதமாகி, விகற்பமின்றி – நிருவிகற்பமாய், நிருவிகற்பமானுற் போல – விகற்பமற்ற ஸ்திதி ஆயினுற் போல, அளந்தறியப்படா விபுவாய் – அளவிட்டு அறியக் கூடாத வியாபகமாய், சத்தாய் சித்தாய் ஆனந்தமாம் பிரமத்து – சச்சிதானந்தமாகிய பிரமத்தின்கண், ஐக்கியமான – ஏகமான, உளம் – சத்துவமனம், தெளிந்தபடி யிருந்தால் – தெளிந்தவண்ணமாகவே இருந்தால், உலக மெங்கே – சகத்தாகப் பரிணமித்தல் ஏது, உலேவெங்கே – சலித்தல் ஏது, என்று சங்கை ஒழித்திடாய் – என்பதாக நிச்சயித்து உனது சந்தேகத்தை நீக்குவாய்.

(ப – ம்) சிவன் முதல் ஒன்றுக்கொன்று விரிவான சுத்தம் வரை, வளேத்திருக்கின்ற மாயா விசிஷ்டராலும், மட்டுக் கட்டப்படாது விரிந்துள்ள பெரிதாயும், தேகத்திற்குள் நாலெனன்னும் இருபத்தெட்டுத் தத்துவங்களும் வெளியிலி தென்னும் ஏழு தத்துவங்களும் அவத்தாத் திரயங்களிலும் தோற்றி யழிந்து போகையிலும், கூடத் தோற்றி யழியாது நித்தியமா யிருக்கின்றதாயும், அறிவில்லாமற் சடமா யிருக்கின்ற சகல பிரபஞ்சங்களேயும் இயற்கை யறிவற்று செயற்கை யறிவாய்த் தோற்றுகின்ற சரீரத் திரயங்களேயும், இயற்கை யறிவாயிருந்து காண்கின்றதாயும், தம்ப முதல் பிரமா வரை எல்லோரிடத்திலும் எதை எதை விடுக்கினும் கைவிடப் படாது எவ்விடத்திலும் அதிகப் பிரியமாயும் இருக்கின்றதாயும், உள்ள பூரண சொரூப மென்பார், "அளந்தறிய ... பிரம" மென்றுர்.

(வி – ரை) விபு என்ற பதத்திற்கு விசிட்டனே வளேத்துக் கட்டினது சூட்சும சரீரம், அதை வளேத்துக் கட்டினது தூல சரீரம்; அநேகங்கோடி தூல சரீரத்தால் அடக்கப்படாதது தூல பிரிதிவி; இதனுல் அடக்கப்படாதது அப்பு; இதனுல் அடக்கப்படாதது அக்கினி, இதனுல் அடக்கப்படாதது வாயுவு; இதனுல் அடக்கப்படாதது ஆகாசம்; இதனினும்

விரிந்திருக்கும் விராட்டு; இதனினும் விரிந்திருக்கும் இரணிய கர்ப்பம்; இதனினும் விரிவாயிருக்கும் அவ்வியாகிருதம்; இதனினும் விரிவா யிருக்கும் அவ்வியத்தம்; இதனினும் விரிவாயிருக்கும் சுத்தம்; இவைகளை யெல்லாம் வளைந்திருக்கின்ற மாயா விசிஷ்டராலும் மட்டுக் கட்டப்படாமல் அனந்தமாய் விரிந்திருக்கும் சச்சிதானந்த சொரூபமே விபு வெனக் கொள்க.

(தா — ம்) அஸ்தி பாதிப் பிரியமாய் அகண்டமாய் இருக்கும் பிரம சொரூபத்திற் சத்துவ மனம் லயித்து அவ்வண்ண மிருக்கில் சலனப்படுதலும் சகத்தாகப் பரிணமித்தலும் அதற்கின்றென வறிவித்ததாம்.

(அ — கை) சத்து ரூபப் பிரமத்திற் சத்துவ மனம் லயித்தபோது சத்துக்கள் பிராரத்த போகம் புசிக்கும் விதம் தெரியச் சீடன் வினாதல்.

ஏகமாய் மனமிறந்தாற் சீவன் முத்த
ரிருக்குமட்டும் பிராரத்த மெதினா லுண்பார்
போகமா னதுபுசித்துத் தொலைப்ப தன்றோ
புசிப்பதென்றான் மனந்தானும் போன தன்றே
சோகமா மனமிறந்தாற் போக மில்லை
தோன்றுமெனின் முத்தரென்றுசொலக்கூடாதே
மோகமா மிதுதெளியக் குருவே நன்றா
மொழிந்தருள்வாய் தெளிந்ததன்றோ முத்திதானே.

(இ — ள்) ஏகமாய் மனமிறந்தால் — அத்துவிதப் பிரமத்தில் பாலிற் கலந்த சலம்போல மனமானது ஒன்றாய் நசித்தால், சீவன் முத்தர் இருக்குமட்டும் — சீவன் முத்தர்களின் தேகமுள்ள பரியந்தம், பிராரத்தம் — பிராரத்த போகங்களை, எதினால் உண்பார் — எந்த சாதனங்களினால் புசியா நிற்பர், போகமானது — பிராரத்த போகம், புசித்துத் தொலைப்ப தன்றோ — அநுபவித்துத் தீர்க்கவேண்டுமன்றோ, புசிப்ப தென்றான் — அநுபவித்துத் தீர்க்கவேண்டுவதுதானென்னில், மனந்தானும் போனதன்றே — போக சாதனமான மனமும் நசித்தது அல்லவே, சோகமாம் மன மிறந்தால் — துன்ப மயமான மனமானது நசித்தால், போகமில்லை — போகாநுபவம்

இல்லை, தோன்றுமெனின் – மனமானது நசியாமல் தோன்றி னால், முத்தரென்று சொலக்கூடாதே – சீவன் முத்தர்க ளென்று சொல்லலாமா, ஆனதால், மோகமாம் இது தெளிய– மயக்கமாகிய இந்தச் சந்தேகம் நீங்க, குருவே – ஆசாரியரே, நன்று மொழிந்தருள்வாய் – தகுந்தபடி உபதேசித் தருளுவீர், தெளிந்ததன்றோ முத்தி– சமுசய நீக்கமல்லவா சீவன் முத்தி.

(ப – ம்) மனமிறந்த சுழுத்தி மூர்ச்சையில் 'ஒருவருக்கும் யாதொரு விவகாரமும் யாதொரு புசிப்பும் இன்மை போல, அத்துவிதமான பிரம சொரூபத்தில் பாலிற் கலந்த சலம் போல மனம் நசித்தால் சீவன் முத்தருக்குத் தேகாந்தம் வரை ஒரு விவகாரமும் ஒரு புசிப்பும் இராதே யென்று னென்பார், "ஏகமாய் ... உண்பார்" ரெனவும், வியாசாதி சீவன் முத்தர் பிராரத்த போகம் புசித்தது புராணாதிகளிற் சொல்லப்பட் டிருப்பதினாலும், கடன் வாங்கினவன் கொடுத்துத் தீரவேண்டி யதுபோற், பிராரத்த கன்ம பலனைப் புசித்துத் தீரவேண்டிய தாதலாலும், பிராரத்த கன்மப்படி விவகாரஞ் செய்யாமலும், போகம் புசியாமலும், விட்டு நீங்காதே என்று னென்பார், "போகமானது ... தொலைப்பதன்றோ" எனவும், சாக்கிர சொப்பனத்தில் மனமிருத்தலால் சமுசார துன்பமும், அது இல்லாத சுழுத்தியில் துன்ப நீக்கமும் இருப்பதாலும், மனம் இறவாத பேர் முத்தரென்றால் எல்லோரும் சீவன் முத்தராக வேண்டு மாதலாலும், மன மிறவாதோர் சீவன் முத்த ராகாரே என்று னென்பார், "தோன்றுமெனின் ... சொலக் கூடாதே" யெனவும், ஆசாரியரே? சமுசய நீங்காவிடின் முத்தியில்லாத படியாலும், சமுசயத்தைப் போற் றுன்பங் கொடுப்பது வேறொன் றின்மையாலும், இப் பெரிய மயக்க மான சமுசயம் நீங்கத் தகுந்தபடி போதிக்கவேண்டு மென்று னென்பார், "மோகமா...முத்திதானே" யெனவுங் கூறினார்.

(தா – ம்) மனமிருந்தாற் சீவன் முத்தி கூடாது, மன மிறந்தாற் பிராரத்த போகம் புசித்தல் கூடாது, சீவன் முத்தரா யிருந்து பிராரத்தம் புசிக்கவேண்டு மாகையால் இங்ஙனம் ஒவ்வாதிருக்கின்ற சங்கையைத் தெரிவிக்கவேண்டு மென வேண்டிக்கொண்டதாம்.

(அ – கை) அச் சங்கைக் குத்தரங் கூறுவான் றொடங்கி மனோ நாசம் இரு விதமாக் கூறுகின்றார்.

மனநாசஞ் சொரூபமென்று மரூப மென்றும்
வகுத்துரைப்பா ரிருவகையா வருமி வற்றில்
வினவாத சீவன்முத்த ரிடத்தி லொன்றும்
விதேகமுத்த ரிடத்திலொன்று மேவுங் கண்டாய்
தனதான சத்துவமாய் மனஞ்சே டித்துத்
தமசுரசசு கணசித்தல் சொரூப நாசம்
அனகாசத் துவந்தானு மிலிங்க தேக
மடங்கும்போ தடங்குதலே யரூப நாசம். 20.

(இ – ள்) மனநாசம் – மனத்தின் நாசமானது, சொரூப மென்றும் – சொரூப நாசமென்றும், அரூபமென்றும் – அரூப நாசமென்றும், இரு வகையாய் வகுத்துரைப்பார் – இரண்டு விதமாகப் பெரியோர் பகுத்துக் கூறுவார்கள், வருமிவற்றில்– வாராநின்ற இவைகளில், வினவாத– கற்கவேண்டியதில்லாத, சீவன் முத்தரிடத்தி லொன்றும் – சீவன் முத்தர்களிடத்தில் சொரூபநாச மாகிய ஒன்றும், விதேக முத்தரிடத்தில் ஒன்றும் – அசரீர முத்தர்களிடத்தில் அரூப நாசமாகிய மற்றொன்றும், மேவும் கண்டாய்– பொருந்தி யிருக்கும், தனதான– தனது சுபாவமான, சத்துவமாய் – சாத்விக மாத்திரமாய், மனம் சேடித்து–மனமானது மிஞ்சி, தமசு ரசசுகள் நசித்தல்– இடையில் வந்த தமோகுணம் ரஜோ குணம் இரண்டும் நாசத்தை யடைதலே, சொரூப நாசம் – உருவ நாசமாகும், அனகா – மாசற்றவனே, சத்துவந்தானும் – தனது வாஸ்தவ சொரூபமான சாத்வீகமும், லிங்க தேக மடங்கும் போது – சூட்சும தேகம் அடங்குங் காலத்தில், அடங்குதலே– அடங்குவதே, அரூப நாசம் – மனத்தின் அரூப நாசமாகும்.

(ப – ம்) நிருவிகற்ப நிருவிசேஷ நித்தியானந்த நிட் பிரபஞ்ச சொரூபந் தானாகவும், பிரபஞ்சங் காலத் திரயத்திலு மில்லாததாகவும் அநுபவமாய் அறிந்திருத்தலால் கற்க வேண்டிய தில்லாதவ ரென்பார், "வினவாத சீவன் முத்த" ரெனவும், அஞ்ஞானாதி மாசற்றவனே என்பார், "அனகா" வெனவுங் கூறினார்.

(தா – ம்) மனத்தின் ராஜதம் தாமதம் நீங்கிச் சத்துவ குண மாத்திரமானால் உருவநாச மெனவும் அது சீவன் முத்த ருக் குண்டாமெனவும் அச் சத்துவ குணமும் லிங்க சரீரத்

துடன் அடங்குவது மனத்தின் அருவ ஙாசமெனவும் அது விதேக முத்தருக் குண்டாமெனவும் கூறினதாம்.

(அ – கை) உருவமின்றி யருவமா யுணர்வுருவமான மனத்தினுல் சீவன் முத்திசுகமும் பிராரத்த போகமும் அநுபவிக்கலாமெனல்,

சுத்தமாஞ் சத்துவமே யுண்மையாகுந்
துகளிருள்போ ஞன்மனமென்சொல்லும் போம்போம்
வர்த்தமா னத்தில்வந்த வுணவை யுண்பார்
வருவதும்போ வதுநினைந்து மகிழார்வாடார்
கர்த்தரா மகந்தையைவிட் டகர்த்தராகிக்
கரணவிருத் திகளவத்தை காண்பாராகி
முத்தரா யிருக்கலுமாம் புசிப்புங்கூடு
முட்டிலையென் றறிந்துசங்கை மோசிப்பாயே. 21

(இ – ள்) சுத்தமாம் சத்துவமே – பரிசுத்தமான சத்துவ குணமே, உண்மையாகும் – மனத்திற்கு வாஸ்தவ சொரூபமாகும், துகள் இருள் போனுல் – இராசத குணமும் தாமத குணமும் ஒழிந்துபோமாயின், மனம் என்சொல்லும் – மனனமென்னும் விவகாரமும், போம் போம் – இறந்துவிடும், வர்த்தமானத்தில் – நிகழ் காலத்தில், வந்த வுணவை – பிராரத்த கருமவசத்தால் வந்து அடையாநின்ற உணவுகளை, உண்பார் – உண்ணு நிற்பர், வருவதும் போவதும் நினைந்து – இனி வாரா நிற்பதையும் முன் போனதையும் அஞ்ஞானிகளைப் போல சிந்தித்து, மகிழார் வாடார் – சந்தோஷியார் துன்புறார், கர்த்தராம் அகந்தையை விட்டு – இதற்கு நாம் கர்த்தாவென்னும் சீவத்துவத்தை விடுத்து, அகர்த்தராகி–(அதற்கு விலட்சணமான) அகர்த்தாவாகி, கரண விருத்திகள் அவத்தை – அவத்தாத்திரய வியாபாரம் அவத்தாத்திரய அபிமானிகளுடைய அன்வய வெதிரேகங்களை, காண்பாராகி– காணு நின்ற சாட்சியாகி, முத்தராயிருக்கலும் ஆம் – சீவன் முத்தரா யிருக்கவும் கூடும், புசிப்பும் கூடும் – பிராரத்த போகம் புசித்தலும் ஆகும், முட்டிலை யென்றறிந்து – இவ்விதமிருத்தற்கு யாதொரு தடையுமில்லை யென்று நிச்சயித்து, சங்கை மோசிப்பாய் – உனது சமுசயத்தை நீக்குவாய்.

(ப — ம்) சஞ்சல சுபாவமாயும் காமக் குரோத முதலான வற்றை யுண்டாக்குவதாயு மிருக்கிற இராசதமும், தூல சுபா வமாயும் கலக்க முதலானவற்றை யுண்டாக்குவதாயும் இருக் கிற தாமதமும், நசித்தபோது, அதனைப் பார்க்கவேண்டும் இதனைப் பார்க்கவேண்டாம் அதனைச் செய்யவேண்டும் இத னைச் செய்யவேண்டாம் அதனைப் புசிக்கவேண்டும் இதனைப் புசிக்கவேண்டாம், என்றும் மனனம்பண்ணும் மனது இறந்து போகும், அசஞ்சல அதூல சுபாவமாயும் பரிசுத்தமும் ஞான மும் ஆனந்தமும் உண்டாக்குவதாயும். இருக்கிற சு பா வ் சொரூபமான சத்துவமா யிருக்குமாதலால், பிராரத்த கன்மப் படி நிகழ் காலத்திலுள்ள விவகாரத்தைச் செய்து போகம் புசிப்பா ரென்பார், "சுத்தமாம் ... உண்பா" ரெனவும்,

பேய்பிடி யுண்டோனுக்குத் தேகாபிமானமின்றி இதற்கு முன் நல்ல அன்னாதி புசியாதொழிந்தோமென்னும் விசனமும், இனிமேல் நல்ல அன்னம் புசிப்போமென்னும சந்தோஷமும் உண்டாகாதது போல், தேகாதிப் பிரபஞ்சம் காலத் திரயத் திலுமில்லை யென்றும், இருக்கான பிரம சொரூபமே தானென் றும், அபரோட்சமா யறிந்திருக்கின்ற ஞானிகளுக்கு, இறந்த காலத்தில் இன்ன விவகாரம் செய்யா தொழிந்தோம், இன்ன போகம் புசியாது விட்டோம், என்னும் சிந்தனையால் துன்ப மும், வருங்காலத்து இன்ன விவகாரம் செய்வோம், இன்ன போகம் புசிப்போ, மென்னும் சிந்தனையால் இன்பமும், உண் டாகா வென்பார், "வருவதும் ... வாடா" ரெனவும் உழவாதி யாகாதி சிரவணாதி செய்யாநின்ற சிதாபாசனுக்கு விலட்சண மாகவும், அவத்தாத்திரய வியாபாரம் அவத்தாத்திரய அபி மானிகளுடைய அன்னுவய வெதிரேகங்களைக் காண்கின்ற சாட்சியாகவு மிருக்கின்ற சீவன் முத்தரா யிருக்கவுங் கூடும்; பிராரத்த போகம் புசித்தலுமாகு மென்பார், "கர்த்தராம் ... புசிப்பும் கூடும்" எனவுங் கூறினர்.

(தா — ம்) தாமத ராசதம் நீங்குவதால் மனமிறந்துபோ மெனவும் சத்துவ மிருப்பதால் பிராரத்தபோகம் புசிக்க மன மிருக்கு மெனவும் பிராரத்த போகம் புசிக்குங் காலத்தில் சுக துக்கமுறா திருப்பார் ஆதலாற் சீவன் முத்தி கூடு மெனவுஞ் சங்கைக் குத்தரங் கூறி முடித்ததாம்.

(அ — கை) சத்துவ மனம் பிராரத்த கன்மப்படி விவகாரம் செய்யுங் காலத்திற் சமாதியா யிருத்த லெங்ஙனங் கூடுமென்னும் வினுவுக் குத்தரங் கூறல்.

விவகார வேளையெலாஞ் சமாதியென்றால்
விகற்பமன்றோ மனமலைந்து விடாதோவிட்டால்
அவதான நழுவுமன்றோ வென்றாயாகி
லதற்கொருதிட் டாந்தங்கே ளாசைகொண்டு
நவமாகப் பரபுருடன் றன்னைக்கூடி
நயந்தசுக மநுபவித்த நாரிநெஞ்சந்
தவமாக மனைத்தொழில்கள் செய்யும்போதுந்
தழுவியநு பவித்தசுகந் தனைவிடாதே. 22

(இ — ள்) விவகார வேளையெல்லாம் — விவகார காலமெலாம், சமாதி என்றால் — சமாதி நிஷ்டையாகவே இருப்பாரகளென்றால், விகற்பமன்றோ — விவகாரத்துக்கும் சமாதிக்கும் விருத்தமன்றோ, மனமலைந்து விடாதோ — அதனால் மனமானது சலியாதோ, விட்டால் — அப்படிச் சலித்தால், அவதானம் நழுவுமன்றோ — சொரூபம் நாமென்னும் ஞான நிச்சயம் நீங்குமன்றோ, என்றாயாகில் — என்று சங்கிப்பாயாகில், அதற்கு ஒரு திட்டாந்தங்கேள் — அச் சந்தேக நிவர்த்திக்குச் சமாதானமாக ஒரு திட்டாந்தம் நாம் உரைப்பக் கேட்பாய், ஆசைகொண்டு — இச்சித்து, நவமாக — புதிதாக, பரபுருடன் றன்னைக் கூடி — சோர புருடனைச் சேர்ந்து, நயந்தசுக மநுபவித்த — இஷ்டமான சுகத்தையடைந்த, நாரி நெஞ்சம் — நாரியினுடைய மனமானது, தவமாக மனைத் தொழில்கள் — தவத் தொழிலான கிரக கிருத்தியங்களை, செய்யும்போதும் — பண்ணுங் காலத்தும், தழுவி யநுபவித்த சுகந்தனை — அணைந்து அநுபவித்த விடய சுகத்தை, விடாதே — மறவாதே, அது போலென்றறி.

(ப — ம்) கட்டநிச்சயம் பண்ணுங் காலத்தில் பட நிச்சயம் நீங்குவது போற் பிராரத்வ வசத்தால் விவகாரஞ் செய்யுங் காலத்திற் சொரூப நாமென்னும் ஞான நிச்சய நீங்குமே யென்றுனென்பார், "அவதான நழுவுமன்றோ" வெனவும், பரபுருடனை நச்சியநாரி தவத் தொழிலான கிரக கிருத்தியத்தில்

மறதியும் அவ்த்தொழிலான சோர புருடனைக்கூடி யுண்டான சுகத்தில் நினைப்புமா யிருத்தல் போல, ஞானி பிராரத்துவ வசத்தாற் றொழில் செய்யும் போதும் அதில் மறதியும் தானடைந்த சொரூபானந்தத்தில் அழுத்தமான நினைப்புமா யிருப்பாரென்பார், "நவமாக ... சுகந்தனை விடாதே" எனவுங் கூறினர்.

(தா – ம்) சுத்த சத்துவ மனம் சொரூபானந்தத்தில் அழுந்தி யிருப்பதால் விவகாரம் செய்யும் போதும் சமாதியாகவே இருக்குமென்றதாம்.

(அ – கை) அகண்டமா யகர்த்தாவாகிய சீவன் முத்தர் கர்த்தத்துவம் வாராதபடிக்குப் பிராரத்த போகம் புசிக்கும் விதமும் மூவகையாய் இருப்ப ரெனவுங் கூறுதல்.

தேகத்தன லனுகியகர்த் தனுகிச்
சீவனின்றிப் பிரமமாய்த் தெளிந்தமுத்தன்
போகத்தை யுண்பனென்ருற் கருத்தாவாமே
பூரணமாம கர்த்தனுக்குப் போகமுண்டோ
சோகத்தை யறுத்தருளுங் குருவேயிந்தத்
துகளறுக்க வேண்டுமென்று சொன்னுயாகில்
மாகர்த்தன் மாபோகி மாத்தியாகி
வகைமூன்று யவரிருக்கு மகிமைகேளாய். 23

(இ – ள்) தேகத்தனலனுகி – ஸ்தூலதேகத்திற் பொருந்திய மனுட்த்துவாதி இல்லாதவனுய், அகர்த்தனுய் – கர்த்தத்துவ மில்லாதவனுய், சீவனின்றி – சீவத்துவ மில்லாமல், பிரமமாய்த் தெளிந்த முத்தன் – பிரம சுவரூபமாகத் தன்னைச் சாட்சாத்கரித் திருக்கும் சீவன் முத்தன், போகத்தை யுண்பனென்ருல் – விடய போகங்களைப் புசிப்பானென்று சொன்னுல், கர்த்தா வாமே – கர்த்தவ்வியம் உடையவனுகுமே, பூரணமா மகர்த்தனுக்கு – பரிபூரண பிரம சுவரூபமாகத் தன்னை யறிந்த அகர்த்தாவாகிய சீவன் முத்தனுக்கு, போகம் உண்டோ – போகாநுபவம் ஏது, சோகத்தை அறுத்தருளும் குருவே – துன்பத்தை நிவர்த்தித்த ஆசாரியரே, இந்தத் துகள் அறுக்கவேண்டு மென்று – இந்தச் சந்தேகத்தை நிவர்த்திக்க வேண்டு மென்று, சொன்னுயாகில் – நீ சங்கித்

தால், மாகர்த்தன் மாபோகி மாத்தியாகி — மாகர்த்தன் என்றும் மகா போகி யென்றும் மகாத்தியாகி என்றும், வகை மூன்ருய் — மூன்று விதமாய், அவர் இருக்கும் — அந்த சிவன் முத்தர்கள் இருக்கும், மகிமை கேளாய் — பெருமையைக் கூறக் கேட்பாய்.

(ப — ம்) உழவாதி இகலோக கிருத்தியஞ் செய்யும் மநுட்த்துவமும், யாகாதி பரலோக கிருத்தியஞ் செய்யும் சிவத்துவமும் சிரவணுதி மோட்ச கிருத்தியஞ் செய்யும் முமூட்சுத்துவமுமின்றி, அசல அக்கிரிய அமல அகண்ட ரூபந்தாஞக, அபரோட்சமாயறிந்த ஞானிக்கு, கண்டத்துவமும், கர்த்தத்துவமும், உண்டாக்கும் போகத்தைப் புசித்தல் கூடாதென்ருனென்பார், "தேகத்தனலஞகி ... போகமுண்டோ" வெனவும் கூறிஞர்.

(தா — ம்) அகர்த்தாவான சிவன் முத்தர் போகம் புசிக்கிற் கர்த்தத்துவம் வருமே, கர்த்தத்துவம் இன்றெனில் போகம் புசித்தல் எங்ஙனங் கூடுமென்னுஞ் சங்கைக் குத்தரமாகச், சிவன் முத்தர் மாகர்த்தன் மாபோகி மாத்தியாகியாயிருப்பர்ராதலால் கர்த்தத்துவம் வாராது போகம் புசிப்பரென அறிவித்ததாம்.

(அ — கை) மாகர்த்தன் இலக்கணம் கூறல்.

செய்கையுஞ் செய்விக்கையு மற்றிருக்குங் காந்தச்
　　சிலேமலேமுன் னிரும்புகள்சேட் டிக்குமாபோல்
செய்கையுஞ் செய்விக்கையு மற்றிருக்கு மென்முன்
　　சடமான வுலகமெலாஞ் சேட்டைசெய்யும்
மெய்கலந்த விந்திரிய விகாரரூப
　　விவகார விருத்திக்கும் விருத்திதாஞ
மெய்கலந்த சமாதிக்குஞ் சாட்சியேநான்
　　வெயில்போலென் றுறைத்தவனே விபுமாகர்த்தன்.

(இ — ள்) செய்கையும் செய்விக்கையும் அற்று இருக்கும் காந்தச் சிலே மலேமுன் — செய்தலும் செய்வித்தலு மற்று ஒன்ருயும் பெரிதாயும் அசைவற்றதாயும் இருக்கும் காந்தக் கல் மலேமுன், இரும்புகள் சேட்டிக்கு மாபோல் — அயஞூசி

முதலானவை சலித்தல் போல, செய்கையும் செய்விக்கையும் அற்று இருக்கும் என்முன் — செய்தல் செய்வித்தலற்று ஏகமாயும் பரிபூரணமாயும் நிருவிகாரமாயும் சித்தாயும் இருக்கும் எனது சந்நிதியில், சடமான வுலகமெலாஞ் சேட்டைசெய்யும் — அநேகமாயும் கண்டமாயும் விகாரமாயும் சடமாயும் இருக்கும் தேகாதிப் பிரபஞ்சம் தனக்குத் தானே தொழிற்படும், வெயில் போல் — சூரியன் உலக விவகாரத்துக்கும் விவகாரமின்மைக்கும் சாட்சியா யிருத்தல் போல், மெய்கலந்த இந்திரிய விகார ரூப விவகார விருத்திக்கும் — தேகம் வாக்காதி சுரோத்திராதி மனமாதி வேறுபாடான தொழிலுக்கும், விருத்திதானும் மெய்கலந்த சமாதிக்கும் — விவகார மற்றிருக்கிற சுத்த சத்துவ விருத்தியும் லயித்திருக்கும் சொரூப சமாதிக்கும், சாட்சியே நானென்று உறைத்தவனே — சாட்சி மாத்திரமாக நான் இருக்கிறேனென்று திடநிச்சயம் பொருந்தினவனே, விபுமா கர்த்தன் — மேலான மாகர்த்தனும்.

(ப — ம்) செய்தல் செய்வித்தலற்று ஒன்றாயும் பெரிதாயும் அசைவற்றதாயும் இருக்கும் காந்தக் கல் மலைமுன் அயவூசி முதலானவை சலித்தல் போல், செய்தல் செய்வித்தலற்று ஏகமாயும் பரிபூரணமாயும் நிருவிகாரமாயும் சித்தாயு மிருக்கும் எனது சந்நிதியில், அநேகமாயும் கண்டமாயும் விகாரமாயும் சடமாயு மிருக்கும் தேகாதிப் பிரபஞ்சம் தனக்குத்தானே தொழிற படுகின்றதெனத் திட நிச்சயத்துடன் இருப்பவன் மாகர்த்த னென்பார், "செய்கையும் ... சேட்டை செய்யு" மெனவும், சூரியன் றனது சந்நிதியில் அல்லி முதலானவை குவிதலுக்கும், தாமரை முதலானவை விரிதலுக்கும் மெழுகு வெண்ணெயாதி உருகலுக்கும், சேறு நெல்லாதி உலரலுக்கும், மற்றும் மனுடர்முதலிய வுயிர்கள் சகலதொழில்களையும் செய்கிறதற்கும், தொழில் செய்யாது நித்திரை செய்வதற்கும், சாட்சியா யிருத்தல் போல தேகம் வாக்காதி கன்மேந்திரியம் சுரோத்திராதி ஞானேந்திரியம் மனமாதி அந்தக்கரணங்களின் வேறுபாடான தொழிலுக்கும், விவகாரமற்றிருக்கின்ற சுத்த சத்துவ விருத்தியும் லயித்திருக்கும் சொரூப சமாதிக்கும், சாட்சியே நானென்று திட நிச்சயத்துடன் இருப்பவனே மேலான மாகர்த்த னென்பார், மெய் கலந்த ... விபுமாகர்த்த னெனவுங் கூறினர்.

(தா — ம்) அத்துவித சின்மாத்திரமான வெனது சந்நிதியிற் றனக்குத்தானே நடக்குந் தேக இந்திரியாதிகளின் விவகாரங்களுக்கும், அவைகள் இறந்து நின்ற ஞான சமாதிக்கும் சர்வ சாட்சி நானே யென்று திட நிச்சயத்துடன் அவைகளோடு கூடியும் கூடாது சுகதுக்க மற்றிருப்பவனே மாகர்த்தனென்பதாம்.

(அ — கை) மாபோகி மாத்தியாகிகளி னிலக்கணங் கூறல்,

அறுசுவையின் குணங்குற்ற மசுத்தஞ்சுத்த
மபத்தியம் பத்தியமென வூணுய்ந்திடாமல்
பொறுமையுடன் கிட்டினதைக் காட்டுத்தீப்போற்
போகங்கள் புசிப்பவன் மாபோகியாகும்
சிறிதுபெரிது கடனதந்நி யங்கணன்மை
தீமைகள் சேரினும்படிகச் செயல்போற்சித்தம்
வெறிதிருக்கு மவனேமாத்தி யாகியாவன்
விரதமிம்மூன் றுடையவரே வீடுளோரே. 25.

(இ — ள்) அறுசுவையின் ஊண் — சடுவித ரசங்களையுடைய உணவுகளை, குணம் குற்றம் — நல்லது பொல்லாதது, அசுத்தம் சுத்தம் — சுத்தமல்லாதது சுத்தமானது, அபத்தியம் பத்தியம் — வேண்டியது வேண்டாதது, என — என்பதாக, ஆய்ந்திடாமல் — பகுத்துப் பாராமல், பொறுமையுடன் கிட்டினதை — சகித்தலோடு பிராரத்த வசத்தால் வந்து பொருந்தியதை, காட்டுத் தீப்போல்—காடாக்கினியைப் போல, போகங்கள் புசிப்பவன் — உணவாதி போகங்களைப் புசிப்பவன் மாபோகியாகும் — மாபோகியாவன், சிறிது பெரிதுகள் — அற்பமானதும் பெருமையானதுமானவைகள், தனதந்நியங்கள் — தன்னுடையதும் பிறருடையது மானவைகள், நன்மை தீமைகள் — நன்கானதும் தீங்கானது மானவைகள், சேரினும் — தன்னை வந்தடையினும், படிகச் செயல்போல் — படிகத்தின் தன்மைபோல், சித்தம் வெறிதிருக்கும் அவனே — மனம் பற்றற்று இருக்கும் அவனே, மாத்தியாகி ஆவன் — மகாத்தியாகி எனப்படுவான், இம் மூன்று விரதமுடையவரே — இம் மூன்று வகை விரதமுடையவர்களே, வீடுளாரே — மோட்சத்தை யுடையராவர்.

(ப — ம்) காட்டுத் தீயானது சந்தன விருட்சமென்றும் எட்டி விருட்சமென்றும் பட்டதென்றும் பச்சை யென்றும் சிறிதென்றும் பெரிதென்றும் பகுத்துப் பாராமலும், தூர இருக்கும் பதார்த்தத்தில் எட்டிச் செல்லாமலும், எதை எதை தகிக்கினும் அதனதன் சுபாவத்தை அடையாமலும், பரிசுத்தமா யிருத்தல் போல, பரிபூரண ஆனந்த சொரூபத்திலுண்டான சராசரப் பிரபஞ்சமெல்லாம், ஆனந்த சொரூபமே என்கின்ற அநுபவத்தைப் பெற்று இருப்பதால், பிராரத்த வசத்தால் வர்த்தமான காலத்தில் சாதி ஆச்சிரமத்துக் குரித்தாய் வருமன்னாதி அருந்தல், வஸ்திராதி பொருந்தல், விடயங்களில் நல்லதென்றும் பொல்லாத தென்றும் உயர்ச்சி யென்றும் தாழ்ச்சி யென்றும் வேண்டுமென்றும் வேண்டா மென்றும் பகுத்துப் பாராமல் புசித்து, அதன் சுபாவத்தை யடையாது தனதானந்த ரசமா யநுபவிப்பவனே மாபோகி யென்பார், "அறுசுவை ... மாபோகி" யெனவும்,

படிகமானது பஞ்ச வர்ணத்தைப் பற்றியும் பற்றாதிருத்தல் போல, சகல சராசரப் பிரபஞ்சங்களும் சன்மாத்திர சொரூப மென்கின்ற அநுபவத்தைப் பெற்று இருப்பதால் பிட்சை யெடுத்தல் இராச்சியம் ஆளுதல் உழவாதி யாகாதி சிரவணாதி செய்தல், கூழாதி பாய சமாதி கம்பளியாதி பட்டு வஸ்திராதிகள் வரினும், இவைகளிற் றன்னுடையது வரினும், அயலாருடையது வரினும், நன்காயுளது வரினும், தீங்காயுளது வரினும், இவைகளை யொருபொருளாக மனத்திற் பற்றாது, சன்மாத்திரமாகக் கண்டு இருப்பவனே மாத்தியாகி யென்பார், "சிறிது ... மாத்தியாகி" யெனவும், சாந்தராயண முதலிய எவ்வித விரத மனுஷ்டித்த போதிலும், மாகர்த்தத்துவம் மாபோக்தத்துவம் மாத்தி யாகித்துவம் ஆகிய இம் மூன்று விரதமில்லாதார்க்குப் பந்த நீங்காதென்பார், "விரத ... வீடுளோரே" யெனவுங் கூறினார்.

(வி — ரை) சரீராதிப் பிரபஞ்ச மெல்லாம் மித்தை யென்றும், சச்சிதானந்தப் பரிபூரணப் பிரமமே தானென்றும், அபரோட்சமா யறிந்த ஞானிகள் விதி நிஷேதமின்றி வேண்டியவண்ணம் புசிக்கலாமெனச் சுருதிகள் கூறவும், சாதி யாச்சிரமத்துக் குரித்தானதை மட்டும் புசிப்பாரென விதி கூறிய தென்னெனின், ஞானிகளாலும் மாம்பழ மாதியிற் கொட்

டையாதியை நீக்கிப் புசித்தலும், முருங்கைக் காயாதியிற் சக்கையாதியை நீக்கிப் புசித்தலும், பகுக்கின்ற புத்தி யிருக்கின்ற வரைக்கும் சாதி ஆச்சிரமத்துக் குரித்தானதைப் பகுத்தே புசிக்கவேண்டு மாதலாலு மிந்தப் பிரகார மகாராமாயணமாகிய வாசிட்டம் முப்பத்தீராயிரங் கிரந்தத்திற் கூறியிருப்பதாலும் இங்ஙனங் கூறலாயிற்று எனவுங் கொள்க.

(தா – ம்) அகண்டானந்த வநுபவத்தினுல் அருந்தல் பொருந்தலான சகல விடயத்திலும் வேறுபாட்டற்று. அவைகளைத் தன தானந்த ரசமென்னும் திட நிச்சயத்துடன் அநுபவிப்பவனே மாபோகி யெனவும், அத்துவித சன்மாத்திர வநுபவத்தினுல் சராசரப் பிரபஞ்சங்கள் தனக்கயலல்ல வென்னும், நிச்சயத்துடன் சித்தத்தி லொன்றும் சிந்தியா திருக்கின்றவனே மாத்தியாகி யெனவும், இவ்விரதத் திரயமுடையோரே முத்தி பெறுவரெனவுங் கூறினதாம்.

(அ – கை) கிருத கிருத்தியன் இலக்கணம் தெரியும் பொருட்டுச் சீடனோர் சங்கை வினுதல்.

(வேறு.)

மெய்யுங்கொண்டு பிராரத்தந் தருவிதிவழி நின்றிடவும்
உய்யுங்கன்மிகளுக் கநுகுணமா வுறுதொழில் செய்திடவும்
செய்யுஞ்செய்கை முடிந்தவனென் றுரைசெப்புவ தெப்ப
டியோ, நையுந்துன்ப மகற்றிய குருவே நலமாவருள்வீரே.

(இ – ள்) மெய்யும் கொண்டு – தேகத்தைத் தரித்துக் கொண்டு, பிராரத்தம் தரு – பிராரத்துவ கருமத்தால் வந்த, விதிவழி நின்றிடவும் – நியதி மார்க்கத்தில் நிற்கவும், உய்யும் கன்மிகளுக்கு – மோட்சமடையக் கன்மங்களைச் செய்யும் கர்மிகளுக்கு, அநுகுணமா – அநுகூலமாய், உறுதொழில் செய்திடவும் – பொருந்துகின்ற கர்ம வுபாசனை வேதாந்த சாஸ்திர சிரவணம் செய்யவும், செய்யும் செய்கை முடிந்தவனென்று – ஞானியானவன் கிருத கிருத்தியனென்று, உரை செப்புவதெப்படியோ–கூறுகிற்பது எவ்விதமோ (நான் அதை அறிந்து கொள்ளக் கூடாதவனுக இருக்கிறேன்), நையும் துன்பம் அகற்றிய குருவே – நான் வருந்தும் தாபத்திரய துன்பங்களை

நீக்கிப் பிரமானந்தம் கொடுத்தருளிய ஆசாரியரே, நலமா அருள்வீர் – சந்தேகம் நிவர்த்தியாகத் தக்கதாக அநுக்கிரகிப்பீர்.

(ப – ம்) நிட்சேத கன்மத்தை விட்டுப் பரம்பரையாய் மோட்சமடைவதற்கேதுவான நித்திய நைமித்தியாதி கன்மமும், பிரமாதி தேவ வுபாசனையும், வேதாந்த சாஸ்திர சிரவணாதியும், செய்பவர்களென்பார், "உய்யுங் கன்மிக" ளெனவும், தாபத்திரய துன்பங்களை நீக்கிப் பிரமானந்தங் கொடுத்த ஆசாரியரே என்று னென்பார், "மையும்... குருவே" எனவுங் கூறினர்.

(வி – ரை) மெய்யு மென்ற பதத்துக்குக் காரண வஞ்ஞானம் தெரியாமல் பொய்யாவதைக் குறித்துக் காரிய தேகத்துக்கு மெய்யெனப் பெயர் வந்ததெனக் கொள்க.

(தா – ம்) தொழில் உண்டாக்கும் படியான தேகமும், பிராரத்த கன்மமுடைய சீவன் முத்தர் விவகாரம் பண்ணிக் கொண்டிருக்கவும், அவரை எங்ஙனம் கிருத கிருத்தியன் என்னலாமென ஆசாரியரை வினவினதாம்.

(அ – கை) அவ்வினாவிற் குத்தரங் கூறல்.

**ஆடவர்செய் தொழின்மூவகை யாகுமவித்தை வசத்துறுநாள், ஏடணை மமதை யகந்தையுளார்க்கே யிகபர விவகாரம், வீடணுகுவமெனு மிச்சையுளார்க்கே வித்தை படிப்பதெலாம், பாடன்மிகுந் தொழிலாற் பலனுண்டோ பரி பூரணமானால். 27**

(இ – ள்) ஆட்வர் செய்தொழில் – அனிட்டத்தை நீக்கி இஷ்டத்தைப் பெறும் பொருட்டுப் புருடர்கள் செய்யா நிற்கும் கிருத்தியங்கள், மூவகையாகும் – உழவாதி யாகாதி சிரவணாதி என்று மூன்றுவிதமாம், அவித்தை வசத்துறுநாள் – அஞ்ஞானத்தைப் பொருந்தியிருக்கிற காலத்தில், ஏடணை – ஆசையும், மமதை – மமத்துவாபிமானமும், அகந்தை – தேகேந்திரியாதி நானென்னும் அகம்பாவமும், உள்ளார்க்கே – உடைய மனுடத்துவ சீவத்துவ முடையவர்களுக்கே, இகபர விவகாரம் – முறையே உழவாதி இகலோக விவகாரங்களும்

யாகாதி பரலோக விவகாரங்களும் உளவாம், வீடணுகுவ மெனு மிச்சையுளார்க்கே – அஞ்ஞான அந்தத்தில் முமூட்சுக் களுக்கே, வித்தை படிப்பதெலாம் – சிரவணுதி செய்து தத் துவஞானம் சம்பாதித்தல் உளவாம், பரிபூரணமானுல் – பரி பூரண பிரமமே தாமானுல், பாடன் மிகுந் தொழிலாற் பல னுண்டோ – சிரவணுதி மோட்ச கிருத்தியத்தினுலும் மிகுந்த உழவாதி யாகாதி இகலோக பரலோக கிருத்தியங்களாலும் அடையும் பிரயோஜனம் வேறொன்றுண்டோ இல்லை.

(ப – ம்) அஞ்ஞானத்தைப் பொருந்தியிருக்கிற காலத் திற் றேகேந்திரியாதி தானென்றும், பிரபஞ்சம் சத்தியம் என் றும், மண் பெண் பொன்னுசையுடன் இருப்பவரில், மநுடத் துவ முடையோருக்கு, அனிட்டமாகிய வியாதி தாரித்திரியம் பகையைநீக்கி, இட்டமாகிய இகலோக சுகம்பெறும் பொருட்டு இகலோகத் தொழிலாகிய உழவு தொழவு வரைவு வாணிபம் வித்தை சிற்பமாகிய ஆறுவகையில், எதிலேனும் நல்முயற்சி யாய் இடம் பொருள் ஏவல் சம்பாதித்தலும், சீவத்துவமுடை யோருக்கு அனிட்டமாகிய நரக துன்பம் நீங்கி இட்டமாகிய சொர்க்கமடையும் பொருட்டுப் பரலோகத் தொழிலாகிய யாக தானுதி செய்து புண்ணியம் சம்பாதித்தலும் உளவாமென் பார், "அவித்தை...விவகார" மெனவும்,

அஞ்ஞானந்தத்திற் பிரபஞ்சம் பொய்யென்றும் பிரமம் சத்தியமென்றும் அபரோட்ச ஞானம் அடையவேண்டுமென் றும், இச்சையுடன் முமூட்சுத்துவ முடையோருக்கு அனிட் டமாகிய ஜனன மரணத்தை நீக்கி இட்டமாகிய பிரமானந் தத்தை அடையும் பொருட்டு, மோட்ச கிருத்தியமாகிய ஞான சாஸ்திர சிரவண மாதிசெய்து தத்துவஞானம் சம்பாதித்தல் உளவாமென்பார், "வீட்ணுகுவமெனும் ... எலாம்" எனவும், மநுடன் சீவன் முமூட்சுவா யிருப்பவர் செய்யவேண்டிய இகபர மோட்ச கிருத்தியத்தி லொன்றையும் பரிபூரண பிரம சொரூபமா யிருக்கும் ஞானிகள் செய்யவேண்டுவதில்லை, பிராரத்துவ வசத்தினுல் செய்யினும் அவர்கள் அதனுல் பயனடைபவரல்லர்; ஆனபடியால் அவர் செய்யவேண்டிய தெல்லாஞ் செய்துமுடிந்தவ ரென்பார், "பாடன் ... பரிபூரண மானு" லெனவுங் கூறினுர்.

(தா – ம்) அஞ்ஞான தசையில் இகபர உலக விவகாரங்களும் முமூட்சுதசையில் சிரவணாதி விவகாரங்களும் உளவாம் சீவன் முத்தி தசையில் பலவியாப்தியின்றி விருத்தியியாப்தியாக விவகாரங்களைச் செய்தலின் அவைகளைச் செய்தும் செய்திலரென்பதாம்.

(அ – கை) சீவன் முத்தருக்குச் சிரவணாதி தேவையில்லை என்றது உறுதிப்படும் பொருட்டுச் சீடன் வினுதல்.

குரவர்சிகா மணியேகேளீர் நீர்கூறின வழியொக்கும்
பரமுடனிகமு மிழந்தவரன்றோ பழகுவர் மெஞ்ஞானம்
விரவுமுயற்சியின் மீண்டவரதை யினிவேண்டுவரோ
வேண்டார், சிரவணமனனு திகள்வேண்டாவோ சித்த
முறைத்திடவே. 28

(இ – ள்) குரவர் சிகாமணியே – தேசிக சிரோரத்னமே, கேளீர் – அடியேன் சொல்லும் விண்ணப்பத்தையும் கேட்டருளுவீர், நீர் கூறியவழி – பரிபூரண ஞானிகளுக்குச் சிரவணாதியாகாதி உழவாதியால் பிரயோஜனம் உண்டோ என்று சொன்னது, ஒக்கும்–சம்மதமாக ஒவ்வும், பரமுடன் இகமும் இழந்தவரன்றோ – பரலோகத் திச்சையும் இகலோகத் திச்சையும் விடுத்தவர்களன்றோ, பழகுவர் மெஞ்ஞானம் – சிரவணாதியாகிய ஞானப்பியாசம் செய்யா நிற்பர், விரவு முயற்சியின் மீண்டவர் – இகலோக பரலோகத் தொழிலைச் சனன மரணந் தருவதென்று கருதிப் பொருந்திய அத் தொழில் முயற்சியினின்றும் ஞானப்பியாசத்தில் திரும்பினவர்கள், இனி அதை வேண்டுவரோ வேண்டார் – மீண்டும் அவ் வுழுவாதி யாகாதி தொழிலை விரும்பிச் செல்வரோ செல்லார், சித்தம் உறைத்திட – ஆத்ம சொரூபத்தை அறிந்த மனது அதில்திடப்படும் பொருட்டு, சிரவண மனனுதிகள் வேண்டாவோ – சிரவணம் மனனம் நிதித்தியாசனம் அவர்களுக்கு வேண்டியதில்லையோ.

(ப – ம்) இகலோக பரலோக சுகத்தை இச்சித்து உழவாதி யாகாதி செய்பவர் சிரவணாதியாகிய ஞானப்பியாசஞ் செய்யாரென்பர், "பரமுடன் ... மெஞ்ஞான" மெனவும், பரங்கி கையில் அகப்பட்டு அவனை நீங்கின பிராமணன் மறுபடி அவனைச் சேராது அவனைக் கண்டால் ஓடுவதுபோல

இக்லோக பரலோகத் தொழிலைச் சனனமரணந் தருவதென்று கருதி நித்தியா நித்திய வஸ்து விவேக முதலிய சாதன சதுஷ்டயத்தை அடைந்து அத் தொழிலை விடுத்துச் சற் குருவை யடைந்து சிரவணாதி செய்பவர், மோட்சந் தருவதாகிய அச் சிரவணாதியை விடுத்து மீண்டும் துன்பந்தருவதாகிய அவ் வுழவாதி யாகாதி தொழிலிற் செல்லாரென்பார், "விரவு முயற்சியின் ... வேண்டா" ரெனவும், நாட்டிய கம்பம் திட்டப் படும் பொருட்டுக் குத்திக் குத்தி கெட்டித்தல் போல, ஆத்ம சொரூபத்தை யறிந்த மனம் அதிற் றிட்டப்படும் பொருட்டுச் சிரவணாதி செய்ய வேண்டுமே என்று னென்பார், "சிரவண ... உறைத்திடவே" எனவுங் கூறினார்.

(தா - ம்) சீவன் முத்தருக்கு இகலோக பரலோக விவ காரம் வேண்டாதது போல, சிரவணாதியும் வேண்டாவோ வென வினாவினதாம்.

(அ - கை) அவ் வினாவிற் குத்தரங் கூறல்.

கிளர்மகனேகேள் தத்துவமறியார் கேட்டல்செயக் கடனே
தளர்வறு சிந்தித்தலின் முயல்வார்சிலர் சந்தேகங்களுளார்
தெளிதலினிற்பார் விபரீதப் பேய்தீரா வாதனையோர்
வெளியுருவா யறிவாய் நிறைவாயினர் வேண்டுவதொன்
[றுண்டோ. 29

(இ - ள்) கிளர் மகனே கேள் - ஆத்ம சொரூபமாய் விளங்குகிற சீடனே கேட்பாய், தத்துவம் அறியார் - ஆத்ம சொரூபத்தை அறியாதவர்கள், கேட்டல் செயக் கடனே - சிரவணம் செய்ய வேண்டுவது முறைமையே, சந்தேகங்களு ளார் சிலர் - ஆத்ம சொரூபத்தை அபரோட்சமா யறியாததி னாலே சமுசயமுடைய சிலபேர், தளர்வறு சிந்தித்தலின் முயல்வார் - துக்கம் நீங்கும்படியான மனனம்பண்ண எத்த னிப்பார், விபரீதப்பேய் தீரா வாதனையோர் - காமாதி வாச னையால் சிவேசுவர சகத்தாகிய பிசாசம் தோற்றுவிக்கும் விபரீதமாகிய பேத புந்தி நீங்காதவர்கள், தெளிதலினிற்பார் - நிதித்தியாசனம் செய்யா நிற்பர், வெளியுருவாய் - பராகாய மாயும், அறிவாய் - ஞான சொரூபமாயும், நிறைவாயினர் - பரிபூரணமாயு மிருப்பவர், வேண்டுவதொன்றுண்டோ -

வேண்டியதாய் அப்பியசிக்கத் தக்கது சிரவணாதிகளில் ஒன்றுண்டோ இல்லை.

(ப — ம்) ஆத்ம ஞானத்தைப் பெற்று அதனால் ஆத்ம சொரூபமாய் விளங்குகிற சீடனே என்பார், "இளர் மகனே" எனவும், திதி நட்சத்திராதி அறியாதவன் பஞ்சாங்கம் பார்க்க வேண்டுவது போல, ஆத்ம சொரூபத்தை யறியாதவர்கள் சிரவணஞ் செய்ய வேண்டுவதே தவிர, நித்திய சத்து ரூபமான ஆத்மாவே தானென்றிருக்கும் ஞானிக்கு அச் சிரவணங் தேவையில்லை என்பார், "தத்துவ மறியார் ... கட" னெனவும், பொன்னினுடைய மாற்று நிர்ணயம் தெரியாதவன் ஆணிவைத் துறைத்துப் பார்த்தல் போல, ஆத்ம சொரூபத்தை அபரோட்சமா யறியாததினாலே சமுசய முடையோர் துக்கம் நீங்கும்படியான மனனம்பண்ண வேண்டுமே தவிர நித்திய சித்து ரூபமான ஆத்மாவே தானென்று அபரோட்சமா யறிந்திருக்கும் ஞானிக்கு அம் மனனந் தேவையில்லை யென்பார், "தளர்வறு ... சந்தேகங்களுளா" ரெனவும், திக்குப் பிரமை கொண்டவன் எதார்த்தத்தைச் சிந்தித்துத் தெளிந்துகொள்ள வேண்டியது போல் ஆத்ம சொரூபத்தை அப்பிரதிபந்தாபரோட்சமா யறியாததினாலே தத்துவஞானத்தாலன்றி மற்றொன்றினாலும் நீங்காத காமாதி வாசனையால் சீவேசுவர சகத்தாகிய பிசாசம் தோற்றுவிக்கும் விபரீதமாகிய பேதபுத்தி நீங்காதோர் நிதித்தியாசனம் செய்ய வேண்டுமே தவிர, நித்திய பூரணானந்த சொரூபமான ஆத்மாவே தானென்று அப்பிரதிபந்தாபரோட்சமாய் அறிந்திருக்கின்ற ஞானிக்கு அந் நிதித்தியாசனந் தேவையில்லை யென்பார், "தெளிதலின் ... வாதனையோ" ரெனவும்,

சடமாயிருக்கின்ற பூதாகாயம், சங்கற்ப விகற்பமா யிருக்கின்ற மனாகாயம், அறியாமை வடிவமா யிருக்கின்ற அவ்வியத்தாகாயம், ஆகிய இவைகளுக்கு மேலானதாய் உற்பத்தி நாச மற்றதாய் நிரவயவமாய் சூட்சுமமாய் அமூர்த்தமா யிருக்கின்ற பராகாயமாயும், இந்திரிய ஞானம் அந்தக்கரண ஞானம் சீவ ஞானம் ஈச ஞானங்களுக்கு மேலான ஞானசொரூபமாயும், ஆனந்த மயமாதி பஞ்சகோச முதலானவற்றாற் பூரிக்கப்பட்டிருக்கின்ற சகல பிரபஞ்சத்திலும் எங்கும் நிறைந்திருக்கின்ற ஈசுவரனையும் பூரித்த பரிபூரணமாயும், இருப்பவ ரென்பார், "வெளியுருவாய் ... நிறைவாயினர்" எனவுங் கூறினார்.

(வி — ரை) "நிறைவா" என்ற பதத்துக்கு, பிராணமய கோசத்தினாற் பூரிக்கப்பட்டிருக்கின்ற அன்னமய கோசம், மனோமய கோசத்தினாற் பூரிக்கப்பட்டிருக்கின்ற பிராணமய கோசம், விஞ்ஞானமய கோசத்தினாற் பூரிக்கப்பட்டிருக்கின்ற மனோமய கோசம், ஆனந்தமய கோசத்தினாற் பூரிக்கப்பட்டிருக்கின்ற விஞ்ஞானமய கோசம், சிதாபாசனாற் பூரிக்கப்பட்டிருக்கின்ற இப் பஞ்சகோசங்கள், இவைகளாற் பூரிக்கப்பட்டிருக்கின்ற பஞ்ச பூதங்கள், இவைகளாற் பூரிக்கப்பட்டிருக்கின்ற சூட்சும காரண பிரபஞ்சங்கள், இவைகளிலும் எங்கும் நிறைந்த மாயா விசிட்டரையும், பூரித்திருப்பதால் பரிபூரண மெனக் கொள்க.

(தா — ம்) அஞ்ஞானாதியுள்ளவருக்கே சிரவணாதி செய்ய வேண்டும் அகண்டாகாச போத சொரூபமா யிருக்கின்ற ஞானிகளுக் கவை வேண்டுவனவல்ல வென்பதாம்.

(அ — கை) விவகார நீங்கியிருக்கின்ற சீவன் முத்தருக்கு எங்ஙனம் விபரீதமுண்டாகுதல் கூடுமெனச் சிட்ன் வினாதல்.

ஐயாகேளீர் தத்துவஞானியு மஞ்ஞானிகள் போலே
செய்யாநின்றேன் கண்டேனுண்டேன் சென்றே னென
லாமோ, பொய்யாம்விபரீதங்க ளவற்குப்போயின வென்
றீரே, மெய்யாம் பிரமவிகாரமி தன்றேவெளியா வுரை
யீரே, 30

(இ — ள்) ஐயா கேளீர் — குருவே கேட்பீர், தத்துவ ஞானியும் — உண்மை ஞானியும், அஞ்ஞானிகள் போலே — அஞ்ஞானிகளைப் போலவே, செய்யாநின்றேன் — ஸ்நானாதி செய்கின்றேன், கண்டேன் — அவனைக் கண்டேன், உண்டேன் — அன்னாதிகளைப் புசித்தேன், சென்றேன் — இன்ன கிராமத்திற்குப் போனேன், எனலாமோ — என்று சொல்லலாமோ, பொய்யாம் விபரீதங்கள் — பொய்யாகிய சீவேஸ்வர சகத் தோற்றமாகிய விபரீதங்கள், அவற்கு — அந்த உண்மை ஞானிக்கு, போயின வென்றீரே — நீங்கினவென்று அருளிச் செய்தீரே; மெய்யாம் பிரம விகாரம் — சத்தியமா யிருக்கின்ற பிரம சொரூப விவகாரம், இது அன்றே — இதல்லவே, வெளியா உரையீர் — வெளிப்படையாக அநுக்கிரகிப்பீர்.

(ப – ம்) பழுதையை அறியாதவனுக்குப் பாம்பு தண்ட மாலை மெய்யாய்த் தோன்றினும் விசாரித்தால் அவை பொய் யாய்ப் போதல் போல மெய்யான பிரம சொரூபத்தை அறியா தவனுக்குப் பிராந்தியினாலே மெய்போற் றோன்றி விசாரிக்கிற் பொய்யாய்ப் போகின்ற ஈசேசுவர சகத் தோற்ற மென்பார், "பொய்யாம் விபரீதங்க" ளெனவும், நான் அக்கிரியன் நான் போதன் நான் அசலன் நான் அகண்டன் நான் அமலன் என்ற முக்கிய அகங்காரமாய் வசனிக்கும் சத்தியமா யிருக்கின்ற பிரம சொரூப விவகார மல்லவே, நான் கண்டேன் என்பது முதலான விவகார மென்பார், "மெய்யாம் பிரம ... இதன்றே" எனவும் கூறினார்.

(வி–ரை) விவகார மென்பது விகாரமென நடுக்குறையாய் வந்ததெனக் கொள்க.

(தா – ம்) சீவன் முத்தன் அஞ்ஞானிகளைப் போல விவ கரிக்கின் அவர்களுக்கு விபரீதம் எங்ஙனம் நீங்கிற்றென வினு வினதாம்.

(அ – கை) விவகாரம் பொய்யானாலும் அவை நீங்க வேண்டாவோ வெனல்,

ஓய்ந்தகனவிற் கண்டபழங் கதையோதுவன் வாதனையால்
ஆய்ந்தறி வுற்றவ னப்படிசெப்புவ னுபாசனு மாகான்
மாய்ந்தத னுடல் வேமளவும் விண்ணவன் மனிதனெனப்
படுவான், வீய்ந்தசிதா பாசன்போமளவும் விவகாரந் தொ
டரும். 31

(இ – ள்) ஓய்ந்த கனவிற்கண்ட பழங்கதை – சாக்கிர விவகாரம் ஒழிந்த சொப்பனத்தில் ஒருவன் யாகாதி கொலை யாதி செய்ததாகக் கண்டு விழித்தவன் பூர்வம் கண்ட அவை களை, வாதனையால் ஓதுவன் – செய்ததாய் பூருவவாசனையால் எப்படிச் சொல்லுவனோ, அப்படி – அவ்வண்ணம், ஆய்ந் தறிவுற்றவன் – தேகாதி பிரபஞ்சம் மித்தை என்றும் பிரம சொரூபம் சத்திய மென்றும் விசாரித்துப் பிரம சொரூபமா யிருக்கும் ஞானியானவன், செப்புவன் – பூருவ வாசனையால் வாக்கு மாத்திரமாகச் செய்தேனுதியாகக் கூறுகிறபன், ஆபா

சனுமாகான் — அங்ஙனம் விவகரிக்கினும் சீவத்துவம் உடைய்வனுகான், மாய்ந்ததனுடல் வேமளவும் — தேவத்துவமடையகங்காப் பிரவேசம் முதலானது ஆரம்பித்தவன் தேகம் வெந்து நீருகுமளவும், விண்ணவன் — தேவனுகி யிருப்பவன், மனிதனெனப் படுவான் — அந்நியரால் மநுட்னென்று விவகரிக்கப் படுவது போல, வீய்ந்த சிதாபாசன் போமளவும் — தத்துவ ஞானத்தால் அகம்பாவமிறந்த சீவத்துவம் அத்தியந்தம் நீங்கும் விதேக முத்திவரை, விவகாரம் தொடரும் — செய்தேன் எனல் முதலிய விவகாரம் தொடர்ந்து நிற்கும்.

(ப — ம்) சொப்பனத்தில் யாகாதி கொலையாதி செய்ததாகக் கண்டு விழித்தவன் அவைகளைச் செய்தேனென அன்னியரிடத்தில் கூறினும் அவன் மனதில் அவற்றைத் தான் செய்யவில்லை என்றிருப்பது போல, பிரம சொரூபத்தில் விவர்த்தமாய்த் தோற்றிய தேகாதிப் பிரபஞ்சமெல்லாம் சூரியன் முற் றோன்றுங் கானற் சலம்போன் மித்தை என்று விசாரித்து அவ்வண்ணம் அறிந்திருக்கின்ற தத்துவ ஞானியானவன் உலகத்தாருடன் வாக்குமாத்திரமாய்ச் செய்தேன் கண்டேன் புசித்தேன் எனக் கூறினும் மனதிற்றான் அங்ஙனம் செய்யவில்லை யென்று நிச்சயத்துடன் சீவத்துவம் நீங்கிச் சிவசொரூபமா யிருப்பர் ரென்பார், "ஓய்ந்த ... ஆபாசனுமாகான்" எனவும், கங்கா பிரவேசம் முதலான தாரம்பித்தவனைத் தேவனெனக் கூறினும் அத் தேகம் நீங்கும்வரை மனிதனென விவகரிக்கின்றது போல, தத்துவ ஞானம் வந்தவுடன் அகர்த்த அபோக்த அசல அறிவான பிரமமென்றிருந்தாலும் விதேக முத்திவரை செய்தேனெனல் முதலிய விவகாரம் விட்டு நீங்காதென்பார், "மாய்ந்த ... தொடரும்" எனவும் கூறினர்.

(தா — ம்) சொப்பனத்திற் கண்ட கற்பிதத்தைச் சாக்கிரத்தில் பொய்யாய்க் கண்டுகொண்டு சொல்வதுபோல அஞ்ஞான தசையில் சத்தியமாய்க் கருதிச் செய்த உலக விவகாரத்தையும் ஞான தசையின் மித்தையாய்க் கண்டு செய்யும் விவகாரத்தையும் முக்கிய வகங்காரத்துடன் சொல்வதேயன்றி உண்மை யன்றெனினும் விவகாரம் விதேகமுத்தி பரியந்தம் விட்டு நீங்கா தென்பதாம்.

(அ — கை) சீவன் முத்தருக்கு விவகாரமும் சமாதியும் வேண்டுமென்பதும் வேண்டுவதல்ல வென்பதும் அறியச் சீடன் வினாதல்.

ஆனலையா குருவேகாண்ப தசத்திய மென்றாலும்
நானுவிவ காரந்துய ரலவோஞான சுகந்தருமோ
போனாலன்றோ நன்றாநிட்டை புரிந்திடல் வேண்டாவோ
தானுநிட்டைபுரிந்தாற்செய்கைதவிர்ந்தவனெப்படியோ 82

(இ — ள்) ஆனால் — விதேக கைவல்ய பரியந்தம் விவகாரம் தொடருமானால், ஐயா குருவே — பிதாவாகிய ஆசாரியரே, காண்ப தசத்திய மென்றாலும் — விவர்த்தமாய்த் தோற்றும் பிரபஞ்சம் மித்தையானாலும், நானு விவகாரம் துயரலவோ — அந்த மித்தையான பிரபஞ்சத்தைப் பற்றிய அநேக வித தொழில் தாபத்திரய துன்பத்தைக் கொடுக்குமன்றோ, ஞான சுகந்தருமோ — பிரமானந்தத்தைப் பயக்குமோ, போனாலன்றோ நன்றாம் — அந்த விவகாரம் நீங்கினாலன்றோ அந்தப் பிரமானந்தம் உளதாம், நிட்டை புரிந்திடல் வேண்டாவோ — அதற்குச் சமாதியிருக்க வேண்டுமே, தானும் நிட்டை புரிந்தால் — தன்மயமாகும் சமாதி இருப்பானேயாகில், செய்கை தவிர்ந்தவ னெப்படி — கிருத கிருத்தியனாவது எவ்விதம்,

(ப — ம்) பழுதையிற்றோற்றும் பாம்பு மித்தையானாலும் அதைப் பார்த்த புருடனுக்குப் பயகம்பனாதி துன்பமுண்டாதல் போல, பிரமத்தில் விவர்த்தமாய்த் தோற்றும்பிரபஞ்சமு மித்தையானாலும், அந்த மித்தையான பிரபஞ்சத் தொழில் செய்யும்போது தாபத்திரய துன்பமுண்டாகு மென்பார், "காண்ப தசத்திய மென்றாலும் ... துயரலவோ" எனவும், விவகாரம் செய்யும்போது விடயானந்த முண்டாகுமே யன்றி பிரமானந்த முண்டாகாதே என்பார், "ஞான...சுகந்தருமோ" எனவும், நடக்கின்ற புருடனுக்கு அந் நடை நீங்கினால் சுக முண்டாவது போல விவகாரத்தை விட்டாலே சுகமுண்டாகு மென்பார் "போனாலன்றோ நன்றா" மெனவும், அப் புருடன் சுகமடைவதற்கு ஓரிடத்திலிருக்க வேண்டுவது போல, பிரம சுகமடைவதற்குச் சமாதியிருக்க வேண்டுமே என்பார், "நிட்டை ... வேண்டாவோ" வெனவும், செயிக்க வேண்டிய தாய் ஓர் சிமையாவது இருக்கின்றதென்று படையெடுத்துச்

செல்வோன் சகல சீமையுங் கைவசப்படுத்திக் கொண்டிருக்குஞ் சார்வ பௌமனான மகாராசா வாகாதது போல விவகார நீக்கம் வேண்டுமென்று சமாதி இருப்பானேயாகில் கிருத கிருத்தியனாகானே யென்பார், "தானும் நிட்டை ... செய்கை தவிர்ந்தவ னெப்படியோ" வெனவுங் கூறினார்.

(தா - ம்) துக்க ரூபமான விவகாரத்தை நீக்கிச் சுகமடையும் பொருட்டுச் சமாதியிருக்க வேண்டுமே எனவும் சமாதி இருக்கில் எங்ஙனம் கிருத கிருத்தியனாவ னெனவும் வினாவினதாம்.

(அ - கை) கிருத கிருத்திய ஞானிக்கு விவகாரம் தீருங் காலமும் அவன் யாதொரு தொழிலும் செய்வதில்லை எனவுங் கூறுகின்றார்.

தெரிதரு மகனேயாரம் பத்தொடுதீரும் விவகாரம்
உரியதியானமும் விவகாரங்களு முள்ளத் தொழிலன்றோ
துரியபரம்பொரு ளானவர் வேறொருதொழில் செய்வது
முண்டோ, அரியசமாதிகள் பழகுவனே லவனாரூடனு
மன்றே, 33

(இ - ள்) தெரிதரு மகனே - பிரம சொரூபத்தைத் தானென் றறிந்திருக்கிற சீடனே, ஆரம்பத்தொடு தீரும் விவகாரம் - பிராரத்த கன்மதேகம் நீங்குகிற வரைக்கும் தொழில் இருக்கும், உரிய தியானமும் விவகாரங்களும் - ஞான சுகம் உண்டாவதற்குக் காரணமான நிருவிகற்ப சமாதியும், துக்கம் உண்டாவதற்குக் காரணமான விவகாரங்களும், உள்ளத் தொழிலன்றோ - அந்தக் கரணமாத்திரத்தின் கிருத்திய மன்றோ, துரியபரம் பொருளானவர் - சர்வ சாட்சி சொரூபமான ஞானிகள், வேறு ஒரு தொழில் செய்வதுமுண்டோ - வேறே யாதேனும் ஒரு தொழிலைச் செய்வது முளதோ, இல்லை, அரிய சமாதிகள் பழகுவனேல் - பிறரால் அடைவதற்கரிய சமாதிகளை அப்பியாசிப்பானாகில், அவன் ஆரூடனு மன்று - அவன் கிருத கிருத்தியனாகிய ஆரூடனாகான்.

(ப - ம்) கற்பிதமான தேகாதிகளைத் தானென்றறியாது சருவாத்மகமாய்ச் சச்சிதானந்தமான பிரம சொரூபத்தைத் தானென்றறிகின்ற சீடனே என்பார், "தெரிதரு மகனே"

யெனவும், உபாதியுள்ள வரைக்கும் பிரதிவிம்பம் நீங்காதது போலச் சஞ்சித கன்மத்தினின்றும் ஆரம்பித்த பிராரத்த கன்ம தேகம் நீங்குகிற வரைக்கும் தொழில் விட்டு நீங்கா தென்பார், "ஆரம்பித்தோடு ... விவகார" மெனவும்; ஒரு புருடன் செய்யும் கொலையாதி தீக்கருமமும் யாகாதி நற்கரும மும் அதைப் பார்த்திருக்கின்றவன் செய்யத் தகாததுபோல், சின்மாத்திர சர்வ வியாபக சர்வ சாட்சி சொரூபமான ஞானி கள் செய்தது போற் றோற்றினும் துக்கமுண்டாகக் காரண மான விவகாரமும் ஞானசுகமுண்டாகக் காரணமான நிருவி கற்ப சமாதியும் அவர்கள் அந்தக்கரண இருத்தியமேயன்றி அவர்கள் செய்வதல்ல வென்பார் "உரிய தியானமும் ... தொழில் செய்வதுமுண்டோ" வெனவும், சுருதிகள் கூறுவது மன்றி யுலகத்தாரும் எவ்வித அரிய வித்தைகளினும் மேலானதென்று சொல்வதாயும் மிகுந்த வருத்தத்தா லடைவ தாயும் இருக்கின்ற பிரம வித்தை என்பார், "அரிய சமாதி" யெனவுங் கூறினர்.

(தா – ம்) பிராரத்த கன்மமுள்ளவரை விவகார முளவா மெனவும், விவகாரமும் சமாதியும் அந்தக்கரணச் செயலே யன்றி அதை யறிந்திருக்கின்ற ஞானிகள் செயலன்றெனவும், சுகத்தை விரும்பி நிருவிகற்ப சமாதி செய்வானாகில் அவன் அப்பியாசி எனவும் கூறினதாம்.

(அ – கை) ஆரூடர்களிலும் சிலர் சமாதி முதலியவற் றைச் செய்வதென்னென வினாதலு மதற்குத்தரங் கூறலும்.

உத்தமகுருவே யாரூடருமா யொருதொழி லற்றவருள்
சித்தமடங்கு தியானாதிகள்சிலர் செய்குவதென் னென்றால்
இத்தலமருவும் பிராரத்தப் பிரிவெப்படி யப்படியே
முத்தரும்வெகு விதமாகுவ ரென்பதுமுன்னே சொன்
[னேனே. 34.

(இ – ள்) உத்தம குருவே – மேலான விகித குருவே, ஆரூடருமாயொரு தொழிலற்றவருள் – ஆரூடருமாகி யாதொரு விவகாரமும் இல்லாத இருத இருத்தியருள்ளும், சிலர் – சிலபேர், சித்தமடங்கு தியானாதிகள் – மனோலயமுண் டாகச் செய்கின்ற தியான முதலியவைகள், செய்குவது என்

னென்றால் — அப்பியாசிப்பது யாது காரணமென்று நீ கேட்பாயானால், இத்தல மருவும் — இவ்வுலகில் அவரவர்களைப் பொருந்தியிருக்கும், பிராரத்தப் பிரிவு எப்படி அப்படியே — பிராரத்த பேதவரம்பு எவ்விதமோ அவ்விதம், முத்தரும் — சீவன் முத்தரும், வெகுவிதம் ஆகுவர் என்பது — அநேகவித விவகாரங்களை யுடையவரா்வர் என்பதை, முன்னே சொன்னேனே — பூருவ படலத்தில் (97-வது கவியில்) கூறினேனே.

(ப — ம்) நிசிதகுரு காமியகுரு போதககுரு வேதககுரு சூசககுரு வாசககுரு காரக குருவாகிய இவர்களுக்கு மேலான விகித குருவே என்பார், "உத்தம குரு" எனவும், மனோலய முண்டாகச் செய்கின்ற வேதாந்த சாத்திர சிரவணமும் மனன தியானமும் சாது சங்கமும் வாசனாக்ஷயமும் பிராண நிரோதனமும் என்பார், "சித்தமடங்கு தியானாதிக" ளெனவும், பிரமர் திகளானாலும் பிராரத்த வமைப்புப்படி இருப்பார்களே தவிர அதை விலகி இரார்களே யென்பார், "இத்தலம்...அப்படியே" எனவுங் கூறினார்.

(வி — ரை) "சித்தமடங்கு தியானாதிகள்" என்ற பதத்திற்கு, அத்தியாத்ம சாத்திரத்தை அனவரதம் அன்புடன் சிரவணஞ் செய்யில் அவ்வத்தியாத்ம வித்தையானது திரிசிய முழுவதும் மித்தை யென்றும் திருக்கா யிருக்கிற பிரத்தியே காத்மா சொப்பிரகாச ரென்று மறிவிக்கிறபடியினால் மனமானது தனக்கு விடயமான திருசியத்தில் பிரயோஜன மில்லை யென்றும், பிரயோஜனமுள்ள பிரத்திய காத்மாவைத்தான் விஷயமாகப் பண்ணிக்கொள்ள யோக்கிய மன்றென்றும், விவேகத்தால் அறிந்து விறகில்லாத வக்கினிபோற் றனக்கு தானே யுபசாந்தியை யடையுமெனவும், அக்கினியில் மிகுந்த ஜலம் விட்டால் அணைவது போல, தனித்தோரிடத்திலிருந்து தகுந்த யுத்திகளுடன் செய்யு மனனத்தாலும் சந்ததம் சசாதீக விருத்தியுடன் செய்யுந் தியானத்தாலும் மனம் லயமாகு மெனவும், சாதுக்களைச் சேர்ந்தால் அவர்களாத்ம சொரூபத்தை அடிக்கடி அனேக யுக்திகளுடன் பிரதிபாதிப்பவர்களாதலால் அதைக் கேட்டுக்கொண்டு வெகு காலமிருந்தால், குளவியின் சத்தத்தை வெகுநாட் கேட்ட புழுவினுருவங் கெடுவது போல மனம் தனக்குத்தானே யடங்குமெனவும், மயித்திரியாதி வாசனையைப் பழகிக் காமாதி வாசனையை நீக்கி

ளுல் அமிழ்தம் சாப்பிட்டு ரோகத்தை நீக்கித் துன்பத்தை நீக்குவதுபோல மனம் சாந்தமாகு மெனவும், ரேசக பூரக கும்பகங்களால் பிராண சலன நிரோதஞ் செய்யில் விதையைக் கெடுத்தால் முளை கெடுவதுபோல, மனம் லயமாகு மெனவும் கொள்க.

(தா - ம்) ஆரூடன் ஞெழில் பிராரத்த கன்மமென அறிக வென்பதாம்.

(அ - கை) ஆசாரிய ரவ்வினுவிற்கு வேறொரு பிரகார மாக திருட்டாந்த பூர்வகம் உத்தரங் கூறல்.

நல்லவனேகே ளுலகுபகாரம் ஞானிகள் விவகாரம்
அல்லதுவே றொருபெறுபேறும் மில்லையதனுற் பிணியுமில்லை
வல்லசிருட்டி முதற்பல தொழிலால் வருபுண்ணிய பாவம்
எல்லவருக்கு மநுக்கிரகஞ் செயு மீசனடைந் திலனே. 35

(இ - ள்) நல்லவனே கேள் - பிரமானந்த மயமாய் விளங் குஞ் சிடனே கேட்பாய், ஞானிகள் விவகாரம் - ஞானிகள் செய்யும் விவகாரம், உலகுபகாரம் - உயிர்களுக்கு அநுகூல மாம், அல்லது - இதுவேயன்றி, அதனுல் - அந்த விவகா ரத்தால், வேறொரு பெறு பேறும் இலை - வேறே ஒரு லாப மும் அடைவதில்லை, பிணியும் இலை - அந்த விவகாரத்தால் அவர்களுக்கு ஆனியுமில்லை (அது எப்படி என்னின்,) வல்ல சிருட்டி முதல் பல தொழிலால் - வல்லமையுடைய சிருட்டி முதலிய அநேக கிருத்தியங்களால், வரு புண்ணிய பாவம் - வராநின்ற தருமம் அதருமங்களை, எல்லவருக்கும்- உயிர்கள் அனைத்திற்கும், அநுக்கிரகம் செய்யும் - கிருபை பண்ணு நிற்கும், ஈசனடைந்திலனே - ஈசுரன் அடையவில் லையே அதுபோல்.

(ப - ம்) பரிபூரண சொரூபத்தைத் தானுயறிந்திருக்கும் சீவன் முத்தர்கள் சர்வ காமாப்தியைப் பெற்றிருப்பதால், அவர்கள் செய்யும் விவகாரம் உயிர்களுக்கு அநுகூல நிமித் தமேயன்றி அவர்களுக்கோர் லாபத்தின் பொருட்டன்று, அச் சீவன் முத்தர்கள் சகல பிரபஞ்சத்தையும் மித்தையாகக் கண்டிருப்பதால் விவகாரத்தால் அவர்களுக்கு ஆனியுமில்லை

என்பார், "உலகுபகாரம் ... பிணியுமிலை" எனவும்; நன்மை தீமை செய்யும் ஆண் பெண் அலியான உயிர்கள் அனைத்திற்கும் இதஞ் செய்கின்ற இறைவன், உயிர்களுக்கு சுகந்தருவதாகிய சிருட்டியும் இதத்திதியும் அநுக்கிரகமும் செய்கிறதினால் புண்ணியத்தையும், அவ் வுயிர்களுக்குத் துக்கந் தருவதாகிய அகிதத் திதியும் சம்மாரமும் திரோபாவமும் செய்கிறதினால் பாவத்தையும் அடைகின்றதில்லையே என்பார், "வல்ல சிருட்டி ... ஈசன் அடைந்திலனே" எனவுங் கூறினார்.

(தா — ம்) ஆரூடர் செய்யுந் தொழில் உயிர்களுக்கு உபகாரமாவதேயன்றி அவ்வாரூடருக்கு ஆனி லர்பத்தை யுண்டாக்காதெனவும், ஈசுரனைப் போல ஞானியும் நன்மை தீமையான விவகாரஞ் செய்வதால் புண்ணிய பாவத்தை யடையானெனவுங் கூறினதாம்.

(அ — கை) ஞானவானீசனுக் கொப்பாவனெனக் குறிப்பாற் கூறிய ஆசாரியரை நோக்கி எங்ஙனம் ஒப்பாவனென வினதலு மதற்குத்தரங் கூறலும்.

ஈசனுமா யருவாயுருவாகி யெழுந்தரு ளுங்குருவே
ஈசனுஞானியு மொப்பென்றீரே யெப்படியொப் பென்றால்
ஈசனுஞானியு மமதையகந்தை யிகந்ததினு லொப்பாம்
ஈசனுமாம் பலசீவருமா முலகெல்லா மிவனுமே. 36

(இ — ள்) அருவாய் — பரமார்த்திகத்தில் அருவமான அறிவுருவாயிருந்து, ஈசனுமாய் — ஈஸ்வரனுமாகி, உருவாகி — என்போலிகட்காக மானிடச் சட்டை சாத்திய திருவுருவமாகி, எழுந்தருளும் குருவே — எழுந்தருளாநிற்கு மாசாரியரே, ஈசனும் ஞானியும் — ஈசுவரனும் தத்துவ ஞானியும், ஒப்பு என்றீரே — சமானமாவரென்று முன் கூறினீரே, எப்படி ஒப்பு என்றால் — எப்படி சமானமாவரென்று நீ சங்கிப்பாயாகில், ஈசனும் ஞானியும் — ஈசுவரனும் தத்துவ ஞானியும், மமதை அகந்தை — மமத்துவாபிமானமும் அகந்தாபிமானமும், இகந்ததினுல் ஒப்பு ஆம் — விட்டிருத்தலால் சமானமாம், இவன் — இந்த ஞானி, ஈசனுமாம் — ஈசுவரனுமாவன், பலசீவருமாம் — அநேக சீவருமாவன், உலகெல்லாமாம் — உலகனைத்தும் தானுவன்.

(ப – ம்) மன முதலான ஆறிந்திரியத்தினாலு மறியப் படாததாயும், அசரீரமாயும் அசலமாயும் அகண்டமாயு மத்து விதமாயும் இருக்கவும், பேரருளினாலே இளகல் நெய் தடித் ததுபோல் பிரம விஷ்ணு ருத்திராகிய மும்மூர்த்தியாகி என் போலிகட் கதிட்டான சொரூபத்தைத் தரிசிப்பித்து இரட்சிக் கும் பொருட்டு; மானைக் காட்டி மானைப் பிடிப்பது போல மானிடச் சட்டை சாத்தி எழுந்தருளிய ஆசாரியரே என்பார், "ஈசனுமாய் ... குருவே" யெனவும், மகாராஜாவும் மணியக் காரனுஞ் சமானமாகாமை போல, மகத்தா யிருக்கின்ற ஈசர னும் அற்பமா யிருக்கின்ற தத்துவ ஞானியும் சமானமாகாரே என்பார், "எப்படி ஒப்பு" எனவும் அதிட்டானமான பழுதை யைத் தவிர ஆரோபமான சர்ப்பம், தண்டம், மாலை, வேறல் லாமை போல அதிட்டான பிரமமாயிருக்கும் ஞானியைத் தவிர ஆரோபமான சீவேஸ்வர சகத்து அன்னியமல்ல வென் பார், "ஈசனுமாம் ... இவனாமே" எனவும் கூறினார்.

(தா – ம்) தேகாதி சகத்தில் எனது யானென்னும் புத்தி நீங்கியிருக்கின்ற தன்மையால், அறிஞனும் ஈசனும், ஒப்பாவ ரெனக் கூறி அவ்வறிஞனே சீவேசுவர சகத்தாகவும் விளங்கு வாரெனக் கூறினதாம்.

(அ – கை) அறிஞ னெங்ஙனஞ் சகல சீவர்களுமாக விளங்குவானென விறுதல்.

எல்லாச்சீவரு மிவனாமென்றீ ரிவன்றான் முத்தியடைந்
தெல்லாச்சீவரு முத்திபெறாம லிருப்பா னேனையா
எல்லாச்சீவரும் வெவ்வேறானா லிவனெல்லா மலனே
எல்லாப்பொருளு முரைத்தருள் குருவேயிதை நீர்மொழி
[யீரே. 37

(இ – ள்) அய்யா – பிதாவாகிய ஆசாரியரே, எல்லாச் சீவரும் – சகல சீவரும், இவன் ஆம் என்றீர் – இந்த ஞானி யாகுமெனவருளினீர், இவன்றான் முத்தியடைந்து – இந்த ஞானி நிரதிசய ரூபமான மோட்சமடைய, எல்லாச் சீவரும் – சகல சீவரும், முத்தி பெறாமல் இருப்பானேன் – அஞ்ஞானநி ரீக்கமான மோட்சமடையாம லிருக்க காரண மென்னை, எல் லாச் சீவரும் – சகல சீவரும், வெவ்வேறானால் – வேறு வேறாக

இருப்பார்களானல், இவன் எல்லாம் அலனே – இந்த ஞானி முழுது மாகானே, எல்லாப் பொருளும் உரைத்தருள் குருவே – யான் கேட்பதில் ஒன்றுக்காவது உத்தரம் கூறுதிராமல் அனைத்திற்கும் உத்தரம் சொல்லுகின்ற ஞானசாரியரே, இதை நீர் மொழியீர் – இவ்வினவிற்கும் உத்தரம் அருளுவீராக.

(ப – ம்) ஒரு புருடன் அன்னதி புசிப்பதினல் அவன் திருப்தியடைகின்றனே தவிர வேறொருவரும் திருப்தியடையாமை போல, ஞானி யொருவன் மோட்சமடைய மற்றை சீவர் அஞ்ஞானதி நீக்கமான மோட்சம் பெருதிருப்பதினல் இவன் சகல சீவரும் ஆகானே யென்பார், "இவன்றன் ... பெறும லிருப்பானே" னெனவும், சுருதிகளிலுள்ள அருத்தங்களில் ஒன்றறிந்து ஒன்று அறியாதிராது காண்டத் திரயத்திலு முள்ள பூருவபட்ச சித்தாந்தமான சருவார்த்தங்களும் அறிந்தவராயும், யான் கேட்பதில் ஒன்றுக்காவது உத்தரங் கூறுதிராமல் அனைத்திற்கும் உத்தரம் சொல்லுகின்றவராயும் இருக்கின்ற ஞானசாரியரே இவ் வினவிற்கு முத்தரம் அநுக்கிரகிக்க வேண்டுமென்று னென்பார், "எல்லாப் பொருளும் ... மொழியீரே" யெனவுங் கூறினர்.

(வி – ரை) முத்தியடைய் வென்பது அடைந்தெனத் திரிந்து நின்றது.

(தா – ம்) ஞானவானகிய ஒருவன் பெற்ற பேறு ஏனைய உயிர்கள் பெருமையால் இவன் எல்லாச் சீவரு மாவானென் பது எங்ஙனம் கூடுமென வினவினதாம்.

(அ – கை) அவ் வினவிற் குத்தரங் கூறல்.

அகமெனு மான்மாபூரண மேகமநேக விதஞ்சீவர்
அகமெனு மந்தக்கரணே பாதிகளளவிலை யாதலினல்
சகமுழுதுங் குளிர்சந்திர னேகஞ் சலசந்திரர் பலராம்
சகமதிலேரி குளஞ்சிறுகுழி சால்சட்டி குடம்பலவால். 38

(இ – ள்) அகமெனும் ஆன்மா – நானென்று விளங்கும் ஆத்மா, பூரணம் ஏகம் – அகண்டமாய் அத்துவிதமாம்,

சீவர் – சீவர்கள், அநேக விதம் – பரிச்சின்னமாய் அநேக பிரகாரமாம், அகமெனு மந்தக்கரணோபாதிகள் – அகமென்று சொல்லிய அந்தக்கரண உபாதிகள், அளவிலை – அநேகங்கள், ஆதலினால் – ஆகையால், சீவர் அநேகமாம், சக முழுதும் – உலக முழுவதும், குளிர் சந்திரன் ஏகம் – சீதளமான விம்ப சந்திரன் ஒருவன், சலசந்திரர் பலராம் – சலப் பிரதிவிம்ப சந்திரர் அநேகராம், சகமதில் – உலகில், ஏரி, குளம். சிறுகுழி, சால், சட்டி, குடம், பலவால் – ஏரி முதலாகிய உபாதிகள் பலவாயிருத்தலினால்,

(ப – ம்) பிரமாதி ஸ்தம்ப பரியந்தமான சகல சீவரிடத்தில் நானென்று விளங்கு மாத்மா சகல சராசரமும் தோன்றி இருந்து ஒடுங்குவதற்கேதுவான அகண்டமாயும் துவிதமற்ற அத்துவிதமாயு மிருக்கின்ற தென்பார், "அகமெனும் … ஏகம்" என்றார்.

(அ – கை) இதுவுமது.

சட்டிகுடங்களி லொன்றுநசித் திடினதினுட் சலசந்திரன்
ஒட்டுமுதற்சந் திரனொடுகூடு மொழிந்தவை கூடாவே
கட்டுமுபாதி நசித்திடுசீவன் காரணவான் மாவில்
கிட்டுமயிக்கிய முபாதி கெடாதவர் கேவலமாகாரே. 39

(இ – ள்) சட்டி குடங்களில் – சட்டி குட முதலிய வுபாதிகளில், ஒன்று நசித்திடில் – ஒரு உபாதி நசிக்கில், அதனுள் சல சந்திரன் – அதில் பிரதி பிம்பித்திருந்த சந்திரன், ஒட்டும் முதல் சந்திரனொடு கூடும் – தான் கூடுவதற்குரிய காரணமான சந்திரனோடு கூடும், ஒழிந்தவை – உபாதி கெடாத ஏனைய் பிரதி விம்பங்கள், கூடாவே – எப்படி கூடாவோ அப்படி, கட்டு உபாதி நசித்திடு சீவன் – பந்தியா நிற்கும் கர்த்தத்துவ போக்தத்துவாதி பந்த நீங்கி ஞானியா யிருக்கிற சிதாபாசன், காரண ஆன்மாவில் – தனக்குக் காரணமான ஆத்மாவின்கண், அயிக்கியம் கிட்டும் – அயிக்கியத்தைப் பொருந்தும், உபாதி கெடாதவர் – அஞ்ஞான உபாதி நீங்காதவர், கேவலமாகார் – ஐக்கிய மாகார்கள்.

(ப – ம்) கர்த்தத்துவ போக்தத் துவாதி பந்த நீங்கி ஞானியா யிருக்கின்ற சிதாபாசனுக்குச் சகசீவ பரத்துக்கு

மூலமான வஸ்துவினுடன் ஐக்கியம் கூடுமென்பார், "கட்டு முபாதி ... ஐக்கிய" மென்றார்.

இரண்டு கவிகட்கும் (தா – ம்) ஓர் கடசலப் பிரதி விம்ப சந்திரனுக்கு ஏனைய பிரதிவிம்ப சந்திரர் வேறாவர், ஓர் கடசல நசிக்கினதிற் பிரதிவிம்பித்த சந்திரன் விம்ப சந்திரனாவனன்றி ஏனைய பிரதிவிம்ப சந்திரர்கள் கடசலமெல்லாம் நசியாமையால் விம்ப சந்திரனாகார், அவ்வோர் பிரதிவிம்ப சந்திரன் விம்ப சந்திரனாமிடத்து அவனே பலசலத்திலும் பிரதிவிம்பித்தலின் எல்லாப் பிரதிவிம்ப சந்திரனுமாவனதுபோல், ஓர் அந்தக்கரணத்திற் றோன்றிய சீவனுக்கு ஏனைய சீவர் வேறாவர், அவ்வோர் அந்தக்கரண நசிக்கினதிற் றோன்றிய சீவன் சிவமாவனேயன்றி ஏனைய சீவர்கள் அவ் வந்தக்கரணங்கள் நசியாமையாற் சிவமாகார், அச் சீவன் சிவமாமிடத்தவனே பல அந்தக்கரணத்திலும் தோன்றுவதால் எல்லாச் சீவருமாவனென்பதாம்.

(அ – கை) முன்பறிஞன் ஈசனுக்கொப்பென்றீர் அங்ஙனமாயின் அவர் மகிமை யிவனுக்கேன் இன்றென வினாதல்.

இவனயன்மால் சிவனாகிய வீசரொடெப்படி யொப்பாவன்
சிவன்முதன் மூவருமகில சிருட்டிதிதி நாசங்கள் செய்வார்
அவர்பிறர் மதிகளுமுக் காலங்களுமறிவார் விபுவாவார்
தவமிகுகுருவே யிவனுக்கவையிலோர் சற்றுங்காணேனே.

(இ – ள்) இவனயன்மால் சிவனாகிய ஈசரொடு – இந்த ஞானி பிரமா விஷ்ணு ருத்திரனாகிய வீசுரரோடு, எப்படி ஒப்பாவன் – எவ்விதம் இணையாவன், சிவன் முதல் மூவரும் – ருத்திரன் பிரமா விஷ்ணு மும்மூர்த்திகளும், அகில சிருட்டி திதி நாசங்கள் செய்வார் – எல்லா உலகங்களையும் சிருட்டி திதி சம்மாரங்கள் செய்யாநிற்பர், அவர் பிறர்மதிகளும் முக்காலங்களும் அறிவார் – மும்மூர்த்திகளும் அந்நியர் புத்திகளையும் பூதபவிஷ்ய வர்த்தமானமென்னும் காலங்கள் மூன்றையும் அறியாநிற்பர், விபுவாவார் – இதனால் சர்வ வியாபகராவார், தவமிகு குருவே – மேலான தவமுடைய ஆசாரியரே, இவனுக்கு – இந்த ஞானிக்கு, அவையில் ஓர் சற்றும் – அம்மகிமைகளில் கிஞ்சித்தும், காணேன் – கண்டிலேன்.

(ப – ம்) சுபேச்சையாதி ஞான பூமி மூன்றின் அப்பியாச மாகிய தவத்திற்கு மேலான நாலாவது சத்துவா பத்தி முத லிய பூமியின் அநுபவமுடைய ஆசாரியரே என்பார், "தவமிகு குருவே" எனவுங் கூறினார்.

(வி – ரை) சுபேச்சையாதி மூன்று பூமியின் அப்பியாச மெங்ஙனந் தவமாமெனில், பஞ்சாக்கினி மத்தியாதி தவத் தைத் தவமென்றும் அதைச் செய்தோருக்குச் சுவர்க்காதி லோகம் உண்டென்றும் சுருதி சொல்வது போல, சுபேச்சை யாதி மூன்று பூமி அப்பியாசத்தைச் சத்துவ தவமென்றும் அதை அப்பியசித்தோருக்கு ஞானம் வருமுன் சரீரம் நீங்கிப் போனால் அச் சுவர்க்காதி லோக முண்டென்றும் சுருதி சொல் வதால் அது மேலான தவமாமெனக் கொள்க.

(தா – ம்) ஞானி ஈசுராதிகளுக் கொப்பென்பதற்குச் சிருட்டியாதி சர்வஞ்ஞத்துவாதி சிறப்பு அவனுக்கு இல்லையே என வினவினதாம்.

(அ – கை) அவ்வினாவிற் குத்தரங் கூறல்.

(வேறு.)

தடத்துநீர் நிலாத்திரியொளி யுபயமுந்தழுவு மூர்த னைக்காக்கும், குடத்துநீர் விளக்கினி லொளியிரண்டு மோர் குடும்பமாத்திரங் காக்கும், அடுத்தமைந்தனே ஞானியு மீசனு மறிவினாற் பிரிவில்லை, கெடுத்த மாயையின் குணங் களான் மேலென்றுங் கீழென்றும் பிரிவாமே. 41.

(இ – ள்) தடத்துநீர் – குளத்திலுள்ள ஜலமும், நிலாத் திரியொளி – பகல் வத்தியின் ஒளியும், உபயமும் – ஆகிய இரண்டும், தழுவும் ஊர்தனைக் காக்கும் – தம்மை சார்ந்திருக் கும் ஊர் முழுதினையும் இரட்சிக்கும், குடத்து நீர் – கடஜல மும், விளக்கினில் ஒளி – தீபத்தொளியும், இரண்டும் – ஆகிய இரண்டும், ஓர் குடும்பமாத்திரம் காக்கும் – ஓர் குடும்ப மாத் திரத்தை இரட்சிக்கும், அடுத்த மைந்தனே – சற் சங்கத்தை அடைந்த சீடனே, ஞானியும் ஈசனும் – தத்துவ ஞானியும் ஈசு வரனும், அறிவினால் பிரிவில்லை – நாம் பிரமமென்னும் ஞானத்

தால் பேதமில்லை, கெடுத்த மாயையின் குணங்களால் — பிரம சொரூபந் தானாக அறிகின்ற ஞானத்தை ஆவரணசத்தியான் அழித்த, மூலப் பிரகிருதி யென்னும் மூலாஞ்ஞான சத்துவ ரசோ குணங்களால், மேலென்றும் கீழென்றும் — ஈசுவரன் மேலானவரென்றும் ஞானி கீழானவரென்றும், பிரிவாம் — பேதமாம்.

(ப — ம்) காமாதி குணத்தை யுண்டாக்குவதான தீய சங்கத்தை விட்டு மைத்திரியாதி குணங்களை யுண்டாக்குவதான நற் சங்கத்தை யடைந்த சீடனை என்பார், "அடுத்த மைந்தனே' எனவும், தேகேந்திரியாதிகளைத் தானென்றும் பிரபஞ்சம் சத்திய மென்றும் தோற்றுவித்துப் பிரத்தியக பின்ன பிரம சொரூபத்தை யறிகின்ற ஞானத்தை யழித்த மூலாஞ் ஞான மென்பார், "கெடுத்தமாயை" எனவுங் கூறினார்.

(தா — ம்) குளத்து நீர் ஊரையும் கட நீர் இல்லத்தையும் காக்கு மிடத்தில் ஓரில்லத்துக் குபகாரமா யிருத்தல் ஊர் முழுதுக்கு முபகாரமா யிருத்தலென்னும் பேதமேயன்றிக் காக்குந் தன்மை யொன்றாவது போல, ஈசனுக்கும் ஞானிக்கும் மாயை அவித்தைகளால் சிருட்டியாதி செய்தல் செய்யாமை யாகிய தாரதம்மிய மிருக்கினும் நான் பிரமமென்னும் ஞானத் தன்மையில் ஒப்பாவரென்பதாம்.

(அ — கை) அவ்விருவிற்கு வேறொரு திட்டாந்த மூலமா யுத்தரம் வற்புறுத்திக் கூறல்.

நரரின் மன்னனைச் சித்தரைப் போலவே நாரணன் முதலான, சுரர்கண் மாயைவல்லவ ரணிமாதிக டொக்க மாதவ மிக்கோர், தரணிமா நுடர்க் கவைகளில் லாமையாற் றாழ்வுள ரானாலும், பிரம பாவனை யாலிவரவரெனும் பேத மொன்றிலை பாராய். 42.

(இ — ள்) நரரில் — மநுடர்களுக்குள்ளே, மன்னனைச் சித்தரைப் போலவே — துஷ்ட நிக்கிரகம் சிஷ்ட பரிபாலன முடைய அரசனையும், சாபானுக்கிரக சாமர்த்திய முடைய சித்தரையும் போல், நாரணன் முதலானசுரர்கள் — விஷ்ணு

முதலான தேவர்கள், மாயை வல்லவர் — மாயை செய்வதில் சமர்த்தர், அணிமாதிகள் தொக்க — அணிமா முதலிய அஷ்ட சித்திகளும் கைவந்த, மாதவ மிக்கோர் — மாதவ மிகுந்தோர், தரணி மாநுடர்க்கு — பூமியில் மனித தேகமுடைய சீவன் முத்தர்களுக்கு, அவைகள் — அச்சர்வஞ்ஞத்துவாதி வல்லமையும் அணிமாதி சித்தியும், இல்லாமையால் — இன்மையால், தாழ்வுளராலும் — தாழ்ச்சி யுடையராயினும், பிரம பாவனையால் — பரிபூரண பிரம சொரூபம் நாமென்னும் ஞான நிச்சயத்தால், இவர் அவர் எனும் பேதம் — சீவன் முத்தர்கள் தாழ்வுடைய வரென்றும் ஈசுவரன் உயர்ச்சி யுடையவ ரென்றும் கூறுகிற் கும் பேதம், ஒன்று இலை — சிறிதுமில்லை, பாராய் — இதனை யூகித்துப்பார்.

(வி — ரை) அணிமாதி என்ற பதத்துக்கு ஆன்மாப்போலாதலாகிய அணிமாவும், மகத்துவமாதலாகிய மகிமாவும், இருப்பு மலையினும் கனத்தலாகிய கரிமாவும், பஞ்சின் நொய்மையாதலாகிய லகிமாவும், வேண்டுவன அடைதலாகிய பிராத்தியும், குறைவின்றி யிருத்தலாகிய பிராகாமியமும், யாவருக்கும் தேவனாதலாகிய ஈசத்துவமும், யாவரும் வணங்கி நிற்றலாகிய வசித்துவமும், அணிமாதி அட்டமா சித்தி எனக் கொள்க.

(தா — ம) மானிட அரசனுக்கும் சித்தருக்கும் உள்ள மகிமைகள் மற்றவர்களுக்கு இன்றாயினும் மானிடத் தன்மையில் ஒப்பாவது போல, திரிமூர்த்திகளும் சீவன்முத்தர்களும் பொய்யா யிருக்கின்ற சர்வஞ்ஞத்துவாதி யிருத்தல் இல்லாமையால் வேற்றுமை யுள்ளார்போற் றோற்றினும் பரிபூரணப் பிரம சொரூபம் நாமென்னும் மெய்யான ஞான நிச்சயமொரு தன்மையாக வுடையோராதலால் ஒப்பாவ ரென்பதாம்.

(அ — கை) அணிமாதி சித்திகள் ஈசனதாயின் அடிநுக்கு எங்ஙனம் உண்டாயிற்றெனும் வினாதலுமதற் குத்தரங் கூறலும்.

முத்திநல்கிய சற்குருவே பலமுனிகளுக் கணிமாதி
சித்திபூமியிற் கண்டிருக்கவு மந்தச்செல்வ மீசனதென்றீர்

புத்தியொத்திட வுரைத்தருளென் றிடில்புகழு மீசனைநோக் கிப், பத்திசெய்திடுந் தவத்தினு லியோகத்தாற் பலித்த தென்றறிவாயே. 43.

(இ – ள்) முத்தி நல்கிய சற்குருவே – பரம சுகத்தை அநுபவிக்கும்படி பரமோட்சத்தைக் கொடுத்த ஞானசாரியரே, பல முனிகளுக்கு – வியாசர் முதலிய அநேக முனிவர்களுக்கு, அணிமாதி சித்தி – அணிமா முதலிய அஷ்ட சித்திகள், பூமியில் கண்டிருக்கவும் – இருப்பனவாக உலகத்தில் காணப்பட்டிருக்கவும், அந்தச் செல்வம் – அவ் வணிமாதிச் செல்வம், ஈசனது என்றீர் – ஈசுவரனுடைய செல்வமென்று அருளினீர், புத்தி யொத்திட – முனிகளுக்கு வந்த காரணம் இன்ன விதம் என என் புத்தி சம்மதமடைய, உரைத்தருள் என்றிடில் – உரைத்தருள்வீ ரென்று நீ வினவிடில், புகழு மீசனை நோக்கி – யாவரும் துதியா நிற்கும் திரிமூர்த்திகளை நாடி, பத்தி செய்திடும் தவத்தினுல் யோகத்தால் – பத்தியுடன் செய்யும் உபாசனையினுலும் பஞ்சாக்கினி மத்தியாதி தவத்தினுலும், அஷ்டாங்க யோகத்தினுலும், பலித்ததென்று அறிவாய் – அணிமாதி சித்தி உண்டாயின வென்று தெரிந்து கொள்வாய்.

(ப – ம்) சொர்க்காதி போகமும் பிரமலோகாதி அபரமோட்சமுங் கொடாது அவித்தை அவித்தையின் காரியங்களை நீக்கிப் பரமசுகத்தை யநுபவிக்கும்படி பரமோட்சத்தைக் கொடுத்த ஞானசாரியரே என்ருனென்பார், "முத்தி நல்கிய – குருவே" யெனவும், வாக்கு மௌனம் கரணமௌனம் காஷ்ட மௌனம்மகாமௌனம்உடையரென்ருனென்பார் "பலமுனிக" ளெனவும், சிருட்டியாதி தொழிலும் சர்வஞ்ஞத்துவாதி குணமு முடையவராய் இராம கிருஷ்ணுதி அவதார மெடுத்து துட்டனைச் சங்கரித்துச் சிட்டனை இரட்சிக்கின்றவரா யிருப்பதால் யாவராலும் துதிக்கப்பட்ட திரிமூர்த்திகள் என்பார் "புகழும் ஈச" வெனவும் கூறினுர்.

(தா – ம) பிரமாதி தேவதைகளைக் குறித்துப் பத்தியுடன் செய்யும் உபாசனையினுலும், பஞ்சாக்கினி மத்தியாதி தவத்தினுலும், இயமாதி அஷ்டாங்க யோகத்தினுலும், அச்சித்திகள் உண்டாயின வென்பதாம்.

(அ—கை) அணிமாதி சித்திகள் ஞானபலமா, அல்லவா வென்றறியும் பொருட்டுச் சீடன் வினுதல்.

சிவசொரூபமாந் தேசிகமூர்த்தியே சித்திமுத்தி யிரண்டும் தவமுளோ ரடைகுவரெனி லவர்கள்போற் சகலரு மடைவாரே, அவர்கள் பூருவஞ்சித்தியு ஞானமு மடைந்ததுங் கண்டோமே, இவர்கண் ஞானிகளென்றிடிற் சித்திகளி வர்க் கிலாவகையேதோ. 44.

(இ—ள்) சிவ சொரூபமாம் தேசிக மூர்த்தியே — பூரணனந்தமே யோருருவா யெழுந்தருளியிருக்கும் ஞானசாரியரே, சித்தி முத்தி யிரண்டும் — அணிமாதி சித்தியும் மோட்சமுமாகிய இரண்டினையும், தவமுளோ ரடைகுவரெனில் — தவத்தையுடையவர்கள் அடைவா ரென்று சுருதி சொல்லில், அவர்கள் போல் — முன்புள்ள வியாச வசிட்டாதிகளைப் போல, சகலரும் அடைவாரே — இக் காலத்திலுள்ள ஞானிகள் எவரும் அடையா திற்பரே, அவர்கள் — வியாசாதியர்கள், பூருவம் சித்தியும் ஞானமும் அடைந்ததுங் கண்டோமே — பூருவத்தில் அணிமாதி சித்தியும் ஆத்ம ஞானமும் அடைந்திருந்ததும் சாஸ்திரங்களில் கூறக் கண்டோம், இவர்கள் ஞானிகளென்றிடில் — இக் காலத்திலுள்ள இவர்கள் ஞானிகளென்று சொல்லில், சித்திகள் — அணிமாதி சித்திகள், இவர்க் கிலா வகை யேதோ — இப்போதுள்ள ஞானிகளுக்கு இல்லா திருக்கும் காரணம் யாதோ யானறியேன்.

(ப—ம்) பஞ்ச பூதாதி சரீரமின்றி இருதவிளகல் கடினமாவது போல் பூரணனந்தமே யோருருவா யெழுந்தருளி யிருக் ஞானசாரியரே என்றுனென்பார், "சிவசொரூபமாம்மூர்த்தியே" என்றார்.

(தா—ம்) முன்புள்ள வியாச வசிட்டாதிகளைப் போல இக் காலத்துள்ள ஞானிகளுக்கு அணிமாதி சித்திகளே யில்லையென வினவினதாம்.

(அ—கை) அவ் வினவிற் குத்தரம்.

காமியத்தவங் காமியமொன்றையுங் கருதிடாத்தவமென்றும், பூமியிற்றவ மிருவகைசித்தியும் போதமுந்தரு

மைந்தா, ஆமிவற்றி லொன்றியற்றினு லொன்றையே யடைகுவ ரிதுதிர்வை, யாமுரைத்த வவ்விரண்டையு மியற்றினு ரன்றுள பெரியோரே.

(இ – ள்) காமியத் தவம் – சகாம தவமெனவும், காமிய மொன்றையும் கருதிடாத் தவமென்றும் – நிஷ்காமியத் தவ மெனவும், பூமியில் தவம் இருவகை – பூமியின்கண் தவம் இரண்டு விதமாம், சித்தியும் போதமும் தரும் – காமியத் தவம் அணிமாதி சித்தியும் நிஷ்காமியத்தவம் தத்துவஞானத் தையும் கொடாநிற்கும். மைந்தா – சீடனே, ஆமிவற்றில் ஒன்று இயற்றினுல் – சித்திக்கும் ஞானத்துக்கும் சாதனங்க ளாகும் இவ் விரண்டுள் ஒரு தவத்தை செய்யில், ஒன்றையே அடைகுவர் – ஒரு பயனையே அடையாநிற்பர், இது தீர்வை – இது நியமம், யாம் உரைத்த – நாம் கூறிய, அவ் விரண் டையும் இயற்றினுர் – அவ்விரண்டு தவங்களையும் செய்தார், அன்றுள பெரியோர் – முற் காலத்திலுள்ள வியாசர் முதலிய பெரியோர்.

(ப – ம்) நெல் பயிரிட்டோனுக்கு நெல் மாத்திரம் வருமே தவிர மற்றென்றும் வாராது. நெல்லும் வரகும் பயிர் செய் தோனுக்கு நெல்லும் வரகும் வருவதுபோல, சிரவணுதி தவ மாத்திரம் அப்பியாசித்தோருக்கு தத்துவ ஞானத்தினுல் மோட்ச மாத்திரம் வருமே தவிரச் சித்திகள் வாரா; அச் சிர வணுதி நிட்காமிய தவமும், பஞ்சாக்கினி மத்தியாதி காமியத் தவமும் செய்தோருக்கு ஞானத்தினுன் மோட்சமும் அணி மாதி அட்டமா சித்தியும் வரும் என்பார், "ஆமிவற்றில் ... ஒன்றையே யடைகுவர்" எனவுங் கூறினுர்.

(வி – ரை) பஞ்சாக்கினி மத்தியாதி தவமும் பலன் வேண்டாது செய்யின் நிட்காமியத் தவமா மெனவும் அத னுல் அந்தக்கரண சுத்தியுண்டாகிப் பரம்பரையாய் ஞானத் தான் மோட்சமுண்டா மெனக் கொள்க.

(தா – ம்) காமியத் தவத்தால் சித்தியும், நிட்காமியத் தவத்தால் ஞானமும், அதனுல் மோட்சமுண்டா மெனவும், இத் தவங்களி லொன்றைச் செய்தோர் அதின் பலனையும் இரண்டையும் செய்தோர் இரண்டு பலனையும் பெறுவரென

வும், முன்னுள்ள மகான்கள் இரண்டையும் செய்ததால் சித்தியும் முத்தியும் பெற்றார், இக்காலத்திலுள்ள ஞானிகள் சித்தியினாற் றுன்பமுண்டாமெனக் கருதி, அச் சித்தியைத் தருவதாகிய காமியத் தவத்தை விடுத்துச் சிரவணாதியாகிய நிட்காமிய தவமாத்திரம் செய்தமையால் இவர்க்கு அணிமாதி சித்தியில்லை எனவும் கூறினதாம்.

(அ – கை) அவ்வினாவிற்கு வேறொரு பிரகாரமாய் உத்தரங் கூறல்.

அனகமைந்தனே முத்திஞானத்தையே யடைந்தன ரல்லாமல், ஜெனகன் மாபலிபகீரதன் முதலினோர் சித்திகள் படித்தாரோ, இனியசித்தியே விரும்பினார் சிலர்சில ரிரண்டையு முயன்றாரம், முனிவர் சித்திகள் விநோதமாத் திரந் தருமுத்தியைத் தாராவே. 46.

(இ – ள்) அனக மைந்தனே – சீவத்துவ நீங்கிச் சிவமாயிருக்கின்ற சீடனே, முத்தி ஞானத்தையே அடைந்தனரல்லாமல் – நேரே மோட்ச சாதனமான தத்துவ ஞானத்தைத் தானே அடைந்தார்களே யன்றி, ஜெனகன், மாபலி, பகீரதன் முதலினோர் - சித்திகள் படித்தாரோ – சித்திகளை அப்பியாசித்தார்களா (இல்லை) சிலர் இனிய சித்தியே விரும்பினார் – சில முனிகள் தமக்கு இனிமையாகிய சித்தியைத் தானே விரும்பினார்கள், சிலர் இரண்டையும் முயன்றார் – நாரதர் முதலிய சில முனிகள் சித்தி முத்தி இரண்டையும் அடையப் பழகினர், அம் முனிவர் சித்திகள் – அம் முனிவர்கள் அடைந்துள்ள சித்திகள், விநோத மாத்திரம் தரும் – விளையாட்டை மாத்திரம் தரும், முத்தியைத் தாராவே – மோட்சத்தைக் கொடாவாம்.

(ப – ம்) சீவத்துவம் நீங்கிச் சிவமாயிருக்கின்ற சீடனே என்பார் அனக மைந்தனே என்றார்.

(தா – ம்) பூருவத்தில் சனக ராஜர் முதலியோர் சித்தி பெறும்படி அப்பியாசியாது ஞானப்பியாசத்தால் முத்திபெற்றிருப்பதாலும், நாரதர் முதலான சிலர் யோகமாதியால் அணிமாதி சித்திகளைப் பெற்றும் அவைகளாற் றுன்புற்றதேயன்

நீச்சுகப்பயன் அடையாமற் பின்னர் ஞானப் பேற்றினல் முத்திசுகத்தைப் பெற்றிருப்பதாலும், அச் சித்திகள் ஞான பலமல்லாததாலும், காமாதியை விருத்திபண்ணிச் சென்ன மரணுதியைக் கொடுப்பதால், அச்சித்திகள் வேண்டுவவல்ல வர்தலாலும், இக் காலத்திலுள்ள ஞானிகள் சித்தியைப் பெறவில்லையென அறிவித்ததாம்.

(அ — கை) சித்திகளிற் பயனின்றென்பது தெரிந்துஞ் சில ஞானிகளதையேன் விரும்பி வருந்தமுற்றுர் [illegible] தலு மதற்குத்தரங் கூறலும்.

யோக ஞானமே முத்தியைத் தருமெனி லொழிந்த சித்திகள் வேண்டி, மோக மாயுடல் வருந்திஞர் சிலசில முத்தர்க ளேனென்றுல், போக மாய்வரும் பிராரத்த கர்மங்கள் புசித்தன்றே நசித்தேகும், ஆகை யாலந்தச் சித்திகள் பிரா ரத்த மாகுமென் றறிவாயே. 47.

(இ — ள்) யோக ஞானமே — கூடஸ்த பிரம ஐக்கிய ஞானமே, முத்தியைத் தருமெனில் — பரமோட்சத்தைக் கொடுக்குமென்று சொல்லில், ஒழிந்த — பரமோட்சத்தைக் கொடாத, சித்திகள் வேண்டி — சித்திகளை விரும்பி, மோக மாய் — அதைக் கொடுக்கும் மார்க்கங்களில் பரவசமாய், சில சில முத்தர்கள் — சூடாலை முதலிய சிலசில சீவன் முத்தர்கள், உடல் வருந்திஞர் ஏன் என்றுல் — முன்னே மெய்வருத்த முற்றனர் அஃது ஏனென்று நீ விஞவிடில், போகமாய் வரும் பிராரத்த கருமங்கள் — அநுபோகத்துக்கு வாராநின்ற பிரா ரத்த கர்மங்கள், புசித்தன்றே நசித்தேகும் — புசித தன்றே நசித்துப்போம், ஆகையால் — ஆனதால், அந்தச் சித்திகள் — பூருவம் சூடாலை முதலியோரால் அடைந்த சித்தி கள், பிராரத்தம் ஆகுமென்று அறிவாய் — அவர்களின் பிரா ரத்த கன்மமாமென்று நீ அறிவாய்.

(ப — ம்) யாகாதி கருமத்திஞலும், பிரமாதி தெய்வ வுபாசனையிஞலும், இயமாதி அட்டாங்க யோகத்திஞலும், ஆண்டான் அடிமை வேறென்னும் துவித ஞானத்திஞலும், பரமோட்சங் கிட்டாது, துவம்பத வாச்சியத்தில் தூலாதி யொன்பதும் தத்பத வாச்சியத்தில் விராட்டாதி யொன்பதும்

நேதிகளைந்து லட்சியார்த்தமான கூடஸ்த்த பிரம ஐக்கிய சொரூபமே தானென்றறியும் அப் பிரதிபந்தாப ரோட்ச ஞான மொன்றுமே பரமோட்சம் தருவதென்பர், "யோகஞானமே முத்தியைத்தரு" மென்றார்.

(தா – ம்) சூடாலை முதலியோர் தத்துவ ஞானம் பெற்றும் பிரயாசமுற்றுச் சித்திகள் சம்பாதித்தது பிராரத்த கன்மத்தாலெனவ அறிவித்ததாம்.

(அ – கை) மேற் சங்கை விளைவும்பொருட்டு ஐயம்தெளிவித்த வாசிரியரை அன்பின் வியந்து துதித்தல்.

இலக்கமாயிரஞ் சுருதியா லூகத்தா லென்மன மசையாமல்
பெலக்க வேண்டுமென் றருள்குரு வேயகப் பிராந்தி
போய்த் தெளிவானேன், துலக்க மானகண் ணாடியை
யடிக்கடி துலக்கினாற் பழுதன்றே, அலக்கண் மாற்றிய
தேவரீ ரெனக்குரை யமிர்தங்க டெவிட்டாவே. 48.

(இ – ள்) இலக்கமாயிரம் சுருதியால் – அநேகஞ் சுருதிப் பிரமாணங்களாலும், ஊகத்தால் – அநேக யுத்திகளாலும், என் மனம் அசையாமல்–என் மனம் சந்தேகத்தினால் சொரூபஸ்திதியினின்றும் சலியாமல், பெலக்க வேண்டுமென்று – திடமாய் அதில் அழுந்தவேண்டு மென்று, அருள் குருவே – யான் சங்கித்த சங்கைக்கெல்லாம் உத்தரம் அருளி வாராநின்ற குருவே, அகப் பிராந்தி போய் – எனது அந்தக்கரணத்தில் இருந்த பஞ்ச பிராந்திகளும் ஒழிந்து, தெளிவு ஆனேன் – தெளிவு உடையவனானேன், துலக்கமான கண்ணாடியை – பிரகாசமான கண்ணாடியை, அடிக்கடி துலக்கினால் – மேலும் மேலும் விளக்கினால், பழுது அன்றே – குற்றம் என்னை, அலக்கண் மாற்றிய – எனது துன்பங்களை நீக்கிய, தேவரீர் – சுவாமிகள், எனக்கு உரை அமிர்தங்கள் – அடியேனுக்கு உபதேசியா நிற்கும வாக்கிய அமிர்தங்கள், தெவிட்டா – தெவிட்டுகின்றில.

(ப – ம்) செகத்து சத்திய மென்கின்ற பிராந்தியும், இருபத்தொன்பது தத்துவங்களையும் ஒன்றுக் கொன்று பேதந் தெரியாமல் ஒருமைப்பாடாய் நானென்கின்ற பிராந்தி

யும், புண்ணிய பாவங்களைக் குறித்துத்தான் கர்த்தா போக்தாவென்கின்ற பிராந்தியும், தானும் ஈசுவரனாகிய பிரமமும் வேறென்கின்ற பிராந்தியும், தான் சேதனனாகவிருந்தும் தான பிரமமல்லன் என்கின்ற பிராந்தியும், ஆகிய பஞ்சப் பிராந்தியும் நீங்கிப் பரிபூரண பரப்பிரம சொரூபமே யானென வபரோட்சமா யறிந்தே னென்றானென்பார், "அகப் பிராந்தி ... தெளிவானேன்" எனவும், உற்பத்தி திதி லய துன்பங்களை நீக்கிய வாசிரியரே என்றான் என்பார், "அலக்கண் மாற்றிய தேவரீர்" எனவும் கூறினர்.

(தா - ம்) சுருதி யுக்திகளால் அநுபவம் உண்டாகும்படி அநுக்கிரகித்த வாசாரியரை மேலும் உபதேசிக்கும்படி வேண்டிக் கொண்டதாம்.

(அ - கை) கிரம சிருட்டியான சிவேஸ்வர சகத்தைப் பற்றிய விவகாரங்கள் அறிஞனது பிராரத்துவ மென்றறிந்த சீடன் அதற்கு வித்தாக வுகபற் சிருட்டியினாலமைந்து கிடக்கின்ற சஞ்சிதத்தைக் கெடுக்கும் பொருட்டு, அஃது நசிக்குமென்று சுருதியிற் கூறிய இரண்டு வகையில் யாதுண்மையென வினாதல்.

கைதவங்களைச் சாத்திரஞ் சொல்லுமோ கருணையா லெனையாளும், ஐய னேகுரு வேயெவ ராகிலு மநுபவித் தாலன்றிச், செய்த கர்மங்கள் விடாவென்ற வசனமுஞ் சென்மசஞ் சிதம்வேவத், துய்ய ஞானத்தீச்சுடுமென்ற வசனமுந் துணிவதெப் படிநானே. 49.

(இ - ள்) கைதவங்களை - அசத்தியமான வார்த்தைகளை, சாத்திரம் சொல்லுமோ - வேதங்கள் கூறுமோ, கருணையா லெனையாளும் - கிருபையினா லடியேனை யாட்கொள்ளும், ஐயனே குருவே - பிதாவாகிய வாசாரியரே, எவராகிலும் - யாவரா யிருந்தபோதிலும், செய்த கருமங்கள் - தாங்கள் செய்த கரும பலன்கள், அநுபவித்தாலன்றி - அநுபவித்தொழித்தாலல்லது, விடாவென்ற வசனமும் - தீராதென்ற வசனமும், சென்ம சஞ்சிதம் வேவ - அனந்த ஜன்மங்களுக்குக் காரணமாகும் சஞ்சித கருமங்கள் வெந்து நீறாகும்படி, துய்ய ஞானத்தீ - மேலாகிய ஞானாக்கினி, சுடுமென்ற வசன

மும் – தனிக்கும் என்ற வசனமும், ஆகிய இவ்விரண்டில் நான் துணிவதெப்படி – இஃதுதான் வாஸ்தவம் இஃது அன்று என்று ஒன்றை எவ்விதம் நிச்சயிப்பது.

(ப – ம்) கோழியானது குப்பையைக் கிண்டக் கிண்ட அதற்கு குப்பை இரை கொடுப்பது போல, யான் எவ்வித மான சங்கை கேட்பினும் வருத்தமின்றி அதததற்குத் தகுந்த உத்தரங்கூறிக் கிருபையினாலடியேனை யாட்கொள்ளு மெனது பிதாவாகிய ஆசாரியரே என்றனென்பார், "கருணையால் ... குருவே" யெனவும், மனோ விருத்தி ஞானம், சாட்சி விருத்தி ஞானம், அகண்ட விருத்தி ஞானம், அகண்டாகார விருத்தி ஞானம், ஆகிய இவைகளுக்கு மேலாகிய அகண்டேகரச ஞான மென்றனென்பார், "தூய்ய ஞான" மெனவும் கூறினார்.

(தா – ம்) சஞ்சித கன்ம மநுபவித்துத் தீரு மெனவும் ஞானக்கினியாற் றீருமெனவும் கூறியுள வேத வாக்கிய மிரண்டில் யாதுறுதியென வினாவினார்.

(அ – கை) அவ்வினாவிற் குத்தரம்.

**சீவ பேதங்க ளளவிலை மைந்தனே செய்கையு மளவில்லை**
**ஆவ வாமவ ரவரதி காரங்க ளறிந்துபக் குவநோக்கிப்**
**பூவ லர்ந்துபின் பலங்கள் காட் டுவனபோற் பூருவஞ் சித்**
**தாந்தம், காவல் வேதங்க ளிரண்டையும் வசனிக்குங் காண்**
**டமூ வகையாலே. 50**

(இ – ள்) மைந்தனே – மைந்தா, சீவபேதங்க ளளவிலை – கர்ம பேதத்தால் சீவர்களின் பேதம் அநேகம், செய்கையும் அளவிலை – அவர்களின் கிரியைகளும் அநேகம், ஆகையால், ஆவவாம் – அவைகளால் ஆவனவாகும், அவரவரதிகாரங்கள் – அந்தந்தச் சீவர்களினதிகாரங்களை, அறிந்து – நிச்சயித்து, பக்குவம் நோக்கி – பருவத்தைப் பார்த்து, காவல் வேதங்கள் – இரட்சிக்கும் சுருதிகள், காண்டம் மூவகையாலே – கர்மம் உபாசனை ஞானமென்னும் காண்டத் திரயங்களாலே, பூருவம் சித்தாந்தம் இரண்டையும் – பூர்வபட்சம் சித்தாந்தம் என்னும் இரண்டையும், வசனிக்கும் – சொல்லும், (இதற்கு உவமானம் கூறுகின்றார்.) பூவலர்ந்து – முன்னே புஷ்பங்களை

தோற்றுவித்து, பின் — பின்னே, பலன்கள் காட்டுவனபோல் — பலன்களைக் காட்டாநிற்கும் வாழை முதலிய விருட்சங்களைப் போல.

(ப — ம்) கர்ம பேதத்தால் சீவர்கள் நானு பேதமாயிருப்பார் என்பார் சீவ பேதங்கள் அளவில்லை யெனவும், கர்ம காண்டத்திற் கூறுகின்ற யாகாதி கருமங்களுக்கும், உபாசனு காண்டத்திற் கூறிய பிரமாதி தேவதைகளின் தியானுதிகளுக்கும், ஞான காண்டத்திற் கூறும் சிரவணுதிகளுக்கும், அளவில்லை யென்பார்; "செய்கையும் அளவில்லை" யெனவும், காண்டத்திரய வப்பியாசத்திலும், மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரமாகிய பருவத்தைப் பார்த்தென்பார், "பக்குவம் நோக்கி" எனவும் கூறினுர்.

(வி — ரை) வாழை வைப்பதில் பலன் பூருவம் இலை, சித்தாந்தம் பூ, அது பூருவம் காய் சித்தாந்தம், அது பூருவம் பழம் சித்தாந்தம், அதுபோல் சுருதி பாவகன்ம மநுபவித்துத் திருமெனல் பூருவம், தகுந்த புண்ணியஞ் செய்தால் தீருமெனல் சித்தாந்தம், அது பூருவம் அன்புடன் செய்யில் தான் பயனெனல் சித்தாந்தம், அது பூருவம் சீவேஸ்வர சகத்துப் பொய்; பிரமந்தானென்றறியும் ஞான முக்தியமெனல் சித்தாந்தம், அது பூருவம் பரமாத்துவித நிட்டை சித்தாந்த மெனக் கொள்க.

(தா — ம்) சீவர்களது பக்குவத்திற் கேற்கப் பூருவபட்சம் சித்தாந்தம் என இரண்டாக வேதம் கூறுமென்பதாம்.

(அ — கை) இதுவுமது

ஆன பாவிக ளடைவன நரகங்க ளவசிய மானுலும்
தான மந்திர விரதயோ கங்களாற் றவிருமென் பதுபொய்
யோ, ஈன மாம்பல சன்மசஞ் சிதவினை யெத்தனை யானு
லும், ஞான மாங்கனல் சுடுமென்ற மறைமொழி நம்பினுல்
வீடுண்டே. 51.

(இ — ள்) ஆனபாவிகள் — பாவ கர்மங்களைச் செய்பவரான பாவிகள், அடைவன நரகங்கள் — அடைவதான நரகங்

களானவை, அவசியமாறுலும் – நிச்சயமாக வுளவேனும் தான மந்திர விரத வோமங்களால் – தானம், விரதம், மந்திரம் எக்ஞம் என்னும் பிராயச் சித்தங்களால்; தவிருமென்பது பொய்யோ – பாவம் நீங்கிவிடுவதால் நரகங்களானவை வாராது ஒழிந்துவிடுமென்று சுருதி கூறுவ தசத்தியமா, அன்றே, ஈனமான – இழிவான, பல சன்ம சஞ்சிதவினை – அநேக சன்மங்களுக்குக் காரணமான சஞ்சித கர்மங்கள், எத்தனையாறுலும் – அநேகங்களா யிருந்தாலும், ஞானமாங்கனல் – தத்துவ ஞானமாகிய அக்கினியானது, சுடும் என்ற மறைமொழி – அவைகளைத் தகித்துவிடுமென்ற சுருதி சித்தாந்த வசனத்தை, நம்பிஞல் – விசுவசித்தால், வீடு உண்டே – சஞ்சிதங்கள் நீங்கி மோட்சமுளதாதல் உண்மை.

(ப – ம்) அனித்தியமாயும் துக்கமாயும் அசுத்தமாயும் இருக்கின்ற நாலுவித பிறவிக்குக் காரணமான சஞ்சித கன்மம் எவ்வளவு மிகுதியா யிருந்தாலும், பஞ்சுப் பொதி அநேகமாறுலும் ஓர் அக்கினிப் பொறித் தகித்துப்போடல் போல, தத்துவ ஞானமானது தகித்துப் போடுமென்பார், "ஈனமாம் ... சுடு" மெனவும், கருடத் தியானம் மூர்த்தி தியானம் விசுவாசித்து அப்பியாசிக்காவிடில் சித்தியாகாதது போல, வேதத்தில் கூறுகின்றதை நம்பி அப்பியாசிக்காதோருக்கு மோட்சமுண்டாகா தென்பார், "மறைமொழி ... வீடுண்டே" எனவும் கூறிஞர்.

(தா – ம) கன்ம காண்ட பூர்வ பட்சத்தை அதன் சித்தாந்தத்தை நம்பிச் செய்து நீக்குவது போல, அநுபவித்துத் தீருமென்ற பூர்வபட்சத்தை நீக்கித் தத்துவ ஞானத்திஞல் கெடுமென்ற சித்தாந்தத்தைக் கைக்கொண்டு அந்த ஞானத்தைப் பெற்றுல் அதனுல் சஞ்சிதங் கெடுமென்பதாம்.

(அ – கை) அறிஞர்களும் ஆனந்தங் கொடுக்கின்ற அத்துவித ஞானத்தை விட்டுக் கருமத்தைச் செய்து, அதில் எப்போதும் துன்புறுதல் யாதிஞல் என விஞதல்.

என்ம னந்திருக் கோயிலாத் தினங்குடி யிருந்தருள் குருமூர்த்தி, சென்ம சஞ்சித வினைகள்வே ரறுத்திடும் தேவரீர் மெஞ்ஞானம், தன்ம யந்தரு மகிமையை விபுதராஞ் சமர்த்

திரு மறியாமல், கன்ம மாங்குழி யினில்விழுந் தழிகின்ற காரண முரையீரே. 52.

(இ — ள்) என் மனம் — எனது சத்துவ மனத்தையே, திருக்கோயிலா — சிறந்த ஆலயமாக, தினம் குடியிருந்தருள் — நிரந்தரம் வாசம் செய்து கொண்டிருந்து இரட்சிக்கின்ற, குருமூர்த்தி — ஞானசாரியரே, சென்ம சஞ்சித வினைகள் வேர் அறுத்திடும் தன்மயந்தரும் — சென்மத்திற்குக் காரணமான சஞ்சித கருமத்தை அத்தியந்தம் போக்கி இன்ப அநுபவத்தைக் கொடுக்கின்ற, தேவரீர் மெஞ்ஞானம் — சுவாமிகள் அநுக்கிரகிக்கும் தத்துவ ஞானத்தின், மகிமையை — மகத்துவத்தை, விபுதராம் சமத்தரும் அறியாமல் — மிகக் கற்றவர்களாய் குண தோஷங்களைப் பகுத்தறிய வல்லவரும் தெரிந்து கொள்ளாமல், கன்மமாம் குழியினில் — கர்மமாகிய படுகுழியினில், விழுந்து அழிகின்ற — விழுந்து வருந்துகின்ற, காரணம் உரையீர் — காரணத்தை அநுக்கிரகிப்பீர்.

(ப — ம்) மகாலிங்கமானது கோயிலை விட்டு நீங்காது அதில் எப்போதும் இருத்தல் போல, என்னால் இடைவிடாது தியானிக்கப்பட்டு எனது அறிவுருவாகிய சத்துவ மனத்தில் நிரந்தரம் வாசம் செய்து கொண்டிருந்து ரட்சிக்கின்ற சத்திய ஞான வனந்தானந்தமான ஞானசாரியரே என்று னென்பார், "என்மனம் ... குருமூர்த்தி" யெனவும், அலிட்டமாகிய சஞ்சித கர்மத்தை அத்தியந்தம் போக்கி, இட்டமான எல்லாமும் தானாகும்படியான இன்ப அநுபவத்தைக் கொடுக்கின்றது சுவாமி அநுக்கிரகிக்கும் தத்துவ ஞானமென்று னென்பார், "சென்ம சஞ்சித...தன்மயந்தரு" மெனவும், பாழுங் கிணற்றில் வீழ்ந்தோன் சர்ப்பாதிகளால்பயதுன்பங்களடைந்து மேலேறுகிறதற்கு மார்க்கமறியாமல் வருத்தமடைதற் போல், யாகாதி கருமங்களைச் செய்வோர்க்கு அக் கருமம் செய்யுமுன் அதற்கு வேண்டிய செல்வ முதலானவை சம்பாதிக்கின்றதினால் துன்பமும், அக் கருமம் செய்யுங் காலத்து அக்கினி முகத்தில் இருத்தல் முதலிய துன்பமும், நிறைவேறுவிடின் மந்திரகிரியா திரவிய லோபத்தினால் நிரயம் வருமென்னும் பயமும், அக் கருமம் நிறைவேறின பின்னும் சொர்க்கத்தில் கத்துரு (தனக்கு மேம்பட்டவன்) சத்துரு, முதலான பயமும், துன்பமும், ஞானமடைய மார்க்கந் தெரியாது செனன மரணத்தில்

சுழலுதலு முண்டாகுமென்று னென்பார், "கன்மமிம் ... அழி தல்" எனவும் கூறினர்.

(தா – ம்) ஞானம் அப்பியசிப்போருக்கு இன்பமும் கன் மஞ் செய்வோருக்குத் துன்பமும் உண்டாகு மென்பதாம்.

(அ – கை) அவ் வினவிற் குத்தரம்,

**அழிவி லாததற் பதந்தனை மைந்தனே யகமுகத் தவர் சேர்வர், வழி நடப்பவர் பராமுக மாயினுன் மலர்ந்தகண் ணிருந்தாலும், குழியில் வீழ்வர்கா ணப்படி வெளி முகங் கொண்டுகா மிகளானோர், பழித ரும்பிற விக்கட லழுந்து வர் பரகதி யடையாரே.**

(இ – ள்) அழிவிலாத தற்பதந்தனை – நித்தியமான பரி பூரண பிரம பதத்தை, மைந்தனே – மைந்தா, அகமுகத்தவர் சேர்வர் – அகமுக முடையோர் அடைவர்; வழி நடப்பவர் – மார்க்கத்தில் செல்பவர், பராமுகமாயினால் – பகிர்முகமாயின், மலர்ந்த கண் இருந்தாலும் – விகசிதமான நேத்திரங்கள் இருப்பினும், குழியில் வீழ்வர்காண் – எப்படிக் குழியின்கண் வீழா நிற்பரோ, அப்படி – அவ்விதம், வெளிமுகம் கொண்டு – பகிர்முக முடையோராய், காமிகளானோர் – சுவர்க்க லோகத்தை விரும்பியவர்கள், பழிதரும் பிறவிக் கடலழுந்து வர் – யாவராலும் நிந்திக்கப்பட்ட எழுவகைப் பிறவி சாகரத் தில் சுழலா நிற்பர், பரகதியடையார் – பரமோட்சத்தை யடையார்.

(ப – ம்) சரீர முத்தியாயும், அறிவுடையதாயும், அன் னியமாயும், அடைந்தவர் மறுபடி பிறத்த லுடையதாயும், இருக்கின்ற பிரம லோகாதி பதங்கள் போலல்லாது, அசரீர முத்தியாயும், அழிவற்றதாயும், அடையப்படாத அனன்ய மாயு மிருக்கின்ற பரிபூரண பிரம பதத்தைக் கடபடாதியாய்ப் பார்க்கின்ற வாகியத்திற் பகிர்முகமும், காமாதி விருத்தியுடன் கூடி மனோராச்சியஞ் செய்கின்ற ஆந்தரத்திற் பகிர் முகமு மின்றி, அவ் விரண்டையும் சித்தாய்ப் பார்க்கின்ற வாகியத் திலும் ஆந்தரத்திலும் அகமுக முடையோரே அடைவ ரென் பார், "அழிவிலாத ... அகமுகத்தவர் சேர்வ" ரெனவும்

வேதாந்த சாத்திர சிரவணஞ் செய்து அதனால் பிரமமே சத்தியம் பிரபஞ்சம் அசத்தியமென அறிந்திருந்தும் அவ் வசத்தியமான பிரபஞ்சத்தைச் சத்தியமாகக் கருதி சொர்க்காதி போகத்தை விரும்பி யாகாதி கருமஞ் செய்வோராய், யாவராலும் நிந்திக்கப்பட்ட சுரர் முதல் தாவர மீரான எழுவகைப் பிறவிச் சாகரத்தில் சுழலுவதே யன்றிப் பரமோட்சத்தை யடையா ரென்பார், "வெளி முகம் ... பரகதியடையா" ரெனவும் கூறினர்.

(தா – ம்) வேதாந்த சாஸ்திரார்த்தங்களைத் தனக்காக்கிக்கொண்டு, விசேஷித்து நம்பாமல் மேலெழுந்த வரிசையாகப் பார்த்திருப்பதே, கன்மஞ் செய்வதற் கேதுவெனவும், அங்ஙனம் கருமஞ் செய்வோர் சனன மரண சமுசாரத்தை அடைவரே அன்றிப் பரமோட்ச மடையா ரெனவுங் கூறினதாம்.

(அ – கை) சீவச் செயலிவை சிவச் செயலிவை யெனத் தெளியு நிமித்தம் வினாதலுக் குத்தரங் கூறுகின்றார்.

சிறந்த நன்மையுந் தீமையு மீசனார் செய்விக்குஞ் செயலன்றோ, பிறந்த சீவர்க ளென்செய்வா ரவர்கண் மேற் பிழைசொலும் வழியேதோ, துறந்த தேசிக மூர்த்தியே யென்றிடிற் சுருதிநூற் பொருண் மார்க்கம், மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்திகாண் மைந்தனே யதுகேளாய். 54

(இ – ள்) சிறந்த நன்மையும் தீமையும் – சிறந்த நல்வினையும் இகழ்ந்த தீவினையும், ஈசனார் செய்விக்கும் செயலன்றோ – (பாவையை ஆட்டுபவனைப் போல்) அந்தரியாமி செய்விக்கும் செயலன்றோ, பிறந்த சீவர்கள் – (பாவையைப் போல்) சுதந்தரமின்றி அவன் அமைத்தபடி எழுவகைப் பிறவியில் செனிக்கும் சீவர்கள், என் செய்வார் – யாது செய்வர், அவர்கள் மேல் – அச் சீவர்கண்மீது, பிழை சொலும் வழியேதோ – குற்றம் கூறும் மார்க்கம் யாதுகாரணமோ, துறந்த தேசிக மூர்த்தியே என்றிடில் – அனைத்தையும் தியாகம் செய்த தேசிகர் தலைவரே என்று வினவிடில், சுருதி நூல் பொருள் மார்க்கம் – வேத சாஸ்திரார்த்த நெறியை, மறந்த மூடர்கள் – மறந்து நிடேதத்தை செய்யும் அறிவிலிகள், வச

னிக்கும் பிராந்திகாண் — சொல்லும் மயக்கங்காண், மைந்தனே யதுகேளாய் — மைந்தா அது கேட்பாய்.

(ப — ம்) வேதத்தின் காண்டத்திரயம் அநுட்டிக்கும் சீவர்கள் அந்தவந்த காண்டத்தில் விதித்தபடி நன்கு செய்கின்றதும், நிடேதத்தை விடாது தீங்கு செய்கின்றதும், பாவையானது ஆட்டுகின்றவன் அசைத்தபடி அசைகின்றதேயன்றித் தனக்கெனச் செயலற்றிருப்பது போல, அந்தரியாமி ஆட்டிவைத்தபடி அசைகின்றதே தவிர, அவ்வந்தரியாமி அமைத்தபடி எழுவகைப் பிறவியில் செனிக்கும் அச்சீவர்கள் சுதந்தரத்தாலன்றே என்றுனென்பார், "சிறந்த நன்மையும்...என்செய்வார்" எனவும், வேத சாஸ்திரம் படித்தும், அதில் கூறியபடி ஆசை முதலிய துர்க்குணத்தை நீக்கி ஆத்ம சொரூபத்தை யடையாது, அவ்வாசையினால் வேத சாஸ்திரார்த்தத்தை மறந்து; நிடேதத்தைச் செய்பவர்கள் சித்தப்பிரமை கொண்டவன் ஒன்று இருக்க ஒன்று கூறுதல் போல, மயக்கத்தால் தற்செயலை ஈசுவரச் செயலாகச் சொல்வார்க ளென்பார், "சுருதி நூல் ... பிராந்தி" எனவும் கூறினர்.

(தா — ம்) சீவர்கள் விதி நிடேதத்தைச் செய்வது ஈசுவரச் செயலா வன்று? என்று சீடன் வினவ வாசிரியர் அங்ஙனம் கூறுவது எதார்த்தமன்றென்று உத்தரங் கூறத் தொடங்கினதாம்.

(அ — கை) இதுவுமது

திகழ்ந்த வீசனார் சிருட்டியுஞ் சீவனார் சிருட்டியும்
வெவ்வேவேறே, சகந்த னிற்பொது வீசனார் சிருட்டிகள் சரா
சரப் பொருளெல்லாம், அகந்தை யாயபி மானங்கள் கோ
பங்க ளாசைக ளிவையெல்லாம் இகழ்ந்த சீவனார் சிருட்
டிக ளாகுங்கா ணீசனார் செயலன்றே. 55.

(இ — ள்) திகழ்ந்த ஈசனார் சிருட்டியும் — சத்தப் பிரமமாக விளங்கா நின்ற ஈசுவரனது சிருட்டியும், சீவனார் சிருட்டியும் — சீவனுடைய சிருட்டியும், வெவ்வேறே — வேறுவேறும், அதாவது, சகந்தனில் பொது — சகத்தில் யாவர்க்கும்

பொதுவான, சராசரப் பொருளெல்லாம் — நிற்ப நடப்பன வாகிய பொருளனைத்தும், ஈசனார் சிருட்டி — ஈசுவர சிருட்டி, அகந்தையாம் அபிமானங்கள் — தேகாதிகளில் நானென்னும் அகந்தையும், புத்திராதிகளில் எனதென்னும் மமதையு மாகிய அபிமானங்களும், கோபங்கள் ஆசைகள் — கோபங் களும் ஆசைகளும், இவை யெல்லாம் — ஆகிய அந்தக்கரண கற்பனைகள் அனைத்தும், இகழ்ந்த சீவனார் சிருட்டிகளாகுங் காண் — மகான்களால் நிந்திக்கப்படுகின்ற சிதாபாசனது சிருட்டியாம், ஈசனார் செயலன்று — ஈசுவர சிருட்டியல்ல,

(ப — ம்) பிறர் பொருளைக் கவர்ந்தவன் நிந்திக்கப்படுகின் றது போல ஈசுவரன் சிருட்டித்த தநுகரணத்தை யானென் றும், புவன போகத்தை எனதென்றும், அபிமானித்துக் கொண்டு அவைகள் நன்றாயிருக்க வேண்டுமென்று இச்சை யும், அவைகளைக் குறித்துத் தீது செய்தோரிடத்துக் குரோத மும் செய்வதனால், மகான்களால் நிந்திக்கப்படுகின்ற சிதா பாசனென்பார், "இகழ்ந்த சீவனார்" என்றார்.

(தா — ம்) ஈசுவர சிருட்டி சீவசிருட்டிகள் இவை யெனப் பகுத்துக் கூறினதாம்.

(அ — கை) அவ் ஈசுவரசிருட்டி சீவ சிருட்டியால் உறு வன இவையென்பதும் ஈச சிருட்டி, சீவ சிருட்டியால், பந்த மோட்சமுண்டா மென்பதற்கு யுத்தியுங் கூறுகின்றார்.

மூவ ராம்பரன் சிருட்டிக ளுயிர்க்கெலா முத்திசா தன
மாகும், சீவ னார்செயுஞ் சிருட்டிக டங்களைச் செனிப்பிக்கும்
பிணி யாகும், தாவ ராதிக ளசித்திடி லொருவர்க்குஞ் சன
னங்க ளசியாவாங், கோப மாதிக ளசித்திடிற் பந்தமாங்
கொடும் பிற விகள்போமே. 56.

(இ — ள்) மூவராம்பரன் சிருட்டிகள் — திரிமூர்த்தி சொரு பமான ஈஸ்வர சிருட்டிகள், உயிர்க்கெலாம் — பல வுயிர்களுக் கும், முத்தி சாதனமாகும் — மோட்ச சாதனத்துக் கேதுவா யிருக்கும், சீவனார் செயும் சிருட்டிகள் — சீவர்களின் கற்பித மான சிருட்டிகள், தங்களைச் செனிப்பிக்கும் பிணியாகும் — தங்களைப் பிறப்பிக்கும் துன்பமாகிய வியாதியாம், தாவராதி

கணசித்திடில் – (இனி யுத்தி) ஈசுவர சிருட்டியான தாவர முத லியவை நாசமாயின், ஒருவர்க்கும் சனனங்கள் நசியாவாம் – யாதொருவர்க்கும் சமுசாரங்கள் நாசமாகாவாம், கோபமாதி கள் நசித்திடில் – சீவ சிருட்டியான கோப முதலியவை நாச மாயின், பந்தமாம் கொடும் பிறவிகள் போம் – பந்தமாகிய கொடிய சமுசாரங்கள் நாசமாம்.

(ப – ம்) விருட்சமானது பல வுயிர்களுக்கும் நிழல், விறகு, இலை, பூ, காய், பழமுதலியவற்றை உதவுகின்றதினால் சுகத் துக் கேதுவாயிருப்பது போல, திரிமூர்த்தி சொரூபமான ஈசுவர சிருட்டியாகிய தனுகரண புவன போகங்கள், சற்கரும சிரவணாதி யுதவியால் மோட்ச சாதனமா யிருக்கு மென்பார், "மூவராம்பரன் ... சாதனமாகு" மெனவும், ஒருவனுக்கு வந்த வியாதி அவனுக்கும் அன்னியருக்கும் துன்பங் கொடுத்தல் போலச் சீவர்களுடைய அபிமானமும் ஆசை கோப முதலிய வைகளும், தங்களுக்கும் அன்னியருக்கும் எப்பொழுதும் துன்பங் கொடுப்பது மன்றிச் செனன மரணாதித் துன்பத்தை யும் கொடுக்கு மென்பார், "சீவனார் செயும் ... பிணியாகு" மெனவுங் கூறினார்.

(தா – ம்) ஈசுவர சிருட்டியான பஞ்சபூத பௌதிக முத லிய தத்துவங்கள் முத்திக்குச் சாதனமும் சீவ சிருட்டியான காமக் குரோதாதிகள் பவத்திற்கு ஏதுவுமா மெனவு மதற் குத்தியுங் கூறினதாம்.

(அ – கை) ஈசுவர சிருட்டி யழிந்தால் பிறவி நீங்காது சீவ சிருட்டி யொழிந்தால் பிறவி நீங்கு மென்பதற்கு அநுப வம் யாதெனில்,

ஈசர் காரியம் பிரளயத் தொழியவு மெவர்பவ மொழிந் தார்கள், தேச காலதே காதிக ளிருக்கவுஞ் சீவகா ரியமோ கம், நாச மாக்கிய விவேகத்தி னுயிரொடு ஞானமுத் தர் களானார், பாச மோகங்கள் பசுக்களின் செயலன்றிப் பசு பதி செயலன்றே. 57.

(இ – ள்) ஈசர் காரியம் – ஈசுவர சிருட்டி, பிரளயத் தொழியவும் – பிரளயத்தில் கெட்டுப்போ யிருக்கவும், எவர் பவம் ஒழிந்தார்கள் – யாவர் சமுசார நாசத்தை யடைந்தனர்,

தேச கால தேகாதிக ளிருக்கவும் – தேசமும் காலமும் தேகேந்திரியங்களு மாகிய ஈசுவர சிருட்டி இருக்கவும், சீவ காரிய மோகம் – சீவ சிருட்டியாகிய காமாதியை, நாசமாக்கிய விவேகத்தின் உயிரொடு ஞான முத்தர்களானோர் – சமாதி ஞானத்தால் நீக்கினபேர்கள் தேகத்தோடு சீவித்தே பந்தம் நீங்கி இருக்கிறார்கள், (ஆனதால்) பாச மோகங்கள் – பாசமாகிய காமங்கள் முதலியவை, பசுக்களின் செயலன்றி – சீவ சிருட்டியே யல்லாமல், பசுபதி செயல் அன்று – ஈசுவர சிருட்டியன்று.

(ப – ம்) பூருவ பிரமப் பிரளயத்திலும், தினப் பிரளயத்திலும், ஈசுவர சிருட்டியான சராசரங்கள் கெட்டுப் போயிருக்கவும், இப்போது சராசர வுயிர்களுண்டா யிருப்பதாலும், இராகத் துவேஷ சுகதுக்க முண்டாவதாலும், ஒருவரு முத்தியடையவில்லையே யென்பார், "ஈசர் காரியம் ... ஒழிந்தார்க" ளெனவும், திதி காலத்தில் சாக்கிராவஸ்தையில் தேசமும் காலமும் தேகேந்திரியாதிகளு மிருக்கவும், முளையைக் கிள்ளினவுடன் விதை கெடுவது போல, சீவ சிருட்டியாகிய காமாதியைச் சமாதி ஞானத்தால் நீக்கியவர்கட்குப் பந்தம் நீங்கியிருக்கின்றதே யென்பார், "தேச கால ... ஞான முத்தர்களானோர்" எனவும், புல்லை விட்டுப் பயிரைத்தின்ற பசுவையுடையவன் கட்டியவிழ்த்தல் போல, பிரமானந்தத்தை விட்டு விடயானந்தத்தைப் புசிக்கும் சீவனை ஈசன் பவத்தில் விட்டு மோட்சம் கொடுத்தலால் "பசுபதி" யெனவுங் கூறினார்.

(தா – ம்) ஈசுர சிருட்டியான, தனுவாதி யிருக்கச் சீவ சிருட்டியான காமாதி நசிக்கின் அப்போதே வீடடைதலால், காமாதி சீவச் செயலேயன்றி, ஈசுவரச் செயலன்றென அநுபவ மூலமா யறிவித்ததாம்.

(அ – கை) சீவ சிருட்டியும் ஈசுவர சிருட்டியும் வேறென்றதற்குப் பிரமாணமுண்டோ வெனில் கூறுகின்றார்.

அச்சு வத்தமென் றொருமர மதிலிரண் டரும்பறவைகள் வாழும், நச்சு மங்கொரு பறவையம் மரக்கனி நன்றுநன்றெனத் தின்னும், மெச்சு மங்கொரு பறவைநின் றதெனவியங்கியப் பொருளாக, வைச்சு மாமறை சீவனை யீசனை வகுத்தவா றறிவாயே. 58.

(இ — ள்) அச்சுவத்த மென்றொரு மரம் — மாயை என்னும் ஓர் விருட்சமுண்டு. அதில் — அந்த விருட்சத்தில், இரண்டு அரும் பறவைகள் வாழும் — இரண்டு அரிய பட்சிகள் சீவித்துக் கொண்டிருக்கும், அங்கு — அவ் விருட்சத்தில் உள்ள இரண்டு பட்சிகளுள், நச்சும் ஒருபறவை — விடயத்தை விரும்பும் ஒரு பட்சி, அம் மரக்கனி — அந்த விருட்சத்தின் கனிகளை, நன்று நன்றெனத் தின்னும் — நல்லது நல்லது என்று புசிக்கும், மெச்சும் — யாவராலும் புகழப்பட்ட, அங்கொரு பறவை — அவ் விருட்சத்தின் கண்ணுள்ள மற்றொரு பட்சி, தின்னுதென — புசியாதென, * வியங்கியப் பொருளாக — வியங்கியார்த்தமாக, வைச்சு — வைத்து, மாமறை — மகத்துவமுடைய வேதம், சிவனை ஈசனை — சீவனையும் ஈசனையும், வகுத்தவாறு அறிவாய் — பகுத்துக் கூறிய வழியை நீ விசாரித்து அறிவாய்,

(ப — ம்) இன்றைக்கு இருப்பது நாளைக்கு இருக்குமென்று நிலையில்லா தழிகின்ற மாயை யென்னும் விருட்சமென்பார், "அச்சுவத்தம் ... மர" மெனவும், தேகத்தில் நிருவிகாரனா யிருக்கின்ற ஈசுவரனும் விகாரமா யிருக்கின்ற சீவனும சீவித்துக் கொண்டிருப்பா ரென்பார், "அதில் இரண்டரும் பறவைகள் வாழு" மெனவும், அதில் சீவன் தேகத்தைத் தானென்று அபிமானித்துத் தேகாதி சுகத்தைச் சத்தியமாய்க் கருதி ராகாதியுடன் கருமஞ்செய்து விடயானந்தத்தைப் புசிப்பா னென்பார், "நச்சு ... நன்றெனத் தின்னு" மெனவும, நிருவிகாரமாயும் நிச்சலமாயும் நித்தியமாயும் யாவராலும் புகழப்பட்டவராயு மிருக்கின்ற ஈசுவரன் தேகாதி ஜகத்துக்கு விலட்சணமாய் விடயானந்தம் புசியாது சாட்சியா யிருப்பா னென்பார், "மெச்சு ... தின்னு" தெனவும் கூறினர்.

(வி — ரை) அச்சுவத்த மென்பது தேகமாகிய, தலைகீழான மாயா விருட்ச மெனவும், அரும் பறவைகளென்பது ஒருவன் குதிரைமேற் செல்ல, கூடப் போகிற வரையும் சேர்த்துக் குதிரைக்காரர்கள் போகிறார்களென்பது போல, நிச்சலத்தா லருமையான ஈசனையும் பட்சிபோல் சஞ்சலமுடைய சீவனை

* வியங்கியப் பொருள் எனினும் குறிப்புப் பொருள் எனினும் ஒக்கும்.

யுஞ் சேர்த்து அரும் பறவைகள் என்றும் கூறினதெனவுங் கொள்க.

(தா – ம்) சிவேசுவரர்களின் தாரதம்மியம் இஃதெனச் சுருதி யுக்தியுக் கூறுகின்றதென்று தெரிவித்ததாம்.

(அ – கை) சிவச் செயலை ஈசுவரச் செயலாகக் கூறுபவர்க்கு சனன துன்பமும் சிவச் செயலாகவே கூறுபவர்க்கு முத்தியின்பமும் பயனுமெனக் கூறுகின்றார்.

இந்தச் சிவனால் வருமறு பகையெலா மிவன்செய லென்னுமல், அந்தத் தேவனால் வருமென்ற மூடர்க ளதோகெதி யடைவார்கள், இந்தச் சிவனால் வருமறு பகையெலா மிவன் செய லெல்லாமல், அந்தத் தேவனா லன்றெனும் விவேகிக ளமலவீ டடைவாரே. 59.

(இ – ள்) இந்தச் சிவனால் – இச் சிவனால், வருமறுபகையெலாம் – உண்டான காம முதலிய பகைகளாறும் இவன் செய லென்னுமல் – இவனுடைய சிருட்டியென்று சொல்லாமல், அந்தத் தேவனால் வருமென்ற மூடர்கள் – அவ்வீசனால் உண்டாகின்றதென்று சொல்லும் அறிவிலிகள், அதோகதி யடைவார்கள் – நரக துன்பத்தை யடைவார்கள், இந்தச் சிவனால் – இச் சிவனால், வருமறுபகை யெலாம் – உண்டான காம முதலிய ஷட்பகைகளனைத்தும், இவன் செயலல்லாமல் – இச் சீவ சிருட்டியே யன்றி, அந்தத் தேவனா லன்றெனும் – அவ் வீசனால் உண்டான வல்ல வென்று சொல்லும், விவேகிகள் – அறிஞர்கள், அமல வீட்டைவார் – நின்மலமாகிய பரமோட்சத்தை யடைவார்கள்.

(ப – ம) ஒரு புருடன் திருடிய திருட்டை அவனுக் குபகாரஞ் செய்பவனும், எஜமானனுமா யிருக்கின்றவன் மீது சுமத்துகிறதினால், அவனுக்கு இகத்திற் றுன்பமும் நிந்தையும், மறுமையில் நரகமு முண்டாவது போல, சத்துரு வெப்படித் துன்பங் கொடுப்பானோ, அப்படிப் பிறவித் துன்பங் கொடுப்பதாகிய தமது காமாதி செயலைச் சருவக்ஞத் துவாதி குண மகிமை யுடையவனையும் மோட்சத்துக் கேதுவாய்த் தனக்குத் தனுவாதி கொடுத்து உதவி செய்து அடக்கி

ஆளுகின்றவனுயு மிருக்கின்ற, ஈசுரன் செயலாகக் கூறும் அறிவிலிகள் இகத்திற் றுன்பமும் நிந்தையும், மறுமையில் நரகதுன்பமு மடைவார்க ளென்பார், "இந்தச் சீவனுல் ... அதோகதி யடைவார்க" ளெனவும், திருடினவன் திருட்டை யன்னியர்மீது சுமத்தாது தன் செயலென்றும், அது துன் பந் தருவதான தீயதொழிலென்றும், அறிந்தால் அதன்பின் அத் திருட்டுச் செய்யாது விடுத்து நன்மையான தொழிற் செய்து சுகத்தையடைவது போல், தமது காமாதி குணங்களை ஈசுரச் செயலென்று கூருது தமது செயலென்றும் அவை துன்பந் தருவனவென்றும் அறிந்தா லவ்வறிஞர் அதன்பின் அத் தீதான காமாதி குணங்களை விடுத்து வைராக்கியாதி குணங்களை அப்பியசித்துச் சற்குருவை யடைந்து, சிரவணுதி கள் செய்து தத்துவ ஞானம் பெற்று, அதனுல் சரீர மன்னிய மனித்திய மாதியான மலமில்லா திருக்கின்ற நின்மலமாகிய பரமோட்சத்தை யடைவரென்பார், "இந்தச் சீவனுல் ... வீட டைவார்" எனவும் கூறினுர்.

(தா - ம்) காமாதிகளை ஈசுர சிருட்டியெனக் கருதினுல் நிரயதுன்பமும் சீவசிருட்டியெனக்கொண்டு அவற்றை விசாரத் தாற் கெடுக்கின் முத்தியின்பமும் உண்டா மென்றதாம்.

(அ - கை) முன்பு ஈசுர சிருட்டி பொதுவென்றமையால் அவரும் பொதுவாக வேண்டுமே, பொதுதானெனில் சீவர்க ளிடத்தில் பட்சபாதம் வருவானேனென்று வினுதலுக் குத் தரங் கூறுகின்ருர்.

நலமெய் யையனே யெல்லவர்க் குந்தெய்வ நாயகன்
பொதுவானுல், சிலரை வாழ்வித்தல் சிலரோடு கோபித்தல்
செய்வதே னென்ருயேல், குலவு மக்களைத் தந்தைபோற்
சிட்டரைக் குளிர்ந்துதுட் டரைக் காய்வன், கலைக ணல்வழி
வரச்செயுந் தண்டமுங் கருணையென் றறிவாயே. 60.

(இ - ள்) நலம்மெய் ஐயனே - பிரமானந்தமே திருமேனி யாகக் கொண்ட ஆசாரியரே, எல்லவர்க்கும் - ஆண் பெண் அலியான சகல சீவருக்கும், தெய்வநாயகன் பொதுவானுல் - பிரமாதி தேவதைகளுக்கும் இன்பங் கொடுக்கின்ற ஈசுரன்

சமமானால், சிலரை வாழ்வித்தல் – சில சீவர் சுகமடையும்படி இரட்சித்தலும், சிலரொடு கோபித்தல் – சில சீவர் துக்கமடையும்படி முனிதலும், செய்வதேன் என்றுயேல் – செய்யாநிற்பதற்கு யாது காரணமென்று சங்கிப்பாயாகில், குலவு மக்களை – விளங்காநின்ற தன் புத்திரர்களை, தந்தைபோல் – (நன்கு செய்யும் குழந்தையினிடத்தில் கிருபையும், தீங்கு செய்யும் குழந்தையினிடத்தில் கருணையினால் கோபமும் செய்யும்) பிதாவைப் போல, சிட்டரைக் குளிர்ந்து – விதித்ததை யநுட்டிக்கும் நல்லோரிடத்தில் சந்தோஷித்து, துட்டரைக் காய்வன் – நிடேதத்தைச் செய்கின்ற தீயோரிடத்தில் கோபித்தலும் செய்வர், கலைகள் நல்வழி வர – சாஸ்திரங்களில் கூறிய நன்மார்க்கத்தை அநுஷ்டிக்கும்படி, செயும் தண்டமும் – செய்யாநிற்கும் தண்டனையும், கருணையென்றறிவாய் – கிருபையே யன்றி வேறன்று என்றறிதி.

(ப – ம்) கருணையினால் குழந்தைகளுக்கு இதமே செய்கின்ற மாதாவானவள், ஒரு குழந்தையினிடத்தில் பிரியமாயும், மற்றொரு குழந்தையினிடத்தில் அப் பிரியமாயுமிராதது போல, பிரமாதி தேவதைகளுக்கும் துன்பம் நீக்கி இன்பங் கொடுக்கின்ற ஈசுரன், ஆண் பெண் அலியான சகல சீவருக்கும் சமமானால், சில சீவர் சுகமடையும்படியும் சில சீவர் துக்கமடையும்படியும் செய்விக்கலாகாதே என்றுனென்பார், "எல்லவர்க்கும்...கோபித்தல் செய்வதே" னெனவும், யாவரும் கொண்டாடும்படி பகுத்தறிவுடைய பிதாவானவன் நன்கு செய்யும் குழந்தையினிடத்தில் கிருபையும், தீங்கு செய்யும் குழந்தையினிடத்தில் கருணையினால் கோபமும், செய்வது போல, ஈசுரனும் விதித்ததை யனுட்டிக்கும் நல்லோருக்கு இதம் செய்து, நிடேதத்தைச் செய்யும் தீயோருக்குக் கருணையினால் அகிதம் செய்விப்பா ரென்பார், "குலவு மக்களை ... காய்வ" ரெனவும், வண்ணான் வஸ்திரத்தை உவர் பிடித்து வெள்ளாவிவைத்துக் கல்லில் அடிப்பது அவ் வஸ்திரத்தின் அழுக்கைப் போக்கும் நிமித்தமேயன்றி, அதைக் கிழிப்பதின் பொருட்டல்லாதது போல, ஈசுரனும் தீயோரை இயமனால் தண்டித்துப் பிறவியைக் கொடுத்துத் தாரித்திரியம் ரோகமாதியால் வருத்துவது பேரருளா லவர்களுடைய பாவத்தை நீக்கிச் சாஸ்திரங்களில் கூறிய நன்மார்க்கத்தை யநுட்டித்துச் சுகத்தை யடையும்படி செய்விக்கும் பொருட்டேயன்றி

அச்சீவர்களைக் கெடுக்கும் பொருட்டன் றென்பார், "கலைகள் ... கருணை யென்றறிவா" யெனவுங் கூறினர்.

(தா - ம்) சீவர்களை ஈசுரன் வருத்துகின்றதும் அச்சீவர்களைச் சுகமடையும் பொருட்டுச் செய்யும் கிருபையே யன்றிப் பட்சபாத மன்றென்பதாம்.

(அ - கை) அச் சங்கைக்கு வேறொரு பிரகாரமாய் உத்தரங் கூறல்.

மனைவி லங்கறு மைந்தனே கற்பக மரங்கனல் புனன் மூன்றும், தனைய டைந்தவர் வறுமையுஞ் சீதமுந் தாகமுந் தவிர்த்தாளும், அனைய வீசனு மடைந்தவர்க் கருள்செய்வ னகன்றவர்க் கருள்செய்யான், இனைய குற்றங்க ளெவர் குற்ற மாகுமென் றெண்ணிநீ யறிவாயே. 61

(இ - ள்) மனைவிலங்கறு மைந்தனே - குடும்பமாகிய நடைவிலங்கு நீங்கியிருக்கின்ற மைந்தா, கற்பகமரம், கனல், புனல் மூன்றும் - கற்பக விருட்சம் அக்கினி ஜலம் ஆகிய மூன்றும், தனையடைந்தவர் வறுமையும் சீதமும் தாகமும் - பட்சபாதமின்றித் தன்னை யடைந்தவர்களின் தாரித்திரியத்தையும் குளிர்ச்சியையும் தாபத்தையும், தவிர்த்து ஆளும் - நீக்கி இரட்சிக்கும், அனைய ஈசனும் - அப்படிப் பட்சபாதமில்லாத ஈசுவரனும், அடைந்தவர்க்கருள் செய்வன் - அவன் விதித்தபடி அநுட்டித்து அவனை ஆராதிப்பவர்களுக்கு அநுக்கிரகம் பண்ணுவான், அகன்றவர்க்கு அருள் செய்யான் - ஆராதனை செய்யாது நீங்கினோர்க்கு அநுக்கிரகம் பண்ணான் இனைய குற்றங்கள் - இத்தன்மையான தோஷங்கள், எவர் குற்றமாகு மென்று - யாவருடைய குற்றங்களா மென்று, எண்ணி நீ அறிவாய் - நீ விசாரித்து அறியக் கடவாய்.

(ப - ம்) விலங்கு போட்டப்பட்டிருக்கும் ஒருவன் நினைத்த விடத்துக்குச் செல்லும் சுதந்திரமின்றி வருந்துவதும் அவ் விலங்கு நீங்கினவன் நினைத்த விடத்துக்குச் சென்று சுகமடைவதும் போல, ஈடணாத்திரய மிருந்தால் அவை நினைத்த படி எவ்வித நற்காரியங்களையும் அநுட்டித்துச் சுகமடைய விடா; அவை நீங்கினால் நினைத்தபடி அவைகளை அநுட்டித்துச் சுகமடையலா மென்பார், "மனைவிலங்கறுமைந்த" னெனவுங் கூறினர்.

(தா - ம்) சகல பேருக்கும் பொதுவாயிருக்கின்ற கற்பக விருட்சம், சலம், அக்கினி இவற்றை அடைந்தோருக்குத் தாரித்திரிய, தாக, சீதத்தை நீக்குவதும், அடையாதோர் அவைகள் நீங்காது துன்புறுவதும், அக் கற்பக விருட்சாதியின் பட்சபாதத்தி னின்மைபோல, சகல சீவருக்கும் பொதுவாயிருக்கும் ஈசுவரனை அவன் விதித்தபடி அநுட்டித்து அடைந்தோர், அனிட்டம் நீங்கி இட்டம் பெற்றிருப்பதும், அங்ஙனம் அவனை அடையாதோர் அனிட்டம் நீங்காது துன்புற்றிருப்பதுமே யன்றி, அவனிடத்தில் பட்சபாத மின்றெனவும், ஈசனை யடையாததினு லனிட்ட நீங்காதிருப்பது அச் சீவரின் குற்றமே எனவும் அறிவித்ததாம்.

(அ - கை) அக்குற்ற நீங்குதற்கு உபாயம் யாதெனில்.

ஒன்று கேண்மகனே புமான் முயற்சியா லுறைத்து மா னுடர்க்கீசன், நன்று செய்யவே காட்டிய நூல்வழி நடந்துநல் லவர்பின்னே, சென்று துட்டவா தனைவிட்டு விவேகியாய்ச் செனித்தமா யையைத் தள்ளி, நின்று ஞானத்தை யடைந்தவர் பவங்கள்போ நிச்சய மிது தானே. 62.

(இ - ள்) ஒன்று கேள் - ஒருபாயத்தைச் சொல்லக் கேட்பாய், மகனே - மைந்தா, புமான் முயற்சியா லுறைத்து - புருஷன் பிரயத்தனத்தில் அழுந்தி, மானுடர்க்கு ஈசன் நன்று செய்யவே - மனிதர்களுக்கு ஈசுவரன் பிரமானந்தம் கொடுத்தற் பொருட்டே, காட்டிய - உண்டாக்கிய, நூல்வழி நடந்து - சுருதியின் காண்டத்திரய பிரகாரம் அப்யாசித்து, நல்லவர் பின்னே சென்று - பிரமானந்தம் பெற்றிருக்கும் சத்துக்களை யடைந்து அவர்களிடத்தில் உபதேசம் பெற்று அதைச் சிரவணாதியால் அப்பியாசித்து, துட்ட வாதனை விட்டு - (சத்துக்களின் சகவாசத்தால் மைத்திரியாதி சுத்த வாசனையுடையவர்களாய்,) முன்னுள்ள அசுத்த வாசனையை யொழித்து, விவேகியாய் - ஆத்மானாத்ம விவேகத்தை யுடையவராய், செனித்த மாயையைத் தள்ளி - அத்தியாசமாகத் தோற்றிய அஞ்ஞானத்தை நீக்கி, நின்று - ஆத்ம நிச்சயத்தில் திடமா யிருந்து, ஞானத்தை யடைந்தவர் - அப்பிரதிபந்தாபரோட்ச ஞானத்தைப் பெற்றவர்களின், பவங்கள்

போம் – சமுசாரங்கள் நீங்கும், இதுதானே நிச்சயம்– இதுவே சுருதி சித்தாந்தம்.

(ப – ம்) எம் முயற்சி செய்பவரும் திரிகரண மொத்துத் தேகாபிமானமின்றிப் பிரியமுடன் நிரந்தரஞ் செய்தலாலே அந்தப் பயனடைதலாலும், அங்ஙனம் செய்யாவிடில் அடைத லின்மையாலும், மேலெழுந்த வரிசையாய் முயற்சி செய்யக் கூடாதென்பார், "உறைத்து" மெனவும், பிரமானந்தங் கொடுக்கவே காண்டத் திரயமாக ஈசுரனுண்டாக்கிய சுருதி யில் நிஷேதித்ததை விட்டு விதித்திருக்கின்ற நித்திய நைமித் தியாதி கருமத்தையும், பிரமாதி தேவதைகளின் உபாசனை யையும், நித்தியா நித்திய வஸ்து விவேகமாதி சாதனத்தையு மப்பியசித் தென்பார், "ஈசன் நன்று ... நூல்வழி நடந்து" எனவும், பிரமானந்தம் பெற்றிருக்கின்ற சத்துக்களைச் சரணு யடைந்து, ஆர்த்த முதலிய நான்கு பணிவிடையும் விட்டு நீங் காது செய்து நின்று, அவர்கள் கருணையா லநுக்கிரகிக்கும் மகா வாக்கிய வுபதேசம் பெற்றுச் சிரவணாதி யப்பியசித்தென் பார், "நல்லவர் பின்னே சென்" றெனவும், மைத்திரி கருணை முதிதை, யுபேட்சையாதி சுத்த வாசனையாற் காமக் குரோத லோபாதி அசுத்த வாசனையை நீக்கி யென்பார், "துட்ட வாதனை விட்" டெனவும், ஆத்மா னாத்மாக்களின் இலக்க ணத்தை ஐயந்திரிபின்றி நன்றாய்ப் பகுத்தறிந்து, பகுத் தறிந்த பிரகாரமே திடநிச்சயமா யிருந்து, அத்தியாசமாய்த் தோற்றிய அஞ்ஞானத்தை நீக்கி அப் பிரதிபந்தாப மோட்ச ஞானத்தைப் பெற்றவர்கள், சனன மரணாதி சமுசாரத்தை நீங்குவா ரென்பார், "விவேகியாய் ... பவங்கள் போ" மென வும், இவ்வண்ணம் நடந்தவர்களுக்கு மோட்ச முண்டாகுமே தவிர மற்றவர்களுக்கு மோட்ச முண்டாகா தென்பார், "நிச் சயம் இதுதானே" எனவும் கூறினர்.

(வி – ரை) உறைத்து, என்பதை நடந்து சென்று, விட்டு, விவேகியாய் நின்று, தள்ளி, யடைந்தவர், என்பவை களுடன் கூட்டுக.

(தா – ம்) சீவன் ஈசுரானுக் கிரகத்தாற் றனது திட முயற்சியுடன் கன்ம காண்டத்தில் விதித்த யாகாதி கருமங் களைச் செய்து பாவ நீக்கி, யுபாசனா காண்டத்தில் விதித்த

சிவன் முதலான தெய்வ வுபாசனைகளைச் செய்து ஏகாக்கிர சித்தம் பெற்று, ஞானகாண்டத்திற் கூறிய சாதன சதுட்டயம் பொருந்தி, ஞானசாரியரை யடைந்து, பணிவிடை செய்து விட்டு நீங்காது நின்று, அவரருளாற் கூறும் மகா வாக்கியோபதேசம் பெற்றுச் சிரவணாதிக ளநுட்டித்து, மைத்திரியாதி வாசனையால் காமாதி வாசனையை நீக்கி, ஆத்மானாத்மாவின் இலக்கணங்களை நன்றாய்ப் பகுத்தறிந்து, அஞ்ஞானத்தை நீக்கி, ஆத்ம ஞானம் பெற்றால் ஜனன மரணாதி சமுசார நீங்கு மென்பதாம்.

(அ—கை) யாதினால் ஞான முதிக்குமென வினாதலுமதற் குத்தரமுங் கூறுகின்றார்.

இந்த ஞானந்தான் வருவதெப் படியெனி லிடைவிடா
விசாரத்தால், வந்த டைந்திடும் விசாரந்தா னேதெனின்
மனுதியாஞ் சரீரத்தில், இந்த நானெவன் சித்தேது சட
மெது விரண்டுமொன் றாக்கூடும், பந்தமேதுவீ டேதென
வுசாவுதல் பகர்விசா ரமதாகும். 63

(இ—ள்) இந்த ஞானந்தான் — மேலே சொல்லிய தத்துவ ஞானமானது, வருவதெப்படி யெனில் — உண்டாவது எந்த முக்கிய உபாயத்தா லென்று நீ கேட்கில், இடை விடா விசாரத்தால் — நிரந்தரம் நெடுங்காலம் நேசத்துடன் ஆத்மானாத்ம விசாரணை செய்கிறதினாலே, வந்தடைந்திடும் — வந்து பொருந்தும், விசாரந் தானேதெனில் — விசாரத்தின் சொரூபம் எவ்விதமென்று கேட்பாயாயின், இந்த மனுதியாஞ் சரீரத்தில் — இம் மனம் முதலாகிய சரீரத் திரயங்களில், நான் எவன் — நான் என்பதற்கு அருத்தமாகிய ஆத்மா ஆர், சித்து ஏது — இவைகளில் அறிவாவது யாது, சடம் எது — அறிவில்லாதது யாது, இரண்டும் ஒன்றாக் கூடும் பந்தம் ஏது — சித்து சடங்கள் இரண்டும் தப்தாய பிண்டம்போல் ஒன்றாகப் பொருந்துகின்ற பந்தமாவது யாது, வீடு ஏது — மோட்சமாவது யாது, என வுசாவுதல் — என்று எப்போதும் ஆராய்வதே, பகர் விசாரமது ஆகும் — சாஸ்திரங்களாலும் பெரியோர்களாலும் கூறப்படும் விசாரத்தின் சொரூபமாம்.

(ப—ம்) கன்மபக்தி யோகத்தினாலின்றி நிரந்தரம் நெடுங் காலம் நேசத்துடன் ஆத்மானாத்ம விசாரணை செய்கிறதினா

லேயே தத்துவ ஞான முண்டாகு மென்பார், "இடைவிடா விசாரத்தால் வந்தடைந்திடு" மெனவும், காணுது போன பொருளை அது எந்தவிடத்தில் காணுது போயிற்ருே அந்த விடத்தில் தேடி அடைய வேண்டியது போல, சரீரத் திரயத்திலே மறைபட்டிருக்கும் ஆத்ம ஞானத்தை அடைவதற்கு அச் சரீரத் திரயத்திலேயே விசாரிக்க வேண்டு மென்பார், "மனுதியாஞ் சரீரத்தி" லெனவும், தேகேந்திரிய பிராண மனே புத்தி அவித்தை சீவன் கூடஸ்தராகிய இவைகள், நான் நான் என்றிருப்பதால் இவைகளில் நானென்கிற பதத்துக்கு அருத்தமாகிய ஆத்மா யார்? அருத்தமல்லாத அனுத்மா வெது, என விசாரித்த லென்பார், "இந்த நானெவ" னென வும், இவைகளெல்லாம் அறிவாகத் தோற்றுவதால் இவை களில் அறிவாவது எது, அறிவில்லாதது எதுவென விசா ரித்த லென்பார், "சித்தெது சடமெது" எனவும் கூறினுர்.

(வி – ரை) மனுதியாம் சரீரமென்ற பதத்துக்குக், கேழ் வரகு முதலியவை சிரணித்துப் போதல் போல, தூல சரீரம், அன்னமின்மை, மிகுதி வியாதி, முதுமையினுலும், சூட்சும சரீரம், இராகத் துவேஷாதியின் சங்கோசத்தினுலும், காரண சரீரம், யான் எனதென்கின்ற வபிமானத்தின் சங்கோசத்தினு லும், சிரணித்துப் போவதால் அவைகளுக்குச் சரீரமெனப் பெயர் வந்ததென்பார், பந்தமேது வீடேது என்னும் பதங்க ளுக்கு, அறிவு சொரூபமாய் அகம் பதத்துக் கருத்தமா யிருக் கின்ற ஆத்மா, அறிவில்லாததாய் அகம் பதத்துக் கருத்த மல்லாததா யிருக்கின்ற அனுத்மாவாகிய தூல தேகம், கரு மேந்திரிய ஞானேந்திரியம், பிராணுதி வாயு மனம் புத்தி அவித்தை சீவனுடன் சேர்ந்து, நான் பருத்தேன் இளைத் தேன், நான் பேசினேன் கொடுத்தேன், நான் கேட்டேன் கண்டேன், நான் பசியா யிருக்கிறேன் தாகமா யிருக்கிறேன், நான் சங்கற்பித்தேன் விகற்பித்தேன், நான் நிச்சயித்தேன் அபிமானித்தேன், நான் பிரியன் மோதன், நான் அறிந்தேன் அறியேன், என்பது பிராந்தி சித்தமான பந்தத்தின் இலக் கண மெனவும், இவைகளைப் பிரிந்து, நான் அசரீரி, நிரீந் திரியன், அப் பிராணன், அமனசு என்பது முதலியவை சுபாவ சித் தபேதமான முத்தியின் இலக்கண மெனவுங் கொள்க.

(தா - ம்) சிற்சட விலக்கணங்களைப் பகுத்தறியும் விசாரமே ஞான முதிப்பதற்கு மூல மென்பதாம்.

(அ - கை) கன்ம முக்கியமென்னும் கொள்கை நீங்கும் பொருட்டு ஞானமுதிப்பதற்கு சற்கருமமிருக்க விசாரம் எதற் கென்ற வினவும் அதற்கு உத்தரமும் கூறல்.

போன சன்மங்க டமிலநுட் டித்தநற் புண்ணிய பரிபாகம்
ஞான மாக்குமே விசாரமே னென்றிடி னுமுறைத் திடக்
கேளாய், ஆன புண்ணிய மீசுரார்ப் பணஞ்செயி னசுசி
போஞ் சுசியாகும், மான தம்பினை விசாரித்து ஞானத்தை
மருவுமென் றறிவாயே. 64.

(இ - ள்) போன சன்மங்கள்தமில் - கீழ்ப்போன அனந்த சென்மங்களில், அநுட்டித்த நற் புண்ணியம் - அநுட்டித்து வந்த சற்கருமங்களின், பரிபாகம் ஞானமாக்குமே - பரிபாக மானது ஞானமுண்டாகும்படி செய்யுமே, விசாரம் ஏனென் றிடில் - ஆத்மாநாத்ம விசாரம் எதற்கென்று நீ வினவில், நாமுறைத்திடக் கேளாய் - அதற்கு உத்தரம் நாம் சொல்லக் கேட்பாய், ஆன புண்ணியம் - வருணாச்சிரமங்களுக் குரித் தான சற்கருமங்களை, ஈசுரார்ப்பணஞ் செயின் - பகவத்பிரீதி யாகச் செய்யில், அசுசிபோம் சுசியாகும் - காம வெகுளி மயக்கமாதி அசுத்தம் நீங்கி நிராசை பொறுமை உதாரமாதி சித்த சுத்தி யுண்டாகும், மானதம்பினை விசாரித்து - சுத்த மான சித்தமானது பின்னர் ஆத்மாநாத்ம விசாரம் செய்து, ஞானத்தை மருவு மென்று அறிவாய் - ஆத்ம ஞானத்தைப் பொருந்து மென்று அறிவாயாக.

(ப - ம்) வருணாச்சிரமங்களுக் குரித்தான சற்கருமங்களைப் பகவத் பிரீதியாகச் செய்யின், காம வெகுளி மயக்கமாதி யசுத்த நீங்கி, நிராசை பொறுமை யுதாரமாதி சித்த சுத்தி யுண்டாகு மென்பார், "ஆன புண்ணியம் ... சுசியாகு" மெனவுங் கூறினர்.

(வி - ரை) ஆன புண்ணிய மென்ற பதத்துக்கு, சற் கருமங்கள் அந்தந்த வருணாச்சிரமத்துக்கு உரியவற்றைச் செய்யலாமே தவிர, அன்னிய வருணாச்சிரமத்துக் குரியவற் றைச் செய்யக் கூடாதெனவும், பத்தி, நிராசை, கருணை ஞான

மர்தி, மர்த்திரம் சகல வருணாச்சிரமத்துக்கும், பொதுவென வுங் கொள்க.

(தா — ம்) நிஷ்காமமாகச் செய்யும் சற்கருமமானது சித்த சுத்தியையும், விசாரமானது ஞானத்தையும், கொடுக்கு மாதலால் விசாரமே வேண்டுமென்பதாம்.

(அ — கை) ஞானத்துக்கு விசாரமே முக்கியமாய் வேண்டு மென்பது உறுதிப்படும் பொருட்டுச் சீடன் வினுதல்.

பத்தி யும்வயி ராக்கிய மும்பர லோகமு மணிமாதி
சித்தி யுந்தவ நிட்டையும் யோகமுந் தியானமுஞ் சாரூப
முத்தியுந்தரும்விசித்திரகருமங்கண்மோகமாத்திரந்தள்ளும்
புத்திதந்திடலருமையோவிசாரமேன்புண்ணியகுருமூர்த்தி.

(இ — ள்) புண்ணிய குருமூர்த்தி — சகலத் தியாகமான தருமத்தையுடைய தேசிக ராசனே, பத்தியும் — ஈசுவர னிடத்து அன்பும், வைராக்கியமும் — நிராசையும், பரலோக மும் — சுவர்க்க லோகமும், அணிமாதி சித்தியும் — அணிமா முதலிய அஷ்ட சித்தியும், தவநிட்டையும் — தவத்தில் அழுந் தமாக நிற்றலும், யோகமும் — அஷ்டாங்க யோகமும், தியா னமும் — சகுண நிர்க்குணத் தியானமும், சாரூப முத்தியும் — சாரூப மோட்சமும், தரும் விசித்திர கருமங்கள் — கொடுக்கும் ஆச்சரியமான சற்கருமங்கள், மோகமாத்திரம் தள்ளும் — அஞ்ஞான மாத்திரத்தை நீக்கும், புத்தி தந்திடல் அரு மையோ — ஞானத்தைத் தந்திடல் அருமையா, விசாரம் ஏன் — விசாரம் யாதுக்கு.

(ப — ம்) தேகாதி சகல பிரபஞ்சத்திலும் பற்றற்றிருக் கின்ற சகலத் தியாகமாகிய மேலான தருமத்தையுடைய தேசிக ராசனே யென்று னென்பார், "புண்ணிய குருமூர்த்தி" எனவும் கூறினர்.

(தா — ம்) பத்தியாதிகளைப் போல ஞானத்தையுங் கரு திச் செய்தால் அப் பத்தியாதி பலப் பேற்றையுங் கொடுக்கச் சாமர்த்தியமுள்ள சற் கருமங்கள், ஞான மொன்றையும் தாராதோ, விசாரம் எதற்கென வினவினதாம்.

(அ — கை) அவ்வினாவிற் குத்தரங் கூறுவான் றெட்டாந் திட்டாந்தங் கூறல்.

வேட மாறிய பேர்களை யறியவே வேண்டினுன் மகனேகேள்
கூட மாமவர் சுபாவங்கள் சீலங்கள் குறிகளாய்ந் தறியாமல்
ஓடி யுங்குதித் துந்தலை கீழ்நின்று முயர்ந்தகம் பத்தேறி
ஆடியும்பல கருமங்கள்செய்யினு மவருண்மை தெரியாதே.

(இ — ள்) வேடமாறிய பேர்களை — தம் வேடத்தை விட்டு மாறுவேடங் கொண்டவர்களை, அறியவே வேண்டினுல் — அறிய விரும்பினுல், மகனே கேள் — மைந்தா கேட்பாய், கூடமாம் அவர் சுபாவங்கள் — மறைந்து இருப்பதான அவர்களின் குணங்களையும், சீலங்கள் — ஒழுக்கங்களையும், குறிகள் — அடையாளங்களையும், ஆய்ந்து அறியாமல் — விசாரித்து அறியாமல், ஓடியும் — நெடுந்தூரம் கால்சலிக்க ஓடியும், குதித்தும் — மலைமேலேறிக் குதித்தும், தலைகீழ் நின்றும் — தலை கீழாகவும் கால் மேலாகவும் நின்றும், உயர்ந்த கம்பத்தேறி யாடியும் — உன்னதமான கம்பத்தின் மேலேறிக் கூத்தாடியும், பல கருமங்கள் செய்யினும் — இன்னம் அநேக கருமங்களைச் செய்தபோதிலும், அவருண்மை தெரியாது — வேடமாறினவர்களின் உண்மை தெரியவராது.

(தா — ம்) வேட மாறினவர்களின் எதார்த்தத்தை விசாரித்து அறிந்தாலன்றிக் கருமத்தால் அறிதல் ஆகாதென்பது தாம்.

(அ — கை) தாட்டாந்தங் கூறல்.

இன்ன வாறந்தப் பிரமத்தை யறிவிக்குமிலக்கணத் தால்
வேதம், சொன்ன ஞானமும் விசாரத்தால் வருமன்றிச்
சுருதிநூல் படித்தாலும், அன்ன தானங்க டவங்கண் மந்
திரங்களா சாரங்கள் யாகங்கள், என்ன செய்யினுந் தன்
னைத்தா னறிகின்ற நிலைகளால் வாராதே. 67.

(இ — ள்) இன்ன ஆறு — இந்தத் திருட்டாந்தப்படி, அந்தப் பிரமத்தை — இருபத்தெட்டு தத்துவங்களோடு கூடி

யிருக்கின்ற அந்தப் பிரமத்தை, இலக்கணத்தால் — சொரூபம் தட்ஸ்தம் அதத்துவா விருத்தி என்னும் மூன்றுவித இலக்கணங்களால், அறிவிக்கும் — அதிகாரிகளுக்குத் தெரிவிக்கும், வேதம் சொன்ன ஞானமும் — சுருதி கூறிய ஞானமும், விசாரத்தால் வருமன்றி —(இந்த ஞானத்தான் என்ற 63-வது செய்யுளில் கூறிய) விசாரத்தால் வருமேயல்லாமல், சுருதி நூல் படித்தாலும் — வேத சாத்திரங்களைக் கற்றாலும், அன்னதானங்கள் — அன்னதான முதலிய தானங்களும், தவங்கள் — கிரிச்சிராதி தபசுகளும், மந்திரங்கள் — அஷ்டாட்சர பஞ்சாட்சர செபங்களும், ஆசாரங்கள் — அந்தந்த வருண ஆச்சிரம ஆசாரங்களும், யாகங்கள் — எக்யங்களும், என்ன செய்யினும் — இவைகளில் யாது செய்யினும், தன்னைத்தா னறிகின்றது— இருபத்தெட்டு தத்துவங்களைத் தானென்றறியாது இவைகளுக்கு விலட்சணமான இருபத்தொன்பதாவது தத்துவமாகிய ஆத்மாவைத் தானெனவறியும் ஞானம், இவைகளால் வாராது — இவற்றால் உளதாகாது.

(ப — ம்) தேகேந்திரிய பிராண மனோபுத்தி யவித்தை சீவனைத் தானென்றறியாமல் இவைகளுக்கு விலட்சணமாய்ச் சத்துச் சித்தானந்த நித்திய பூரணமான வாத்மாவைத் தானெனவறியு ஞானமென்பார், "தன்னைத்தா னறிகின்ற" தென்றார்.

(தா — ம்) ஒருவன் உண்மையை அறியும் உணர்வு விசாரிப்பதினா லுண்டாகுமேயன்றித் தொழிலினா லுண்டாக மாட்டாது, அதுபோல, ஆத்ம சொரூபம் நாமென்றறியும் ஞானமும், ஆத்மானாத்ம விசாரணையா லுண்டாகுமேயன்றி அன்னதான முதலிய கருமஞ் செய்வதினா லுண்டாகாதெனத் திட்டாந்த மூலமா யறிவித்ததாம்.

(அ — கை) ஞானத்தினாலேயே அஞ்ஞான நீங்கவேண்டுமென்பதை நன்றாயறியும் பொருட்டுச் சீடன் வினாதல்.

துளங்கு தர்ப்பண மழுக்கறக் கைக்கொண்டு துலக்கினாற் போமன்றி, விளங்கு புத்தியா லுலகிலார் துலக்கினார் விமலவேத சிகமூர்த்தி, களங்க மாகுமஞ் ஞானமு மப்படிக் கருமத்தாற் கழுவாமல், உளங்கு றித்தஞா னத்தினா லெப்படி யொழியுமீ தருள்வீரே. 68.

(இ - ள்) துளங்கு தர்ப்பணம் - ஒளிர்கின்ற கண்ணுடியில் பற்றிய, அழுக்கு அற - அழுக்கு நீங்கும்படி, கைக்கொண்டு துலக்கினுற் போமன்றி - அழுக்கை நீக்கவல்ல சாதனத்தைக் கையில் கொண்டு விளக்கினுல் போகுமே யல்லாமல், விளங்கு புத்தியால் - பிரகாசிக்கின்ற புத்தியறிவினுல், உலகில் ஆர் துலக்கினுர் - உலகின்கண் யாவர் விளக்கினுர், விமல தேசிக மூர்த்தி - அவித்தையா மலமற்றிருக்கிற குருவே, அப்படி - அந்தத் திருஷ்டாந்தப்படி, களங்கமாகும் அஞ்ஞானமும் - களங்கமாகிய அறியாமையும், கருமத்தால் கழுவாமல் - சற்கருமத்தால் நீக்கப்படாமல், உளங்குறித்த ஞானத்தினுல்-(அந்தக்கரணத்தில் சருவமும் மித்தையென்று மதித்த) விருத்தி ஞானத்தினுல், எப்படி ஒழியும் - எவ்வாறு நீங்கும், ஈது அருள்வீர் - இதனை அநுக்கிரகிப்பீர்.

(ப - ம்) சூரியனிடத்தில் உண்டாகிய மேகம் சூரியனைத் தோன்ருதபடி மறைத்தல் போல, பரிபூரணமாய் சுயம்பிரகாசமா யிருக்கின்ற ஆத்மாவினிடத்தில் விவர்த்த ரூபமாய்த் தோன்றியதாயும், அவ்வாத்ம சொரூபத்தையே கண்டமாயும் சடமாயும் இருக்கின்ற தேகாதிகளாகத் தோற்றுவித்து மறைக்கின்றதாயு மிருக்கின்ற அப்பிரகாசமுடைய அறியாமை யென்பார், "களங்கமாகு மஞ்ஞான" மெனவும் கூறினுர்.

(தா - ம்) அஞ்ஞானம் கருமத்தாலன்றி ஞானத்தாலெங்ஙன நீங்குமெனத் திட்டாந்த மூலமாய் வினுவினதாம்.

(அ - கை) அவ்வினுவிற் குத்தரமாக வுபமானங் கூறல்.

*தர்ப்ப ணத்தினிற் களிம்புவாஸ் தவமலஞ் சகசமா தலின்*
*மைந்தா, கற்ப ளிங்கினிற் கருநிறஞ் சகசமாக் கருத்ததன்*
*ருரோபம், தர்ப்பணத்தினி லழுக்கறவேண்டிஞற் சாத*
*னத் தொழில்வேண்டும், கற்ப ளிங்கினிலா ரோபமே கறுப்*
*பென்று கண்டிட மனம்போதும்.* 69.

(இ - ள்) தர்ப்பணத்தினில் களிம்பு - செம்புக் கண்ணுடியின் கண்ணுள்ள களிம்பானது, வாஸ்தவமலம் சகசம் - வாஸ்தவ மலமும் கூடவேயுண்டான தருமமுமாம், மைந்தா -

மைந்தனே, கற்பளிங்கினில் — ஸ்படிகக் கல்லில், கருநிறம் — பற்றி பாய்ந்துள்ள கறுப்பு நிறம், சகசமாக் கறுத்தது அன்று — கூடவே யுண்டான தர்மமாகக் கறுத்திருப்பது அன்று, ஆரோபம் — பொய்யாகத் தோற்றுவது, ஆதலின் — ஆதலால், தர்ப்பணத்தினில் அழுக்கு அறவேண்டினுல் — செப்புக் கண்ணுடியின் கண்ணுள்ள அழுக்கை யொழிக்க வேண்டிடில், சாதனத் தொழில் வேண்டும் — சாதனமாகிய தொழில் வேண்டுவதே, கற்பளிங்கினில் — ஸ்படிகக் கல்லில், கறுப்பு ஆரோபமே என்று — கறுநிறம் பொய்யே என்று, கண்டிட — கண்டு நீக்க, மனம் போதும் — மனமே போதும்.

(வி — ரை) மனமாகிய தர்ப்பணத்தில் பாவமாகிய அழுக்கு நீங்க, சற்கன்மமாகிய சாதனம் வேண்டும். உண்மை யறிவானந்த சொரூபமாகிய படிகத்தில் ஆகந்துகமான அஞ்ஞானமான கறுப்பு நீங்க, தத்துவ ஞானமாகிய மனம் போதுமெனக் கொள்க.

(அ — கை) அஞ்ஞானம் அத்தியாச மாறுலும் கருமத்தால் நீங்காதோ வெனில், கூறுகின்றூர்.

இங்கு மப்படி சச்சிதாநந்தத்தி லிடர்சடம் பொய்மூன்றும்
தங்கு மாயையின் கற்பித மன்றியே சகசவாஸ் தவமன்றே
பங்க மாகுமஞ் ஞானத்தைக் கருமங்கள் பகைசெய்யா துற
வாக்கும், துங்க ஞானமே கருமவஞ் ஞானத்தைச் சுடுகின்ற
நெருப்பாமே. 70.

(இ — ள்) இங்கு — தாஷ்டாந்தத்திலும், அப்படி — அத்திருஷ்டாந்தப்படி, சத்சித் ஆனந்தத்தில் — அஸ்தி பாதிப் பிரிய ரூபமாகிய தன்னிடத்தில், பொய் சடம் இடர் மூன்றும் — அசத்து சடதுக்கங் கண் மூன்றும், தங்கு மாயையின் கற்பித மன்றியே — ஆரோபமா யிருக்கும் அஞ்ஞானத்தினுல் கற்பிதமேயல்லாமல், சகச வாஸ்தவம் அன்று — சகசமும் வாஸ்தவமும் அன்று, பங்கம் ஆகும் அஞ்ஞானத்தை —(ஏகதேச மாத்திரம் வேருகத் தோற்றுவிக்கும்)குற்றமுள்ள அஞ்ஞானத்தை கருமங்கள் பகைசெயா துறவாக்கும் — சற்கருமங்கள் கெடுக்காமல் உறவாகப் பண்ணும், துங்க ஞானமே — உயர்வான ஞானமே, கரும அஞ்ஞானத்தை — கருமத்தையும் அஞ்ஞா

னத்தையும், சுடுகின்ற நெருப்பாம் – தகிக்கவல்ல அக்கினி யாகும்.

(ப – ம்) அவத்தாத்திரயம் கெட்டும், கெடாத வுண்மை யாயும், அவத்தாத் திரயத்தை யறிகின்ற அறிவாயும், அவத் தாத் திரயத்தைக் கைவிட்டும் கைவிடப்படாத இன்பமாயும், எப்போது மிருக்கின்ற ஆத்ம சொரூபத்தில், நான் சில வரு ஷத்துக்கு முன் இல்லை; சில காலத்துக்குப் பின் இறந்து போவேன், என்று அனுர்தமாயும, நான் இன்னதை யறியேன் என்று அறியாமையாயும், நான் துக்கியா யிருக்கிறேனென்று துன்பமாயும், மூன்று தேக அத்தியாசத்தினாலும், ஏகதேச விருத்தியுண்டாகும் போதும் தோற்றும் அஞ்ஞானம், படிகத் தில் கருப்புப்போல அத்தியாசமேயன்றித் தர்ப்பணத்தில் களிம்புபோல உண்மையன்றாகையால், அதைக்கெடுக்க ஞான மாத்திரம் போதும், கருமந் தேவையில்லை யென்பார், "இங்கு மப்படி...சகசவாஸ்தவமன்றே" யெனவும், ஆண் பெண்ணென் கின்றதை ஏகதேசமட்டும் வேறாகத் தோற்றுவிக்கும் இரா விருளை மேகம் மிகச் செய்து ஏகதேசங் கூடத் தோன்றாமற் செய்வதுபோல, தேகம் தேகிஎன்கின்றதை ஏகதேசமாத்திரம் வேறாகத் தோற்றுவிக்கும் குற்றமுள்ள அஞ்ஞானத்தைக் கருமங்கள் ஏகதேசமுங்கூடத் தோற்றுவிக்காதபடி மிகச்செய் யுமேதவிரக் கெடுக்கமாட்டாதென்பார், "பங்கமாகும் ... உற வாக்கு" மெனவும், சூரியவுதயமே அவ்வந்தகாரத்தையும் மேகாவரணத்தையு நீக்கி ஆண் பெண் என்கின்றதை நன்றாய் வேறுபடுத்தித் தோற்றுவிப்பது போல, உயர்வான அப் பிரதிபந்தாப ரோட்ச ஞானமே அஞ்ஞானத்தையும் கருமத் திற் சத்திய புத்தியையும் கெடுக்குமென்பார், "துங்கஞானமே ... நெருப்பாமே" எனவும் கூறினார்.

(தா – ம்) செம்புக் கண்ணாடியில் களிம்புபோல், ஆத்மா வுக்கு அஞ்ஞானம் சகசமாயிராமல் பளிங்கில் பஞ்சவர்ணம் போல ஆரோபமாதலால் அதை யொழிக்க ஞானம் போதும், கருமந் தேவையில்லை யெனவும், அக் கருமம் அஞ்ஞானத்தை மிகச் செய்யு மெனவும், ஞானமே அவ் வஞ்ஞானத்தையுங் கருமத்தில் சத்திய புத்தியையும் நீக்கு மெனவும் அறிவித்த தாம்.

(அ – கை) முற்கூறியதை வற்புறுத்தல்.

மனைக்குள் வைத்தபண் டங்களை மறந்தவன் வருடநூ றழுதாலும், நினைத்து ணர்ந்தபின் கிட்டுமப் படியிந்த நின் மல வான்மாவும், அனர்த்த மானதன் மறதியைக் கெடுத் துத் தன்னறிவினாற் காணுமல், கனத்த கர்மங்க ளூறுகஞ் செய்யினுங் காணுமோ காணுதே. 71.

(இ – ள்) மனைக்குள்வைத்த பண்டங்களை – வீட்டிற்குள் வைத்த இரத்தின முதலிய பதார்த்தங்களை, மறந்தவன் – வைத்த இடம் தெரியாது மறந்த புருடன், வருடம் நூறு அழுதாலும் – நூறு வருஷம் அழுதபோதிலும், நினைத்து உணர்ந்தபின் கிட்டும்–(அழுததால் கிடைக்காமல்) யோசித்து அறிந்தபின் எப்படி கிடைக்குமோ, அப்படி – அந்தப் பிரகா ரம், இந்த நின்மல ஆன்மாவும் – அவித்தை மாயையற்று அபரோட்சமா யிருக்கும் ஆத்மாவும், அனர்த்தமான – துன் பத்துக்குக் காரணமான, தன் மறதியைக் கெடுத்து – தன் னுடைய மறைப்பை விசார ஞானத்தால் கெடுத்து, தன்னறி வினால் காணுமல் – தனது ஞானத்தால் காணப்படுவதே யல் லாமல், கனத்த கருமங்கள் – பாரமாகிய சற்கருமங்கள், நூறுகம் செய்யினும் – அநேக யுகம் இயற்றினும், காணுமோ காணுது – காணப்படுமோ காணப்படாது.

(ப – ம்) அபரோட்சமாய் அவித்தை மாயையற்றுப் பரி பூரணமா யிருக்கும் சைதன்ய மென்பார், "இந்த நின்மல ஆன்மாவு" மெனவும், பிரத்தியக்கபின்ன பிரம சொரூபமாகிய தன்னை மறைத்துத் தேகாதி சகத்தாகத் தோற்றுவித்துத் தீங்கு செய்யு மஞ்ஞான மென்பார், "அனர்த்தமான தன் மறதி" எனவும் கூறினர்.

(தா – ம்) ஞாபகத்தான் முன்வைத்த பொருள் வெளிப் படுவதல்லது தொழிலால் வெளிப்படாதது போல, விசார ஞானத்தால் அஞ்ஞானம் நீங்கின் முன்னுள்ள பிரமப்பொருள் வெளிப்படுவதல்லது வெகு காலம் மகத்தான கருமங்களைச் செய்யினும் வெளிப்படா தென்பதாம்.

(அ – கை) கன்மஞ் சுகந்தராமைக்கு ஏது என்னவென் றறியும் பொருட்டுச் சீடன் வினுதல்.

நன்மை யாங்குரு வேசுகந் தருவது ஞானமே யெனும் வேதம், தன்ம பாவமிச் சிரங்களாற் றேவர்க டருவிலங் குகண் மாந்தர், சென்ம மாகுவ சாதியா சாரமே செய்தவஞ் சுகமென்று, கன்ம காண்டத்தில் விதித்ததென் விதித்துள் காரண முரையீரே. 72.

(இ — ள்) நன்மையாம் குருவே — சத்தாமாத்திர சொரூபத்தைப் போதிக்கின்ற தேசிகரே, சுகம் தருவது — நிரதிசய சுகத்தைக் கொடுப்பது, ஞானமே எனும் வேதம் — ஐக்கிய ஞானமே என்று சொல்லிய வேதமானது, தன்ம பாவமிச் சிரங்களால் — புண்ணிய கருமம், பாவ கருமம், மிசிர கருமங்களால், தேவர்கள் தரு விலங்குகள் மாந்தர் — முறையே இரணிய கருப்பாதி தேவர்கள், தாவரம், நீர்வாழ்வன ஊர்வன பட்சி மிருகம், பிராமணன் முதலான மானுடர்களாகிய, சன்மம் ஆகுவ — பிறவிகள் உண்டாவனவா மென்றும், சாதி ஆசாரமே — அவனவன் சாதி ஒழுக்கமே, செய்தவம் — செய்யத் தக்கனவான தவம் என்றும், சுகம் என்று — இதனாலே சுக முண்டாகு மென்றும், கன்ம காண்டத்தில் விதித்தது என் — கரும காண்டத்தில் விதித்திருப்பது யாது கருதி, விதித்துள — அப்படி விதித்திருக்கின்ற, காரணம் உரையீர் — காரணத்தை யருள்வீர்.

(ப — ம்) சகல சீவருக்கும் சன்மார்க்கத்தைப் பயிற்றுவித்துத் துன்மார்க்கத்தை நீக்கிச் சத்தா மாத்திர சொரூபத்தைக் கொடுக்கின்ற தேசிகரே என்றான் என்பார், "நன்மையாம் குருவே" யெனவும், மனோ வாக்குக் காயங்களாகிய முக்கரணங்களாலும், செய்த புண்ணியத்தால் எட்ச ராட்சத பிசாசு முதல் இரணியகருப்பன் வரையிற் றேவப் பிறவியும், பாவத்தால் தாவரம் நீர்வாழ்வன ஊர்வன பட்சி மிருகமாகிய ஐவகைப் பிறவியும், புண்ணிய பாவக் கலப்பாகிய மிசிரத்தால் சண்டாளன் முதல் பிராமணன் வரை மானிடப் பிறவியும், உண்டாகு மென்பார், "தன்ம பாவம் ... மாந்தர் சென்மமாகுவ" ரெனவும் கூறினார்.

(தா — ம்) சுகத்தை ஞானமே கொடுக்கு மென்ற வேதம் கன்மமும் கொடுக்கு மென்பது எதனாலென வினாவினதாம்.

(அ – கை) அவ்விருவிற் குத்தரமாக அங்ஙனம் விதித்த வேதத்தின் அபிப்பிராயம் வேறெனக் கூறுதல்.

தினமு மண்ணுகர் பிள்ளைநோய்க் கிரங்கியே தீம் பண்ட மெதிர்காட்டிக், கனம ருந்துக ளொளித்து வைத் தழைக்கின்ற கருணைநற் றாய்போலே, மனைய றங்கள் செய் மகங்கள் செய் நன்றென்று மலர்ந்தவா சகஞ் சொல்லும், நினைவு வேறுகாண் சுவர்க்ககா மிகளந்த நிண்ணயந் தெரி யாரே. 73.

(இ – ள்) தினமும் – நாள்தோறும், மண்நுகர் பிள்ளை நோய்க்கு – சாரமற்ற மண்ணையுண்ணும் தன் பிள்ளையின் வியாதிக்கு, இரங்கி – மனமிரக்கமுற்று, தீம்பண்டம் எதிர் காட்டி – இனிப்பான பதார்த்தங்களை நேரே காண்பித்து, கனமருந்துகள் ஒளித்துவைத்து – கனமாகிய ஔஷதங்களை மறைத்துவைத்து, அழைக்கின்ற – கூப்பிடுகின்ற, கருணை நற்றாய் போலே – கிருபையுடைய நல்ல மாதாவைப்போலவே, மனை அறங்கள் செய் – இல்லறத்துக்குரிய தருமங்களைச் செய் வாய், மகங்கள் செய் – எக்யங்களைச் செய்வாய், நன்று என்று – இவைகளால் சுகமுண்டாகு மென்று, மலர்ந்த வாசகம் சொல்லும் – விரிந்த சுருதி வாக்கியங்கள் கூறுநிற்கும், நினைவு வேறுகாண் – அதன் கருத்து இதுவன்று வேருகும், சுவர்க்க காமிகள் – சுவர்க்க போகங்களில் இச்சையுடையோர், அந்த நிண்ணயந் தெரியார் – அந்த நிச்சயத்தை யறியார்.

(ப – ம்) தினமு மண்ணுகர் பிள்ளை, என்பதனுல் இடை விடாது விடய போகத்தைப் புசிக்கும் அறிவிலி என்பதும், நோய் என்றதால் துன்பமுள்ள ஜென்ன மரண மென்பதும், இரங்கி என்பதனுல் மற்ற நூல்போல் இராது அருளூற்று என்பதும், தீம்பண்ட மெதிர்காட்டி என்பதனுல் மேலான விடயமாகிய சுவர்க்காதி பதங்களை முன்னர் காட்டி எனவும், கன மருந்துகள் ஒளித்துவைத் தென்பதனுல், பவநீக்கும் பிரமானந்தத்தைப் பின் காட்டும்படி மறைத்துவைத் தென்ப தும், அழைக்கின்ற கருணை நற்றாய் என்பதனுல் மற்ற நூல் போலின்றி யவ்வானந்தங் கொடுக்கப் பலதரம் கூப்பிடுகின்ற வேதமென்பதும், கொள்ளக் கிடந்தன.

(தா-ம்) வேதம் இகவின்பத்தை நீக்குவான், பரவின்பத்தைக் கூறி அது நீங்கினபின் இஃதையும் நீக்கிப் பரம சுகத்தை யடைவிக்கும் பொருட்டு அங்ஙனம் கூறிய தென்பதாம்.

(அ-கை) வேதம் போக போக்கியங்களை அநுபவிக்க விதி யாதெனவும் அதற் குவமையுங் கூறல்.

போக மாருயிர் கண்டதை யுண்பதும் புணர்வது மியல்பேகாண், ஆக மங்களுஞ் சுபாவத்தை விதிக்குமோ வத்தனை தெரியாதோ, காக மேகறுத் திடுநெருப் பேசுடு கசந்திடு வேம்பேநீ, வேக வாயுவே யசையென வொருவரும் விதித்திடல் வேண்டாவே. 74.

(இ-ள்) போகம் ஆர் உயிர் - போகங்களைப் புசியாநின்ற வுயிர்கள், கண்டதை யுண்பதும் - நேர்ந்த பதார்த்தங்களைப் புசிப்பதும், புணர்வதும் - நேர்ந்த பெண்களைக் கலவி செய்வதும், இயல்பேகாண் - சுபாவமே, ஆகமங்களும் - சுருதிகளும், சுபாவத்தை விதிக்குமோ - இயல்பாயுள்ள அருந்தல் பொருந்தல்களை (நிஷேதிக்குமே யல்லாமல்) விதிக்குமோ, அத்தனை தெரியாதோ - சுருதிக்கு அவ்வளவு தெரியாதா, சுபாவத்தை விலக்குமே தவிர விதிக்காது (திருஷ்டாந்தம்) காகமே கறுத்திடு - வாயசமே நீ கறுத்திடு, நெருப்பேசுடு - தீயே நீ சுடு, வேம்பே கசந்திடு - வேம்பே நீ கைத்திடு, வேக வாயுவே அசை - வேகமுடைய வாயுவே நீ சலித்திடு, என - என்று, ஒருவரும் - யாதொருவரும், விதித்திடல் வேண்டாவே - விதிக்க வேண்டுவ தில்லையே.

(ப-ம்) அறிவின்மையால் உயிர்கள் தங்களுக்கு இயல்பாகக் கருதிக் கொண்டிருக்கும், அருந்தல் பொருந்தலாகிய போகத்தை வேதம் விலக்குமே யன்றி விதிக்குமோ வென்பார், "போகமாருயிர் ... சுபாவத்தை விதிக்குமோ" வெனவுங் கூறினர்.

(தா-ம்) வேதம் போகபோக்கியமே பயனுள கன்மத்தை விலக்குகின்றதே யன்றி விதித்தது அன்றென்பதாம்.

(அ – கை) வேதத்தின் அபிப்பிராயம் வேறென்றதை விரித்துக் கூறல்.

கள்ளூ மூனுநீ விரும்பினுன் மகங்கள்செய் காமத்தின் மனத்தாலுல், கொள்ளும் பெண்டோடு கலவிசெய் யெனி லிவன் குறையெலாந் தொடானென்றே, தள்ளும் வேதத் தின் சம்மதஞ் சகலமுந் தவிர்வதே கருத்தாகும், விள்ளு மிவ்விதி யென்னெனிற் பூருவ நியமமாம் விதியன்றே. 75

(இ – ள்) கள்ளும் ஊனும் நீ விரும்பினுல் – மதுவையும் மாமிசத்தையும் நீ யுண்ண இச்சித்தால், மகங்கள் செய் – யாகம் செய்து மது மாமிசத்தைப் புசிப்பாய், காமத்தின் மன தாலுல் – ஸ்திரீயின் புணர்ச்சியில் மனது இருந்தால், கொள் ளும் பெண்டோடு கலவிசெய் – கலியாணஞ் செய்த மனைவி யுடன் கூடுவாய், எனில் – என்று நாம் விதித்தால், இவன் – இப் புருடன், குறையெலாம் தொடானென்றே – அங்ஙனம் செய்வனே தவிர மற்றைய மாமிசத்தையும் புசியான், மற்றய பெண்களோடுங் கூடான் என்று கருதி, தள்ளும் வேதத்தின் சம்மதம் – விலக்கத் தொடங்கிய வேதம் சம்மதிபோற் கூறிற்று, (ஆலுல்) சகலமும் தவிர்வதே கருத்தாகும் – சகலத்தையும் விட்டொழிவதே அதற் கபிப்பிராயம், விள் ளும் இவ்விதி என்னெனில் – மனையறங்கள் செய் மகங்கள் செய் என்று முன் சொல்லிய அவ்விதி என்ன விதி என்று நீ கேட்கில், பூருவ நியமமாம் விதி – பூருவபட்சமான விதியாம், (சித்தாந்தமன்று.) அன்று ஏ அசைகள்.

(ப – ம்) நிரந்தரம் மது மாமிசம் புசிப்பவனையும், அனந் தம் ஸ்திரீயுடன் கூடுகின்றவனையும், அத்தியந்தம் விலக்கி லுல் விடமாட்டான், ஆகையால் நரகத் துன்பம் இல்லா திருக்கத் தக்கதாக யாகாதி செய்து மது மாமிசத்தைப் புசி; கலியாணஞ் செய்த மனைவியுடன் கூடு; என்று விதித்தால் அங்ஙனம் செய்வதே தவிர ம்ற்ற மது மாமிசத்தைப் புசியான் மற்றைய பெண்களைக் கூடானென்று கருதி, விலக்கத் தொடங்கிய வேதம் சம்மதிபோற் கூறிற் றென்பார், "கள்ளு மூனும் ... வேதத்தின் சம்மத" மென்றார்.

(தா – ம்) அருந்தல் பொருந்தல் முழுமையும் விலக்குங் கருத்துள்ள வேதமானது, யாகம் செய்து மது மாமிசத்தைப்

புசி யென்றும் மணஞ் செய்த ஸ்திரீயைக் கூடென்றும் பூருவ பட்சமாய் விதித்த தென்பதாம்.

(அ – கை) முற் கூறியதை வற்புறுத்தி சித்தாந்தத் தைக் கூறல்.

மதுவி றைச்சிக ளுண்ணென்ற சுருதிபின் மணந்துபா
ரெனல்பாராய், மிதுன விச்சையும் புத்திரோற் பத்தியால்
விரும்பென்ற விதிபாராய், இதையும் விட்டொழி யதிந
யிட் டிகவங்கிக் கெழ்ச்சியற் றதும்பாராய், அதைய றிந்து
கன் மங்களா சைகளொழிந் தானந்த மடைவாயே. 76.

(இ – ள்) மது இறைச்சிகள் உண் என்ற சுருதி – மது பானஞ் செய்வதிலும் மாமிசம் புசிப்பதிலும் இச்சை வந்தால் யாகம் செய்து புசிப்பாய் என்ற வேதம், பின் – பிறகு, மணந்துபார் எனல் பாராய் – புசியாது ஆக்கிராணித்துப்பார் என்று சொல்லும் சுருதி வசனத்தையும் நீ பார்ப்பாய், மிதுன இச்சையும் புத்திர உற்பத்தியால் விரும்பு என்ற விதிபாராய் – மனைவியுடன் கூடும் புணர்ச்சி இன்பமும் புத்திரன் உண்டாகும் நிமித்தம் விரும்பு என்று சுருதி சொல்லிய விதியையும் பார்ப்பாய், இதையும் விட்டு ஒழி – பின் சித்தாந்தமாய் யாகம் செய்வதையும் மணந்து பார்ப்பதையும் மனைவியுடன் புத்திர உற்பத்தி நிமித்தம் கூடுவதையும் விட்டு நீக்குவாய் என்றதையும் பார், யதிநயிட்டிகவங்கிக் கெழ்ச்சி யற்றதும் பாராய் – அவைகளைவிட்ட சன்னியாசியும் நயிட்டிக பிரமசாரியும் நிந்தையற்று இருப்பதையும் நீ பார்ப்பாய், அதையறிந்து – அந்த சித்தாந்த வசனத்தை நீ தெரிந்து, கன்மங்கள் ஆசைகள் ஒழிந்து – கன்மம் செய்வதிலும் மது மாமிசாதி ஸ்திரீயாதியிச்சையிலும் ஆசை விடுத்து, ஆனந்தம் அடைவாய் – பிரமானந்தத்தை தத்துவ ஞானத்தால் அடைவாய்.

(ப – ம்) மந்திரலோப கிரியாலோப திரவியலோபமின்றி யாகாதி செய்தும், மது மாமிசத்தைப் புசியாதிருக்கும்படி செய்யும் பொருட்டு மது மாமிசத்தைப் புசி யென்ற வேதந் தானே, இவ்விடத்தில் மது மாமிசத்தைப் புசித்தால் சொர்க்கத்தில் அமுதாதி போகம் கிடையாது, கிடைக்கினும் நெடுங் காலம் மிகுதியாய்க் கிடையாது, ஆகையால் போகம் புசிப்ப

தற்காக ஆக்கிரமணித்து விட்டுவிடு என்று கூறுவதைக் காண்பாய் என்பார், "மது ... மணந்து பாரெனல் பாராய்" எனவும், விவாகஞ் செய்த ஸ்திரீயுடனும் நினைத்தபோதெல்லாம் கூடுதலைத் தடுக்கும்பொருட்டுக் கொண்ட மனைவியுடன் கூடு என்ற வேதந்தானே ஒரு புருஷனவன் விதிக்காத காலத்தில் கூடினால் கெட்ட புத்திரன் உண்டாவான்; அவனால் அவனுக்கும் அவன் வம்சத்துக்கும் இம்மையில் துன்பமும் நிந்தையும் மறுமையில் நரகமு முண்டாகு மாகையால் அங்ஙனம் வாராது நற்புத்திரன் உண்டாகி அவனால் இம்மையில் சுகமும் கீர்த்தியும், மறுமையில் சொர்க்காதி பதமும் கிடைப்பதற்காக, மனைவி மாதவிடாயான பின் நான்குதினத்துக்குமேற் பனிரெண்டு தினத்துக்குள்ளாக ஏகாதசி அமாவாசை முதலிய புண்ணிய தினங்களையும், சோமவாரம் முதலிய விரத தினங்களையும், நீக்கி மற்றைய தினங்களில் மனைவியைச் சேரென்று கூறுவதைக் காண்பா யென்பார், "மிதுன ... விதி பாராய்" எனவும்,

மது மாமிசத்தை மணந்து பார்ப்பதையும், நற்புத்திரனைக் குறித்து விதித்த தினத்தில் கூடுவதையும், நீக்கும் பொருட்டு அங்ஙனஞ் செய்யக்கூறிய வேதந்தானே, யாகத்தில் ஆட்டை வதை செய்வதினால் அவ்வாடு சொர்க்கத் துவாரத்தில் இருப்புக் கொம்புடன் இருந்து அந்த யாகபலன் அநுபவிக்கச் சொர்க்கத்துக்குப் போகின்ற புருஷனை, வயிற்றைப் பிளந்து கொல்லுமாகையாலும், புத்திர வாஞ்சையாற் பொருளாதி காமாதி வாசனை யுண்டாகி யவற்றால் ஜென்மமுண்டாகு மாகையாலும், அத் துன்பம் வாராது பாரம்பரையாய் மோட்சானந்த மடைவதற்காக யாகம் செய்து மது மாமிசத்தை மணந்து பார்ப்பதையும், கொண்ட மனைவியுடன் நற்புத்திரனைக் குறித்து விதித்த தினத்தில் கூடுவதையும் நீக்கிவிடென்று கூறுவதைக் காண்பாய் என்பார், "இதையும் ... ஒழி" எனவும்,

இல்லற தர்மமும் யாகாதியும் செய்யாமையால் துறவிக்கும் பிரமசாரியனுக்கும் இழிவின்றி யாவரும் நமஸ்கரித்துப் புகழ்கின்ற அநுபவத்தைக் காண்பா யென்பார், "யதி ... யற்றதும்பார்" எனவும், அங்ஙனம் வேதம் கூறும் சித்தாந்தத்தையும், உலகத்தில் நடக்கின்ற வநுபவத்தையும், நன்

ருய் உணர்ந்து இல்லற தர்மமும், யாகாதி கருமமும் செய்வதை விடுத்து இகத்தில் மது மாமிசாதி ஸ்திரீயாதி இச்சையையும் மறுமையில் அப்சரஸ்திரீ அமுதாதி போக விச்சையையும் நீக்கி ஞானுப்பியாசம் செய்து தத்துவ ஞானத்தைப் பெற்று அதனுல் மநுடானந்தம் முதல் இரணிய கருப்பானந்தம்வரை யோர் திவலையாக்கும்படியான பிரமானந்தத்தைப் பெறுவாய் என்பார், "அதையறிந்து ... ஆனந்தமடைவாய்" எனவும் கூறினர்.

(தா — ம்) வேதம் கன்மகாண்டத்தில் கூறியபடி யாகம் செய்து மதுமாமிசம் புசிப்பதையும் கலியாணம் செய்த மனைவியுடன் கூடுவதையும் பின் அவையால் உண்டாகும் துன்பத்தைக் குறித்து விட்டுவிடும்படி சித்தாந்தமாய் விதிக்கின்றதெனவும், அவ் விதிப்படிக்கும், பெரியவர்கள் அநுபவப்படிக்கும், வருணச்சிரம தர்மங்களையும் அதனுல் உண்டாகும் போக இன்பத்து இச்சையையும் விடுத்து ஞான அப்பியாசத்தால் தத்துவ ஞானம் பெற்றுப் பரமசுகத்தைப் பெறுவாய் எனவும் கூறினதாம்.

(அ — கை) அஞ்ஞானத்துக்கு ஞானம் விரோதி என்பது நன்ருய்த் தெரியும் பொருட்டுச் சீடன் வினுதல்.

உலக மானவஞ் ஞானமுங் கருமமு முறவென்ற வழி
கூடும், பலவு மானவஞ் ஞானமு ஞானமும் பகையென்ப
துளதாளுல், நிலவி லேமறுப் போலவஞ் ஞானமு நிமலஞா
னத்தோடே, குலவி நின்றிந்தச் சிருட்டிகள் செய்யவுங்
கூடுமோ குருமூர்த்தி. 77

(இ — ள்) உலகமான அஞ்ஞானமும் கருமமும் — பிரபஞ்சரூபமான அஞ்ஞானமும் சற்கருமங்களும், உறவென்ற வழி கூடும் — ஒன்றுக்கொன்று சாதகமென்று கூறியது ஒக்கும், பலவுமான அஞ்ஞானமும் ஞானமும் — அனேக விதமுமான அஞ்ஞானமும் ஞானமும், பகை என்பது — ஒன்றுக்கொன்று பாதகமென்பது, உளதாளுல் — உண்மையாளுல், நிலவிலே மறுப் போல — சந்திரனிடத்துக் களங்கம்போல், அஞ்ஞானமும் — அஞ்ஞானமானதும், நிமல ஞானத்தோடே குலவி நின்று — நின்மலமாகிய ஞானத்தோடு கூடப் பொருந்திநின்று,

இந்தச் சிருட்டிகள் செய்யவுங்கூடுமோ — இச் சக சிருட்டிகளைப் பண்ணவும் கூடுமோ, குரு மூர்த்தி — குருவே.

(வி — ரை) அஞ்ஞானமும் கருமமும் உறவென்றதும் ஞானமும் கருமமும் பகை என்றதும் 70-வது கவியில் காண்க.

(தா — ம்) முற்கூறிய வண்ணம் ஞானம் அஞ்ஞானத்துக்குச் சத்துருவாயின் அஃது இஃதோடும் சேர்ந்து தொழிற் செய்யலாமோவென வினவினதாம்.

(அ — கை) அவ்வினாவிற் குத்தரங் கூறல்.

சொரூப ஞானமும் விருத்திஞா னமுமென்று சோதி
ஞானமு மிரண்டாம், சொரூப ஞானமே விருத்தியின்
ஞானமாய்த் தோன்றும்வே றிலைமைந்தா, சொரூப ஞான
மஞ் ஞானசத் துருவன் று சுழுத்தியிற் கண்டாயே, சொரூப
ஞானத்தின் மருவுமஞ் ஞானத்தைச் சுடும்விருத் தியின்
ஞானம். 78.

(இ — ள்) மைந்தா — மைந்தனே, சோதி ஞானமும் — பிரகாசமான ஞானமானதும், சொரூப ஞானமும் விருத்தி ஞானமும் என்று இரண்டு ஆம் — சொரூப ஞானமெனவும் விருத்தி ஞானமெனவும் இருவகைத்தாம், சொரூப ஞானமே— சொரூப ஞானந்தானே, விருத்தியின் ஞானமாய்த் தோன்றும் — விருத்தி ஞானமாக வுண்டாகும், வேறு இலை — பேதமில்லை, (ஆனாலும்,) சொரூப ஞானம் அஞ்ஞான சத்துருவன்று — சொரூப ஞானமானது அஞ்ஞானத்துக்கு விரோதியாக மாட்டாது (அதற்கு சாதகமாகும்,) இதற்கு அநுபவம். சுழுத்தியில் கண்டாயே — சுழுத்தி யவத்தையில் அஞ்ஞானத்தை யநுபவித்து அறிந்தாயல்லவா, ஆதலின் விரோதியன்று ஆனால், சொரூப ஞானத்தில் மருவும் அஞ்ஞானத்தை — சொரூப ஞானத்தின்கண் அதற்குச் சாதகமாகப் பொருந்தியுள்ள அஞ்ஞானத்தை, விருத்தியின் ஞானம் சுடும் — சமாதியில் எழும் அகண்டாகார விருத்திஞானம் தகிக்கும் (ஆதலின் அதுவே சத்துரு.)

(ப — ம்) நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமானந் தாத்துவிதப் பிரம மென்பார், "சொரூப ஞான" மெனவும்,

தாமத ராசதநீங்கிச் சுத்த சத்துவமான அகண்டாகார விருத்தியிலுதயமாகின்ற ஞான மென்பார், "விருத்தி ஞான" மெனவும் காட்டத்திலிருக்கும் அக்கினி அதைக் கடையும்போது வேறு போல வெளிப்பட்டுச் சொலித்துக்கொண்டிருந்தாலும் வேறல்லாதது போல பிரம சைதன்னியமானது முமுட்சுக்களிடத்தில் ஞானாப்பியாசத்தால் அகண்டாகார விருத்தியில் அப் பிரதிபந்தாபரோட்ச ஞானமாக வேறு போலத் தோற்றினும் வேறன்றென்பார், "சொரூப ஞானமே...வேறிலை" யெனவும், சுழுத்தியில் பிரம சைதன்னியமிருந்தும் அறியாமை வடிவான அஞ்ஞானத்தைக் கெடுக்காதிருப்பதைச் சகலரும் ஒன்றுமறியேன் சுகமாய் நித்திரை போனேன் என்கிற வநுபவத்தால் அறிந்திருக்கிறாயே என்பார், "சொரூப ஞானம் ... கண்டாயே" எனவும், பிரம சைதன்னியத்துடன் சேர்ந்திருக்குமஞ்ஞானத்தைச் சமாதியில் உதயமாகின்ற முற்கூறிய அகண்டாகார விருத்தி ஞானம் கெடுக்கு மென்பார், "சொரூப ஞானத்தின் ... விருத்தியின் ஞான" மெனவும் கூறினார்.

(தா — ம்) பரிபூரண சைதன்னியத்துடன் அஞ்ஞானம் சேர்ந்திருந்து சிருட்டியாதி செய்யினும், அச் சைதன்னியமே அகண்டாகார விருத்தி ஞானமாகி அஞ்ஞானத்தைக் கெடுக்கின்றதால் அஞ்ஞானத்துக்கு ஞானம் பகையேயாமென் றறிவித்ததாம்.

(அ — கை) காரணத்தாற் கெடாத வஞ்ஞானங் காரியத்தால் எங்ஙனம் கெடுமென்று வினாதலும் மதற் குத்தரமுங் கூறுகின்றார்.

துருத்தி மாயையைச் சுழுத்தியிற் சுடாததற் சொரூப
ஞானந்தானே, விருத்தி ஞானமாய்ச் சுட்டதெப் படியெ
னில் வெய்யிலா லுலகெங்கும், பரித்த சூரியன் சூரிய காந்
தத்திற் பற்றியக் கினியாகி, எரித்த வாறுபோற் சமாதியில்
விருத்தியா லெரிக்குமென் றறிவாயே. 79.

(இ — ள்) துருத்தி மாயையை — துருத்தியைப் போலும் சங்கோச விகாசங்களையுடைய அவித்தையை, சுழுத்தியில் சுடாத தற்சொரூப ஞானந்தானே — சுழுத்தியின்கண் விரோதியாய்த் தகிக்காமல் சாதகமாக இருந்த சொரூப ஞானமே,

விருத்தி ஞானமாய் — விருத்தி ஞான ரூபமாய், சுட்டதெப்படி யெனில் — தகித்தது எவ்வாறு என்று சங்கிக்கில், வெய்யி லால் — தனது கிரணத்தால், உலகெங்கும் பரித்த — உலகு எங்கணும் சர்தகமாய் நின்று காத்த, சூரியன் — சூரியனானவன், சூரிய காந்தத்தில் — சூரிய காந்தக் கல்லில், பற்றி அக்கினி யாகி — பொருந்தி அக்கினி ரூபமாய்த் தோன்றி, எரித்த ஆறுபோல் — தெகித்த தன்மை போல, சமர்தியில் — சமாதி யின்கண், விருத்தியால் — பூரண விருத்தி ஞானத்தால், எரிக்கும் என்று அறிவாய் — விரோதியாய் நின்று அந்த அஞ் ஞானத்தை சுடுமென்று அறிவாய்.

(ப — ம்) துருத்தி விரிதல் குவிதலை யடைகின்றதுபோல, சிருட்டி காலத்தில் ஈசுவர சகத்தாக விகாசத்தையும், பிரளயத்தில் சங்கோசத்தையும் அடைகின்ற வஞ்ஞானமென் பார், "துருத்தி மாயை" என்றார்.

(தா — ம்) காரணமான சூரியனால் கெடாத பொருள் காரியமான வக்கினியால் கெடுவது போல, சொரூப ஞானத் தால் கெடாத வஞ்ஞானம் பூரண விருத்தி ஞானத்தால் கெடு மென்பதாம்.

(அ — கை) கருமத்துக்கும் ஞானத்துக்கும் பேதந் தெரி யும் பொருட்டுச் சீடன் வினாதல்.

அருளு மையனே திரிவித கரணத்தா லாகிய தொழி லெல்லாம், கரும மல்லவோ விருத்திஞா னமுமந்தக் கரணகா ரியமன்றோ, உரிய கர்மமஞ் ஞானத்தைக் கெடுக் குமென் றோதினு லாகாதோ, பெரிய ஞானமென் றதற் கொரு பெயரிட்ட பெருமையை யுரையீரே. 80.

(இ — ள்) அருளுமையனே — சகலத்துக்கும் விடை யரு ளாநிற்கும் குருவே, திரிவித கரணத்தால் — மன வாக்கு காய மென்னும் மூக்கரணங்களால், ஆகிய தொழில் எல்லாம் — உண்டாகிய கிரியைகளனைத்தும், கருமமல்லவோ — கரும மென்று சொல்லத்தக்கன வல்லவா, விருத்தி ஞானமும் — நான் பிரமமென்னும் விருத்தி ஞானமும், அந்தக்கரண காரிய மன்றோ — அந்தக்கரணத்தின் பரிணாமமாகலின் அதன் காரிய மன்றோ, ஆகலின், உரிய கர்மம் அஞ்ஞானத்தைக் கெடுக்கு

மென்று — அஞ்ஞானத்தைக் கெடுப்பதற் குரிய அகம் பிரம மென்னும் அந்தக்கரண விருத்தி ரூபமான கன்மம், அஞ்ஞானத்தைப் போக்குமென்று, ஓதிஞல் ஆகாதோ — சொன்னல் சாஸ்திரத்துக்கும் பெரியோருக்கும் சம்மதம் ஆகாதோ, பெரிய ஞானமென்று — மகத்தான ஞானமாம் என்று. அதற்கு ஒரு பெயர் இட்ட — அதற்கொரு நாமம் தரித்த, பெருமையை உரையீர் — மகிமையை அருள்வீர்.

(தா — ம்) அகண்டாகார விருத்தி ஞானம் அந்தக்கரண காரியமாதலின் அதைக் கருமமென்று கூறலாகாதோ வென வினவினதாம்.

(அ — கை) அவ்வினவிற் குத்தரங் கூறல்.

விருத்தி ஞானமந் தக்கர ணத்தொடு விருத்தியா கிலு
மைந்தா, ஒருத்தி மக்களே தங்களிற் பகைக்கின்ற துல
கெங்குங் கண்டோமே, கருத்த ஞகிய புருடதந் திரங்க
ளாங் கருமங்க ளவைபோல, வருத்த ஞானமோ புருடதந்
திரமன்று வஸ்துதந் திரமாமே. 81.

(இ — ள்) மைந்தா — மைந்தனே, விருத்தி ஞானம் — நான் பிரமமென்னும் விருத்தி ஞானமானது, அந்தக்கரணத் தொடு விருத்தியாகிலும் — அந்தக்கரணத்தின் பரிணும மாளு லும், ஒருத்தி மக்களே — ஒரு மாதாவின் புத்திரரே, தங்களில் பகைக்கின்றது — தங்களுக்குள் விரோதித் திருக்கின் றதை, உலகு எங்கும் கண்டோம் — உலகில் எவ்விடத்தும் கண்டிருக்கின்ரேம், கருமங்கள் — கருமங்களானவை, கருத்த ஞகிய புருட தந்திரங்களாம் — கருத்தாவாகிய புருஷனுடைய அதீனங்களாம், வருத்த ஞானமோ — பிரயத்தனத்தால் உண் டான ஞானமோ, அவைபோல — அந்தக் கன்மங்களைப்போல புருட தந்திரமன்று — புருஷனுடைய அதீனமன்று, வஸ்து தந்திரமாம் — வஸ்துவின் அதீனமாம்.

(ப — ம்) கிரியைகளானது சங்கற்பாதியுடன் கூடி திரி விதகரணத்தால் செய்யும் தொழில் என்பார், "புருட தந்திரங் களாம் கருமங்க" ளெனவும், ஞானமானது சங்கற்பாதியுடன் கூடி செய்யும் தொழில் அன்று சத்தியக்ஞான வனந்தானந்த

ம்ரன வஸ்துவை யையந்திரிபின்றி எதார்த்தமாய்றியும் அறி வென்பார், "ஞா ன மே ம ா ... வஸ்து தந்திர" மெனவும், கூறினர்,

(தா – ம்) விருத்தி ஞானமும் கன்மமும் அந்தக்கரண காரியமாயினும் மன வாக்குக் காயத்தால் செய்யும் கருமம் புருட தந்திரமாகையாலும், சமாதியில் உண்டாகும் பூரண ஞானம் வஸ்து த ந் தி ர மாகையாலும் ஒன்றுக்கொன்று வேறென்பதாம்.

(அ – கை) கருமம் புருட தந்திர மென்பதற்கும் ஞானம் வஸ்து தந்திர மென்பதற்கும் யுத்திகூறி அவ் வினவிற்கு வேறொரு பிரகாரமாய் உத்தரங் கூறல்.

வகுத்த கர்மங்கள் செய்யவுந் தவிரவு மற்றொன்றாக் கவுங்கூடும், மிகுத்த ஞானமப் படியன்று தியானமும் விவேகஞான மும்வேறே. செகத்தி லொன்றையொன் றாவிவன் பாவிக்குந் தியானம்கற் பிதயோகம், முகத்த மாக் கண்ட ஞானமே வாஸ்தவ மோகமாய் மயங்காதே.

(இ – ள்) வகுத்த கர்மங்கள் – சாஸ்திரங்களில் விதித்த திரிவிதகரணங்களால் செய்யும் கர்மங்களை, செய்யவும் – புரு ஷனுக்கு இச்சையுண்டானல் செய்யவும், தவிரவும் – இச்சை யில்லையாயின் விடவும், மற்றொன்றா ஆக்கவும் – வேறொரு பிரகாரம் செய்ய இச்சையுண்டாயின் அப்படி வேறு ஒரு பிர காரம் செய்யவும், கூடும் – இயலும், மிகுத்த ஞானம் – மேலான ஞானம், அப்படியன்று – அவ்விதமன்று, (ஆகலின்,) தியா னமும் விவேக ஞானமும் வேறே – மானச கிரியா ரூபமான தியானமும் விவேக ஞானமும் அந்தக்கரண காரியமாயினும் வேறுதான், (எப்படியெனில்.) செகத்தில் – உலகின்கண், ஒன்றை யொன்றா யிவன் பாவிக்கும் தியானம் – ஒன்றை வேறொன்றாக இவன் தியானிக்கும் தியானமானது, கற்பித யோகம் – கற்பிதத் தியானமாம், முகத்தமாக்கண்ட ஞானமே வாஸ்தவம் – அபரோட்சமா யறிகின்ற ஞானமே வாஸ்தவ மாம், மோகமாய் மயங்காதே – இவைகளை யறியாதவனாய்க் கலங்குவதை ஒழி.

(ப — ம்) யாகம் செய்ய எத்தனித்ததை விட்டுத் தான மாவது கெட்ட காரியமாவது மாற்றிச் செய்வதுபோல் திரிவித கரணங்களாலும் செய்யும் புண்ணிய பாவ கருமத்தை மாற்றிச் செய்யலா மென்பார், "மற்றொன்றுக்கவுங் கூடு" மெனவும், சமாதியில் உதிக்கும் அகண்டாகார விருத்தி ஞான மானது முக்கரணங்களாற் செய்யும் புண்ணிய பாவ கருமங் களைப்போலப் பண்ணவும் விடவும் வேறுவிதமாய்ச் செய்யவும் படுவ தன்றென்பார், "மிருத்த ஞான மப்படியன்" றெனவும், விசாரிக்க சத்தியில்லா திருக்கின்ற முமூட்சுவானவன் ஞானு சாரியரை யடைந்து மகாவாக்கிய வுபதேசம்பெற்று ஸ்திரீயை அக்கினி என்கின்றது போல, தான் சீவனென்கின்ற புத்தி யுடன் இனிப் பிரமமாவோ மென் றிருந்துகொண்டு பிரம நானென்று பாவனை செய்கின்ற தியானமானது பொய்யான பாவனை என்பார், "ஒன்றை யொன்று ... கற்பிதயோக"மென வும் விசாரிக்கச் சத்தியுள்ள முமூட்சுவானவன் ஞானுசாரி யரை யடைந்து மகா வாக்கிய வுபதேசம் பெற்று சிரவணுதி செய்து தேகத்திரயம் அவத்தாத்திரயம் தானல்லவென்றும், அவைகளின் அன்னுவய வெதிரேகங்களை யறிந்துகொண் டிருக்கின்ற பரிபூரண சொரூபம் தானென்றும், அக்கினியை அக்கினி என்கின்றது போல ஐயம் திரிபின்றி அபரோட்சமா யறிகின்ற ஞானமே மெய்யென்பார், "முகத்தமாய் ... வாஸ் தவ" மெனவும் கூறினர்.

(தா — ம்) திரிவித கரணங்களால் செய்யவும் தவிரவும் மாற்றிச் செய்யவும் தக்கது கருமமெனவும், அங்ஙனம் இல்லா திருப்பது ஞானமெனவும், மனத்தினுல் செய்யும் பிரமத்தியா னம் பொய் என்வும், விசாரத்தால் பிரமத்தையறியும் ஞானம் மெய்யெனவும் கூறினதாம்.

(அ — கை) தியானம் பொய் ஞானம் மெய் என்றதற்கு விபரம் கூறி யுத்தரத்தை முடித்தல்.

கண்டறிந்தது ஞானங்கேட் டதுதனைக் கருதுபாவனை
யோகம், கண்ட பேர்சொலக் கேட்டது மறந்துபோங்
கண்டது மறவாதே, கண்ட வஸ்துமெய் தியானவஸ் துக்
கள்பொய் கறுவியஞ் ஞானத்தைக், கண்ட வக்கணங்
கொல்வது ஞானமே கருமமன் றறிவாயே. 83.

(இ — ள்) கண்டு அறிந்தது ஞானம் — ஒன்றை அநுபவித்து அறிவது ஞானவிலக்கணம், கேட்டது தனைக் கருது பாவனை யோகம் — கேட்ட வஸ்துவை கேட்டபடி பாவிப்பது மானத கருமமாகிய தியான விலக்கணம், கண்டபேர் சொலக் கேட்டது மறந்து போம் — அநுபவித்து அறிந்த மகான்கள் உபதேசிக்கக் கேட்டு தியானிப்பது மறந்துவிடும், கண்டது மறவர் து — கண்டு அநுபவித்தது மறவாதிருக்கும், ஆதலின் கண்ட வஸ்து மெய் — அநுபவித்த வஸ்து உண்மையாம், தியான வஸ்துக்கள் பொய் — தியானிக்கும் வஸ்துக்கள் மித்தையாம், கறுவியஞ் ஞானத்தை — கோவித்து அவித்தையை, கண்ட அக்கணம் — உதயமானவுடன், கொல்வது ஞானமே — கெடுப்பது விருத்தி ஞானமே, கருமமன்று அறிவாய் — சற் கருமமன்றென நீ அறிவாய்.

(ப — ம்) மான் மழு சதுர்ப்புச காளகண்டாதி இலக்கணமுடைய ருத்திர மூர்த்தி வடிவத்தைக் கேள்விப்பட்டவன் அவ்வடிவத்தை மறந்த போதிலும் அவ்வடிவத்தைப் பெற்றவன் அவ்வடிவத்தை மறவாதிருத்தல் போலும் சத்துச் சித்தானந்த நித்திய பூரண விலக்கணமுடைய பிரம சொரூபத்தைக் கேள்விப்பட்டவன் அச் சொரூபத்தை மறந்து போவன் அச் சொரூபாகாரமானவன் அச் சொரூபத்தை மறவான் என்பார், "கண்டபேர் ... கண்டது மறவாதே" யெனவும், அந்தகாரமானது ஆயுதங்களால் நீங்காது சூரியனுலேயே உதயமானவுடன் நீங்குவதுபோல அஞ்ஞானமானது கருமத்தினுலே கெடாது ஞானத்தினுலே(அந்த ஞான முதயமானவுடன்)கெட்டுப்போகு மென்பார், "அஞ்ஞானத்தை ... கருமமன்" றெனவும் கூறினுர்.

(தா — ம்) மானத கருமமாகிய பிரமத்தியானம் கேட்டவண்ணம் பாவிப்பதும் மறக்கத்தக்கது மாகையால் பொய் யெனவும், ஞானம் பிரத்தியட்சமாய்ப் பிரமத்தைத் தானுக வறிவதும் மறக்கத்தகாதது மாகையால் மெய் யெனவும், இந்த ஞானமே அஞ்ஞானத்தைக் கெடுக்கு மெனவும், கருமங் கெடுக்கா தெனவும் கூறியதாம்.

(அ — கை) தியானம் கற்பித மென்னின் இதனுல் உண்டாகும் முத்தியும் கற்பிதமன்ரே வெனும் வினவும் அதற்கு உத்தரமும் கூறுகின்றுர்.

சருவ முத்தியைத் தருகின்ற தியானமுஞ் சத்திய மன்
றென்ருல், சருவ முத்தியுஞ் சத்திய மன்றென்று சங்கி
யாதே நீகேள், உருவங் கேட்டவன் றியானிக்கும் பொழு
திலவ் வுருவம்வாஸ் தவமன்றே, உருவ மாகுமப் பொழுது
கண் ணுற்கண்ட வுருவம்வாஸ் தவமாமே. 84

(இ – ள்) சருவ முத்தியைத் தருகின்ற–சருவ அனர்த்த மும் நீங்கிய பரமோட்சத்தைக் கொடாநின்ற, தியானமும் – பிரமத்தியானமும், சத்தியம் அன்று என்ருல் – சத்தியமல்ல வென்று கூறிடில், சருவ முத்தியும் – சருவ அனர்த்தமும் நீங்கிய பரமோட்சமும், சத்தியம் அன்று என்று – மித்தையா மென்று, நீ சங்கியாதே – நீ சங்கை செய்யாதே, கேள் – சமா தானம் கூறுதும் கேட்பாய், உருவம் கேட்டவன் – உருத்தி ராதி மூர்த்தியின் வடிவங்களைச் சாஸ்திரத்தாலும் பெரியோர் களாலும் கேள்வியுற்றவன், தியானிக்கும் பொழுதில் – தியா னிக்கும் காலத்தில், அவ்வுருவம் வாஸ்தவம் அன்று – அந்த வடிவம் பாவனு வடிவமாகலின் உண்மையன்று, உருவம் ஆகும் அப்பொழுது – பாவனு திடத்தால் அம்மூர்த்தி தாணு கும்போது, கண்ணுல் கண்ட வுருவம் – நேத்திரத்தால் காணு னின்ற அந்த வடிவம், வாஸ்தவமாம் – உண்மையாம் அது போல என்றறி.

(அ – கை) இதுவுமது.

சடம தாகிய தியானமெய் யாகிய சர்வமுத் தியைநல்கும்
திடம தானதெப் படியெனி லவரவர் தியானமே பிறப்பா
கும், உடல மாசையாற் றியானிக்கிற் றியானித்த வுடல்
களா குவர்மைந்தா, தொடர்ப வங்கெடச் சொருபமே
தியானிக்கிற் சொருபமா குவர்மெய்யே. 85.

(இ – ள்) சடமது ஆகிய தியானம் – பொய்யாகிய பிரமத் தியானமானது, மெய் ஆகிய – சத்தியமாகிய, சருவ முத்தியை நல்கும் – பரமோட்சத்தைக் கொடுக்கும், திடமதானது – வலிமை யுடைத்தா யிருப்பது, எப்படி யெனில் – எவ்விதம் என்று சங்கிக்கில், அவர் அவர் தியானமே பிறப்பாகும் – மரண காலத்தில் உண்டாகின்ற அவரவர் பாவனைப்படியே ஜென்ம முண்டாகும், ஆனதால், உடலம் ஆசையால் தியா

னிக்கில் – உருத்திராதி மூர்த்தங்களாக இச்சையோடு தியானிக்கில், தியானித்த உடல்களாகுவர் – தியானித்த மூர்த்தங்களாவர், தொடர் பவம் கெட – அறுதியாகத் தொடர்ந்து வந்த ஜன்மமானது நாசமாகும்படி, சொரூபமே தியானிக்கில் – பிரம சொரூபத்தைத் தியானிக்கில், சொரூபம் ஆகுவர் – அந்தப் பிரம சொரூபமே ஆவர், மெய்யே – இது உண்மையே.

(ப – ம்) சொப்பனத்தில் கண்ட ஸ்திரீ பொய்யானாலும் இந்திரிய கலினமாதல் மெய்போல பரிபூரண பிரமசொரூபத் தியானம் பொய்யானாலும் அதனால் உண்டாகும் பரமோட்சம் உண்மையாகு மென்பார், "சடமதாகிய .. நல்கு" மென்றார்.

இரண்டு கவிகட்கும் (தா – ம்) மூர்த்தித் தியானம் தியானிக்கும் பொழுது பொய்யா யிருந்தாலும், அத்தியான முதிர்ச்சியினால் சித்தியாகும் மூர்த்தி மெய்யாவது போல பரிபூரண சொரூபத் தியானம் பொய்யா யிருந்தாலும், அத் தியான முதிர்ச்சியினால் பரமோட்சம் மெய்யாகு மெனவும், எவ் வடிவத்தை தியானித்தாலும் அவ் வடிவம் ஆகுகின்றது போல் பிரம சொரூபத்தைத் தியானித்தால் பிரமமாவதற் கைய மில்லை யெனவும் கூறினதாம்.

(அ – கை) தியானத்திற்கு இச்சத்தி யிருக்க விசார ஞானம் யாதுக்கென்ற வினாவும் அதற்குத்தரமும் கூறல்.

பிரம ரூபத்தைத் தியானித்த பேர்களும் பிரமமா குவ
ரென்றால், நரசரீரமாங் குரவனே விசாரமேன் ஞானமே
னென்றதே, பரம பாவனை பரோட்சமாம் பின்பந்தப்
பரோட்சமே யபரோட்சம், திரவி சாரமா ஞானமே முத்
தியாந் தீர்வையீ தறிவாயே. 86.

(இ – ள்) பிரம ரூபத்தை தியானித்த பேர்களும் – விசாரம் செய்வதற்கு சக்தி யில்லாதவர்களாய் நிர்க்குண பிரம ரூபத்தையே தியானித்தவர்களும், பிரமமாகுவர் என்றால் – தியான பரிபாகத்தால் பிரம ரூபம் ஆவர் என்று சொல்லப் படுமாயின், நரசரீரமாம் குரவனே – மானிட வடிவமாக எழுந்தருளிய ஆசாரியரே, விசாரமேன் – விசாரம் யாதுக்கு, ஞானமேன் – விசாரத்தினால் உளதாகும் ஞானம் யாதுக்கு, என்

ருதே – என்று சங்கியாதே, பரம பாவனை – பிரமத்தியான மானது, பரோட்சமாம் – பரோட்ச ஞானமாம், பின்பு – தியான பரிபாகத்தின் பின்னர், அந்தப் பரோட்சமே – அப் பரோட்ச ஞானமே, அபரோட்சம்–அபரோட்ச ஞானமாவதாம், (ஆனால்) திரவிசாரமாம் – திடமான விசாரத்தினால் உதிப்பதாம், ஞானமே – அந்த வபரோட்ச ஞானமே, முத்தியாம் – அவித்யா நிவர்த்தியான மோட்சமடைவதற்கு ஏதுவாம், ஈது தீர்வை அறிவாய் – இது (சுருதி ஸ்மிருதிகளின்) சித்தாந்த மாமென் றறிவாயாக.

(தா – ம்) தியானிக்கின்ற புருடனுக்குக் கடம் போலப் பிரமம் பிரத்தியட்சமின்றி அப் பிரத்தியட்சமா யிருப்பதினால் அதன் இலக்கணந் தெரியும் பொருட்டுக் குருவினிடத்தில் கேட்டுச் சிந்திக்கின்றது விசாரமாகையாலும், தியான முதிர்ந்து சொரூபப் பிரத்தியட்சமாகும் போது அறிவது ஞானமாகையாலும், அவித்யா நிவர்த்தியான மோட்சமடைவதற்கு விசார ஞானமே வேண்டுமெனக் கூறினதாம்.

(அ – கை) முற் கூறிய அகண்டாகார விருத்தி ஞானம் இருக்கின் அகண்டாநுபவம் எங்ஙனம் கூடுமென்ற வினாவும் அதற் குத்தரமுங் கூறல்.

வீட தாம்பரி பூரண சொரூபத்தில் விருத்திஞா னமுங்
கூடிச், சேட மாகினு லகண்டமா மநுபவ சித்தியெப் படி
யென்றால், சாடி நீர்மண்ணைப் பிரித்ததேற் றாம்பொடி
தானுமன் னுடுமாயும், ஊடி ஞானமு மறிவிலா
மையைக்கெடுத் தொக்கவே கெடுந்தானே. 87.

(இ – ள்) வீட்தாம் பரிபூரண சொரூபத்தில் – முத்தி ரூபமான பரிபூரண பிரம சொரூபத்தில், விருத்தி ஞானமும் கூடி சேடமாகினுல் – அவித்தையை நிவர்த்தித்த அகண்டா கார விருத்தி ஞானமும் சேர்ந்து சேஷமாயிருந்தால், அகண்டமாம் அநுபவ சித்தி – அகண்டாநுபவம் சித்திப்பது, எப்படி என்றால் – எங்ஙனம் என்னில், சாடி நீர் மண்ணைப் பிரித்த – கடசலத்திலுள்ள சேற்றை வேறுபடுத்தின, தேற்றாம் பொடிதானும் – தேற்றாங் கொட்டைத் தூளும், மண்ணுடு மாயும் – அச் சேற்றோடு கூட எப்படிக் கெடுமோ அப்

படி, ஊடி – பகைத்து, ஞானமும் – அகண்டாகார விருத்தி ஞானமும், அறிவிலாமையைக் கெடுத்து – அஞ்ஞானத்தை நாசஞ்செய்து, ஒக்கவே தானே கெடும் – அவ்வஞ்ஞானத் தோடு கூடவே தானே நாசமாம்.

(ப – ம்) அஞ்ஞானம் லயிக்கும் பரிபூரண சொரூபத்தி லேயே ஞானம் லயித்தலால் ஒக்கவே கெடுமென்றார்.

(தா – ம்) அகண்டாகார விருத்தி ஞானமானது அகண்ட சொரூபத்தைத் தெரியச்செய்து அறியாமையைக் கெடுத்துத் தானும் சொரூபத்திற் கெடு மென்பதாம்.

(அ – கை) அகண்டாநுபவம் பெற்ற ஞானிகளின் இலக்கணத்தைக் கூறல்.

இந்த நிச்சய முத்தரு ளநுபவ மிருப்பதெப் படியென்றால்
சிந்தை யற்றபூ மண்டல விராசனுஞ் சிசுவும்போற் சுகமா
வர், பந்த முத்திகண் மறந்துபோ முண்டென்று பலர்
சொலி னகையாவர், அந்த ரத்தையுண் டுமிழ்ந்ததோர்
கொசுகெனு மவர்களை நகையாரோ.

(இ – ள்) இந்த நிச்சய அநுபவம் – இந்நிச்சய ரூபமான அகண்டாநுபவம், முத்தருள் – சீவன் முத்தரிடத்தே, இருப்பது எப்படி என்றால் – இருக்கின்றது எவ்வண்ணமென்று நீ கேட்கில், சிந்தையற்ற – சங்கற்பமற்ற, பூமண்டல இராசனும் – சக்கிரவர்த்தி ராசாவும், சிசுவும் போல் – சிறு குழந்தையும் போல, சுகமாவர் – ஆனந்த சொரூபரா யிருப்பர், பந்த முத்திகள் மறந்துபோம் – பந்த மோட்சங்களாகிய பாவனை விகற் பங்கள் நீங்கிப்போம், உண்டென்று பலர் சொலின் – பந்த முத்திகள் உளவாமென்று முமூட்சுக்கள் கூறிடில், நகையாவர் – என்ன பிராந்தி என்று சிரிப்பர், அந்தரத்தை – ஆகாயத்தை, ஓர் கொசுகு – ஒரு மசகமானது, உண்டு உமிழ்ந்தது எனும் அவர்களை – புசித்து கக்கிற்று என்பவர்களை, நகையாரோ – உலகில் யாவர் நகையார் (அதுபோல.)

(ப – ம்) சகல சீமையும் கைவசம் பண்ணிக்கொண்ட மகாராசா இனி இன்ன சீமையைச் செயிக்கவேணு மென்னும்

சங்கற்ப மற்றுத் திருத்தியடைந்து இருப்பது போலவும், முலையுண்டு மஞ்சத்திற் கிடக்கும் சிறு குழந்தையானது கண்ணாலே பார்த்தல் காதாலே கேட்டல் கால் கை சலித்தல் முதலிய தொழிற் செய்யினும் முன் பின் வாசனையின்றிச் சுகமாயிருப்பது போலவும், அகண்டாநுபவம் பெற்ற ஞானிகள் சருவ சாட்சி சருவாத்மக சருவகாரண சச்சிதானந்த சொரூபமாகின்ற தம்மைத் தவிரச் சகசீவ பரங்கள் வேறில்லாதபடியினால், மனம் ஒன்றையும் சுட்டாமலும், பிராரத்த கன்ம வசத்தால் நானாவிதத் தொழில் செய்தபோதிலும் காமாதி வாசனை சற்றுமில்லாமலும், ஆனந்த சொரூபரா யிருப்பா ரென்பார், "சிந்தையற்ற ... சுகமாவ" ரெனவும்,

பழுதையிற் பாம்பு வந்ததுமில்லை போனதுமில்லையென்னும் தெளிவுற்றோனுக்குப் பாம்பு தோற்றிற்று நீங்கிற்றென்பது மறந்துபோதல் போல, நிருவிகாரமாயும் நிராகாரமாயும் நிருமலமாயும் நித்தியமாயு மிருக்கின்ற நிட்பிரபஞ்ச சொரூபம் தானென்று தெளிவுற்ற ஞானிக்கு அஞ்ஞானத்தால் பந்தம் உண்டாயிருந்ததென்பதும் ஞானத்தால் மோட்சமுண்டாயிற்றென்பதும் மறந்துபோம் என்பார், "பந்த முத்திகள் மறந்துபோ" மெனவும், நிரவயவமாயும் அமூர்த்தமாயும் சூட்சுமமாயும் மகத்தாயு மிருக்கின்ற ஆகாசத்தை அற்பமாயிருக்கின்ற மசகமானது புசித்துக் கக்கிற்று என்பவர்களை யாவர்களும் சிரிப்பது போல, பராபரமாயும் பரிபூரணமாயும் பராகாசமாயும் இருக்கின்ற பரமாத்மாவுக்குப் பஞ்சகோசத்துள் மறைபட்டுப் பந்தமுண்டா யிருக்கிறதென்றும் அது நிவர்த்தியாகி மோட்சமடைய வேண்டுமென்றும் கூறுகின்ற முமூட்சுக்களைப் பரிபூரணாநுபவம் பெற்ற ஞானிகள் சிரிப்பா ரென்பார், "உண்டென்று ... நகையாரோ" வெனவும் கூறினார்.

(தா – ம்) அறிவறியாமையின்றிச் சிருட்டிக்கு முன்னுள்ள சத்தா மாத்திரமாக விளங்கிச் சுகித்திருப்பவனே சீவன் முத்த னென்பதாம்.

(அ – கை) அகண்டாநுபவம் பெற்ற ஞானிகளைப் போலச் சீடன் அகண்டாநுபவம் பெறும் பொருட்டு அகண்ட சொரூபத்தில் அவாந்தரத்திற் றோற்றும் சீவேசுவர சகத்தா

இய கற்பனையில் மயங்கா திருப்பதற்காகத் திட்டாந்தமாக ஓர் கதை கூறல்.

மலடி மைந்தனுந் தாஞுவிற் புருடனும் வான்மலர் முடிசூடி, இலகு கந்தர்ப்ப நகரிலே சுத்திகை யிரசதம் விலைபேசிக், கலக மாயினு ரிடையினிற் கயிற்றராக் கடித் திரு வருமாண்டார், அலகை யாயினு ரெனும்விவ காரத்தை யறிந்தவன் மயங்கானே. 89.

(இ — ள்) மலடி மைந்தனும் — வந்தியா புத்திரனும், தாஞுவிற் புருடனும் — குற்றியின் மகனும், வான்மலர் — ஆகா யத் தாமரைப் பூவை, முடி சூடி — அலங்காரமாகச் சிரசிற் றரித்து, இலகு கந்தர்ப்ப நகரில் — விளங்காநின்ற கந்தர்வ நகரத்தில், சுத்திகை இரசதம் — கிளிஞ்சில் வெள்ளியை விலை பேசி — கிரயம் பேசி, கலகமாயினுர் — பிணக்கடைந்தார் கள், இடையினில் — நடுவில், கயிற்றராக் கடித்து — இரச்சு சர்ப்பந்தீண்டி, இருவரும் — முன் சொன்ன இரண்டு பேர் களும், மாண்டார் — இறந்து, அலகையாயினுர் — பேயாயினுர் கள், எனும் விவகாரத்தை — என்கின்ற கதையினது நியா யத்தை, அறிந்தவன் மயங்கான் — பொய் யென்று தெரிந்த வன் மயங்க மாட்டான்.

(அ — கை) தாட்டாந்தங் கூறல்.

மாயை யென்பது பொய்யெனி லதுபெற்ற வகையெ லாம் பொய்யாமே, தாயை யன்றிமக் களுக்கொரு பிறவி யுஞ் சாதியும் வேறுண்டோ, சேய சொர்க்கமு நரகமு நன் மையுந் தீமையும் பாராமல், தூய சத்துச்சித் தானந்த பூரண சொரூபமா யிருப்பாயே. 90.

(இ — ள்) மாயை என்பது — மாயை என்று சொல்லப் படுவது, பொய் என்னில் — சுருதி யுத்தி அநுபவங்களால் மித்தை என்ருல், அது பெற்ற வகையெலாம் — அதனுல் உண்டாகிய பொருளனைத்தும், பொய்யாம் — மித்தையேயாம், (எதுபோலவெனின்) தாயையன்றி — மாதாவைத் தவிர, மக்க ளுக்கு — புத்திரர்க்கு, ஒரு பிறவியும் — ஒரு ஜன்மமும், சாதி யும் — குலமும், வேறுண்டோ — வேறுளவோ, (ஆதலால்) சேய சொர்க்கமும் நரகமும் — சேய்மையான சொர்க்க நரகங்

களையும், நன்மை தீமையும் — புண்ணிய பாவங்களையும், பாரா மல் — மித்தையாதலின் பகுத்துப் பாராமல், தூய — நிருமல மாயும், சத்து — சன்மாத்திரமாயும், சித்து — சின்மாத்திரமா யும், ஆனந்தம் — சுகமாத்திரமாயும், பூரண சொரூபமாய் இருப்பாய் — அகண்டமாயு மிருக்கின்ற பிரம சொரூபமாகவே இருப்பாய்.

(ப — ம்) மாதாவில்லாத விடத்துப் புத்திரன் உற்பத்தி யாதலும் மாதா பறைச்சியா யிருக்குமிடத்தில் புத்திரன் பிரா மணன் ஆதலும் இல்லாதது போல, மாயை என்னும் சத்தத் துக்கு இல்லாததென்று அருத்த மிருப்பதால், அம்மாயை மித்தை யென்று சுருதி கூறுகையினாலும், விசாரிக்கு மிடத் தில் ஒன்பது விதத்தினாலும் நிச்சயிக்கப்படாத பொய்யென்று யுத்தி இருப்பதினாலும், ஞானிகளும் அவ்வண்ணமே அநுப வமாய்க் கண்டிருப்பதினாலும், அந்த மாயையில் உண்டான சீவேசுவர சகத்து மித்தை யென்பார், "மாயை என்பது ... வேறுண்டோ" வெனவும், கிணற்றின் கரையிலிருக்கும் புருட னிழல் அக்கிணற்றின் சலத்தில் தலைகீழாகத் தோன்றுவது பொய்யாதலினாலும், அந்நிழல் அலைகின்றதையும் அலையா திருக்கின்றதையும் பார்த்தலினால் பிரயோசன மின்மையி னாலும் அதைப் பகுத்துப்பாராதுவிட்டுக் கிணற்றின்கரையில் இருக்கும் தனது எதார்த்த வடிவத்தைப் பார்த்துச் சுகமா யிருப்பது போல, பிரம சொரூபமாகிய தன்னிடத்தில் விவர்த் தமாகத் தோற்றுகிற சீவேசுவர சகத்துப் பொய் யாதலினா லும், அதில் துறக்க மென்றும் நிரயமென்றும் புண்ணிய மென்றும் பாவமென்றும் பந்தமென்றும் மோட்சமென்றும் இவை முதலாகப் பார்ப்பதினால் பிரயோசன மின்மையாலும் அசத்து சடம் துக்கம் அனித்தியமாயிருக்கும் அவைகளைப் பகுத்துப் பாராமல் விட்டு அஞ்ஞானமாகின்ற மலமில்லா திருப்பதால் நிருமலமாயும், சிருட்டிக்கு முன்னேயும் பின்னே யும் இருக்கின்றமையால் சன்மாத்திரமாயும், சிருட்டி திதி சம் மார காலங்களையும், அதில் உள்ள காரியங்களையும் விளக்கி வைத் தறிகின்றமையால் சின்மாத்திரமாயும், துவிதமற்று இருக்கின்றமையால் சுகமாத்திரமாயும், சராசரமாகத் தோற் றும் பிரபஞ்சமெல்லாம் தன்னைவிட வேறில்லா திருக்கின்ற மையால் அகண்டமாயு மிருக்கின்ற பிரம சொரூபமாகவே யிரு

வென்பார், "தேசய சொர்க்கமும் ... சொரூபமா யிருப்பா" யெனவும் கூறினர்.

இரண்டு கவிகட்கும் (தா – ம்) கற்பனையின் மூலந் தெரிந்தவன் அதனிட்டத்தில் மயங்காமை போல, மாயை மித்தையாகையால் அதனிட்டத்தில் உண்டான பிரபஞ்சம் மித்தையெனவும் அவைகளைப் பாராது அகண்ட சொரூபமாகவே இருவெனவும் கூறினதாம்.

(அ – கை) மாயா காரியமான பிரமதேவர் முதலிய நன்மையான பிரபஞ்சத்தையும் மித்தையென்று தெளியும் பொருட்டுச் சீடன் வினுதல்.

பங்க யாசனன் முதற்பல தேவரும் பாருள பெரியோரும்
கங்கை யாதியாந் தீர்த்தமுந் தேசமுங் காலமு மறைநாலும்
அங்க மாறுமந் திரங்களுந் தவங்களு மசத்திய மெனச்
சொன்னல், எங்க ணுயக னேயத னுற்குற்ற மில்லையோ
மொழியீரே. 91.

(இ – ள்) பங்கயாசனன் முதல் – பிரம தேவனுதியான பல தேவரும் – சமஸ்த தேவர்களும், பார் உள பெரியோரும் – பூமியின் கண்ணுள்ள மகான்களும், கங்கையாதியாம் தீர்த்தமும் – பாகீரதி முதலிய புண்ணிய தீர்த்தங்களும், தேசமும் – காசி முதலிய புண்ணிய தேசங்களும், காலமும் – அர்த்தோதய மகோதயம் முதலிய புண்ணிய காலங்களும், மறைநாலும் – இருக்காதி நான்கு வேதங்களும், அங்கம் ஆறும் – சந்தசு முதலிய ஆறு அங்கங்களும், மந்திரங்களும் – பிரணவாதி மகா மந்திரங்களும், தவங்களும் – கிரிச்சிர சாந்தராயணுதி தவங்களும், அசத்திய மெனச் சொன்னல் – மித்தையென்று உரைக்கில், எங்கள் நாயகனே – எம்முடைய அருளிறையே, அதனுல் – நன்மை யடையக் காரணமான அவைகளைப் பொய் யென்று சொல்வதனுல், குற்றமில்லையோ – தோஷமுண்டாகாதோ, மொழியீர் – அதன் உண்மை யருள்வீர்.

(ப – ம்) என்போன்ற அறிவிலிகளுக்கும் துன்ப நீக்கி இன்பங் கொடுக்கின்ற அருள் இறை என்பார், "எங்கணுயகனே" என்ருர்.

(தா – ம்) தேவதைகளையும் மகான்களையும் தீர்த்தமாதிகளையும் சகலரும் சத்தியமென்றும், உபாசிக்கத் தகுந்தனவென்றும், நன்மைகளைக் கொடுப்பனவென்றும், கருதி மக்கள் வழிபட்டுக்கொண்டுவர, அவைகளைப் பொய்யென்று சொன்னால் தோஷ முண்டாகாதோ வென வினவினதாம்.

(அ – கை) அவ் வினாவிற் குத்தரம் கூறல்.

சொற்ப னந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்வது பிழையானால், அற்ப மாயையிற் றோன்றிய சகங்களையசத்தெனல் பிழையாமே, சொற்ப னந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்லலா மெனின்மைந்தா, அற்ப மாயையிற் றோன்றிய சகமெலா மசத்திய மெனலாமே. 92

(இ – ள்) சொப்பனந்தனில் கண்டதை – கனவில் மனோ கற்பனையால் கண்ட பிரமாதி தேவர்களை, பொய்யென்று சொல்வது – சாக்கிரத்தில் விழித்தவன் மித்தையென்று கூறுவது, பிழையானால் – குற்றமாயின், அற்ப மாயையில் தோன்றிய சகங்களை – ஏகதேசமான மாயையில் உண்டாகிய பிரபஞ்சங்களை, அசத்து எனல் பிழையாம் – மித்தை யென்று சொல்வதும் குற்றமாம், சொப்பனந்தனில் கண்டதை – கனவில் பார்த்த பிரபஞ்சங்களை, பொய் யென்று சொல்லலா மெனில் – விழித்தவன் மித்தை யென்று சொல்வதினால் குற்றமில்லை யென்று சொல்லில், மைந்தா – புத்திரா, அற்ப மாயையில் தோன்றிய – ஏகதேச மாயையில் உண்டான, சகமெலாம் – உலகமனைத்தையும், அசத்திய மெனலாம் – ஞான சாக்கிரத்தில் விழித்தவன் பிரயத்தினமின்றியே மித்தையாகத் தோன்றுதலின் மித்தையே என்று சொல்லலாம் தோஷமின்று.

(ப – ம்) மண்ணில் கடசத்தி ஏகதேசமாய்க் கற்பிதமாய்த் தோற்றுவது போல மாயையானது பிரம சொரூப வியாபகத்தில் விவர்த்தமாய் ஏகதேசமாய்த் தோற்றுவதாலும் ஞானிகள் அநுபவத்தில் இல்லாமல் போகின்றதினாலும் துச்சமென்பார், "அற்ப மாயை" எனவும் சொப்பனத்தில் கண்ட பிரமாதிகள் மனோ கற்பனையால் தோற்றுவதாலும் சாக்கிரத்தில் அவைகள் இல்லாமல் போவதினாலும் அவைகளைப்

பொய்யென்று சொல்வதினுல் குற்றமுண்டாகாதது போல, அஞ்ஞான சொப்பனத்தில் தோற்றும் தேவதைகள் பெரியோர்கள் புண்ணிய தலமாதிகள் இஞ்சித்தா யிருக்கின்ற மாயா கற்பனையாற் ருேற்றுவதாலும், அப்பிரமத்தைப் போல நித்தியமாய் இராமல் அனித்தியமாய் ஞான சாக்கிரத்தில் இல்லாமற் போவதினுலும், அப்பிரமாதிகளை மித்தையென்று சொல்வதினுல் பாவமுண்டாகா தென்பார், "சொப்பனந் தனில் ... அசத்தியமெனலாமே" எனவும் கூறினுர்.

(தா – ம்) சொப்பனம் போல மாயா காரியமான சகசீவ பரங்கள் என்றும் மித்தையாதலின் அவைகளின் இயல்பைக் கூறுதலாற் குற்றமில்லை யென அன்னுவய விதி ரேகயுத்தியினுல் அறிவித்ததாம்.

(அ – கை) முற் கூறியதை வற்புறுத்தல்

பொய்யை மெய்யென்ற மூடர்புண் ணியரென்று
புராணங் கூப்பிடுமாஞல், மெய்யை மெய்யென்ற ஞானிக்
குக் குற்றங்கள் விதித்தசாத் திரமுண்டோ, பொய்ய
தேதெனி ஞமரூ பங்களாம் பூதமா கியமாயை, மெய்ய
தேதெனிற் சச்சிதா னந்தமாய் வியாபிக்கு மான்மாவே. 93

(இ – ள்) பொய்யை மெய்யென்ற மூடர் – சுருதியாதிகளால் மித்தை யென்று கூருநிற்கும் பிரபஞ்சத்தைச் சத்தியமென்ற அறிவிலிகளை, புண்ணியரென்று – தருமவான்களென்று, புராணங் கூப்பிடுமாஞல் – ஸ்காந்த முதலிய புராணங்கள் முறையிடுமாஞல், மெய்யை மெய்யென்ற – உண்மையை உண்மையென்ற, ஞானிக்கு – ஞானவான்களுக்கு, குற்றங்கள் விதித்த – தோஷங்களை நியமித்த, சாத்திரம் உண்டோ – நூல்களும் உளவோ, பொய்யது ஏது எனில் – மித்தையாவது யாதெனில், நாம ரூபங்களாம் – நாம ரூபங்களாகிய, பூதம் ஆகிய மாயை – பூத பௌதிகங்களாகிய மாயையாம், மெய்யது ஏது எனில் – சத்தியமாவது யாது எனில், சச்சிதானந்தமாய் – சச்சிதானந்த ரூபமாய், வியாபிக்கும் ஆன்மா – எவ்விடத்தும் வியாபித்திருக்கும் பிரம சொரூபமே யாம்.

(ப — ம்) ஞான காண்டத்திற் பொய்யென்று கூறிய சொர்க்க லோகாதிகளையும், பிரமாதி தேவதைகளையும், மெய் யாகக் கருதிக்கொண்டு யாகாதி கருமங்களையும், அன்னதான முதலானவைகளையும், தியான தோத்திர நமஸ்காராதியையும் செய்கின்ற அறிவில்லாதவர்களையே, தருமவான்களென்று, ஸ்காந்த முதலிய பதினெண் புராணங்களும் அநேக விடத்தில் பலதரமும் முறையிடுகின்றதே யென்பார், "பொய்யை ... புரா ணங் கூப்பிடு" மெனவும், அந்தப் பொய்யான சொர்க்காதி பிரமாதி தீர்த்தமாதிகளைப் பொய்யென்று பிரதிபாதிக்கின்ற ஞானிகளுக்கு வேதாகம சாஸ்திர புராணாதிகள் ஒன்றிலும் பாவம் கூறவில்லை யென்பார், "மெய்யை...சாஸ்திரமுண்டோ" வெனவும், எவ்விடத்திலும் இருக்கின்றதாயும் எல்லாவற்றை யும் அறிகின்றதாயும் எல்லாவற்றினும் பிரியமாயும் எல்லாம் தோன்றி நின்று அழிவதற் கிடமான வியாபகமாயு மிருக் கின்ற பிரமசொரூப மென்பார், "சச்சிதானந்தமாய்...ஆன்மா" வெனவும் கூறினார்.

(தா — ம்) பொய்யான பிரமாதிகளை மெய்யென்று கருதி சற்கருமம் செய்கின்ற அறிவிலியைக்கூடத் தருமவானென்று புராணாதிகள் கூறுகின்ற தெனவும், அப் பொய்யை பொய் யென்று எதார்த்தம் கூறுகின்ற ஞானிக்கு ஒரு நூலிலும் பாவம் கூறவில்லை யெனவும், சகத்தாகாரமாய்த் தோற்று கின்ற மாயை பொய் எனவும், பிரம சொரூபம் மெய் எனவும் கூறினதாம்.

(அ — கை) மாயையின் றன்மை யிஃதெனத் தோன்ற அறுவகையாக வினுதல்.

மாயை யென்பதே துடையரா ரெப்படி வந்தது வரு வானேன், மாயை யென்பது பிரமத்தின் வேறெனின் வஸ்துவு மிரண்டாமே, மாயை யென்பதும் பிரமமு மொன் றெனின் வஸ்துவும் பொய்யாமே, மாயை யென்றமே கங் களுக் கொருசண்ட மாருத குருமூர்த்தி. 94.

(இ — ள்) மாயை என்பது ஏது — மாயை என்று சொல் லப்படுவது எப்படிப்பட்ட சொரூபமுடையது, உடையர் ஆர் — அதனை யுடையவர் யாவர், எப்படி வந்தது — எவ்விதம்

உதயமாயிற்று, வருவானேன் – எனக்கு உண்டான காரண மென்ன, மாயை என்பது – மாயை என்று சொல்வது, பிர மத்தின் வேறு எனின் – பிரமத்துக்கு அன்னிய மென்று உரைக்கில், வஸ்துவும் இரண்டு ஆமே – வஸ்துவும் துவித மாமே, மாயை என்பதும் – மாயை என்று சொல்லப் படுவ தும், பிரமமும் – பிரம மென்பதும், ஒன்று எனின் – ஏகமென் றால், வஸ்துவும் பொய்யாமே – மாயா வஸ்துவைப் போலப் பிரமவஸ்துவும் அனித்தியமாமே, மாயை என்ற மேகங்களுக்கு – மாயை என்ற முகில்களுக்கு, ஒரு – ஒப்பற்ற, சண்டமாருத குருமூர்த்தி – பிரசண்ட வாயு என்னும் ஞானாசாரியரே கூறு வீராக.

(ப – 'ம்) சத்து அசத்து சதசத்து, பின்னம் அபின்னம் பின்னபின்னம், சாவயவம் நிரவயவம் சாவயவ நிரவயவமாகிய நவ விதங்களில், எது மாயையின் சொரூப மென்பார், "மாயை என்பதேது' எனவும், மாயா மயக்கத்தை யுடையவர் சீவனா? ஈசுவரனா? என்பார், "உடையரார்" எனவும், மாயையானது ஆரம்ப பரிணாம விவர்த்தமாதிகளில் எந்த பட்சத்தால் உதித் தது என்பார், "எப்படி வந்த" தெனவும், அம் மாயை கரும காரணத்தால் வந்ததா அவிசார காரணத்தால் வந்ததா என்பார், "வருவானேன்" எனவும், தகப்பனிடத்தில் உண் டான பிள்ளை தகப்பனுக்கு அன்னியமாயிருப்பது போல, பிரம சொரூபத்துக்கு மாயை அன்னியமானால் துவிதமாகுமே என்பார், "மாயை என்பது ... இரண்டாமே" எனவும், உப்ப ளத்தில் சேர்ந்திருக்கும் மாம்பழமும் அதனுடைய மாதுர்ய ரசம நீங்கி உப்புக் கட்டியாவது போல, அனித்தியமான மாயையும் நித்தியமான பிரமமும் ஒன்று என்றால் அப் பிரம மும் அனித்தியமாய்ப் போமே என்பார், "மாயை என்பதும் ... பொய்யாமே" எனவும், சகல சீவருக்கும் ஒன்றும் தெரி யாது மறைப்பதாயும், மிகுந்த மழைபெய்து துன்பங் கொடுப் பதாயும் உள்ள மேகத்தைப் பிரசண்ட வாயுவானது சின்ன பின்னப்படுத்திக் கெடுப்பது போல, சகலருக்கும் ஆத்ம சொரூபம் தோன்றாது மறைத்து அனாத்மசொரூபமான சீவே சுவர சகத்தாகத் தோற்றுவித்துத் துன்பம் செய்கின்ற அஞ் ஞானத்தை, ஆத்மானாத்மாக்களை வேறுபடுத்தித் தெரிவித் துத் தத்துவ ஞானம் கொடுக்கின்றது மூலமாய்க் கெடுக்

கின்ற ஞானுசாரியரே யென்பார், "மாயை யென்ற ... மூர்த்தி" எனவும் கூறினர்.

(தா - ம்) மாயையின் உருவம், அதன் மயக்கத்தை யுடையவர்கள், அதன் உற்பத்தி, அஃதுதித்தற்குக் காரணம், அஃது பிரமத்துக்கு பின்னமாயின் வஸ்து துவிதமாதல், அபின்னமாயின் வஸ்துவும் மித்தையாதல் என்பவற்றின் உண்மையைத் தெரிய வினவினதாம்.

(அ - கை) அவைகளின் முதல் நான்கு விஞவிற் குத்தரங் கூறல்.

அதனை யின்னதென் றுரைத்திடப் படாமையா லவாச்
சிய வடிவாகும், இதுத னக்குள துடலியா னுலகுமெய்
யெனுமவ ருடையோர்கள், கதையி லாதபொய் வந்ததிப்
படியென்று கண்டபே ரிலைமைந்தா, விதன மாயையேன்
வந்ததென் றூற்புத்தி விசாரமற் றதனாலே. 95.

(இ - ள்) அதனை - அம்மாயையை, இன்னதென்று உரைத்திடப் படாமையால் - இத்தன்மை யுள்ளதென்று சொல்லக் கூடாமையால், அவாச்சிய வடிவாகும் - அநிர் வசனீய சொரூபமாம், இது தனக்கு உளது - இஃது எனக்கு உள்ளது, உடல் யான் - தேகம் நான், உலகு மெய் - சகம் சத்தியம், எனும் அவர் - என்கின்ற அவர்களே, உடையோர்கள் - உடையவர்கள், கதையிலாத பொய் - இன்ன விதமுள்ளதென்று வசனித்தற்கு கூடாத அம்மாயை, வந்தது இப்படியென்று - உதித்தது இவ்விதமென்று, கண்ட பேரிலை - பார்த்தவர்கள் இல்லை, மைந்தா - மகனே, விதன மாயை - துன்ப மயமான மாயையானது, ஏன்வந்தது என்றால் - என்ன காரணத்தினால் உண்டாயிற் றென்றால், புத்தி விசாரமற்றதனால் - அவிசார காரணத்தினால்.

(ப - ம்) சத்து அசத்து சதசத்து, பின்னம் அபின்னம் பின்னுபின்னம் சாவயவம் நிரவயவம் சாவயவ நிரவயவ மாகிய ஒன்பது விதத்துள் ஒரு விதத்திலும், நிச்சயிக்கப்படாததே மாயையின் சொரூப மென்பார், "அதனையின்ன ... வடிவாகு" மெனவும், தேகேந்திரியாதிகளை யானென்றும், வீடு முதலிய வற்றை எனதென்றும், பிரபஞ்சத்தைச் சத்தியமென்றும்

கொள்ளுகின்ற சீவரே, மாயாமயக்கத்தை யுடையவரென்பார், "இது தனக்கு ... உடையோர்" எனவும், மாயையானது ஆரம்ப பரிணும விவர்த்த உற்பத்தியாதி பட்சங்களில் இன்ன விதத்தினுல் உண்டானதென்று அறிந்தவர்கள் இல்லை யென்பார், "கதையிலாத ... கண்டபேரிலை" யெனவும், அவிசார காரணத்தினுல் மாயை வந்தது என்பார், "மாயை ஏன் ... விசாரமற்றதனுலே" எனவும் கூறினுர்.

(வி – ரை) அவாச்சிய வடிவாகு மென்பதற்கு மாயை ஆத்மாப்போல் திரிகாலத்திலும் கெடாமல் இராது தத்துவ ஞானத்தினுல் அழிவதினுல் அதை சத்தென்பதாகவும், முயற் கொம்புபோல் இல்லாமல் போகாது நான் அக்ஞானி என்று அநுபவமிருப்பதினுல் அசத்தென்பதாகவும், ஒன்றுக்கே இரண்டு பக்ஷம் கூறுவது விருத்தமாகையால் சதசத்தென்பதாகவும், சகத்துக்கு மூலகாரணமா யிருக்கையினுல் சாவயவ மென்பதாகவும், சகத்தாகாரமாய்ப் பரிணமிக்கையினுல் நிரவய மென்பதாகவும், உபயாத்மகம் விருத்தமாகையால் சாவயவ நிரவயவ மென்பதாகவும், ஆத்மா அத்வித மென்கின்ற சுருதிக்கு விரோதமாகையினுலும், ஆத்ம சத்தையைத் தவிர மாயைக்குச் சத்தை இல்லாமையாலும் அதை ஆத்மாவுக்கு பின்ன மென்பதாகவும், ஆத்மா சத்திமான் என்னும் சுருதிக்கு விரோதமாகு மாகையாலும் மாயைக்குச் சேதனத்துவமும் ஆத்மாவுக்கு சேதனு சேதனத்துவமும் வருமாகையாலும் அபின்ன மென்பதாகவும், விருத்தமாகையால் பின்னு பினனம் என்பதாகவும், நிச்சயிக்கக் கூடாதெனக் கொள்க.

(தா – ம்) மாயைக்குச் சொரூபம் அனிர்வசனிய மெனவும், அதன் மயக்கத்தை யுடையோர் சீவர்களெனவும், அது இன்ன விதமாய் உதித்தது என அறிந்தவர்கள் இல்லையெனவும், உண்டானதற்குக் காரணம் அவிசார மெனவுங் கூறியதாம.

(அ – கை) ஐந்தாவது ஆருவது விஞவுக் குத்தாங் கூறல்.

அருவ மாகுமா யாவிவித் தைகள்வினை யாடுமுன் றெறியாவே, உருவ மாம்பல கந்தர்ப்ப சேனையா யுதித்தபின் வெளியாகும், பிரம சத்திக வநந்தமா மதைக்கண்டு பிடித்

திடல் கூடாதே, பரவு பூதங்கள் கண்டநு மானத்தாற்
பலருக்கும் வெளியாமே. 96.

(இ - ள்) மாயாவி - இந்திர ஜாலம் செய்பவன், விளையாடுமுன் - விளையாடுதற்கு முன்பு, அருவமாகும் வித்தைகள் - தோன்றுமலுள்ள வித்யா சத்திகள், தெரியா - ஒருவருக்கும் தோன்றுதனவாம், உருவமாம் - வடிவங்களாகின்ற, பல கந்தர்ப்ப சேனையாய் - பற்பலவான கந்தர்வ சேனைகளாகி, உதித்த பின் - உண்டான பின், வெளியாகும் - யாவர்க்கும் சத்திகள் தோன்று நிற்கும், (அது போல) பிரம சத்திகள் - பிரமத்தினது சத்திகளானவை, அனந்தமாம் - அநேகமாம், அதை - அம் மாயா சத்தியை, கண்டு பிடித்திடல் கூடா - பார்த்தல் கூடாவாம், பரவு பூதங்கள் கண்டு - விரிந்துள்ள பஞ்ச பூதங்களைப் பார்த்து, அநுமானத்தால் - இலிங்க ஞானத்தால், பலருக்கும் வெளியாம் - யாவருக்கும் அச் சத்திகள் உண்டென்று விளங்கும்.

(தா - ம்) மித்தையான சகம் தோன்றுதலின் அங்ஙனம் தோற்றுவிக்கும் மித்தையான மாயாசத்தி யொன்றுளதென வுணரவேண்டு மென்பதாம்.

(அ - கை) இதுவுமது.

காரியங்களுஞ் சத்தியா தாரமுங் காணுமற் றதுமாயம்
பாரினின் றமா யாவியுஞ் சேனையும் பார்ப்பவர் கண்கா
ணும், வீரி யந்திகழ் வித்தையா யினசத்தி வெளிப்படா
ததுபோலே, பேரி யற்பிர மத்துக்கு மூலகுக்கும் பிறிது
சத் திகளுண்டே. 97.

(இ - ள்) பாரில் நின்ற மாயாவியும் - பூமியின்கண் நிற்கின்ற மாயா வித்தை செய்பவனும், சேனையும் - அவனாற் காட்டப்பட்ட படைகளும், பார்ப்பவர் கண் காணும் - காண்பவர் கண்ணிற்குத் தோன்றும், வீரியம் திகழ் - பராக்கிரம முடையதாய் விளங்குகின்ற, வித்தையாயின சத்தி - இந்திர ஜால ரூபசத்தி, வெளிப்படாது - தோன்றாது, அதுபோல் - அத் திருஷ்டாந்தம் போல, சத்தி காரியங்களும் - சத்தியின் காரியமான சிவேசுவர சகங்களும், சத்தி ஆதாரமும் - மாயா சத்திக்கு ஆசிரயமான பிரமமும், காணும் - தோன்றும், மற்

றது மாயம் — காரியத்திற்கும் ஆதாரத்திற்கும் விலட்சண மான சத்தியானது தோன்றுது, பேர் இயல் பிரமத்துக்கும்— மகத்துவமுள்ள பிரம சொரூபத்துக்கும், உலகுக்கும் — சகத் துக்கும், பிறிது சத்திகளுண்டு — விலட்சணமான அனந்த சத்திகளுளவாம்.

(ப — ம்) மாயா சத்தியின் காரியமான பிரபஞ்சம் நாம ரூபமாகப் பிரத்தியட்சமாய்த் தோற்றுவதாலும், அச் சத்தி யின் அதிட்டான பிரமமானது, எப்போதும் இருப்பதாயும், சகலத்தையும் விளக்கி யறிவதாயும், எல்லோருக்கும் சுகங் கொடுப்பதாயும், பிரத்தியட்சமாய்த் தோற்றுவதாலும், அவைகளை யறியலா மென்பார், "காரியங்களும் சத்தியாதார மும் காணு" மெனவும், அவைகளைப் போல மாயா சத்தி பிரத்தியட்ச மில்லாததால் காணக் கூடாதென்பார், "மற்றது மாய" மெனவும், சத்திய ஞான வனந்தாநந்த மகத்துவ முடைய பரமாத்மா வென்பார், "பேரியற் பிரம" மெனவுங் கூறினர்.

(தா — ம்) பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கின்ற மாயா சத்தி பிரமத்தைத் தவிர வேருயிருக்கு மென்பதாம்.

(அ — கை) இதுவுமது.

சத்தி சத்தனைத் தவிரவே றன்றுகாண் சத்தனு மாயாவி
வித்தை காட்டிய விந்திர சாலம்பொய் வித்துவான் மெய்
போலப், புத்தி மைந்தனே சத்திமா னுகிய பூரண வான்
மாவின், வத்து நிண்ணயஞ் சொன்னதிட் டாந்தத்தின்
வழிகண்டு தெளிவாயே. 98.

(இ — ள்) சத்தி — இந்திரஜால சத்தியானது, சத்தனைத் தவிர — இந்திர ஜாலக்காரனைத் தவிர, வேறு அன்று காண் — பின்னமல்ல, சத்தனும் மாயாவி — சத்தியை யுடையவனுன வித்தை செய்வோன், வித்தை காட்டிய — இந்திர ஜால வித் தையைக் காண்பித்த, இந்திர ஜாலம் பொய் — இந்திர ஜாலம் பொய்யாய், வித்துவான் மெய் போல — வித்தைக்காரன் மெய் யாயிருப்பது போல, புத்தி மைந்தனே — மதியுடைய மாணுக் கனே, சத்திமானுகிய — சர்வ சத்திமானுகிய, பூரண ஆன்மா வின் — பரிபூரண ஆத்மாவின், வஸ்து நிண்ணயம் — சொரூப

நிச்சயத்தை, சொன்ன திர்ஷ்டாந்தத்தின் வழி – சொல்லிய திருஷ்டாந்த மார்க்கமாக, கண்டு – அறிந்து, தெளிவாய் – தெளிந்து கொள்வாய்.

(ப - ம்) காச்சின இரும்புப் பாளமானது விட்ட சலத்தை வெளியில் விடாமல் கிரகிக்கின்றது போல நாமநுக்கிரகம் பண்ணுகின்ற வாக்கியங்களை யெல்லாம் மறவாமல் கிரகிக்கும் தன்மையும் அவைகளில் இவை சாரமெனவும் இவை அசார மெனவும் இவை தள்ளத்தக்க தென்றும் இவை கொள்ளத் தக்க தென்றும் பகுத்தறிகின்ற மதியுமுடைய மாணுக்கனே யென்பார், "புத்தி மைந்தனே" எனவும் கந்தருவ சேனையைத் தோற்றுவிக்கும் இந்திர ஜாலசத்தி அவ் வித்தைக்காரனுக்கு வேருனாலும் வேறுபடாது ஒன்றேயாம். அதுபோலப் பிர பஞ்சத்தைத் தோற்றுவிக்கும் அம் மாயா சத்தி பிரமத்தைத் தவிர வேருனாலும் வேறில்லை ஒன்றே என்பார், "வேறன்று" எனவும், இந்திர ஜால வித்தைக்காரனுடைய சத்தியினாலுண் டாகிய கந்தருவ சேனைகளழிவதினால் பொய்யாகவும், அவை களைப் போல அச் சத்தியுடைய வித்தைக்காரன் அழியாமை யால், மெய்யாகவும் இருப்பது போல, மாயா சத்தி காரிய மான சராசரப் பிரபஞ்ச மெல்லாம் அழிந்து போவதால் பொய்யாகவும், அம் மாயா சத்தியுடைய பிரமமானது அப் பிரபஞ்சத்தைப் போல அழியாமையால், மெய்யாகவும் இருக்கு மெனவும் தெளிந்துகொள்வா யென்பார், "திட்டாந் தத்தின் ... தெளிவாயே" எனவும் கூறினர்.

(தா – ம்) இந்திர சாலக்காரனும் சத்தியும் இரண்டானு லும், ஒன்று யிருப்பது போல, சகத்தைத் தோற்றுவிக்கும் மாயா சத்தி பிரமத்துக்கு வேறு யிருந்தாலும், இரண்டாகாது ஒன்றுகவே யிருக்கு மெனவும், இந்திர ஜால சத்தியினாலுண் டாகும் கந்தர்வ சேனை பொய்யாயும் இந்திர ஜால சத்தியுடன் அவ் விந்திர சாலக்காரன் ஒன்றுயிருக்கினும் பொய்யாகாது மெய்யா யிருப்பது போல, மாயா சத்தியினாலுண்டாகும் பிர பஞ்சம் பொய்யாகவும் அம் மாயா சத்தியுடன் பிரமம் ஒன்று யிருக்கினும் பொய்யாகாமல் மெய்யாய் இருக்கு மெனவுங் கூறி னதாம்.

(அ – கை) அசத்தான மாயா சத்தி உளதென்பது எங் ஙனமென்று வினுதலும் அதற்கு உத்தரம் கூறலும்.

இல்லை யாகிய சத்தியை யுண்டென்ப தெப்படி யெனக் கேட்கில், புல்லை யாதியா மசேதனப் பொருளெலாம் பூத்துக்காய்ப் பனபாராய், நல்லை யாமக னேயதிற் சிற்சத்தி நடந்திடா திருந்தக்கால், தொல்லை யாய்வருஞ் சராசர வுயிர்க்கெலாஞ் சுபாவங்கள் வேறாமே. 99.

(இ – ள்) இல்லையாகிய சத்தியை – பிரமத்தைத் தவிர வேறில்லை என்னும் சத்தியை, உண்டு என்பது – உண்டென்று கூறுவது, எப்படி எனக் கேட்கில் – எங்ஙனமென்று கேட்பாயாகில், புல்லையாதியாம் – புல் முதலாகிய, அசேதனப் பொருள் எலாம் – சடவஸ்துக்களனைத்தும், பூத்து – புஷ்பித்து, காய்ப்பன பாராய் – காய்ப்பனவற்றைப் பார்த்திடாய், நல்லையாம் மகனே – நன்மையான புத்திரனே, அதில் சிற்சத்தி – அவற்றில் பிரம சத்தியானது, நடந்திடாது இருந்தக்கால் – செல்லா திருக்குமாயின், தொல்லையாய் வரும – தொன்று தொட்டு வருகின்ற, சராசர வுயிர்க்கெலாம் – தாவர சங்கமமாகிய வுயிர்களனைத்திற்கும், சுபாவங்கள் வேறும் – இயற்கைகள் வேறுபடும்.

(ப – ம்) கட்டு வேலையா லுண்டானதாய் தானே அசையாததாய் இருக்கின்ற பூதம் யானை முதலானவை, அசைவதினால் அதற்குள் ஓர் புருடன் இருந்து ஆட்டுகிறானென்று அறிவது போல, புல் முதலிய அசரவுயிர்களுள் எந்த எந்தக் காலங்களில் எந்த எந்த வஸ்து பூத்துக் காய்க்க வேண்டுமோ அந்த அந்தக் காலத்து அந்த அந்த வஸ்து புஷ்பித்துக் காய்ப்பதினால் அதில் சத்தி இருக்கின்றதென்று அறிந்து கொள்ளென்பார், "புல்லையாதி ... பாராய்" எனவும் கூறினார்.

(வி – ரை) சூரியனால் பிரபஞ்ச விவகார மெல்லாம் நடப்பதைத் தெரிவிக்கும் பொருட்டு முந்தி தாமரை மலர்தலாதியைத் தெரிவித்துப் பின்பு மற்றவைகளைத் தெரிவித்தல் போல முந்தி அசரத்தைக் குறித்துக் கூறிப் பின்பு சரத்தைக் குறித்துக் கூறினாரென வறிக.

(அ – கை) இதுவுமது.

கருப்பை முட்டையுட் பறவைகள் பலசிறங் கலந்தசித் திரம்பாராய், அருப்ப மாம்சத்தி நியமமில் லாவிடி லரசிலா

நகர்போலாம், நெருப்பு நீரதாங் கசப்புமே மதுரமா நீசனு
மறையோதும், பொருப்புமேகமாங் கடலெலா மண்களாம்
புவனமிப் படிப்போமே. 100.

(இ — ள்) கருப்பை — கருப்பையினில் இருக்கும், முட்டையுள் — அண்டத்தினுள் இருக்கும் கருவில், பறவைகள் — பட்சிகள், பல நிறம் கலந்த — பல வர்ணமான, சித்திரம் பாராய் — விசித்திரத்தைப் பார், *அருப்பமாம் — அருவமான சத்தி நியமமில்லாவிடில் — சத்தியினது நியமமானது இல்லாமல் போனால், அரசிலா நகர் போல் ஆம் — அரசனில்லாத பட்டணத்தைப் போல ஆகும், (எப்படி எனில்) — நெருப்பு நீரதாம் — உஷ்ண சுபாவமான அக்கினி சீதள சுபாவமான சலமாகும், கசப்பு மதுரமாம் — கைப்புடைய பதார்த்தம் மதுரமுடையதாம், நீசனும் மறையோதும் — சண்டாளனும் வேதாத்தியயனம் செய்வான், பொருப்பு மேகமாம் — நிச்சல சுபாவமுடைய மலைகளும் சலனசுபாவமுடைய முகில்களாகும், கடல் எலாம் மண்களாம் — சமுத்திரங்கள் அனைத்தும் புழுதிகளாகும், புவனம் — சகத்தானது, இப்படிப் போம் — இவ்விதம் மாறிப் போகும்.

இரண்டு கவிகட்கும் (தா — ம்) தோன்றுமையால் இல்லையென்னும் மாயாசத்தி சராசரங்களனைத்திற்கு முன்வீடாயிருந்து நடத்துதலினாலும், அந்தந்த நியமமாறுதபடி செய்துகொண்டிருப்பதினாலும் உண்டென்பதாம்.

(அ — கை) அத்துவித நிச்சயம் உண்டாகும் பொருட்டு சீடன் வினுதல்.

ஆர்க்குங் காணவு மறியவும் படாதென்று மவாச்சிய
வடிவென்றும், சேர்க்கு நாமரு பப்பயிர் வித்தென்றுஞ்
செப்பிய சிற்சத்தி, பேர்க்கு மாறெங்ஙன் பிரித்திடப்
படாதெனிற் பிரமபா வனையொன்றுப், பார்க்கு மாறெங்
ஙன் முத்தியா குவதெங்ஙன் பரமசற் குருமூர்த்தி. 101.

* காவியம் காப்பியமென்றுறைபோல அருவம் "அருப்பம்" எனத் திரிந்தது.

(இ — ள்) ஆர்க்கும் — யாவருக்கும், காணவும் — வாகிய கட்டிகளைப் போல பார்க்கவும், அறியவும் — ஆநந்த சுகதுக் காதிகளைப் போல உணரவும், படாதென்றும் — கூடாதென் றும், அவாச்சிய வடிவென்றும் — அனிர்வசனிய சொரூப முடைய தென்றும், நாமரூபப் பயிர் சேர்க்கும் வித்தென்றும் — நாமரூபமாகிய பயிர்களை உண்டாக்கா நிற்கும் விதை யென் றும், செப்பிய சிற்சத்தி — சொல்லிய மாயையை, போக்கு மாறெங்ஙன் — நீக்கும் வழி எப்படி, பிரித்திடப் படாதெனில் — நீக்கக் கூடாதெனில், பிரம பாவனை ஒன்றுப் பார்க்குமாறு எங்ஙன் — சொரூப சமாதியில் அத்துவிதமாகத் தெரிசிக்கும் விதமெப்படி, முத்தியாகுவ தெங்ஙன் — அத்துவிதமாகத் தெரிசிக்கக் கூடாதெனில் வீடுண்டாவ தெப்படி, பரம சற் குரு மூர்த்தி — மேலான தேசிகரே.

(தா — ம்) மாயா சத்தியை நீக்குகின்ற விதமெப்படி? நீக் கப்படாதெனில் அத்துவித பிரமத்தைத் துவிதமின்றித் தெரிசிக்கின்ற விதமெப்படி? அங்ஙனந் தெரிசிக்கப் படாதெ னில் மாயா நீக்கமாகிய மோட்சமடைத லெங்ஙனம்? என்று வினவினதாம்.

(அ — கை) அவ் வினவிற் குத்தரங் கூறல்.

வாயுத் தம்பனஞ் சலத்தம்ப னம்மணி மந்திர மருந்தாலே தேயுத் தம்பனஞ் செய்திடி லதிலதிற் சிறந்தசத் திக ளெங்கே, நீயச் சச்சிதா நந்தமாய் வேறொன் று நினைந் திடா திருப்பாயேல், மாயச் சத்திபோ மீதன்றி மந்திர மறைகளிற் காணேமே. 102.

(இ — ள்) மணிமந்திர மருந்தாலே — மணிமந்திர அவுட தங்களினால், வாயுஸ்தம்பனம் — வாயுவுஸ்தம்பனமும், சலத் தம்பனம் — சலத் தம்பனமும், தேயுத் தம்பனம் — தேயுஸ் தம்பனமும், செய்திடில் — செய்தால், அதிலதில் — அவ்வவற் றில், சிறந்த சத்திகள் எங்கே — சிறந்திருக்கும் சலன நிகழ்ச்சி உஷ்ணமாகிய மூன்று சத்திகளும் எங்கே, நீ அச் சச்சிதா நந்தமாய் — நீ அந்த சச்சிதாநந்த பிரம சொரூபமாய், வேறொன்றும் — மற்றொன்றையும், நினைந்திடா திருப்பாயேல் — நினையா திருப்பாயாகில், மாயச் சத்திபோம் — மாயா சத்தி

நீங்கிவிடும், ஈதன்றி – இதைத் தவிர, மந்திரம் – உபாயம், மறைகளில் காணேம் – வேதங்களில் பார்த்திலேம்.

(ப – ம்) வாயுவாதியின் சலித்தலாதி சத்தி மணிமந்திர அவுடதத்தால் நீங்குவது போல், கடமென்றெழும் விருத்தி யுதிப்பதற்கு முன்னும் ஒடுங்கின பின்னும் மத்தியிலு மிருக்கின்ற மெய்யாயும், அவ் வுற்பத்தி நாசமறிகின்ற ஞானமாயும் அதை விட்டும் விடப்படாத இன்பமாயும் இருக்கின்ற பிரம சொரூபமாகவே மனோலயம் பண்ணி, நிருவிகற்ப சமாதியி லிருந்தால் மாயா சத்தி நீங்கிவிடு மென்பார், "நீ அச் சச்சிதா னந்தமாய் ... மாயச் சத்திபோ" மெனவும், மாயா சத்தி நீக் கத்துக்கு நிருவிகற்ப சமாதிக்கு மேற்பட்ட வுபாயம் வேதத் திற் கூறவில்லை யென்பார் "ஈதன்றி ... காணே" மெனவும் கூறினர்.

(தா – ம்) மனோ நாசம் செய்தலே மாயா சத்தியை நீக்கு கின்ற விதமெனவும் அந்த மாயா சத்தியை நீக்கினல் அத்து வித பிரமத்தைத் தெரிசிக்கலா மெனவும் அஃதே பரமோட்சம் அடைகின்ற விதமெனவும் கூறினதாம்.

(அ – கை) எங்ஙனம் மனோலயம் செய்து பிரமாகாரமா யிருத்தலெனில் கூறுகின்றார்.

மேவு மண்ணிலவ் வியத்தமே வியத்தமாம் விவகரித திடவேண்டில், நாவி னுன்பமண்ணைக் குடமென்ப ரக்குட நசிப்பது நாவாலே, பாவு நாமரூ பங்களை மறந்துமண் பார்ப்பதே பரமார்த்தம், சீவ பேதகற் பிதங்களை மறந்துநீ சின்மய மாவாயே. 103.

(இ – ள்) மேவு மண்ணில் – பொருந்தாநின்ற மிருத்து வில், அவ் வியத்தமே – மறைபட்டிருந்த கடசத்தியே, வியத் தமாம் – குலால வியாபாரத்திற்குப் பின் கடமென்று வெளிப் படும், விவகரித்திட வேண்டில் – விவகரிக்கு நிமித்தம், நாவி னல் – வாக்கினல், மண்ணை – அம் மிருத்துவையே, குட மென்பர் – கடமென்று சொல்லுவார்கள், அக் குடம் நசிப்ப தும் – அக்கடநாமம் மண்ணாக விறப்பதும், நாவாலே – வாக்கு மாத்திரத்தினலேயாம், (இப்படி கடம் உண்டென்பதும் இறந்

தது என்பதும் வாக்கு மாத்திர மாதலால்) பாவும் - கற்பனை யாக வழங்குகின்ற, நாம ரூபங்களை மறந்து - நாமரூப வடிவங் களை உபேட்சித்து, மண் பார்ப்பதே - மண்ணைப் பார்ப்பதே பரமார்த்தம் - எதார்த்தமாம், (அதுபோல) சீவபேத கற்பி தங்களை மறந்து - சீவேசுவர சகத்தென்னும் நாமரூப வேறு பாடுகளைப் பொய்யென்று நீக்கி, சின்மயமாவாய் - நீ சதாநந்த சின்மயன் ஆவாய்.

(ப - ம்) மண்ணில் அவ்வியத்தமாயிருந்த கடசத்தி வியத்தமாகி வாக்கு மாத்திரமாய்க் கடமென விவகரிக்கப் பட் டாலும் அதைவிட்டு மண்ணைப் பார்ப்பதே எதார்த்தமாதல் போல, பிரம சொரூபத்தில் அவ்வியத்த நாம ரூபமாயிருந்த மாயா சத்தியே வியத்த நாம ரூபமாகி வாக்கு மாத்திரமாய் சீவேசுவர சகத்தாக விவகரிக்கப் பட்டாலும், அங்ஙனம் பாராது அத்துவித சொரூபமாய்ப் பார்க்கின்றதே எதார்த்த மாகையால் அப் பொய்யான சீவேசுவர சகத்தின் வேறுபா டான நினைப்பின்றி அத்துவிதமான சச்சிதானந்த சொரூப மாய் இருப்பாய் என்பார், "சீவபேத ... சின்மயமாவாய்" எனவும் கூறினார்.

(தா - ம்) அநாத்மாவான நாமரூபம் பொய்யென்றறிந்து அவைகளில் ஒன்றையும் சுட்டாது அத்துவிதமான ஆத்ம சொரூபமா யிருப்பாய் என்றதாம்.

(அ - கை) பொய்யான நாம ரூபத்தில் மெய்யென்றுண் டாகும் விபரீதத்தை நீக்கும் பொருட்டு வினாதலுமதற் குத்தர முங் கூறுகின்றார்.

பூரிக் குங்கன சச்சிதா னந்தத்திற் பொய்சடந் துயர் மூன்றும், தூரத் தாயினுந் தோன்றுபாழ் விபரிதந் துடைப் பதெப் படியென்றால், நீரிற் றோன்றுந்தன் னிழறலை கீழ தாய் நின்றலை யினுநேராய்ப், பாரிற் றோன்றிய தன்னை நோக் கிடிலந்தப் பாழ்நிழல் பொய்யாமே. 104.

(இ - ள்) பூரிக்கும் - பூரணமா யிருக்கின்ற, கன சச்சிதா னந்தத்தில் - கனமான சச்சிதானந்த சொரூபத்தில், பொய் சடம் துயர் மூன்றும் - அநிர்த சடதுக்கமாகிய திரிவிதமும், தூரத்தாயினும் - இலவாயினும், தோன்றுபாழ் விபரிதம் -

தோற்றுனின்ற வினை விபரீதத்தை, துடைப்பது — கெடுப்பது, எப்படி என்னில் — எவ்விதமென்று நீ கேட்கில், நீரில் தோன்றும் தன் நிழல் — சலத்தில் பிரதிபலித்துத் தோன்றுநின்ற தனது சாயையானது, தலைகீழது ஆய் — அதோ முகமாய், நின்று அலையினும் — நின்று சலிப்பினும், நேராய் — ஊர்த்த முகமாய், பாரில் தோன்றிய — கரையில் நின்று விளங்கிய, தன்னை நோக்கிடில் — தனது உருவத்தைப் பார்க்கில், அந்தப் பாழ் நிழல் — அவ் வினை அதோமுகச் சாயையானது, பொய்யாம் — மித்தையாம்.

(ப — ம்) நீசனல்லாத பிராமணனுயிருந்தும் நீச சங்கத்தினுல் நீசத் தன்மையை அடைந்ததாகத் தோன்றுகின்றது போல, அகண்டமாய் அத்திபாதிப் பிரிய சொரூப வாத்மாவாயிருக்கவும், கண்டமாய் அசத்து சடம் துக்கமாய் அனுத்மாவான தேக சம்பந்தத்தினுல் இறப்பேனெனவும், துக்கி யெனவும், நான் கட்டையன் நெட்டையன் எனவும், வினை வேறுபாடு தோற்றுகின்றதென்றுனென்பார், "பூரிக்கும்...விபரீத" மெனவும், கிணற்றின் கரைமேல் ஊர்த்த முகமாய் அசைவற்றிருக்கும் புருடன் தன் நிழல் கிணற்று சலத்தில் அதோமுகமாகவும் சஞ்சலமாகவும் தோற்றுவதைத் தானுகப் பார்த்து அம் மித்தையான தோற்றத்தை நீக்க வெத்தனித்தால் நீங்காது, அந் நிழலுக் கதிட்டானமான தன்னைப் பார்த்தால் அந் நிழல் பொய், தான் அசைவற்றிருப்பது மெய் யெனத் தோற்றுவது போல, சச்சிதானந்தமாய் அதிட்டான சொரூபமாயிருக்கின்ற தான், தன்னிடத்தில் விவர்த்தமாய்த் தோற்றிய மாயையினுல் சிதாபாசனுகவும் இறக்கின்றவனுகவும், அறியாதவனுகவும், துக்கியாகவும் தோற்றினும், பொய்யான தோற்றத்தை நீக்க வெத்தனித்தால் நீங்காது, அவற்றிற் கதிட்டானந் தானெனப் பார்க்கில் அவை பொய்யெனத் தெளிந்து, அத்துவிதமான தான் இருந்தபடி இருக்கலாமென்பார், "நீரில் ... பொய்யாமே" எனவும் கூறினுர்.

(தா — ம்) ஆரோபமாய்த் தோற்றுகின்ற செகத்துக்கு அதிட்டானமான அத்துவித சொரூபமே தானென்றறியில் அவைகள் பொய்யாய் நீங்கு மென்பதாம்.

(அ—கை) அத்துவிதமான ஆத்மசொரூபமாயிருக்கில் அநாத்ம சொரூபமான செகத்து வந்தது போனது தெரிய வேண்டாவோ வெனில்,

ஞானங் காரண மறிபொருள் காரிய நாமரூ பப்பேய்கள்
ஆன தெப்படி யழிந்ததெப் படியென வாய்குதல் பல
னன்றே, மான மைந்தனே தீர்க்கசொப் பனசகம் வந்த
தும் பாராமல், போன தும்நினை யாமலுன் போதமாய்ப்
பூர்ணமா யிருப்பாயே. 105.

(இ—ள்) ஞானம் காரணம் — சச்சிதானந்தமாகிய பிரமம் காரணம், அறி பொருள் — அறியப் படுவனவான, நாமரூபப் பேய்கள் — நாம ரூபங்களாகிய பைசாசங்கள், காரியம் — காரியங்களாம், ஆனதெப்படி — இவை உண்டானதெப்படி, அழிந்தது எப்படி — தோன்றாமல் நாசமாவது எப்படி, என ஆய்குதல் பலனன்று — என்று விசாரித்தல் பயனன்றாம், (ஆனால் என்ன செய்ய வேண்டுமெனின்) மான மைந்தனே — பெருமையுள்ள புத்திரா, தீர்க்க சொப்பன சகம் — நீண்ட கனவாகிய உலகங்கள், வந்ததும் பாராமல் — உதித்ததையும் விசாரியாமல், போனதும் நினையாமல் — நசிப்பதையும் விசாரியாமல், உன் போதமாய் — உனது ஆத்மாவாய், பூரணமாய் — பரிபூரணமான பிரம சொரூபமாய், இருப்பாய் — இருக்கக் கடவாய்.

(ப—ம்) கிரகத்தில் தீப்பற்றி அணைந்தபின் அவ்வக்கினி பற்றின விபரத்தையும் அணைந்த விபரத்தையும் விசாரிக்கின்றதினால் பயனின்மை போல், பிரபஞ்ச முண்டான விபரமும் ஒழிந்த விதமும் விசாரிக்கில் அத்துவிதானந்தம் அநுபவித்தலுக்குக் குறைவேயன்றி அதனால் பயனில்லை யென்பார், "நாமரூபப் பேய்கள் ... பலனன்றே" எனவும் தீப்பற்றின விபரமும் அணைந்த விபரமும் விசாரியாது சுகமடைவதற்கே முயற்சிப்பது போல நீண்ட கனவாகிய பிரபஞ்ச முண்டான விதமும் ஒழிந்த விதமும் சிந்திக்காது அத்துவிதானந்தம் அநுபவிக்கும் பொருட்டு அகண்டாகார போதமான அத்துவித சொரூபமா யிருப்பா யென்பார், "தீர்க்க சொப்பன சகம் ... பூரணமா யிருப்பா" யெனவும் கூறினார்.

(தா — ம்) அத்துவிதாநந்தாநுபவம் அடையவேண்டிய வனுக்கு அத்துவித சொரூபாகாரமாயிருத்தல் வேண்டுவதே தவிர அநாத்மாவின் உற்பத்தி நாசம் விசாரித்தல் வேண்டுவதில்லை என்பதாம்.

(அ — கை) அத்துவித சொரூபாகாரமா யிருந்தாலும் அசத்து சடம் துக்கமான தேகத்துடன் கூடியிருக்கும் போது அத்துவிதானந்தம் உண்டாவ தெப்படி யெனில்,

அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பராமுக மாகினு
லம்மட்டும், நிசத்தி லுள்விழிப் பார்வையா மிப்படி நிரந்
தரப் பழக்கத்தால், வசத்தி லுன்மன நின்றுசின் மாத்திர
வடிவமா யிடின்மைந்தா, கசத்த தேகத்தி லிருக்கினு
மானந்தக் கடல்வடி வாவாயே. 106

(இ — ள்) அசத்தில் — கிரிசியமான மித்தையில், எம்மட்டுண்டு — சத்திய புத்தியுடன் பார்க்கும் ஆதரவு எவ்வளவுண்டு, அம்மட்டும் — அவ்வளவும், பராமுகமாகினுல் — விடுத்தால், அம்மட்டும் — அவ்வளவுக்கும், நிசத்தில் — ஆத்மாவான சத்தில், உள்விழிப் பார்வையாம் — அந்தர்முக திருஷ்டியுண்டாம், இப்படி — இவ்விதம், நிரந்தரப் பழக்கத்தால் — வெகுகாலம் இடைவிடாத வப்பியாசத்தினுல், வசத்தில் உன் மன நின்று — உன் வசத்தில் மனமானது நின்று, சின்மாத்திர வடிவமாயிடின் — அத்துவித சச்சிதானந்த சொரூபமானுல், மைந்தா — மகனே, கசத்த தேகத்தில் இருக்கினும் — வெறுக்கப்பட்ட சரீரத்தில் இருந்தாலும், ஆனந்தக் கடல் வடிவு ஆவாய் — பிரமானந்த சாகர ஸ்வரூபமாவாய்.

(ப — ம்) விட்டினுக்குத் தாசி விருப்ப மெவ்வளவு நீங்குகின்றதோ அவ்வளவுக்கு மனைவி யிடத்தில் விருப்பமுண்டாவது போல, அநாத்மாவான கிரிசியத்தினிடத்தில் சத்திய புத்தியுடன் பார்க்கின்றதை எவ்வளவுக்கு விடுகின்றனேயோ அவ்வளவுக்குப் பகிர்முக திருஷ்டி நீங்கி ஆத்மாவான திருக்கு சொரூபத்தில் அந்தர்முக திருஷ்டியுண்டாகு மென்பார், "அசத்தில் ... பார்வையா" மெனவும், மிகுந்த மதுபானஞ் செய்தவன் தேகத்தில் வியாதி முதலியவற்றாலுண்டான துன்பம் தோன்றாதபடிக்கு லாகிரி மேலிட்டால் களிப்பாயிருப்பது

போல, வெகுகாலம் இடைவிடாது பிரியத்துடன் நிரிசியத்திற் பராமுகம் செய்து மனத்தின் வசமாய்ச் செல்வதை நீக்கி, அதையுன் வசப்படுத்தி அத்துவித சச்சிதானந்த சொரூபமாயிருப்பாயாகில் அசத்து சடம் துக்கமான சரீரத்திலிருக்கினும் அத்தன்மைய பகிர்முக திருஷ்டி தோன்ருமல் அத்துவிதானந்த சாகரமாவாய் என்பார், "இப்படி ... வடிவாவாயே" எனவும் கூறினர்.

(வி – ரை) தேகமென்னும் பதத்துக்குத் தூல சரீரம் அக்கினியினுலும், சூட்சும சரீரம் தாபத்திரயாக்கினியினுலும், காரண சரீரம் ஞானக்கினியினுலும், தகிக்கப்படுவதால் இவைகட்குத் தேகமெனப் பேர் வந்ததெனவறிக.

(தா – ம்) அனவரதாப்பியாசத்தால் நிரிசியத்தில் மித்யாபுத்தி யுண்டாகிறதினுலும், திருக்கு ரூபமான அத்துவித சச்சிதானந்த சொரூபம் தானுகின்றதினுலும், அசத்து சடம் துக்கமான சரீரத்திலிருக்கினும் அத்துவிதானந்த சாகரமாவாய் என்பதாம்.

(அ – கை) ஆத்மாவின் ஆனந்த சுபாவம் வெளிப்படும் விதம் தெரியும் பொருட்டுச் சீடன் வினுதல்.

(வேறு.)

தானன்றி வேறென்று மில்லாத பூரணச்
சச்சிதானந்த குணமாய்
ஊனின்ற வுயிர்தோறு மொன்ருகு மென்ருலஃ
தொக்கின்ற படிகண்டிலேன்
நானென்ற சீவன்கள் சத்தான வகையொக்கு
ஞானங்கள் வெளிகண்டதால்
ஆனந்த மிதுபோல வெளியாக வுதியாத
வடைவேது குருநாதனே. 107.

(இ – ள்) குருநாதனே – தேசிகராசனே, தானன்றி – தன்னைத் தவிர, வேறென்று மில்லாத – இதர வஸ்துக்கள் இல்லாத, பூரண – பரிபூரணமாகிய, சச்சிதானந்த குணமாய் – சச்சிதானந்த சுபாவமாய், ஊன் நின்ற – தேகத்தின் கண்ணிருந்த, உயிர்தோறும் – சீவர்கடோறும், ஒன்ருகு மென்

ருல் — ஏகமாயிருக்கு மென்னில், அஃது ஒக்கின்றபடி கண்டி லேன் — ஆத்மா அவ்விதம் ஒத்து இருக்கும் தன்மை அறிந் திலன், நானென்ற சீவன்கள் — நான் நான் என்று விவகரிக் கின்ற சீவர்கள், சத்தான வகையொக்கும் — சத்தென்கிற தன்மை கூடும், ஞானங்கள் வெளிகண்டது — சித்தும் விளங்கு கின்றது, ஆனந்தம் — ஆனந்தமானது, இது போல — இச் சத்தும் சித்தும் போல, வெளியாக வுதியாத — சர்வ விருத்தி களிலும் வெளியாகத் தோன்றாத, அடைவேது — கிரமமேது.

(ப — ம்) பழுதையைத் தவிரப் பாம்பு தண்டமாலை வேறில்லாதது போல சிவேசுவர சகத்துத் தனக்கன்னியமா யில்லாத அகண்டமாயும், தேகவுற்பத்திக்கு முன்னும் இறந்த பின்னும் மத்தியிலும் இருப்பதாயும், அதை அறிவதாயும் தேகத்தைக் கைவிட்டாலும் கைவிடப்படாத பிரியமாயு மிருக் கின்ற வாத்மசொரூப மென்பார், "தானன்றி...சச்சிதானந்த" மெனவும், பிரமாதி ஸ்தம்பபரியந்த வுயிர்களிடத்தில் நான் நான் என்று விளங்கிக்கொண் டிருக்கின்ற படியால் ஆத்மா சத்தென்றது தெரிகின்ற தென்று னென்பார், "நானென்ற... ஒக்கும்" எனவும், பஞ்சேந்திரிய வழியாகப் பஞ்ச விடயங்களை யறிகின்றபடியினால் ஆத்மா சித்தென்றது தெரிகின்றதென்று னென்பார், "ஞானங்கள் வெளிகண்டதா" லெனவும் கூறினார்.

(தா — ம்) ஆத்மா சச்சிதானந்த சொரூபமென்றுணர்த் தின வாசிரியரை நோக்கி அங்ஙனமாயின் சத்தும் சித்தும் போல ஆனந்தமேன் வெளியாகக் காணப்படவில்லை யென வினவினதாம்.

(அ — கை) அவ்வினாவிற் குத்தரங் கூறல்.

உருவங்க ளிரதங்கள் பரிசங்க ளொருபூவி
லொன்றாகு மென்றாலுமே
கரணங்க ளோரொன்றி லோரொன்று தெரியுங்க
ணக்கன்றி வாராதுகாண்
அருமந்த சச்சிதா னந்தச் சுபாவங்க
ளான்மா வின்வடிவாகிலும்
பிரபஞ்ச மயமாம்வி ருத்திபே தத்தினாற்
பேதங்க ளாமைந்தனே. 108

(இ — ள்) ஒரு பூவில் — ஒரு மலரில், உருவங்கள் இரதங்கள் பரிசங்கள் — ரூப ரச பரிசங்கள், ஒன்றாகுமென்றாலும் — ஒன்றா யிருக்குமெனினும், கரணங்கள் ஓர் ஒன்றில் — இந்திரியம் ஒவ்வொன்றிற்கு, ஒரொன்று தெரியும் கணக்கன்றி — ஒவ்வொரு விடயம் தோன்றும் அளவினதல்லாமல் வாராது காண் — முழுதும் தெரியமாட்டாது (அதுபோல) அருமந்த — அருமருந்தன்ன, சச்சிதானந்த சுபாவங்கள் — சச்சிதானந்த குணங்கள், ஆன்மாவின் வடிவாகிலும் — ஆத்ம சொரூபமாறாலும், பிரபஞ்ச மயமாம் — சகத்துருவமான, விருத்தி பேதத்தினால் — விருத்தியின் வேற்றுமையால், மைந்தனே — மகனே, பேதங்களாம் — வேற்றுமைகளாம்.

(ப — ம்) அமிருதம் தன்னை அருந்தினோரை இறவாமல் பிரகாச சரீரமாய்ச் சுகமாய்ச் செய்வது போல, சச்சிதானந்த சுபாபமு மதுவேதானென் றறியும் சிதாபாசனைத் தன்னுகாரமாக்குகின்ற தென்பார், "அருமந்த சச்சிதானந்த சுபாவ" மெனவும் கூறினார்.

(அ — கை) இதுவுமது

தாமதமி ராசதஞ் சாத்துவித முக்குணத்
　　தால்வரும்வி ருத்திமூன்றும்
ஆமவைகண் மூடமுங் கோரமுஞ் சாந்தமு
　　மபிதான மாகுமகனே
ஏமுறவி ருக்கின்ற சச்சிதா னந்தங்க
　　ளென்றென்று மொன்றாகிலும்
நாமுரைக் கும்விருத் திப்பிரிவி னாற்சொரூப
　　ஞானதி பிரிவாகுமே. 109.

(இ — ள்) தாமதம் — தமசும், இராசதம் — இரஜசும், சாத்துவிதம் — சத்துவமுமாகிய, முக்குணத்தால் — திரிகுணங்களால், வரும் விருத்தி மூன்றும் — உண்டான விருத்திகள் திரிவிதமாம், ஆம் அவைகள் — ஆகின்ற அம் மூன்றும், மூடமும் — மூட விருத்தியெனவும், கோரமும் — கோர விருத்தி யெனவும், சாந்தமும் — சாந்த விருத்தி யெனவும், அபிதானமாகும் — பெயரைப் பெறுவனவாம், மகனே — மைந்தா, ஏமுற விருக்கின்ற — இன்புற விருக்கின்ற, சச்சிதானந்தங்கள் —

அஸ்திபாதிப் பிரியங்கள், என்றென்றும் — எப்போதும், ஒன்ருகினும் — ஏகமானாலும், நாமுரைக்கும் — யாம் சொல்லும், விருத்திப் பிரிவினுல் — விருத்தி பேதத்தால், சொரூப ஞானதி — சித்து முதலிய சதானந்த ஸ்வரூபங்கள், பிரிவாகும் — பேதங்களாம்.

(ப — ம்) தன்னை யடுத்தவிருத்திகள் விடயத்தில் மநுட்டானந்த முதலிய பதினொரு வகை யாநந்தமும், சுழுத்தியில் பிரமாநந்தமும், சமாதியில் ஞானநந்தமும், அடையும்படி செய்விக்கின்ற ஆத்ம சொரூப மென்பார், "ஏ மு ற விருக்கின்ற சச்சிதாநந்தங்கள்" எனவும், செந்தாமரை புட்பத்தில் சிவப்பு நிறம், மதுர இரசம், மிருது பரிசம், இவற்றில் ஒவ்வொன்றை சட்சு, சிங்குவை, தொக்கு, இந்திரியங்களில் ஒன்றொன்றறியும் இடத்து, ஒன்று ஒன்று பிரித்துக் காணப்பட்டாலும், எக்காலமும் பிரிபடா தொன்ரு யிருத்தல் போல, மூட கோர சாந்த விருத்திகளில் ஒன்றொன்று உதிக்குமிடத்தில் சத்துச் சித்தாநந்த மூன்றில் ஒன்று ஒன்று பிரிந்து வெளிப்பட்டாலும், அவை எக்காலமும் பிரிபடா தொன்ரு யிருக்கு மென்பார், "என்றென்றும் ... பிரிவாகுமே" எனவும் கூறினர்.

(அ — கை) இதுவுமது

சடமான மூடத்த ருக்கல்லு மண்களிற்
சத்தொன்று மேதோன்றுமால்
விடமான காமாதி கோரத்தி லானந்தம்
விளையாதுமற் றவைகளாம்
திடமான வொழிவாதி சாந்தத்தி லேசச்சி
தானந்த மூன்றும் வெளியாம்
மடமான மூடங்கள் கோரங்கள் விடுசாந்த
மனமாகி லானந்தமே. 110.

(இ — ள்) சடமான — சடமாகிய, மூடத்தருக் கல்லு மண்களில் — மரஞ் சிலை மண்களின் மூடவிருத்தியில், சத்தொன்று மேதோன்றும் — சத்துமாத்திரம் தோற்றும், விடமான — விஷ ரூபமான, காமாதி கோரத்தில் — காம முதலிய கோர விருத்தியில், ஆநந்தம் விளையாது — ஆநந்தம் உதியாது, மற்றவைகளாம் — சத்தும் சித்தும் தோன்றும், திடமான —

உறுதியான, ஒழிவாதி சாந்தத்தில் – வைராக்கியம் முதலிய சாந்த விருத்தியில், சச்சிதானந்தம் மூன்றும் வெளியாம் – சச்சிதானந்தங்கள் மூன்றும் வெளிப்படும், மடமான – அறிவின்மை வடிவான, மூடங்கள் கோரங்கள் விடு – மூட விருத்திகளையும் கோர விருத்திகளையும் விடாநின்ற, மனம் சாந்தமாகில் – மனமானது சாந்த விருத்தியைப் பெறில், ஆநந்தம் ஆம் – ஆநந்தம் வெளியாம்.

(ப – ம்) சர்ப்பந் தீண்டினவனுக்கு அவ் விஷமானது மிளகு முதலானதின் ரசபேதம் தெரியாதபடி மாறுபடுத்தி மயக்குதல் போல, காமக் குரோதாதி குணமுண்டானவனுக்கவை ஆத்மானாத்மாவின் பேதந் தெரியாதபடி மாறுபடுத்தி மயக்குதலால், "விடமான காமாதி" யெனவும், பருவதமானது காற்று முதலிய ஒன்றினாலு மசையாதிருப்பதுபோல வைராக்கியம் பொறுமையாதிகள் காமாதி யொன்றினாலும் அசையாததலால், "திடமான வொழிவாதி" எனவும் கூறினார்.

(தா – ம்) செந்தாமரைப் புஷ்பத்தினுடைய நிறமாதிகள் சட்சுவாதி இந்திரியங்களால் பிரித்தறியப்பட்டு ஒன்று அறிபடுமிடத்து மற்றவை யறிபடாதிருத்தல் போல, ஆத்மாவின் சச்சிதானந்த சுபாவங்கள் எக்காலத்திலும் ஒன்றாயிருக்கவும் மூட கோர சாந்த விருத்தியிற் பிரிபட்டுத் தோன்றுமெனவும், ஆநந்தம் சாந்த விருத்தியில் மாத்திரம் வெளிப்படும் மற்றவற்றில் வெளிப்படாதெனவும் கூறினதாம்.

(அ – கை) சச்சிதாநந்த லெட்சணத்தின் பொருள் நன்றாய்த் தெரியும் பொருட்டு வினாதலுக்குத்தரங் கூறுகின்றார்.

இகமான குருநாத னேசச்சி தாநந்த
மெனுமிலக் கணமறிகிலேன்
அகலாத சத்தாவ தேதுசித் தாவதே
தாநந்த மேதென்றிடில்
மிகுகால மூன்றுங்கெ டாதிருப் பதுசத்து
வேறுபா டறிதல்சித்தாம்
மகிழ்காம நுகர்போது சுகமாகு மநுபூதி
வாழ்வென்ப தாநந்தமே. 111.

(இ — ள்) இகமான குருநாதனே — இகத்தில் மாநுட வடிவமாக எழுந்தருளிய குரு சுவாமி, சச்சிதாநந்தமெனும் — சச்சிதாநந்த மென்கின்ற, இலக்கணம் அறிகிலேன் — இலக் கணத்தைத் தெரிந்திலன், அகலாத — நீங்காத, சத்தாவ தேது — சத்தின் இலக்கணம் யாது, சித்தாவதேது — சித்தின் இலக்கணம் யாது, ஆநந்தமேது — ஆநந்த இலக்கணம்யாது, என்றிடில் — என்று கேட்பையாயின், மிகு கால மூன்றும் — மிகுந்த திரிகாலங்களினும், கெடாதிருப்பது — நசியாதிருப்பது சத்து — சத்து இலட்சணமாம், வேறுபாடறிதல் — சிற்சட பேதங்களை யறிதல், சித்து — சித்து லட்சணமாம், மகிழ் காமம் — மகிழாநின்ற இஷ்ட வஸ்துவை, நுகர்போது — அநுபவிக்கும் பொழுது, சுகமாகும் — இன்பமாக உண்டாகா நின்ற, அநுபூதி வாழ்வென்பது — சுவாநுபூதி சுகமென்று சொல்லப்படுவது, ஆநந்தம் — ஆநந்தத்து லட்சணம்.

(ப — ம்) வியவகாரிக சத்தும் பிராதிபாசிக சத்தும் கெட இருப்பதால் அவைகள் சத்தல்ல வென்று நீக்கும் பொருட்டு, "அகலாத சத்தாவதேது" எனவும், இந்திரியங்களும் அந்தக் கரணங்களும் சீவனும் சட அறிவாக இருப்பதால் அவைகள் சித்தல்ல வென்று தெளியும் பொருட்டு, "சித்தாவதேது" எனவும், விடயாநந்தமும் சுழுத்தியாநந்தமும் வாசனாநந்த மும் உதாசீன வாநந்தமும் கூட இருப்பதால், அவை யாநந்த மல்லவென்றுணரும் பொருட்டு, "ஆநந்தமே" தெனவும் வினவினதாகக் கூறினர்.

(தா — ம்) திரிகாலத்திலேயும் கெடாதிருப்பது சத்தெ்தன வும், சகலத்தையும் பிரித்தறிகின்றது சித்தெனவும், இஷ்டம் லபித்தபோ துண்டாகும் சுகமே யாநந்த மெனவுங் கூறின தாம்.

(அ — கை) ஆத்மா சச்சிதாநந்த மென்பதற் கநுபவம் விளுதல்.

நாசச்ச ரீரத்தி ருக்குஞ்ச ரீரிதனை
நால்வேத மாவாக்கியம்
நீசச்சி தாநந்த மென்றிடினு மாசிரியர்
நீபிரம மாகுமெனினும்

மாசற்ற சச்சிதா நந்தநா னென்னவிவன்
மன்னுமநு பவமெங்ஙனே
கோசப்பு ரங்களையி டித்துத்த கர்க்குமத
குஞ்சரக் குருநாதனே. 112,

(இ – ள்) நாசச் சரீரத்திருக்கும் – நசிக்கின்ற தேகத்தில் இருக்கின்ற, சரீரிதனை – தேகியை, நால் வேத மாவாக்கியம் – நான்கு சுருதியின் முடிவிலுள்ள *நான்கு மகா வாக்கியங்களும், நீ சச்சிதாநந்த மென்றிடினும் – நீயே சச்சிதாநந்த ஸ்வரூபமென்று சொல்லினும், ஆசிரியர் – தேசிகரும், நீ பிரமமாகுமெனினும் – நீயே சச்சிதாநந்த பிரமமென்று உபதேசிக்கினும், மாசற்ற – நின்மலமான, சச்சிதாநந்தம் – சச்சிதாநந்தமே, நானென்ன – நானென்று, இவன் – இம் மாணாக்கன், அநுபவம் – அநுபவமானது, எங்ஙன் மன்னும் – எவ்விதம் பொருந்தும்? கோசப்புரங்களை – பஞ்ச கோசமாகிய நகரங்களை, இடித்துத் தகர்க்கும் – இடித்துத் தூளாக்கும், மதகுஞ்சரக் குருநாதனே – மதயானையாகிய குரு சுவாமியே.

(ப – ம்) மதங்கொண்ட யானையானது அங்குசத்தையும் சங்கிலியையும் கடந்து உதாரமாய் எதேச்சையாகச் சஞ்சரித்துக்கொண்டு கோட்டைகளை யிடித்துத் தூளாக்குவதுபோல, பிரமாநந்த மேலிட்டால் விதி நிஷேதங்கடந்து உதாரத்துடன் எதேச்சையாகச் சஞ்சரித்துக் கொண்டு பக்குவர்களுடைய பஞ்சகோசங்களை நேதிகளைந்து வேருக்கி ஆத்மாநுபவம் உண்டாகச் செய்யும் தேசிகரே என்றனென்பார், "கோசப் புரங்களை ... குருநாதனே" என்றார். நீ பிரமமாவாய் என்பது "நீ பிரமமாகும்" என்று வந்தன.

(தா – ம்) சுருதி குருவாக்கு உறுதிப்படும் பொருட்டு அநுபவம் தெரிய வினவினதாம்.

(அ – கை) அவ்வினவிற் குத்தரங் கூறல்.

---

* 1. ருக்வேதத்துள்ளது பிரஞ்ஞானம் பிர்ஹ்மம்
2. எசுர் வேதத்துள்ளது அகம்பிர்ஹ்மாஸ்மி
3. சாம வேதத்துள்ளது தத்துவமசி
4. அதர்வண வேதத்துள்ளது அயமான்மா பிர்ஹ்மம்

சென்மாந்த ரஞ்செய்த வினைகளுட றருமெனிற்
செல்கால மிவனுண்டலோ
கன்மாநு பவநரக சொர்க்கமெனில் வருகின்ற
காலத்து மிவனுண்டலோ
உன்மாத யாதனு வுடல்கடவு ளுடன்மநுட
வுடன்மாறி மாறியழியும்
தன்மாய வுடல்கெடினு மிவனிருப் பதுகொண்டு
சத்தென்ப தொக்குமகனே. 113.

(இ – ள்) சென்மாந்தரம் செய்த வினைகள் – முன் செனனங்களில் செய்த கன்மங்களானவை, உடல் தருமெனில் – தேகத்தைக் கொடுக்குமென்றால், செல்காலம் – இறந்த காலத்தும், இவனுண்டலோ – இப் புருடன் இருந்தானல்லவா, கன்மாநுபவம் – இப்போது செய்யாநின்ற பாவ புண்ணியத்திற்கு அநுபவமாக, நரக சொர்க்க மெனில் – இனி நரக சொர்க்கங்களை அடைவனென்றால், வருகின்ற காலத்தும் – எதிர் காலத்தும், இவன் உண்டலோ – இவன் யாதனு சரீரம் தேவ சரீரங்களைத் தரித்துக்கொண்டு இருப்பானல்லவா, உன்மாத யாதனுவுடல் – உன்மத்தமாகிய யாதனு சரீரமும், கடவுளுடல் – தேவ சரீரமும், மநுடவுடல் – மாநுட சரீரமும், மாறி மாறி யழியும் – வேறு வேறாய் உண்டாய் நசிக்கும், தன் மாயவுடல் கெடினும் – தனது மித்தையாகிய மாயா சரீரங்கள் நசிக்கினும், இவன் இருப்பது கொண்டு – இத்தேகி திரிகாலத்திலும் கெடாமல் இருப்பதனால், மகனே – மைந்தா, சத்தென்ப தொக்கும் – இவனே சத்தென்னும் அநுபவம் ஒவ்வும்.

(ப – ம்) தரித்திரன் செல்வவான் கருமி உபாசகன் முமூட்சுவாகிய சகல ரநுபவ வசனத்தினால் தேக முண்டாவதற்கு முன்னும் நசித்த பின்னும் ஆத்மா இருப்பது தெரிய வருகின்றதே யென்பார், "சென்மாந்தரம் ... வருகின்ற காலத்து மிவன் உண்டலோ" எனவும், வேஷதாரி பல வேஷம் போட்டுக் களைந்து அவைகள் நீங்கினும் தானிருப்பது போல, புண்ணிய பாவ மிசிர கருமத்துக் கீடாய் தேவ சரீரம் யாதனு சரீரம் மநுட சரீரம் திரும்பத் திரும்ப வுண்டாகி அழியவும் தான் அப்படி அவைகளைப் போல அழியாதிருக்கின்றபடியால் ஆத்மா சத்தென்ப தநுபவமா யிருக்கின்றதே

என்பார், "யாதனுவுடல் ... சத்தென்ப தொக்கு மகனே" எனவும் கூறினர்.

(வி – ரை) நான் பூருவ சென்மத்தில் யாருக்கும் ஒன்றும் கொடாமல் போனபடியால் இந்த சென்மத்தில் தரித்திரத்தை யநுபவிக்கின்றேன், இந்த சென்மத்திலும் கொடுப்பதற்கு வகையில்லாத படியால் வருகிற சென்மத்திலும் தரித்திரனுகவே பிறப்பே னென்கின்ற தரித்திரனுடைய வசனமும், நான் பூருவ சென்மத்தில் பெரியவர்களுக் குபகாரம் பண்ணிய படியால் இந்த சென்மத்தில் ஐசுவரியம் அநுபவிக்கின்றேன், இந்த சென்மத்திலும் உபகாரம் பண்ணினல் வருகிற சென்மத்திலும் ஐசுவரியம் அநுபவிப்பே னென்கின்ற செல்வவான் வசனமும், நான் பூருவ சென்மங்களில் சற்கருமம் செய்த வாசனையால் இந்த சென்மத்திலும் சற்கருமஞ் செய்கின்றேன், இதனுல் எனக்குப் பரலோக முண்டென்கின்ற கருமி வசனமும், நான் பூருவ சென்மங்களில் பகவானை யுபாசித்தவனுகையால் இந்த சென்மத்தில் நிரதிசயமாகிய பத்தி வந்தது, இதனுல் எனக்கு மேலைக்குப் பகவானுடைய லோகமுண்டென் கின்ற பத்தனுடைய வசனமும், நான் பூருவ சென்மங்களில் ஈசுரார்ப்பணமாகக் கருமம் பண்ணினபடியால் இந்த சென்மத்தில் சித்த சுத்தியும் சற்குரு லாபமும், சிரவணுதிகளும் உண்டாயின நானே கிருதார்த்தன், எனக் கினிமேற் சென்னமில்லை யென்கின்ற முமூட்சுவினுடைய வசனமும், ஆத்மா சத்தென் பதற்குச் சகலரநுபவ மெனக் கொள்க.

(தா – ம்) மநுட தேக முதலியவை நசிக்கினும் தான் நசியாமல் மூன்று காலங்களினும் இருக்கின்றதே ஆத்மா சத் தென்பதற்கு அநுபவமெனக் கூறினதாம்.

(அ – கை) இதுவுமது

இருளாக மூடுஞ்சு ழுத்தியி லிராத்திரியி
லிரவிசுட ரற்றபொழுது
மருளாம விருளையும் பொருளையுந் தெரிகின்ற
வகைகொண்டு சித்தாகுமே
பெருவாழ்வு மிக்கதா னேதன்னி டத்தினிற்
பேராத பிரியமதனுல்

அருகாத பிரியஞ்சு கத்தில்வரு மாதலா
லாநந்த மாமைந்தனே. 114.

(இ — ள்) இருளாக மூடும் சுழுத்தியில் — யாதொரு விஷயமும் தோன்றாதபடி அந்தகாரமாக மூடிக்கொள்ளும் சுழுத்தியவத்தையின்கண், மருளாமல் — மயங்காமல், இருளையும் பொருளையும் — அறியாமையாகிய இருளையும் ஆநந்தமாகிய பொருளையும், இரவி சுடரற்ற பொழுது — சூரியன் முதலிய வாகிய பிரகாசங்கள் ஒழிந்த காடாந்தகார சமயத்தில், இராத்திரியில் — இரவில் உளதாகும் சாக்கிரத்தின்கண், மருளாமல் — மயங்காமல், இருளையும் பொருளையும் — காடாந்தகாரத்தையும் பொதுவாய்த் தோற்றும் கடபடாதி வஸ்துக்களையும், தெரிகின்ற வகைகொண்டு — காண்கின்ற அநுபவத் தன்மையினால், சித்தாகும் — இவனே சித்தாகும், பெருவாழ்வு மிக்க — பேராநந்தத்தால் நிரதிசயமாகிய, தானே தன்னிடத்தில் — தானே தன்னிடத்து, பேராத பிரியமதனால் — நீங்காத பிரியம் வைப்பதினால், அருகாத பிரியம் — குறைவற்ற பிரியமானது, சுகத்தில் வருமாதலால் — தனது சுகத்தின்கண்ணுண்டாவது பிரசித்தியாதலால், மைந்தனே — மகனே, ஆநந்தமாம் — இவனே ஆநந்தமென்பது மநுபவமாம்.

(ப — ம்) சகல கரணங்களு மடங்கிய சுழுத்தியவந்தையில், அறியாமையையும், ஆநந்தத்தையும், கண்டு ஒன்று மறியேன் சுகமாய் நித்திரை போனேன் என்கின்ற அநுபவ வசனத்தினாலும், சூரியாதி பிரகாச மில்லாத சொப்பனத்தினும், படனோராச்சியத்திலும், அதிலதிற் றோற்றுகின்ற பொருள்களை யறிந்து சொல்வதினாலும், சாக்கிராவஸ்தையில் சூரியப் பிரகாசத்தையு மதில் வேறு வேறாய் தோற்றும் வஸ்துக்களையு மறிந்து சொல்கின்றதினாலும், சூரியாதி பிரகாச மில்லாத இருளையும் அதில் பொதுவாய்த் தோற்றும் வஸ்துக்களையு மறிந்து சொல்லு மநுபவத்தினாலும், ஆத்மா சித்தென்பது அநுபவமா யிருக்கின்றதே யென்பார், "இருளாக ... சித்தாகுமே" எனவும், புருடனானவன் தான் கட்டியிருக்கின்ற வஸ்திரத்தைக் கைவிட்டாலும் தன்னைக் கைவிடா திருக்கின்றது போல, அகண்டாநந்த சொரூபமான ஆத்மா எதை எதைக் கைவிட்டாலும் தன்னைக் கைவிடப்படாத பிரிய வஸ்துவா யிருப்பதினாலும், பிதாவானவனுக்குப் புத்திர

னிடத்திற் பிரியத்தைக் குறித்து அவன் பந்துக்களிடத்தில் பிரியமுண்டாவது போல தன்னைக் குறித்துச் சுகதுக்கத்துக் கேதுவான வஸ்துக்களிடத்தில் பிரியமுண்டாவதாலும், ஆத்மா ஆநந்தமென்பது அநுபவமா யிருக்கின்றதே என்பார், "பெருவாழ்வு ... ஆநந்தமா" மெனவும் கூறினார்.

(தா – ம்) அவத்தாத்திரயத்திலும் சகலத்தையும் விளக்கிவைத்தறிகின்றதே ஆத்மா சித்தென்பதற்கு அநுபவ மெனவும், கைவிடப்படாத அதி பிரிய வஸ்துவா யிருக்கின்ற தும் தன்னைக் குறித்து விடயத்திற் பிரியமுண்டாவதும் ஆத்மா ஆநந்தமென்பதற்கு அநுபவமெனவும் கூறினதாம்.

(அ – கை) அதிப் பிரிய வஸ்துவே ஆத்மாவானால் அஃ தானந்தத்திற்குச் சாதனமாகாதோ வென வினுதலு மதற் குத்தரமுங் கூறுகின்றார்.

அன்னபா னாதிசுக சாதனம தாகையா
லார்க்கும் வெகு பிரியமாகும்
இன்னவா றான்மாவு மாநந்த சாதன
மெனக்கருதல் பொரு ளல்லவே
சொன்னவான் மாவையொரு சுகசாத னங்களொடு
சொல்லுவா யாகின் மகனே
உன்னதா நந்தம்வே றேதநுப விப்பதா
ருபயவான் மாவு முளவோ. 115.

(இ – ள்) அன்னபானாதி – உண்பன பருகுவன முதலிய வைகள், சுக சாதனம் ஆகையால் – சுகத்துக்குச் சாதனமாத லால், யார்க்கும் வெகு பிரியமாகும் – யாவர்க்குமவை அதிக பிரியமாம், இன்னவாறு – இந்தப்படி, ஆன்மாவும் – ஆத்மா வும், ஆநந்த சாதனமெனக் கருதல் பொருளல்லவே – ஆநந் தத்துக்குச் சாதனமென்று நினைப்பது சுருதிக்கு விரோதமாம், சொன்ன வான்மாவை – சொல்லிய வாத்மாவை, ஒரு சுக சாதனங்களொடு – ஓர் சுக சாதனங்களோடு கூட, சொல்லு வாயாகில் – சேர்த்துச் சொல்லுவையானால், மகனே – மைந்தா உன்னதாநந்தம் வேறேது – *உன்னுடைய ஆநந்தம் வேறே

* உபகாரியத் தன்மை – கர்மம். உபகாரகத் தன்மை – கர்த்தா.

ஏது, அநுபவிப்பதார் – அதை அநுபவியானின்ற கர்த்தா ஆர், உபய ஆன்மாவும் உளவோ – இரண்டு ஆன்மாவும் உண்டோ. "சுக சாதனமது" என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி.

(ப – ம்) சுக சாதனமா யிருக்கின்ற மாம்பழம் வேருகவும் அதை யநுபவிக்கின்ற புருடன் வேருகவும் இருக்கின்றது போல ஆத்மா ஆநந்தத்துக்குச் சாதனமென்று சொன்னல் அவ்வாத்மா வேருகவும், அநுபவிக்கின்ற வாத்மா வேருகவும் இருக்கவேண்டுமே, அப்படி யில்லாதபடியினல் ஆத்மா ஆநந்தத்துக்குச் சாதனமன்றென்பார், "உன்னதாநந்தம் ... உபய வான்மாவும் உளவோ" என்ருர்.

(தா – ம்) சாதனமிறந்த சாத்தியமான வீட்டில் சேடித்த நிரதிசயாநந்தம் வேறும் அஃது அநுபவிக்கும் ஆத்மா வேறுமின்ருதலின் அவ்வாத்மாவே ஆநந்த மாவ தன்றி அதற்குச் சாதனமாகா தென்பதாம்.

(அ – கை) விடயங்களில் பிரிய மிருக்கின்றது போல ஆத்மாவினிடத்திலும் பிரியமிருக்கின்றதில் ஆத்மா ஆநந்த சொரூபரென்ப தெப்படி எனில்,

விடயசுக மதில்வருதல் பிரியமாத் திரமாகும்
வெகுபிரிய மான்மாவி லாம்
விடயசுகம் வருபிரிய மாறிவரு மான்மாவில்
வெகுபிரிய மாருது காண்
விடயசுகம் விடலுமாங் கொளலுமா மான்மாவை
விடுவதெவர் கொள்வதெவர் பார்
விடயசுக போகங்கள் விடுமவனை யவனுல்
விடப்படா தொருநாளுமே. **116.**

(இ – ள்) விடய சுகமதில் – விஷயாநந்தத்தில், வருதல் பிரியம் – உண்டாகும் பிரியம், மாத்திரமாகும் – அணுவு அளவாம், ஆன்மாவில் – ஆத்மாவினிடத்தில் உண்டாகும் பிரியம், வெகு பிரியமாம் – அளவில்லாத பிரியமாம், விடயசுகம் – விடயாநந்தத்தில், வருபிரியம் – உதிக்கின்ற பிரியமானது, மாறிவரும் – மாறி மாறியுண்டாகும், ஆன்மாவில் வெகு பிரி

யம் – ஆத்மாவினிடத்தில் உள்ள மிகுந்த பிரியமானது, மாறு துகாண் – விட்டு நீங்காது, விடய சுகம் – விடயானந்தமானது, விட்லுமாம் கொளலுமாம் – அன்னியமா யிருந்தலினால் விடவும் கூடும் பற்றவும் கூடும், ஆன்மாவை – ஆத்மானந்தத்தை, விடுவதெவர் கொள்வதெவர் – அனன்னியமா யிருத்தலின் விடுகின்றவர் யாவர் கொள்ளுகின்றவர் யாவர், பார் – நீ நன்றாய்ப் பார், விடய சுகபோகங்கள் – விடயானந்தானுபவங்களை, விடுமவனை – நீக்கின அவ் வாத்மாவை, ஒரு நாளும் – எப்போதும், அவனால் விடப்படாது – அவ் வாத்மாவினால் விடுதல் கூடாது.

(ப – ம்) விடயத்தினிடத்தில் விஷங்கலந்த தேன்போல, ஆயிரம் துக்கத்துடன் அணுமாத்திரமாய்ப் பிரியமுண்டாவதால் விடயம் ஆநந்தமன்று, ஆத்மாவினிடத்தில் அணுவளவும் துக்கமில்லாமல் அளவில்லாத பிரியமா யிருக்கின்றதால் ஆத்மாவே ஆநந்தமென்பார், "விடய சுகமதில் ... ஆன்மாவிலாம்" எனவும், ஸ்திரீ முதலான விடயம் உபாதியுள்ளதாகையால் அதில் உண்டாகும் பிரியம் வியாதியாதியால் நீங்கி நீங்கியுண்டாகும், ஆத்மா நிருபாதிகமான படியினால் அவ் வாத்மாவினிடத்தில் இருக்கின்ற மிகுந்த பிரியம் ஒரு விதத்திலும் நீங்காதென்பார், "விடய சுகம் ... மாறுது" எனவும், விடயங்கள் அன்னியமா யிருப்பதால் கூட்டவும் தள்ளவும் கூடும் ஆத்மா அனன்னியமா யிருப்பதால் கூட்டவும் தள்ளவும் கூடாதென்பார், "விடய சுகம் ... கொள்வதெவர் பார்" எனவும், தேகத்திலிருக்கின்ற வஸ்திராபரணாதியை நீக்கினும் அத்தேகத்தை நீக்கக் கூடாததுபோல, ஆத்மா தனக்கன்னியமான விடயங்களை நீக்கினும் தன்னை எக்காலமும் நீக்குதல் கூடாதென்பார், "விடய சுகபோகங்கள் ... நாளு மெனவும்" கூறினார்.

(நா – ம்) விடயங்களிற் பிரியம் அநேக துக்கத்துடன் அணுவா யிருப்பதினாலும், அது மாறி வருவதாலும், விடயம் தள்ளக் கூட்டத் தக்கதா யிருப்பதாலும், அது ஆநந்தமன்று எனவும், ஆத்மாவினிடத்தில் பிரியமானது அற்பமும் துக்கமில்லாமல் அளவற்றதா யிருப்பதினாலும், ஒரு காலும் நீங்காதிருப்பதினாலும், ஆத்மா தள்ளக் கூட்டப்படாததா யிருப்பதினாலும், ஆத்மாவே ஆநந்த சொரூப மெனவும் கூறினதாம்.

(அ — கை) ஆத்மா ஆநந்த சொரூபமாய் தள்ளக் கூட்டப் படாததாய் இருக்கிறதன்னை வெறுப்பினால் நீக்குவரோ வென வினாதலுக் குத்தரங் கூறுகின்றார்.

வேகின்ற கோபங்க ளாலென்னை நான்கொன்று
விடுகிறே னென்று சிலபேர்
சாகின்ற படியினாற் றன்னையே தான்கொன்று
சாவனெனல் சங்கை யலவே
தேகந்த னைக்கொல்லு மவனால்வி டப்பட்ட
தேகமெவ னல்லன் மகனே
ஆகந்த னிற்கோப மலதுதனை யொருநாளு
மான்மாவெ றுப்பதிலையே. 117.

(இ — ள்) வேகின்ற கோபங்களால் — வேகாநின்ற வியாதி கோபங்களால், என்னை நான் — என்னை யான், கொன்று விடுகிறேனென்று — கொல்கின்றேனென்று, சிலபேர் — சிலர், சாகின்ற படியினால் — ஒவ்வோர் சமயத்தில் இறக்கின்ற படியினால், தன்னையே தான் கொன்று — தன்னைத் தானே கொலை செய்துகொண்டு, சாவனெனல் — மரிப்பா னென்பது, சங்கை யல — சங்கையன்று, ஏனென்றால். தேகந் தனைக் கொல்லும் — உடலைக் கொல்கின்ற, அவனால் — அப் புருடனால், விடப்பட்ட தேகம் — நீக்கப்பட்ட தேகம், அவனல்லன் — அவ்வாத்மாவலனும், மகனே — மைந்தா, ஆகந்தனில் — தேகத்தில், கோபமலது — கோபம் வந்ததே யல்லாமல், தனை — ஆத்மாவை, ஒருநாளும் — எப்போதும், ஆன்மா வெறுப்பதிலை — ஆத்மா வெறுப்பதில்லையாம். சங்கை யன்று என்பது "சங்கையல" என வந்தது.

(ப — ம்) மழைக் காலத்தில் குளிருக்காகக் கம்பளியைத் தரித்துக் கோடைக் காலத் துஷ்ண நிமித்தம் அதை நீக்கி விடுகின்றவ னெப்படி யதற்கு வேறோ, அக் கம்பளி தன் சுகத்துக் கேதுவன்று என் றெப்படியதை வெறுக்கின்றானோ, தன்னை வெறுக்கவில்லையோ அதுபோல, ஆத்மா தன்பிரியத்தைக் குறித்துச் சுகத்துக் கேதுவாயிருக்கும் போது, தேகத்தைப் பேணிச் சுகத்துக் கேதுவான தல்லாதபோது, அதை விடுகின்றது. ஆகையால் ஆத்மா அதற்கு வேறாய் அது தன் சுகத்துக் கேதுவானதன்று என்று அதை வெறுக்கின்றதே

தவிர, தன்னை வெறுக்கவில்லை யென்பார், "தேகந் தனைக் கொல்லு ... வெறுப்பதில்லையே" யென்றார்.

(தா – ம்) ஆத்மா தேகத்துக்கு வேறெனவும் தற்பிரியத்திற்குக் குறைவு வாராமல் தேகத்தை நீக்குகின்றதேயன்றித் தன்னை வெறுக்கவில்லை எனவும், தான் எப்போதும் சுக சொரூப மெனவும் அறிவித்ததாம்.

(அ – கை) ஆத்மாவே ஆநந்த சொரூபமானால் தனமுதலியவை யாநந்தமாகத் தோற்றுவானேனெனில் கூறுகின்றார்.

தாகப்ப டும்பொருளி லும்மகன் பிரியமாந்
 தனயனிலு முடல்பிரியமாம்
ஆகத்தி லும்பிரிய மிந்திரிய மாங்கரண
 மதனிலும் பிரியமுயிராம்
ஏகப்பி ராணனிலும் வெகுபிரிய மான்மாவி
 லிந்தவான் மாமுக்கியம்
ஊகத்தி னாற்கெவுண மித்தைகர்த் தாமூன்று
 மோரொன்றி லதிகமகனே. 118.

(இ – ள்) தாகப்படும் பொருளிலும் – பிரியமாகச் சம்பாதிக்கும் தனங்களிலும், மகன் பிரியமாம் – புத்திரன் பிரியமாகும், தனயனிலும் – புத்திரனிலும், உடல் பிரியமாம் – தூல தேகம் பிரியமாகும், ஆகத்திலும் – அத் தேகத்திலும், இந்திரியம் பிரியமாம் – பொறிகளானவை பிரியமாகும், அதனிலும் – அப் பொறிகளிலும், கரணம் பிரியம் – அந்தக்கரணங்கள் பிரியமாகும, அதனிலும் – அவ் வந்தக்கரணங்களிலும், உயிர் பிரியமாம் – ஜீவனது பிரியமாகும், ஏகப் பிராணனிலும் – ஒன்றான அச் சீவனிலும், ஆன்மாவில் – கூடஸ்தனிடத்தில், வெகு பிரியம் – மிகுந்த பிரியமாதலால், இந்த ஆன்மா முக்கியம் – இவ் வாத்மாவே முக்கியமாம், ஊகத்தினால் – உத்தியினால் ஆராயின், கெவுணம் – கெவுணாத்மா, மித்தை – மித்தை யாத்மா, கர்த்தா – கர்த்தாத்மா, மூன்றும் – ஆகிய மூன்றும், ஓரொன்றில் – ஓரோர் வகையில், அதிகம் – பிரதானமாம், மகனே – மைந்தா.

(ப – ம்) இராச கலக முதலியவற்றால் காணியாதியை விட்டோடும்போது கையில் அடங்கின தனம் பிரிய வஸ்து,

அந்தத் தனத்தைச் செலவு செய்து புத்திரனுக்குற்ற வியாதியையும் விலங்காதியையும் தீர்க்கின்றதால் அந்தத் தனத்திலும் புத்திரன் அதிகப் பிரிய வஸ்து வென்பார், "தாகப்படும் ... மகன் பிரியமா" மெனவும், புத்திரனுடன் தானிருக்கும் கிரகம் தீப்பற்றிய விடத்து அவனை விட்டுத் தன் றேகம் பிழைக்க வேண்டுமென் றோடுகையினாலும், புத்திரனைக் குறித்துத் தனக்கு விலங்காதி யுற்ற விடத்து அவனைக் காட்டிக் கொடுத்துத் தான் தப்புகையினாலும் அப் புத்திரனிலும் தன் தேகம் அதிகப் பிரிய வஸ்து வென்பார், "தனயனிலும் ... பிரியமா" மெனவும்,

தாளிக் காற்று கொசுவாதி யுற்ற விடத்தில் இந்திரியங்களைப் பதனம் பண்ணித் தேகத்தைக் கைவிடுகையால் தேகத்திலும் ஞான இந்திரியங்கள் அதிகப் பிரிய வஸ்து வென்பார், "ஆகத்திலும் பிரிய மிந்திரிய" மெனவும், யோசனை செய்யும் போதும் தியானம் செய்யும் போது மதற்கு விக்கினமான இந்திரியங்களை அடக்குகையினால், ஞானேந்திரியங்களிலும் அந்தக்கரணம் அதிகப் பிரிய வஸ்து வென்பார், "கரண" மெனவும், நித்திரை செய்யுமிடத்தும் மனோலயஞ் செய்யுமிடத்தும் விட்சேபமான சங்கற்பத்தை யொழிக்கையினால் அந்தக் கரணத்திலும் சீவன் பிரியவஸ்து வென்பார், "அதனிலும் பிரிய முயிரா" மெனவும், பிராண கண்டனமான ஆக்கினை வந்த விடத்தில் இச் சீவனை நமக்குத் தகாதென்று உபேட்சிக்கையினாலும், மரண காலத்தில் இந்த வேதனைப் படுகிறதிலும் என் சீவன் போகாதோ வென்று தோற்றுகையினாலும், ஒன்றைச் சுட்டுமிடத்தில் என்றைக்குச் சுட்டற்றுச் சும்மா யிருக்கலாமெனத் தோற்றுகையினாலும், சீவனிலும் உற்பத்தி நாசமன்னியில் அசங்கமாய் எப்போதும் கைவிடப்படாததா யிருக்கின்ற கூடத்தனாகிய வாத்மாவே அதிகப் பிரியவஸ்து வென்பார், "ஏகப் பிராணனிலும் வெகுபிரிய மான்மாவி" லெனவும்,

புத்திரன் தேகம் சீவன் மூன்றையும் ஆத்மாவெனச் சுருதி பூர்வபக்ஷமாய்க் கூறினும் உத்தியால் பார்க்குமிடத்தில் அவைகள் ஒரோர் வகையில் பிரதானமா யிருப்பதினால் புத்திரனை யாத்மா வென்றது, இம் மூவகையில் ஒன்றேயல்லாமல் அப் புத்திரன் முக்கிய வாத்மாவல்லன் கூடத்தன் அப்படியில்லாமல் எப்போதும் முக்கியமான வாத்மாவா யிருப்பானென்பார், "ஊகத்தினால் ... அதிக" மெனவும் கூறினர்.

(தா – ம்) தன முதலிய ஆறும் ஒரோரு காலத்தில் ஆநந்தமாயிருந்து கைவிடப்படு மெனவும், ஆத்மா எப்போதும் கைவிடப்படாத பரமானந்த சொரூப ரெனவும், புத்திரனை யாத்மா வென்பது ஒரொரு வகையிற் றேகத்தையும் சீவனை யு மாத்மா வென்பது போலவே தவிரப் புத்திரன் ஆத்மாவல்ல னெனவும் கூறினதாம்.

(அ – கை) இந்த நாலுவகை யாத்மாவி லெது முக்கிய மெனில்? கூறுகின்றார்.

கெடலான பொழுதிவன் காணிக்கு மகனுன
கெவுணவான் மாமுக்கியம்
விடலாத வுடலம்ப ரிக்குநா ளுடலான
மித்தையான் மாமுக்கியம்
திடமான நன்மைகதி வேண்டினுற் கர்த்தனுஞ்
சீவவான் மாமுக்கியம்
சடமாயு முத்தியினின் ஞானவான் மாவான
தானேம காமுக்கியம். 119.

(இ – ள்) கெடலானபொழுது – மரணகாலத்தில், இவன் காணிக்கு – இவன் ஆதினத்துக்கு வேண்டிய, மகனுன – புத்திரனுன, கெவுண ஆன்மா – கெவுண வாத்மாவே, முக்கியம் – அத்தருணத்துக்கு முக்கியமாம், விடலாத வுடலம் பரிக்கு நாள் – நீங்காத தேகத்தை விரும்பிப் பேணுகின்ற காலத்தில், உடலான – தேகமான, மித்தையான்மா – மித்தையாத்மா, முக்கியம் – அத்தருணத்துக்கு முக்கியமாம், திடமான நன்மை கதி – உறுதியான சொர்க்க முதலிய நற்கதியை, வேண்டினுல் – விரும்புங் காலத்தில், கர்த்தனும் சீவவான்மா – கர்த்தாத்மா வென்னும் சீவனுனவன், முக்கியம் – அத்தருணத்துக்கு முக்கியமாம், சடமாயு முத்தியினின் – சீவேசுவர சகத்தின் தோற்றம் இல்லாத பரமோட்சமடைய விரும்புங் காலத்தில், ஞான வான்மாவான தானே – சிதான்மாவாகிய தானே, மகா முக்கியம் – மிகவும் முக்கியமாம்.

(ப – ம்) புருடனைப் பார்த்துச் சிங்கமென்று சொல்லுமிடத்தில் அச் சிங்கத்தின் சௌரிய குணம் புருடனிடத்தில் இருப்பது போல, தகப்பனுடைய குணங்களிற் சிறிது புத்திர

னிட்டத்தில் இருப்பதைக் குறித்துக் கெவுணாத்மா வென்கின்ற அப் புத்திரனானவன் மரண காலத்திற் முன்செத்தாலும் பிள்ளை பிழைத்தாற் போதுமென்றும் தனக்குப் பின் தன் ஆதீனத்தில் இருந்து பிள்ளையானவன் பாடும் பழியும் இரண்டும் தன்னதாக ஒப்புக்கொண்டு குடும்பத்தை ரட்சிப்பானென்று தோற்றுவதைக் குறித்து அந்த அவசரத்தில் முக்கியமானாலும், அந்த கெவுணாத்மாவான புத்திரன் எப்போதும் அங்ஙனம் தோற்றாதபடியால் முக்கியமல்லவென்பார், "கெட்லான பொழுது ... கெவுணன்மா முக்கிய" மெனவும், கட்டையானது பிராந்தியினால் கள்ளனெனத் தோற்றுவது போல, மித்தையாய் அனாத்மாவா யிருக்கின்ற தேகம் விபரீதத்தினால் ஆன்மாப் போற் றோற்றுவதைக் குறித்து மித்தையாத்மா என்கின்ற அத் தேகமானது, அதை விரும்பிப் பேணுகின்ற காலத்தில் புத்திராதியைப் பேணாது அருந்தல் பொருந்தலான விடயங்களைச் சம்பாதித்து அத் தேகத்தையே சம்ரட்சணை செய்கின்றதைப் பற்றி அந்த அவசரத்தில் அது முக்கியமானாலும், எப்போதும் அங்ஙனம் இல்லாதபடியால் முக்கிய மன்றென்பார், "விட்லாத ... மித்தையர்ன்மா முக்கிய' மெனவும்,

சூரியப் பிரதி விம்பமானது மயக்கத்தால் சூரியன் எனத் தோற்றுவது போல, கர்த்தத்துவாதியை யுடையதாய் அனாத்மாவாய் ஆத்மாவின் பிரதி விம்பமாயிருக்கின்ற சீவனறியாமையினா லாத்மாப் போற் றோற்றுவதைக் குறித்துக் கர்த்தாத்மா வென்கின்ற அச் சீவனானவன், சொர்க்க முதலிய நற்கதியை விரும்பின காலத்திற் றேகாதிகளைப் பேணாது மந்திரலோப கிரியாலோப திரவியலோப மில்லாமல் மிகுந்த வருத்தத்துடன் செய்கின்ற யாகங்கள் பஞ்சாக்கினி மத்தியாதி பிரயாசமான தவங்கள் முதலியவற்றால் அச் சீவனுக்கு நரக துன்பம் வாராது சுகந் தேடுகின்றதைப் பற்றி யந்த அவசரத்தில் சீவன் முக்கியமானாலும், எப்போதும் அஃது அங்ஙன மிராதபடியால் முக்கியமன் றென்பார், "திடமான ... சீவாத்மா முக்கிய" மெனவும்,

மயக்கமில்லாது கட்டை கட்டையாகத் தோற்றுவது போலச் சச்சிதாநந்தமாய் ஆத்மாவா யிருக்கின்ற சாட்சியை ஐயந்திரிபின்றி யாத்மாவாகத் தோற்றுவதைக் குறித்து முக்

கிய வர்த்மா-வென்கிற அச் சாட்சி, பத்தாமவன் தன்னைத் தானென்று அறிய விரும்புவது போல, சிவேசுவர சகத்தின் தோற்றமில்லாத பரமோட்சமடைய விரும்புங் காலத்தில் புத்திரன் தேகம் சீவன் இவற்றை வெறுத்துச் சாதன சதுட்டயத்தைப்பெற்று ஞானுசாரியரை யடைந்து சிரவணுதி செய்து நான் நிற்சங்கன், நான் நிராகாரன், நான் நிற்சீவன், நான் சுயம்பிரகாச னென்கின்றதைக் குறித்து அச் சாட்சி அந்த அவசரத்தில் மாத்திரம் முக்கியம் போலத் தோற்றினும் புத்திராதிக ளோரோர் காலத்தில் முக்கியமாய்த் தோற்றி பின்பு மாறி அமுக்கியமாய்ப் போவது போலவின்றிச் சாட்சி முக்கிய மெனத் தெரிந்த பின்பு மாருது எப்போதும் முக்கியமாகவே யிருப்பதினுலும், அசத்து சடம் துக்கமான அவைகளைத் தள்ளினுலும் சச்சிதாநந்தமான தான், தள்ளப்படாததா யிருப்பதினுலும், அச் சாட்சியே மிகவும் முக்கிய மென்பார், "சடமாயு ... மகா முக்கிய" மெனவும் கூறினுர்.

(தா – ம்) புத்திராதி மூன்றும் ஒரோர் காலத்தில் முக்கியமாகத் தோற்றினும் பின்பு மாறுவதால் அமுக்கிய மெனவும், ஞான ஆத்மாவான சாட்சி முக்கியமாய் மாருமலிருப்பதினுல் மகா முக்கிய மெனவும் கூறினதாம்.

(அ – கை) மகா முக்கியமா யிருக்கின்ற ஆத்மாவே மாருத ஆநந்த சொரூபமெனல் எங்ஙனமெனில் கூறுகின்ருர்.

புலியுமநு கூலமெனி லிட்டமாம் பகைசெயிற்
  புதல்வனெனினும் வெறுப்பாம்
உலகிலிரு வகையுமல் லாதபுல் லாதியிலு
  தாசீன மாமாதலான்
மலினமறு சின்மயன் பலவகையு மிப்படி
  மகிழ்ச்சியில் விருப்பமிகுமான்
அலகிலா னந்தவடி வாகுமுன் சொரூபத்தை
  யாராய்ந்துபார் மைந்தனே. 120.

(இ – ள்) புலியும் – வியாக்கிரமும், அநுகூல மெனில் – அநுகூலம் செய்யுமாயின், இட்டமாம் – பிரிய விஷயமாம், பகை செயில் – விக்கினம் பண்ணினுல், புதல்வன் எனினும் – புத்திரன் ஆனுலும், வெறுப்பாம் – துவேஷ விஷயமாம்,

உலகில் — பூமியின் கண், இருவகையு மல்லாத — பிரிய விஷயமும் துவேஷ விஷயமு மல்லாத, உதாசீன புல்லாதியில் — உபேட்சை விஷயமான புல் முதலியவற்றில், இருவகையுமாம் — விருப்பும் வெறுப்பும் உளவாகும், மலினமறு சின்மயன் — அஞ்ஞானுதி மலமற்றுச் சுயம்பிரகாசமா யிருக்கின்ற ஆத்மா, பலவகையும் — நாலு விதத்திலும், இப்படி — இவ் வண்ணம், மகிழ்ச்சியில் — ஆத்மாநந்தத்தில், விருப்பம் இகழான் — பிரியம் நீங்கான், ஆதலால் — ஆனபடியால், அலகில் — வாக்கு மனத்துக் கெட்டாத, ஆனந்த வடிவாகும் — ஆநந்த சொரூபமாகிய, உன் சொரூபத்தை — உனது ஆத்ம வடிவத்தை, மகனே — மைந்தனே, ஆராய்ந்துபார் — ஆராய்ந்து அறிவாய்.

(ப — ம்) அன்னியமாய் எப்போதும் அப் பிரியமா யிருக்கின்ற வியாக்கிரமாதி சீவர்களின் மூலமாய்ச் சீவனம் செய்கின்றவனுக்குத் திரவியமாதி யடைவதற்கு ஏதுவாகின்றதினுல் பிரியமாகு மென்பார், "புலியு மநுகூலமெனில் இட்டமாம்" எனவும், அயலாய் எப்போதும் பிரியமா யிருக்கின்ற புத்திராதிகள் தகப்பனுக்குத் தன்னிஷ்டமான காரியத்துக்கு விக்கினம் பண்ணுகின்றதினுல் அப் பிரியமாகு மென்பார், "பகை ... வெறுப்பாம்" எனவும், வேருய் எப்போதும் உபேட்சையா யிருக்கின்ற துரும்பாதிகள் ஒருவனுக்குப் பல்லுக் குத்தலாதிக் குதவுகின்றதினுல் பிரியமும், சிரங்கில் படுதலாதியால் அப் பிரியமுமாகுமென்பார், "உலகில் ... உதாசீனமா" மெனவும், அன்னியமா யிருக்கின்றதினுலே புத்திர புலி புல்லாதியினிடத்தில் பிரியமாதிகள், மற்றொன்ருக மாறுபடுவதுபோல், அஞ்ஞானுதி மலமற்றுச் சுயம்பிரகாசமா யிருக்கின்றவாத்மா அனன்னியமா யிருப்பதினுலே தற்பிரிய மாருதென்பார், "மலினமறு ... இகழான்" எனவும், வாக்கு மனத்துக் கெட்டாத ஆநந்த சொரூ மென்பார், "அலகிலாநந்த வடிவ" மெனவும் கூறிஞர்.

(தா — ம்) புத்திர புலியாதி அன்னியமா யிருப்பதினுல் அவைகளிடத்தில் பிரியமாதி மாறுமெனவும், ஆத்மா அனன்னியமாகையினுல் தற்பிரிய மாருதெனவும், ஆகையினுல் அவ்வாத்மாவே மாருத அகண்டாநந்த சொரூபமெனவும் கூறினதாம்.

(அ — கை) ஆநந்தம் எத்தனைவகை யென்று விஞவுக் குத்தரங் கூறுகின்றூர்.

மானஞ்சி றந்தகுரு நாதனே யாநந்த
வகைகளெத் தனையென்னிலோ
ஞானந்தி கழ்ந்தபிர மாநந்தம் வாசனு
நந்தம்விட யாநந்தமென்
றாநந்த மூன்றுவித மெட்டுவகை யென்பர்சில
ரவ்வைந்து மிதிலடக்கம்
யானந்த வகைசொலக் கேண்மைந்த னேயெட்டு
மிஃதின்ன தின்னதெனவே. 121.

(இ — ள்) மானஞ் சிறந்த — பெருமை மிகுந்த, குரு நாதனே — தேசிக ராசனே, ஆநந்த வகைகள் — ஆநந்தப் பிரிவுகள், எத்தனை என்னில் — எவ்வளவு என்று நீ கேட்பாயாகில், ஞானம் திகழ்ந்த பிரமாநந்தம் — தனது ஞானத்தாலே விளங்குவதான பிரமாநந்த மெனவும், வாசனாநந்தம் — வாசனாநந்தமெனவும், விஷயாநந்த மென்று — விஷயாநந்த மெனவும், ஆநந்தம் மூன்று விதம் — ஆநந்தமானது மூன்று விதமாம், சிலர் — சில பெரியோர்கள், எட்டு வகை என்பர் — அஷ்டவித மென்றுஞ் சொல்லுவார்கள், அவ் வைந்தும் இதில் அடக்கம் — மற்றைய அவ் வைந்தும் இம்மூன்றில் அடக்கமாம், எட்டும் — அஷ்டவிதாநந்தமும், இஃது இன்னது இன்னதென — இந்த ஆநந்தம் இன்ன நாமமுடையது இன்ன ஆநந்தம் இன்ன நாமமுடையதென்று, யான் — நான், அந்த வகை சொல — அப்பகுப்பைக் கூற, மைந்தனே கேள் — மகனே நீ கேள்.

(ப — ம்) பிரம ஞானம் ஈசுரபத்தி சீவகாருண்ணியம் பாச வைராக்கியம் நான்குமே திருமேனியாக வெழுந்தருளிய பிரமாதிகளாலும் துதிக்கும் பெருமையுடைய தேசிக ராசனே என்பார், 'மானஞ் சிறந்த குருநாதனே" எனவும், அறிவினால் விளங்குவதாயும் திரிபுடியற் றிருப்பதாயும், வாசனாநந்தம் விடயாநந்தங்களினும், மிகுந்ததாயு மிருக்கின்ற சுழுத்தியவத்தையி லுண்டாகின்ற சுகமென்பார், "ஞானந் திகழ்ந்த பிரமாநந்த" மெனவும், பிரமாநந்தத்தில் முக்கியாநந்தமும், வாசனாநந்தத்தில் நிசாநந்தமும், விடயாநந்தத்தில் ஆத்மாநந்தமும் அத்துவிதாநந்தமும் வித்தையாநந்தமும், அடங்கியிருக்கின்றன வென்பார், "அவ்வைந்தும் இதிலடக்க" மெனவும் கூறினார்.

(தா - ம்) ஆநந்தத்தின் தொகை முக்கிய பட்ச மூன்றெனவும் எட்டு எனக் கூறுதலும் உண்டு எனவும் கூறினதாம்.

(அ - கை) அவ் வஷ்டவித ஆநந்தங் கூறல்.

போகத்தில் வருசுகம் விடயசுக நித்திரைப்
  போதுளது பிரமசுகமாம்
மோகத்த னந்தலிற் சுகம்வாச னைச்சுகமு
  ழுப்பிரிய மான்மசுகமாம்
யோகத்தி லுளதுமுக் கியசுகமு தாசின
  முற்றசுக நிசசுகமதாம்
ஏகத்தை நோக்கலத் துவிதசுகம் வாக்கியமெ
  ழுந்தசுக ஞானசுகமே, 122.

(இ - ள்) போகத்தில் வருசுகம் - போகங்களில் வருகின்ற ஆநந்தம், விடயசுகம் - விடயாநந்தமாம், நித்திரைப் போதுளது - சுழுத்தி காலத்திலுள்ள ஆநந்தம், பிரம சுகமாம் - பிரமாநந்தமாம், மோகத் தனந்தலிற் சுகம் - மயக்கமாகிய நித்திரை தெளிந்துவரும் சமயத்தில் உள்ள ஆநந்தம், வாசனைச் சுகம் - வாசனாநந்தமாம், முழுப் பிரியம் - பிரிய வஸ்துக்களுள் யானே அதிகப் பிரிய வஸ்து வென்னும் விவேகத்தால் எழாநின்ற ஆநந்தம், ஆன்மசுகம் - ஆத்மாநந்தமாம், யோகத்திலுளது - சமாதிலுள்ள சுகம், முக்கிய சுகம் - முக்கியா நந்தமாம், உதாசின முற்றசுகம் - உதாசின காலத்தில் உள்ள ஆநந்தம், நிசசுகமதாம் - நிசாநந்தமாம், ஏகத்தை நோக்கல் - பூரண திருஷ்டியில் உள்ள ஆநந்தம், அத்துவித சுகம் - அத்துவிதாநந்தமாம், வாக்கியம் எழுந்த சுகம் - மகாவாக்கியத்தால் உளதாகா நிற்கும் ஆனந்தம், ஞான சுகம் - வித்தியாநந்தமாம்.

(தா - ம்) சுருக்கமான அருத்தத்துடனே அவ்வாநந்தங்களினாமங் கூறினதாம்.

(அ - கை) அவற்றில் விடயாநந்த விலக்கணங் கூறல்.

(வேறு.)

இவ்வா றுரைசெயுஞ் சுகபே தங்களி னியல்பா மவை
சொல மகனேகேள், ஒவ்வா நனவினி லுழல்வா னிடர்

கெட வுறங்குஞ் சயனம துறுநேரம், செவ்வா மனமக முகமா மதிலொளிர் சித்தின் சுக நிழல் சேருங்காண், அவ்வா றிவனுள மகிழ்வா மநுபவ மதுதான் விடயசு காநந்தம். 123.

(இ — ள்) இவ்வாறு — இந்தப் பிரகாரம், உரை செயும் — சொல்லிய, சுக பேதங்களின் — ஆநந்த வேறுபாடுகளின், இயல்பாமவை சொல — சுபாவங்களை யாம் கூற, மகனே கேள் — மைந்தா கேட்பாய், ஒவ்வா நனவினில் — இன்பம் பொருந் தாத சாக்கிரத்தில், உழல்வான் — விவகாரங்களில் சுழல்பவ னுடைய, இடர் கெட — துன்பம் நீங்கும் பொருட்டு, உறங்கும் சயனம துறுநேரம் — படுக்கையில் நித்திரை செய்யும் சமயத் தில், செவ்வா மனம் — செவ்விதான மனமானது, அகமுகமாம் — அந்தர் முகமாகும், அதில் — அம் மனதில், ஒளிர் — பிரகா சிக்கின்ற, சித்தின் சுக நிழல் — சிதாநந்த சாயையானது, சேரும் காண் — பிரதி பிம்பிக்கும், அவ்வாறு — அவ்வண்ணம், இவன் உளம் — இவன் மனமானது, மகிழ்வாம் அநுபவம் — மகிழ்ச்சியாகும் அநுபவமான, அதுதான் — அதுவே, விடய சுகாநந்தம் — விட்யாநந்தமாம்.

(ப — ம்) சுழுத்தி யவத்தையில் உண்டாகின்ற சுகத்தை போலத் தரிசன சாமீப்பிய சையோகத்தினால் அருந்தல் பொருந்தலாகிற விடயங்களிலுண்டாகும், பிரியம் மோதம் பிர மோதமே விட்யாநந்த மென்பார், "அவ்வாறு ... விடய சுகா நந்த" மென்றார்,

(தா — ம்) மனது விடய நாட்டம் விட்டு சுழுத்தியில் அடங்கும்போது சுகமுண்டாவது போலச் சாக்கிரத்தில் விட யம் லபித்ததுக்குத் தக்கவாறு மனம் சாந்தப்படும் போது உண்டாகும் திருப்தியே விட்யாநந்த மெனக் கூறினதாம்.

(அ — கை) பிரமாநந்த விலக்கணங் கூறல்,

ஞானந் தருசுக விடயம் திரிபுடி யிடரா மெனமன மசை யாமல், சேனந் தனதுகு லாயந் தனில்விழு செயல்போ னித்திரை செறிசீவன், தானந் தமில்பர னுடனொன் றுவ னொரு தனையல் லதுபிற நினையாமல், ஆனந் தமயனு மாவன் சுகமிகு மதுதா னுயர்பிர மாநந்தம். 124.

(இ – ள்) ஈனம் தரு – குறைவைக் கொடுக்கின்ற, சுக விட்யம் – விஷய சுகமானது, திரிபுடி யிட்ரா்மென – திரிபுடி யான துன்பமாமென்று, மனம் அசையாமல் – மனம் சலியா மல், சேனம் – பருந்தானது, தனது குலாயந்தனில் – தனது கூண்டில், விழு செயல் போல – அடங்கும் தொழிலைப்போல, நித்திரை செறி சீவன் – நித்திரை செய்கின்ற சீவனானவன், அந்தமில் – முடிவில்லாத, பானுடன் ஒன்றுவன் – பிரமத் தோடு கூடுவன், ஒருதனையல்லது – அத்வைதமான தன்னை யல்லாமல், பிற நினையாமல் – வேறு கருதாமல், ஆநந்த மய மாவன் – ஆநந்த வடிவமா யிருப்பான், சுகமிகுமதுதான் – சுகம் மிகுந்த அவ் வாநந்தமே, உயர் பிரமாநந்தம் – மேலான பிரமாநந்தமாம்.

(ப – ம்) விடயாநந்தத்தில் என்னுடையது பிறருடையது வென்று அபிமானிக்கின்ற ஞாதுருவும், செவ்வையா யிருக்க வேண்டுமென்னு மாசையும் கெட்டுப்போகு மென்னும் பயமும் தோற்றுவதாகிய ஞானமும், நல்விடயம் தீவிட்யமாகிய ஞேய மும், கூடவிருக்கின்றதினால் துன்பம் என்பார், "ஈனம் தரு... இட்ரா" மெனவும், பருந்தானது தன் கூட்டில் அதி வேகமா யடைவது போலவும், கையில் இருந்து விட்ட வல்லூரு திரும்பி அதிவேகமாய்க் கையில் வந்திருப்பது போலவும், சாக்கிராவத்தையில் சாதியாதி வேறுபாட்டுடன் பலவகை யான வியாபாரமுற்று அதில் உண்டாகும் துன்பத்தை யடைந்த சிதாபாசன் அத் துன்பத்தை நீக்கும் பொருட்டு அத்தொழிலையும் விட்டு அதில் செல்லு மனத்தையு மடக்கிக் கொண்டு ஒரு விடயத்திலும் செல்லாமல் அதி வேகமாகச் சுழுத்தி யவத்தையில் பொருந்துவ னென்பார், "மனமசை யாமல் ... செறி சீவ" னெனவும், அச் சுழுத்தி யவத்தையில் இருக்கின்ற சிதர்பாசன் நாச ரகிதமாய்ப் பரிபூரணமா யிருக் கின்ற பிரம சொரூபத்தில் கடநிறைந்த ஜலமானது அக்கடத் தைக் கயிற்றினால் கட்டிக் கிணற்றுள் விட்டபோது அச் சலத் துடன் கலவாமல் ஒன்று யிருப்பது போல, பொருந்தாமல் பொருந்துவதான அத்தியாச வயிக்கியமா யிருப்பானென்பார், "தாநந்தமில் ... ஒன்றுவ" னெனவும், அச் சுழுத்தி யவத்தை யில் பரிபூரண பிரம சொரூபத்தில் அத்தியாச வயிக்கியமான சிதாபாசன், இராகத் துவேஷமற் றிருக்கின்ற குழந்தையும், சிந்தனையற் றிருக்கின்ற மகாராஜாவும், கற்கவேண்டுமென்னும்

கவலையற்றிருக்கின்ற மகாப் பிராமணனும், சுகமா யிருத்தல் போல ஒரு சுட்டுதலுமற்று ஆநந்த வடிவமா யிருப்பா னென் பார்,' 'ஒருதனை யல்லது ... ஆநந்தமயமாவ னெனவும், அச் சுழுத்தியவத்தையில் திரிபுடியற் றுண்டாகும் சுகமே பெரி தான வானந்த மென்பார், "சுகமிகு ... பிரமாநந்த" மெனவும் கூறினர்.

(தா – ம்) விடயாநந்தம் திரிபுடியுடன்கூடிய துன்பமென நீத்துச் சிதாபாசன் மனமடங்கின சுழுத்தி யவத்தையை யடையும்போதுண்டாகு மாநந்தமே பிரமாநந்த மென்றதாம்.

(அ – கை) சுழுத்திச் சுகமே பிரமாநந்த மென்பதற்குப் பிரமாணம் உண்டோ? அது யாதெனில் கூறுகின்றார்.

தூங்குஞ் சுகமது பிரமச் சுகமெனல் சுருதிப் பொருள் விழி துயில்வோர்கள், தாங்கும் மலரணை நன்று கச்சிலர் சம்பாதிப்பது தானூகம், தீங்குந் நன்மையு மாண்பெண் முறைமையுந் தெரியா தமளிசெய் பொழுதேபோல், ஆங் குள் வெளிகளு மறியா வநுபவ மதனு லதுபிர மாநந்தம்.

(இ – ள்) தூங்கும் சுகமது – நித்திரைக் காலத்தில் உண் டாகும் சுகமானது, பிரமச் சுகமெனல் – பிரமாநந்தமென்று சொல்லுதல், சுருதிப் பொருள் – சுருதியினர்த்தமாம், விழி துயில்வோர்கள் – நித்திரை செய்பவர்களில், சிலர் – சிலபேர், தாங்கும் மலரணை – காக்கத் தக்க மிருதுவான பூவணை முத லியவற்றை, நன்றுக – பிரயாசப்பட்டு, சம்பாதிப்பதுதான் – சம்பாதிப்பதே, ஊகம் – சுழுத்தியில் பிரமாநந்தம் உண் டென்பதற்கு உத்தியாம், தீங்கும் நன்மையும் – நன்மை தீமை களான, (வீட்டிற்குள் காரியமும் வெளியிற் காரியமும்,) ஆண் பெண் முறைமையும் – ஆண் பெண்ணென்கிற ஒழுங்கும், தெரியாது – கிஞ்சித்து மறியாமல், *அமளிசெய் பொழுதே போல் – புருடன் ஸ்திரீயை ஆலிங்கனம் செய்து சுகமா யிருப்பது போல, ஆங்கு – சுழுத்தியில், உள் வெளிகளு மறியா – உள்ளே சொப்பன வியாபாரமும் வெளியிற் சாக்கிர வியாபாரமும் ஒன்றும் அறியாமல் இருப்பது, அநுபவம் – அநுபவமாம், அதனுல் இப்படி சுருதி யுக்தி அநுபவங்கள்

* "அமளி செய்" என்பது, இடக்க ரடக்கல்.

உள்வாகையால், அது பிரமாநந்தம் — சுழுத்தியிலுள்ள அவ் வாநந்தம் பிரமாநந்தமாம்.

(ப — ம்) சாக்கிர சொப்பனத்தில் விட்சேபத்தின் றொந்த மனம் சுழுத்தியில் சுகமடைதலால் அதுபிரமாநந்தம்; அதற்குத் திட்டாந்தம் வல்லூரு, பருந்து, குழந்தை, மகா ராசா, மகாப் பிராமணன், என்று வேதம் கூறுமென்பார், "தாங்கும் ... சுருதிப் பொரு" ளெனவும், சுழுத்தியில் பிரமா நந்த மில்லாவிட்டால் அச் சுழுத்தி யடைவதற் கேதுவான பாய் தலையணை முதலானவற்றை ஏன் தேடுகின்றார்கள்? இந்த யுத்தியினாலும் சுழுத்தியில் பிரமாநந்தமுண்டென்பார் "விழி துயில் ... ஊக" மெனவும், அச் சுழுத்தியில் ஆநந்த மில் லாவிடில் ஸ்திரீயினாற் றழுவப்பட்டு விட்யாநந்தம் அநுபவிக் கின்றவனுக்கு வீட்டிற்குள் காரியமும் வெளியிற் காரியமும் தெரியாதது போல, உள்ளே சொப்பன வியாபாரமும் வெளி யில் சாக்கிர வியாபாரமும் ஏன் தோன்றாதிருக்கின்றன? இந்த அநுபவத்தினாலும் சுழுத்தியில் பிரமாநந்த முண்டென் பார், "இங்கும் ... அநுபவ" மெனவும் கூறினார்.

(தா — ம்) சுழுத்தி யாநந்தம் பிரமாநந்த மென்பதைச் சுருதி யுத்தி அநுபவத்தினால் உணர்த்தியதாம்.

(அ — கை) அவத்தாத் திரயத்திலும் விவகரிக்கின்ற விசுவ தைசத பிராஞ்ஞனை யொன்றென்றறியும் பொருட்டுச் சீடன் வினாதல்.

உதவும் புவியினி லொருவ னநுபவ மொருவன் மனதினி லுதியாதே, மதியுங் கெடுகிற துயில்கொண் டாநந்த மயனன் றோசுக முறுகின்றான், இதுவிஞ் ஞான மயனுஞ் சிந்தையி னினைவாய் வந்திட லழகன்றோ, சுதை விண்ணோர்புகழ் குருவே நீரிது சொல்வீர் சகலமும் வல் லீரே. 126

(இ — ள்) உதவும் புவியினில் — சர்வாபீஷ்டங்களையும் அடைய சகாயமாயிருக்கும் பூலோகத்தில், ஒருவன் அநுப வம் — தேவதத்த னென்னும் ஒருவன் அநுபவமானது, ஒரு வன் மனத்தினில் — எக்ஞதத்த னென்னும் மற்றொருவனு டைய மனத்தின்கண், உதியாதே — ஸ்மரண ரூபமாக உதிக்க

மாட்டாதே, மதியும் கெடுகிற துயில் கொண்டு — மனோமய கோசத்தோடு விஞ்ஞானமயகோசமும் நாசமாகின்ற நித்திரை யடைந்து, ஆநந்த மயனன்றோ — ஆனந்த மயனல்லவா, சுகம் உறுகின்றான் — சுகம் அநுபவிக்கின்றான், இது — இவ்வநுப வம், விஞ்ஞான மயனும் — விஞ்ஞான மயனுக்கும் கர்த்தாவின், சிந்தையில் — கரண ரூபமாகும் மனத்தில் நினைவாய் வந்திடல் — ஸ்மரணமாய் எழுதல், அழகன்று — அழகல்லவே, சுதை விண்ணோர் புகழ் — அமிர்த பானஞ்செய்யும் தேவர்கள் துதிக் கானின்ற, சகலமும் வல்லீர் — சமஸ்த வல்லமையுமுள்ள, குருவே — தேசிகரே, நீர் — தேவரீர், இது சொல்லீர் — இந்த சந்தேகத்துக்கும் சமாதானம் அருளுவீர்.

(ப — ம்) சொர்க்கலோக முதலான போகமும் பிரமலோக முதலான அபர மோட்சமும், அவித்யா நிவர்த்தியான அக்கண்ட சொரூபம் தானாகின்ற பரமோட்சமும், அடைவ தற்கு ஏதுவான கருமம், உபாசனை, ஞானத்தை அநுட்டிப்ப தற்குச் சகாயமாய் இருக்கின்றது பூலோகமென்பார், "உதவும் புவி" யென்றார்.

(தா — ம்) சுழுத்தி யவத்தையில் பிராஞ்ஞனுக் குண்டா கும் அநுபவம் சாக்கிராவஸ்தையில் விசுவனுக்கு எங்ஙனம் தோற்றுமென்று இடையின் வினாவினதாம்.

(அ — கை) அவ் வினாவிற் குத்தரங் கூறல்.

**நெய்யும் வெண்ணையு மிருபேர் களுமறி நினைவிற் பிறிவறி வினிலில்லை, செய்யுந் நனவினி லிறுகும் மனதொடு சேருஞ் சின்மய விஞ்ஞானன், நையுந் துயர்மன நழுவும் பொழுதுணர் ஞானச் சுகமுறு மாநந்தன், பெய்யுந் துளி களு நீருங் குளமொடு பாகும் போலிவர் பிறிவன்றே. 127.**

(இ — ள்) நெய்யும் வெண்ணையும் — நெய் யென்பதுவும் வெண்ணை என்பதுவும் ஆகிய, இரு பேர்களும் — இரண்டு நாமங்களும், அறிநினைவிற் பிரிவு — நாம ரூபமாக மனத்தினால் பார்க்குமிடத்தில் பேதமே அன்றி. அறிவினிலில்லை — அவற் றின் சுவையைக் கொள்ளுகின்ற விவேகத்தில் இல்லை, (அது போல) செய்யும் நனவினில் — கிரியையைச் செய்கின்ற சாக்கி ரத்தில், இறுகும் மனதொடு — தூலமான மனத்துடன்

சேரும் சின்மய விஞ்ஞானன் – கூடாநிற்கும் சின்மயனுன விஞ்ஞான மயனென்னும் விசுவன், நையும் துயர்மனம் – வருந்தும் துன்ப காரணமான மனம், நழுவும் பொழுது – நீங்கும் காலத்தில், உணர் ஞானச் சுகமுனும் ஆநந்தன் – அஞ்ஞானத்தை ஞானத்தால் யறியவல்ல பிரமாநந்தம் அநுபவிக்கின்ற ஆநந்த மயனென்று சொல்லப்படுவன் (ஆதலின்,) இவர் – உபாதி திருஷ்டியில் பேதமன்றிப் பிரதிவிம்ப சேதன திருஷ்டியில் பேதமில்லை, ஆதலின், இவர் – இவர்கள், பெய்யும் துளிகளும் நீரும் – பொழியாநின்ற மழைத்துளியும் சலமும், குளமொடு பாகும் போல் – வெல்லமும் பாகும் போல, பிறிவன்று – வேறல்லர்.

(ப – ம்) கடினமா யிருக்கின்ற வெண்ணெயானது உருகி இளகலா யிருக்கின்ற நெய்யாகி மனத்தினுல் நாமரூபமாகப் பார்க்குமிடத்தில் வேறு போலத் தோற்றினும் விவேகத்தினுல் நன்ருய்ப் பகுத்துப் பார்க்குமிடத்தில் அவைகளின் சுவை ஒன்ருயிருப்பது போல, காரணாதியாற் றூலமான மனம் இந்திரியங்களுடன் சாக்கிராவத்தையில் தொழில்செய்து துன்புறுகின்ற பிரபஞ்சத்தைப் பலவிதமாக விசேடமாய்ச் சுட்டியறிவதால் விஞ்ஞான மயனென்று பரியாய நாமத்தையுடைய இத் தூலமான விசுவன், சொப்பனுவத்தையில் இந்திரியங்களை விடுத்துச் சூட்சுமமான மனத்துடன் வாசனு ரூபமாய்ச் சூட்சுமமான தொழிற் செய்து துன்புறுகின்ற தைசத னென்னும் பேரையடைந்து, சுழுத்தி யவதத்தையில் சூட்சுமமான தொழிலையும் துன்பங் கொடுக்கின்ற மனத்தையும் விடுத்துக் காரணுபேட்சையின்றி, அஞ்ஞானத்தை யறியவல்ல பிரமாநந்தம் அநுபவிக்கின்ற ஆநந்தமய னென்றும், பரியாய நாமத்தையுடைய பிராஞ்ஞ னென்னும் பெயரை அடைகின்ற படியால் மூட புத்தியால் பார்க்குமிடத்தில் விசுவ தைசத பிராஞ்ஞனென மூன்ருகத் தோற்றினும், விவேகபுத்தியால் பார்க்குமிடத்தில் சிதாபாச னொருவனுகவே தோற்று மென்பார், "நெய்யும் ... ஞானச் சுகமுனு மாநந்த" னெனவும்,

அற்பமா யிருக்கின்ற துளி பலசேர்ந்து மிகுந்த சலமென்னும் பேரை அடைந்தாலும் துளியைவிட சலம் வேறில்லாமை போலவும், இளகலான பாகு கடினமான வெல்லக் கட்டி என்னும் நாமத்தை அடைந்தாலும், பாகைவிட வேறில்லாமை போலவும், சுழுத்தியில் அந்தக்கரண விருத்தியற்று

ஆநந்தம் அநுபவிக்கின்ற பிராஞ்ஞன் சொப்பனவவத்தையில் சூட்சுமமான மனத்துடன் சேர்ந்து சூட்சுமமான வியாபாரஞ் செய்து தைசதனென்னும் பேரை யடைந்து சாக்கிராவத்தை யில் தூலமான மனத்துடனும், இந்திரியங்களுடனும் சேர்ந்து தூல வியாபாரஞ் செய்து விசுவனென்னும் பெயரை யடைந் தாலும், பிராஞ்ஞனைவிட விசுவதைசதர்கள் வேறல்ல ஒன்று தான், ஆகையால் பிராஞ்ஞன் அநுபவித்த ஆநந்தம் விசுவ னுக்குத் தெரியலாமே யென்பார், "பெய்யும் ... பிறிவன்றே" யெனவும் கூறினர்.

(தா – ம்) சிவன் ஒருவனே விசுவதைசதபிராஞ்ஞனென சாக்கிர சொப்பன சுழுத்தி யவத்தையினால் வேறு நாமங்களை அடைந்திருப்பதால் அப் பிராஞ்ஞ னாநந்தாநுபவம் விசுவ னுக்குத் தோற்றலா மென்று அறிவித்ததாம்.

(அ – கை) சுழுத்தி யவத்தையில் பிரமத்துடன் சேர்ந்து ஆநந்தம் அநுபவிக்கின்ற பிராஞ்ஞன் அவ் வாநந்தத்தை விட்டு நீங்குவானேனென வினாதலும் அதற்குத்தாமும் வாச னாநந்த விலக்கணமும் கூறுகின்றார்.

ஒன்றா கியபிர மாநந் தச்சுக மொழிவா னேன்வெளி வருவானேன், என்றான் முன்செய்த கருமம் வெளியினி லிழுக்குஞ் சுழுத்திவிட் டெழுந்தோனும், நன்றா யினசுக மகலான் வெளியிலு நடவான் மறதியும் பெறமாட்டான், அன்றா மெனவிருந் துறங்குஞ் சிலகண மதுவே வாதனை யாநந்தம். 128.

(இ – ள்) ஒன்றாகிய பிரமாநந்தச் சுகம் – ஆநந்தமயனான பிராஞ்ஞன் ஏகமாகிய பிரமாநந்த சுகத்தையும், ஒழிவானேன் – விட்டு நீங்குவானேன், வெளி வருவானேன் – சாக்கிரத் துக்கு வருவானேன், என்றால் – எனபதாக சங்கிப்பாயாகில், முன செய்த கருமம் – பூருவம் செய்த விசேட கருமங்கள், வெளியினில் இழுக்கும் – அநுபவித்த பிரமாநந்தத்தையும் விட்டு நீங்கும்படி பண்ணிச் சாக்கிராதிகளில் இழுக்கும், சுழுத்திவிட்டு எழுந்தோனும் – சுழுத்தியவஸ்தையை விட்டுச் சாக்கிரத்தை யடைந்த புருஷனும், சிலகணம் – சொற்ப காலம், நன்றாயின சுகமகலான் – சுழுத்தியில் அநுபவிக்கப்

பட்ட பிரமாநந்தத்தின் வாசனையை விடான், அதற்கு காரணம், வெளியிலும் நடவான் — பாகியத்திலும் செல்லான், மறதியும் பெறமாட்டான் — அகத்தில் அநுபவித்த ஆநந்தத்தையும், விடாதுளன், இதனல் பிரமாநந்த வாசனை பின்னே தொடர்ந்து இருக்கிறது என்பது கருத்து, அன்றும் என — சுழுத்தியுமன்று சுழுத்தியுமாம், சாக்கிரமும் அன்று சாக்கிரமுமாம்," என்று கூறும்படி, சிலகணம் இருந்து உறங்கும் — சொற்ப கால பரியந்தம் அங்ஙனமிருந்து உறங்கா நிற்கும், அதுவே வாதனையாநந்தம் — அதுவே வாசனுநந்தமாம்.

(ப — ம்) ஒருவன் பூருவம் செய்த சாமான்னிய விசேட கருமங்களில் சுழுத்தியவத்தையைக் கொடுக்கின்ற சாமானிய கருமம் நீங்கும்போது, விசேட கருமமானது அப் புருடனைச் சாக்கிராவத்தையில் வரும்படி செய்யுமென்பார், "முன்செய்த ... இழுக்கு" மெனவும், சயனித்திருந்த புருஷன் நித்திரையை அத்தியந்தம் நீங்காது எழுந்து உட்காந்து இருப்பதினுலும், ஒரு வியாபாரமும் செய்யா திருப்பதினுலும், சுழுத்தி சாக்கிரம் இரண்டும் ஆகாமலும் அப்பொழுது ஒரு பகுப்புந் தோன்ருது சுழுத்தி ஆநந்தத்தையும் நீங்கா திருப்பதினுலும், அவனை அன்னியர் கூப்பிடும் சத்தத்துக்கு ஏன் என்பதினுலும், சுழுத்தி சாக்கிரம் இரண்டுமாகியும் இருக்கின்ற அநந்தலி லுள்ள சுகமே வாசனுநந்தம் என்பார், அன்றும் என ... வாதனையாநந்த மெனவும் கூறினுர்.

(தா — ம்) சிதாபாசன் சுழுத்தியவத்தையினின்று சாக்கிராவத்தையில் வருவது பிராரத்த கன்மாநுபவம் புசிப்பதற்காக வெனவும், சுழுத்தியும் சாக்கிரமும் இல்லாத அனந்தலிலுள்ள சுகமே வாசனுநந்த மெனவும் கூறினதாம்.

(அ — கை) நிசாநந்த விலக்கணங் கூறல்.

அந்தக் கணமுடலகமென் றிடர்களி லலைந்தே சுகந் தனை மறந்தேபோம், முந்தைச் செயும்வினை சுகதுக்கந்தரு மோனந் தருநடு வடிவேகாண், எந்தப் புருடனு மொருசிந் தையுமற விருந்தே னெனலநு பவமாகும், இந்தப் படிதனு தாசீ னச்சுக மிதுவே நிசமெனு மாநந்தம். 129.

(இ — ள்) அந்தக்கணம் — சுழுத்தியில் அநுபவித்த பிரமாநந்தத்தின் வாசனையோடு இராமல் அந்த வாசனாநந்தமும் போன அந்தக்ஷணம், உடல் அகமென்று — தேகத்தை நானென்று, இடர்களில் அலைந்து — துன்பங்களில் சுழன்று, சுகந்தனை — பிரமாநந்தத்தை, மறந்தேபோம் — சகல பிராணிகளும் மறந்துவிடும், முந்தச் செயும் வினை — பூருவம் செய்த புண்ணிய பாவ கருமங்கள், சுக துக்கம் தரும் — இன்ப துன்பங்களைக் கொடுக்கும், (அவைகள் கர்ம காரியங்கள்) இனி உதாசீனத் தன்மை கூறுகின்றார். நடுவடிவே — சுக துக்கங்களின் அந்தராளமே, மோனம் தரும் — தூஷ்ணீம் பூதாவத்தையைத் தரும், (இதற்கு அநுபவம்) எந்தப் புருடனும் — எப்புருஷனும், ஒரு சிந்தனையும் அற — ஒரு நினைப்புமின்றி இருந்தேனெனல் — சுகமா யிருந்தேனென்று சொல்லுதலே, அநுபவமாகும் — அநுபவமாம், இந்தப்படி தன் உதாசீனச் சுகமிதுவே — இவ்விதம் தன்னுடைய உதாசீன காலத்தில் தோற்றுகின்ற இவ்வாநந்தமே, நிசமெனும் ஆநந்தம் — நிசாநந்தமாம்.

(ப — ம்) பூர்வத்தில் செய்த புண்ணிய கருமத்தினுல் சுகமும், பாவ கருமத்தினுல் துக்கமும், உண்டாகின்ற காலத்துக்கு மத்தியாகிய தூஷ்ணீம் பூதாவத்தையில், வாக்கு மனதுக் கெட்டாத மத்திய கதமான சுபாவ சொரூபமானது, ஆண் பெண் அலி என்று சொல்லப்பட்ட அனைவராலும் ஒரு சிந்தனையு மில்லாமல் சுகமாயிருந் தநுபவிக்கப்படுகின்றதென்பார், "முந்தச்செயும் வினை ... அநுபவமாகு" மெனவும், சுகதுக்க மிரண்டுமில்லாத தூஷ்ணீம் பூதாவத்தையிற் றோற்றுகின்ற சுபாவாநந்தமே நிசாநந்த மென்பார், "இந்தப் படி ... நிசமெனு மாநந்த" மெனவும் கூறினுர்.

(தா — ம்) சாக்கிராவத்தையில் சுக துக்கமில்லாத தூஷ்ணீம் பூதா வேளையிற் றோற்றும் சுபாவாநந்தமே நிசாநந்த மெனக் கூறினதாம்.

(வி — ரை) இதை முக்கியாநந்தமெனக் கூறுவாருமுளர்.

(அ — கை) நிசாநந்தம் எங்ஙனம் முக்கியாநந்த மாமென வினுதலும், அதற் குத்தரமும், முக்கியாநந்த விலக்கணமும் கூறல்.

நிசமா னதுமுக் கியமோ குடத்துள நீரன் றேவெளி
யீரந்தான், வசமாவ கங்கர மறைந்தா னிசமது படிந்தான்
முக்கிய வகையாகும், திசையார் திரிசிய மறியா தேதுயில்
செறியா தேயுட றறிபோலே, அசையா தேமதி சமமா
கியநிலை யதுதான் முக்கிய வாநந்தம். 130.

(இ – ள்) அங்கர வசமா மறைந்தால் – விசேஷ வகங்காரமின்றிச் சாமான்னிய அகங்கார வசமாய்ப் பிரமாநந்த மறைவுற்றால், நிசம் – அவ்வுதாசின காலத்தில் தோன்றுகின்ற ஆநந்தம், நிசாநந்த வாசனையாம், (ஆகலின்.) நிசமானது – நிசாநந்தமானது, முக்கியமோ – முக்கியாநந்தமாகுமோ அன்று, வெளி ஈரம்தான் – புறத்திலுள்ள சீதளம், குடத்துள நீரன்று – குடத்துக்குள் உள்ள முக்கிய சலமன்று, அது படிந்தால் – அந்த சாமானிய அகங்காரமும் சமாதி அப்பியாசத்தால் நீங்கினால், முக்கிய வகையாகும் – முக்கியாநந்தமாம், மதி – மனமானது, திசையார் திரிசியமறியாது – திக்குகளில் நிறைந்திருக்கின்ற விடயத்தை யறியாமலும், துயில் செறியாது – நித்திரையை யடையாமலும், உடல் தறிபோலே – தேகமானது ஸ்தம்பத்தைப் போல, அசையாது – அசையாமலும், சமமாகிய நிலை – பிரமாகாரமாகிய ஸ்திதியாகிய, அதுதான் – அதுவே, முக்கிய வாநந்தம் – முக்கியாநந்தமாம்.

(ப – ம்) தத்துவ ஞானத்தினால் சகத்துப் பொய்யாகி அதைச் சுட்டுகின்ற மனமிறந் திருத்தலால் சாக்கிராவத்தை யாயிராமலும், இந்திரியங்க ளிறந்துபோகாமல் தன் தன் கோளகத்தில் வியாபாரமற் றிருத்தலால் சுழுத்தியவத்தை யாயிராமலும், பூரணானந்தாநுபவ மிருத்தலால் சொப்பன மனோராச்சியமா யிராமலும், இருக்கின்ற நிருவிகற்ப சமாதியி லுண்டாகின்ற அகண்டாநந்தமே முக்கியாநந்த மென்பார், "திசையார் ... முக்கியாநந்த" மென்றார்.

(வி – ரை) இதனை நிசாநந்தமெனக் கூறுவாருமுளரெனவும், சமஸ்தத்திலும் தான் அதிப் பிரியவஸ்து வென்றறியுமிடத்தி லுண்டாகும் ஆநந்தம் ஆத்மாநந்த மெனவும், மாயையாகின்ற துவிதமற்று அத்துவிதமா யறியுமிடத் துண்டாகும் ஆநந்தம் அத்துவிதாநந்த மெனவும், மகா வாக்கியத்தினால் நானே பிரம சொரூபமென்றும் நானே துக்கமற்றவன்

நானே சகலருமாயிருந்து புசிக்கின்றவன் நானே கிருத கிருத்தியனென்று முண்டாகின்ற ஆநந்தம் வித்தியாநந்த மெனவும், நிரதிசய வாநந்தாமிசமான இவ்வஷ்ட விதாநந்தங்களும் அதிசயமாக நவநவமாய் விளங்குதலின் இவை அதிசயாநந்த மெனவுங் கொள்க.

(தா – ம்) ஆத்மா அகங்கார வசமாயிருக்கும் போதுண்டாகு நிசாநந்தமே அவ் வகங்காரத்தை நீங்கினபோது முக்கியாநந்தமாகு மெனவும், அவத்தாத்திரயமின்றி அகம்பாவமற்ற ஞான சமாதியில் அகண்டாநந்தமா யிருத்தலே முக்கியாநந்த இலக்கண மெனவுங் கூறினீராம்.

(அ – கை) முக்கியாநந்த மகான்மியங் கூறல்.

மனுடன் மனுடகந் தருவன் றேவநன் மாகந் தருவ னொண் பிதிரோடே, பனுமா ஜானர்கள் கருமத்தேவர்கள் பகர்முக் கியரிந் திரனுசான், கனமார் பிரஜா பதியென் விராட்டுபொன் கர்ப்பப்பிரமனென் றின்னோர்கள்,பினவா நந்தங்க ளுரையாம் பிரளய வெள்ளக் கடல்பிர மாநந்தம்.

(இ – ள்) மனுட்டன் – சார்வபௌமன், மநுடகந் தருவன் – மநுட்னுயிருந்து புண்ணிய விசேஷத்தால் கந்தருவ பதத்தை யடைந்த மநுடகந் தருவன், தேவ நன்மா கந்தருவன் – பூருவ கற்பத்தில் செய்த புண்ணியத்தால் இக்கற்பாதியிலேயே கந்தருவனுன தேவ கந்தருவன், ஒண்பிதிரோடே – சிறந்த தமதுலகில் சிலகாலம் வாசம்பண்ணும் அக்கினிஷ்வாத்தாதியராகிய பிதிரரோடு, பனும் ஆஜானர்கள் – மேலாகச் சொல்லாநின்றகற்பாதியிலேயே தேவத்துவத்தைஅடைந்தோர்களாகிய ஆஜான தேவர், கருமத்தேவர்கள் – இந்த கற்பத்தில் அசுவமேதாதி கருமங்கள் செய்து மகத்பதத்தை யடைந்து ஆஜான தேவர்களால் பூஜிக்கப்பட்ட கருமத்தேவர்கள், பகர் முக்கியர் – மேலாகச் சொல்லும் அஷ்டவசுதுவாத சாதித்தியர் ஏகாதசருத்திரர் ஆகிய முப்பத்தொருவராகிய முக்கிய தேவர், இந்திரன் – இந்திரன், ஆசான் – பிரகஸ்பதி, கனமார் பிரஜாபதி என்விராட்டு – கனம் பொருந்திய பிரஜாபதி என்னும் நாமமுடைய விராட்டு, பொன் கர்ப்பப் பிரமன் – இரணிய கருப்பன், என்ற பிரமன் – என்னும் நாமமுடைய இப் பதினொரு பேர்களுடைய, பின ஆநந்

தங்கள் — ஒன்றுக்கொன்று நூறுபங்கு அதிகமான ஆநந்தங்கள் — நுரையாம் — பேன (புற்புதங்களைப் போல லேச) மாம், பிரமாநந்தம் — பிரமாநந்தமானது, பிரளய வெள்ளக் கடல் — பிரளய காலத்து மகோததியாம்.

(ப — ம்) மநுடாநந்த முதல் இரணிய கர்ப்பாநந்தம் வரை பதினொரு வகை யாநந்தமும், இராகத் துவேஷாதிகளுடன் யான் எனதென்று வுயர்ச்சி தாழ்ச்சியா யநுபவிக்கப்படுகின்ற படியால் அவைகள் இவலைபோ லற்பமாகவும், முக்கியாநந்தமாகிய பிரமாநந்தம் அங்ஙனம் அநுபவிக்கப்படாத படியினால் அது கற்பாந்த சாகரம் போல, மகத்தாகவும் இருக்குமென்பார், "என்று இன்னோர்கள் ... பிரமாநந்த" மென்றார்.

(தா — ம்) மநுடாநந்த முதல் இரணிய கற்பாநந்தம்வரையிலுள்ள ஆநந்தங்கள் நிருவிகற்ப சமாதியிலுண்டாகும் பிரமாநந்தத்தின் லேசங்களா மென்பதாம்.

(அ — கை) இப் பிரமாநந்த முடையவரின் அநுபவத்துக்குத் திட்டாந்தம் யாதெனில்,

எவனு கிலுமிந்தத் துரியா தீதத்தி லேழாம் பூமியிலிருந்தானேல், அவனு ரதன்சுகன் சிவன்மா லயன்முதலறிவோ ரநுபவ சுகபோதம், விவகா ரதிர்சய மிதுவே யநுபவ மெனமுன் சொல்லிய விவகாரி, உவமா னமுமறி மகனே யவனடி யுதிரும் பொடிகளென் முடிமேலே. 182.

(இ — ள்) எவனுகிலும் — யாவனுனாலும், இந்த — இப் பிரமாநந்தமுள்ள, துரியாதீதத்தில் — துரியாதீதம் என்னும், ஏழாம் பூமியில் — ஏழாவது பூமியில், இருந்தானேல் — இருப்பானுகில், அவன் — அப் புருடனுக்கு, போதம் — தத்துவ ஞானமும், சுகம் — பிரமாநந்தமும், விவகாரதிரசியம் — பிரபஞ்சத் தோற்ற மில்லாமையுமாகிய, இதுவே — இவைகள் இருக்கின்றதே, அநுபவமென — சுவாநுபவ மெனவும், சிவன்மாலயன் — அரன் அரி அயனெனு மும்மூர்த்திகளும், நாரதன் சுகன் முதல் — நாரதர் சுகர் முதலிய, அறிவோர் — அறிஞருக்குமுள்ள, அநுபவம் — சுவாநுபவம், முன் சொல்லிய — முற்கூறிய, விவகாரி — துரியாதீத விவகாரியி னநுபவத்துக்கு,

உவமானமும் — திட்டாந்தமெனவும், அறிமகனே — மைந்தா தெரிந்து கொள்வாய், அவனடி — அவ்வேழாம் பூமியாகிய துரியாதீதத்தில் முக்கியாநந்தம் அநுபவிக்கின்றவனுடைய பாதத்தினின்றும், உதிரும் பொடிகள் — உதிராநின்ற தூள்களானவை, என் முடிமேலே — என் சிரசின்மீது தரிக்கத் தக்கன. விவகார அதிர்சியம் — விவகாரதிர்சியம் என ஆயிற்று.

(ப — ம்) தூலதேக முதலிய ஒன்பது வாச்சியமும் விராட்டாதி ஒன்பதுவாச்சியமும் நியதிகளேந்து இலட்சியமானகூடத்தனே பிரமம் பிரமமே கூடத்த னெனவும், நியதிகளேந்த வாச்சியார்த்தங்களும் பிரத்தியக்க பின்ன பிரமத்தைவிட் வேறல்ல வெனவும், அறிந்து அந்த சத்திய ஞான அனந்தாநந்த வஸ்துவே, நானென்று அசம்பாவனை சமுசய பாவனை விபரீத பாவனையின்றி அறிகின்ற தத்துவ ஞானமென்பார், "போத" மென்றார்.

(தா — ம்) துரியாதீதத்தை யடைந்த ஞானிக ளநுபவத் துக்குத் திரிமூர்த்தி முதலானவர்க ளநுபவஞ் சமானமெனவும், அத்துரியாதீதம் பெற்ற ஞானிக ளருமையாகையா லவரது மகிமைதோன்ற அவரது பாதரேணுக்களெனது சிரசின் மேற் றரிக்கத்தக்கன வெனவும் ஆசிரியர் சீடனுக்குக் கூறியதாம்.

(அ — கை) ஏனைய ஆநந்த விலக்கணம் யாதெனில்,

(வேறு.)

இந்தவா றைந்துசுகஞ் சொல்லினோம் வித்தைசுக
மினிமேற் சொல்வோம், முந்தமா மையுஞ்சச்சி தாநந்தப்
பொருளுமே மொழியும் போதில், அந்தமா மத்துவித சுக
மான்ம சுகமிரண்டு மங்கே சொன்னோம், தொந்தமாற்
றியமகனே யின்னமுனக் கையமுண்டேற் சொல்லுவாயே.

(இ — ள்) இந்தவாறு — இந்தப் பிரகாரம், ஐந்து சுகம் சொல்லினோம் — (123-வது செய்யுளில் விஷயாநந்தமும் 124 முதல் 127-வது வரையில் பிரமாநந்தமும் 128-ல் வாசநாநந்த

மும் 129-ல் நிசாநந்தமும் 130-ல் முக்கியாநந்தமும் ஆக) ஐவகை ஆநந்தங்களையும் கூறினேம், வித்தை சுகம் — வித்தியாநந்தத்தை, இனிமேல் சொல்வோம் — இனி இந் நூலின் அந்தத்தில் கூறுவோம், முந்த — முன்னே, மாயையும் — மாயாரூபத்தையும், சச்சிதாநந்தப் பொருளும் — சச்சிதாநந்தங்களின் அர்த்தத்தையும், மொழியும் போதில் — சொல்லுமிடத்தில், அந்தமாம் — வேத முடிவான, அத்துவித சுகம் — அத்துவிதாநந்தமும், ஆன்ம சுகம் — ஆத்மாநந்தமுமாகிய, இரண்டும் — இரண்டு ஆநந்தங்களையும், அங்கே சொன்னேம் — 95-முதல் 106-வரையிலும் 114-முதல் 120-வரையிலும் கூறினேம், தொந்த மாற்றிய — துவந்துவங்களைக் கெடுத்த, மகனே — மைந்தா, இன்னம் — இன்னமும், உனக்கைய முண்டேல் — உனக்குச் சந்தேகமுண்டானால், சொல்லுவாய் — கேட்பாய்.

(ப — ம்) தத்துவ ஞானத்தினால் சகலப் பிரபஞ்சமும் பொய்யாகக் கண்டிருப்பதால், நன்மை தீமை விருப்புவெறுப்பு சுகதுக்கம் புண்ணிய பாவம் சொர்க்க நரகமாதி துவந்துவங்களை நீங்கியிருக்கின்ற குழந்தாய் என்பார், “தொந்தமாற்றிய மகனே” என்றார்.

(தா — ம்) அத்துவிதாநந்தம் ஆத்மாநந்த விலக்கணம் முன்னர் கூறியிருக்கின்ற தெனவும், வித்தையாநந்தத்தை இந் நூல் அந்தத்தில் கூறுகின்றோ மெனவும், வேறே சந்தேகங்களுளவேற் கேட்பா யெனவும் கூறினதாம்.

(அ — கை) ஆத்மா சச்சிதாநந்த சொரூபமெனத் தெரிந்தும் அதன் உண்மையான சுவாநுபூதி வெளிப்படு நிமித்தம் சுருதி யுத்தி அநுபவங்களுக்கு ஒத்திருக்கும் அவற்றினொருமையைத் தெரிய வினாதல்.

குகன்றனையு மெனையுமுல கினையுமீன் றளித்தருளுங் குருவே கேளீர், புகன்றசச்சி தாநந்தப் பதங்கடனித் தனியாகிப் பொருள்வே றானால், உகண்டமன முறைப்பதெங்ஙன் பரியாய பதங்களைப்போ லுறவு காணேன், அகண்டமா யொருசுவையாய்த் தெனிக்கூட் டியமதுவா வறிவிப்பீரே. 134.

(இ – ள்) குகன்றனையும் – சுப்பிரமணியரையும், எனையும் – என்னையும், உலகினையும் – செகத்தையும், ஈன்று – சிருட்டித்து, அளித்தருளும் குருவே – இரட்சித் தருளுகின்ற இறைவனே, கேளீர் – கேட்பீராக, புகன்ற – முன் உபதேசித்த, சச்சிதாநந்தப் பதங்கள் – ஆத்மாவின் சொரூபமான சச்சிதாநந்த மென்னும் பதங்களானவை, தனித்தனியாகி – கடபடமென்னும் சத்தங்களைப் போல் வெவ்வேருய், பொருள் வேருனால் – அருத்தம் வேறுபடுமானுல், உகண்டமனம் – விடயங்களில் பாயாநின்ற மனமானது, உறைப்ப தெங்ஙன் – அநுபூதியில் ஸ்திரமாய் நிற்பதெப்படி, பரியாய பதங்களைப் போல் – அஸ்தகரபாணி யென்னும் பரியாய நாமங்களைப் போல, உறவு காணேன்–சம்பந்தமும் தெரிகிலன், (ஆதலால்) அகண்டமாய் – கண்டித மில்லாததாய், ஒருசுவையாய் – ஏக ரசமாய், தேனீக் கூட்டிய மதுவா – தேனீக்களாற் பல புஷ்பங்களினின்றும் கூட்டப் பெற்ற தேனுக, அறிவிப்பீர் – தெரிவிப்பீர்.

(ப – ம்) சுப்பிரமணியர் விநாயகர் முதலான நூதன ஈஸ்வரனையும், வைசுவாநரன் சூத்திராத்மா அந்தரியாமி அம்சன் பரமம்ச னென்னும் காரியேஸ்வரனையும், பிரமா விஷ்ணு ருத்திரன் மகேஸ்வரன் சதாசிவ னென்னும் காரணேஸ்வரனையும், உத்தம மத்திமமா யிருக்கின்ற சராசர வுயிர்களையும், பஞ்ச பூதாதி செகத்தையும், விவர்த்தமாய்த் தோற்றுவித்து அநுக்கிரகஞ் செய்யாநின்ற பரிபூரண சொரூபமான சற்குருநாதனே என்றுனென்பார், "குகன்றனையும் ... குருவே" எனவும், தான் போனதே வழியாய்ச் சஞ்சலமே சுபாவமாய் ஆற்றுச் சுழியி லகப்பட்டுச் சுற்றுகின்ற புழுப் போல, விடயங்களிற் சுழலாநின்ற மனமானது சச்சிதாநந்த பதங்களுக் கொருமை தோன்றுவிடின், எங்ஙனம் அசைவற் றிருக்கு மென்றுனென்பார், "உகண்டமன முறைப்ப தெங்ஙு" னெனவும் கூறினர்.

(தா – ம்) சச்சிதாநந்த பதங்களுக்கு ஏகார்த்தந் தோன்றுவிடின், எங்ஙனம் மனமடங்கு மெனவும், பல புட்பங்களிலிருக்கின்ற தேனை ஈயானது எடுத்து ஒன்றுக்குவது போல, மூன்று பதங்களுக்கு மேகார்த்தந் தோன்றும்படி அறிவிக்க வேண்டுமெனவும் சீடன் கூறினதாம்.

(அ — கை) சச்சிதானந்த வொருமையைச் சுருதிப் பிரமாணத்தாற் கூறுவான் ஞெடங்கிப் பிரம சொரூபத்தை சச்சிதாநந்த மென்றதற்குக் காரணமும், அப் பிரம பதங்களின் அர்த்த வொருமையையும் கூறுகின்றார்.

குளிரிளகல் வெண்மையென்ற பதங்களினு னீர்மூன்று
கூறு யிற்றோ, வொளிதவனஞ் செம்மையென்ற பதங்களா
லக்கினியு மொருமூன் றுமோ, வெளிமுதலாஞ் சகமசத்து
மூடமிட ரெனப்பிரித்து விலக்கி வேதம், எளிதறிய முரண்
மொழிந்த சத்தாதி யெனும்பிரம மேகந் தானே. 135.

(இ — ள்) குளிர் — குளிர்ச்சியும், இளகல் — நெகிழ்ச்சியும், வெண்மை என்ற — வெள்ளையு மெனச் சொல்லிய, பதங்களினுல் — சொற்களினுல், நீர் — சலமானது, மூன்று கூறுயிற்றோ — மூன்று பிரிவானதோ, ஒளி — பிரகாசமும், தவனம் — சூடும், செம்மை யென்ற — சிவப்பெனச் சொல்லிய, பதங்களினுல் — சொற்களினுல், அக்கினியும் — நெருப்பும், ஒரு மூன்றுமோ — மூன்று பிரிவாகுமோ, (அவைபோல) வெளி முதலாஞ் சகம் — ஆகாயம் முதலான உலகத்தை, அசத்து — அநுர்த மெனவும், மூடம் — சடமெனவும், இடரென — துக்க மெனவும், பிரித்து விலக்கி — வேறுபடுத்தி நீக்கி, வேதம் — சுருதியானது, எளிதறிய — பக்குவிகள் எளிதில் உணர, முரண் மொழிந்த — அவற்றிற் கெதிராகச் சொன்ன, சத்தாதி எனும் — சச்சிதாநந்த மென்னும், பிரமம் — பிரமமானது, ஏகந்தான் — ஒன்றேயாம்.

(ப — ம்) தேகாதி பிரபஞ்சத்தின் அசத்து சடதுக்க சுபாவத்தை, ஆத்ம சுபாவம் போலாக்கி நான் செத்துப்போகிறவன், நான் சடன், நான் துக்கி, யென்று தோற்றுவிக்கின்ற விபரீதத்தை நீக்கும் பொருட்டும், சில சமயிக ளாத்மாவுக்கு சித்தும் ஆநந்தமும் குணமென்று அங்கீகரித்ததை நீக்கும் பொருட்டும், வேதமானது பிரமம் சச்சிதாநந்தசொரூபமெனக் கூறினதே தவிர அப் பதங்களைப் பின்னமாகக் கூறவில்லை ஆனதால் அப் பதங்களினர்த்தம் அப் பிரமமொன்றே யன்றி வேறல்ல வென்பார், "வெளி முதலாம் ... ஏகந்தானே" யென்றார்.

(தா – ம்) சகத்தை அனுர்த சட்துக்கமெனக் கண்டு அதனை நீக்குதற்காகக் குறித்த நாமம் சச்சிதாநந்த மெனவும் அதனருத்தம் ஒன்றான பிரமமெனவும் கூறினதாம்.

(அ – கை) சச்சிதாநந்தம் ஒருமை என்பது உறுதிப்படு நிமித்தம் வேதம் ஒருமையாகச் சொரூபத்துக்கு விதியாயும் விலக்காயும் சொல்லிய அநந்தநாமங்களில் விதியாயிருக்கின்ற நாமங்களைக் கூறல்.

நித்தியம்பூ ரணமேகம் பரமார்த்தம் பரப்பிரம நிதானஞ் சாந்தஞ், சத்தியங்கே வலந்துரியஞ் சமந்திருக்குக் கூடஸ்தன் சாட்சி போதம், சுத்தமிலக் கியஞ்சநா தனஞ் சிவன் றத்துவம்விண் சோதி யான்மா, முத்தம்விபு சூக்கும மென் றிவ்வண்ணம் விதிகுணங்கண் மொழியும் வேதம்.

(இ – ள்) நித்தியம் ... சூக்கும முதலிய, விதி குணங்கள் – நியம குணங்களான (அனேக விதேய நாமங்களை) இவ்வண்ணம் – இந்தப் பிரகாரம், வேதம் – சுருதிகள், மொழியும் – கூறும்.

(ப – ம்) பிராகபாவம் பிரத்தொம்சா பாபம் அன்னியோன்னியா பாவம் அத்தியந்தா பாவமாகிய நான்குமற்று நிலையுள்ளதா யிருத்தலின், "நித்திய" மெனவும், ஒரு தேசத்தில் மற்றொரு தேசமும், ஒரு காலத்தில் மற்றொரு காலமும், ஒரு வஸ்துவில் மற்றொரு வஸ்துவும், இல்லாமை போலன்றி எல்லா தேசத்திலும் எல்லாக் காலத்திலும் எல்லா வஸ்துவிலும் நிறைந்து இருத்தலின், "பூரண" மெனவும், ஈட்டி வாலா, வாள், முதலானவை பலவாகத் தோற்றினாலும், அயம் ஒன்றாகவும், கடகலசாதி பலவாகத் தோற்றினும் மண்ணொன்றாகவும், கடக மகுடாதி பலவாகத் தோற்றினும் பொன்னொன்றாகவும், இருப்பது போலப் பிரமமானது சீவேஸ்வர சகத்தாகத் தோற்றினாலும், ஒன்றாகவே இருத்தலின், "ஏக" மெனவும், கிளிஞ்சிலிற் றோன்றும் வெள்ளி அபரமார்த்தமாயும் கிளிஞ்சில் பரமார்த்தமாயு மிருப்பது போல, கனவிற் றோற்றும் பதார்த்தங்கள் அபரமார்த்தம், நனவிற் றோற்றும் பதார்த்தம் பரமார்த்தம், அதிலும் மேகம் முதலானவை அபரமார்த்தம், வீடு ஐசுவரிய புத்திர தாரஞ் சரீராதி பா

மார்த்தம், இவை அபரமார்த்தம், சொர்க்காதி லோகம் பர மார்த்தம், அவை அபரமார்த்தம், பிரம லோகாதி பரமார்த் தம்; இச் சீவேசுவர சகத்தெல்லாம் உற்பத்தி நாசவஸ்துவாய் வாக்கு மாத்திரமா யிருக்கின்றபடியால் அபரமார்த்தமாயும், உற்பத்தி நாச மில்லாத சச்சிதாநந்த சொரூபம் இவைகள் தோற்றுவதற் காதாரமாயும், இவைகளுக்குப் பரமார்த்த மாயு மதற்குமேலொரு பரமார்த்த மில்லாததாயுமிருப்பதால் அங்ஙனமிருக்கின்ற சச்சிதாநந்த சொரூபஞ் சத்தியமா யிருத் தலின், "பரமார்த்த" மெனவும்,

பசு பிராமணுள் வேதம் பிரணவம் பிரமனுதி தேவதை களாகின்ற பிரமத்துக்கு, மேலான சத்தியஞான வனந்தாநந்த பிரம சொரூபமா யிருத்தலின், "பரப் பிரம" மெனவும், சக சீவ பரத்துக்குக் காரணமான பிரகிருதிக்கு மூலமான ஆதி காரணமாதலின், "நிதான" மெனவும், காட்டத்திற் செனித்த நெருப்பு காட்டத்தைச் சுட்டுத் தானும் தணிகின்றது போல, பிரகிருதி புருட விவேகத்தினுலும் சாஸ்திர விவேகத்தினுலும் பிறந்த வகண்டாகார விருத்தி ஞானம், பிரமத்திற் கன்னிய மாயுள்ள பிரகிருதி புருஷ சாஸ்திர முதலானவைகளை அற்ப மும் மிஞ்சாமற் சுட்டுத் தானும் சாட்சியாக விருக்கின்ற அப் பிரம சொரூபத்தில் நசிக்கின்ற படியினுல், நிஷ்பிரபஞ்சமாக வமைதியா யிருத்தலின், "சாந்த" மெனவும், தினந்தோறும் மாதந்தோறும் வருஷந்தோறும் உகந்தோறும் பஞ்சகோசங்க ளுற்பத்திக்கு முன்னும் ஒழிந்த பின்னு மொரு படித்தாய் மெய்யா யிருத்தலின், "சத்திய" மெனவும், ஆகாயஞ் சாதுர் பூதத்திலுந் தாக்கற்றுத் தனியா யிருப்பது போல, பிரகிருதி அதன் காரியமான சராசரப் பிரபஞ்சத்தின் றோற்றந் திதி நாசத்திற் றக்கற்றுத் தனியா யிருத்தலின், "கேவல" மென வும், நனவு கனவு சுழுத்தியில் விளங்குகின்ற தூல சூட்சும காரணப் பிரபஞ்ச மெல்லாம் அறிவா யிருத்தலின், "துரிய" மெனவும், தாரதம்மியமான பூலோக முதலான லோகங்கள் உத்தம மத்திமமென் றேற்றத் தாழ்ச்சியா யிருக்கின்ற பிர மனுதி தம்ப பரியந்தமான சரீரங்கள், பாமரன் கன்மி உபா சகன் யோகி ஞானி யென்றும் அவைகளி லேகதேச முள்ளவ னென்றுங் காணப்பட்ட சீவபேதங்கள், பிரமனுதி யீசுரபேதங் களாகிய தாரதம்மிய வஸ்துக்களிற் சத்தாகாரமாய்த் தாரதம்

மியமற்று, எப்போதுஞ் சைதன்னியமா யொப்பமா யிருத்த லின், "சம" மெனவும்,

திருசியமா யிருக்கின்ற தேகேந்திரிய பிராண மனம் புத்தி அவித்தை சீவனாகிய இவைகள், பஞ்ச விடயங்களை யறிகின்ற திருக்காகிய ஆத்மாவாகத் தோற்றினாலும், தானே யறியாத தாயு முற்பத்தி நாச வஸ்துக்களாய் ஆத்மா வல்லாததா யிருக்கின்ற இவைகளுக் கதிட்டானமாய் இவைகளினுடைய அன்னுவய வெதிரேகங்களைக் காணுகின்ற ஆத்மாவாய் ஞான மாயிருத்தலின், "திருக்" கென்வும், கொல்ல னடைகல்லு நிருவிகாரியா யிருந்தாலும் அதனிடத்தி னிரும்பின் விவகார மெல்லாந் தோற்றி யடங்குவதற் கது காரணமா யிருத்தல் போல, பிரம சைதன்னியம் நிருவிகாரமா யிருந்தாலும் அத னிடத்திற் றோற்றின மூலப் பிரகிருதியு மிதின் சாத்திக விரா சதமான சர்வஞ்ஞ கிஞ்சிக்ஞ சைதன்னியங்களுந், தாமத விகாரமான பூத பௌதிகங்களும், தன் தன் விவகார வழி யெல்லாஞ் சென்று லயித்தற்கு, அப் பிரம சைதன்னியம் அறிவு சொரூபமான காரணமாதலின், "கூடத்த" ரெனவும், சகல பிரபஞ்ச வியாபாரத்துக்கும் ஆதித்தன் சந்நிதானமே காரணமா யிருந்தாலும் அவைகளிற் பற்றாது சாட்சியாயிருக் கின்ற அவ் வாதித்தன் போல, சகல விந்திரியங்களுஞ் சக லப் பிரபஞ்சங்களிற் சைதன்னியத்தின் சந்நிதானங் கொண்டு விவகாரஞ் செய்தாலும் அச் சைதன்னியம், தானாகவும் பிர விர்த்தி நிவர்த்திகளைப் பண்ணும லொன்றைக் கொண்டும் பண்ணிவையாம லிவைகட்கெல்லாம் மத்தியஸ்தமாகப் பார்த் துக் கொண்டு தோற்றுவிக்கின்ற மாத்திரமே வடிவாய்ச் சான்றாக விருத்தலின், "சாட்சி" யெனவும்,

முப்பத்தைந்து தத்துவங்களையு மதனதன் விவகாரங் களையும், விளக்கிவைத் தறிகின்ற வுணர்வா யிருத்தலின், "போத" மெனவும், சாதி வருணாச்சிரம புண்ணிய பாவ சொர்க்க நரக செனன மரணாதி யசுத்தமுடைய சீவர்களும், இராம கிருஷ்ணாதி யவதாரம் கிருபை மாச்சரியமாதி யசுத்த முடைய வீசுரனும், உற்பத்தி நாசமாதியான அசுத்தமுள்ள பூதங்களுமாகிய, இவைட்கெல்லாம் அன்னியமா யிவைகளு டன் கூடி நின்றாலும், அசுத்தம் பற்றாமல் நித்தியமாய் நிராகா ரமாய் நிறைவாய்ச் சைதன்னியமாயிருக்கின்ற தூய தாதலின்,

"சுத்த" மெனவும், தூலாதி விராட்டாதி சரீரங்களுஞ் சாக்கிராதி சிருட்டியாதி யவத்தைகளும் விசுவனாதி வைசுவாநரனாதி யபிமானிகளுமாகிய முக்கியமல்லா திருக்கின்ற விசேடவஸ்துவாதலின், "இலக்கிய" மெனவும், அனாதியென்று நிச்சயித்த சோபாதிகமான கன்மம் அஞ்ஞானம் வேதம் சீவன் ஈசுரன் நிருபாதிக சைதன்னியமான பிரமம் ஆக வாறிற்குள்ளாகக் கற்பிதவனாதியா யிருக்கின்ற அவ்வைந்திற்கு மந்த முண்டாதலாலு மவைகட் கதிட்டானமான சைதன்னியத்துக் காதியந்த மில்லாத படியினாலும் அனாதியா யிருத்தலின், "சநாதன" மெனவும்,

தேகாதி சகலப் பிரபஞ்சமும் நசித்த காலத்தும், அங்ஙனம் நசியாது எப்போதும் சீவித்திருக்கின்றவனாதலின், "சீவ" னெனவும், மேலானதை யறிகின்றவரைக்குந் தத்துவ மென் றிருக்கின்ற தூல தேகம் 6. பூதம் 5. சூட்சும தேகம் 20. அவித்தை சீவன் 2. மாயை ஈசுரன் 2. ஆக இந்த முப்பத்தைந்து தத்துவங்களைப் போல, ஒருக்காற் றத்துவமாயும் ஒருக்காலதத்துவமாயு மிராம லெக்காலமும், ஒரு படியா யுண்மையா யிருத்தலின், "தத்துவ" மெனவும், அதி சூட்சுமமாயும், நிரவயவமாயும், சுத்தம் வரை பிரபஞ்ச மேக தேசத்திற் றோற்றியிருந் தொடுங்க விடங்கொடுக்கும் வியாபகமாயு மிருக்கின்ற சிதாகாச மாதலின், "விண்" ணெனவும், சூரியன் சந்திரன் அக்கினி நக்ஷத்திர மின்னலையு மிந்திரியங் கரணம் சீவன் மாயை ஈசுரனையும், அவைகளின் றோற்றம் திதி நாச முதலானவைகளையும் பிரகாசிப்பித்துத் தானொன்றினாலேயும் பிரகாசிப்பிக்கப்படாத சுயம்பிரகாசமா யிருத்தலின், "சோதி" யெனவும்,

ஆத்மாவாகத் தோற்றின புத்திர களத்திர பூதாதிகள் வெவ்வேறு பேரையடைந்து தனக்குப் புறம்புபட்டுத் தோற்றுவது போலவும், புறம்புபடாமற் றானாகத் தோற்றின தேகம் இந்திரியம் பிராணன் மனம் புத்தி யவித்தை சீவனானவைகள், என் தேகம் என்னிந்திரியம் என் பிராணன் என் மனம் என் புத்தி என் அவித்தை என்சீவன் என்று, வெவ்வேறு பேரையடைந்து, தனக்குப் புறம்புபட்டுத் தோற்றுவது போலவும், இவைகட் கெல்லா மப்பாற்பட்டு நிருவிகார சைதன்னியமா யிருக்கின்ற பிரமம் புறம்புபடாமற் றானாகவிருத்தலின்,

"ஆத்மா" வெனவும், காணியாதி தனம் புத்திராதி தேகம் இந்திரியம் கரணம் சீவனனைவை ஒரு காலத்திற் பிரியமாயும் ஒரு காலத்திலப் பிரியமாயுந் தோற்றுவது போலின்றி, எப்போதுங் கைவிடப்படாத பிரிய வஸ்துவா யிருத்தலின், "முத்த" மெனவும், ஒன்றுக்கொன்று வியாபகமா யிருக்கின்ற அவித்தை அவித்யா விசிட்டன் சூட்சும தூல சரீரம் தூலப் பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் இரணியகருப்ப மவ்வியா கிருத மவ்வியத்தம் சுத்தம் மாயா விசிட்டன் இவனிலும் விரிந் திவைகளை வியாபித்துச் சச்சிதாநந்தமாய், அதற்கு மேலொரு வியாபக மில்லாது வியாபகமா யிருத்தலின், "விபு" வெனவும், சூட்சுமமென்று சொல்லப்படும் பரமாணுவிற் கோடியிலொரு பங்கு கனமுமில்லாமல் ஆறு இந்திரியங்களினாலும் அறியப் படாமல் ஞான சொரூபமாய் நுண்மையா யிருத்தலின், "சூக்குமம்" மெனவும் வேதங் கூறிற்றெனவுங் கூறினர்.

(அ — கை) விலக்கான நாமங்களைக் கூறல்.

அசலநிரஞ் சனமமிர்த மப்பிரமே யம்விமல மநுபா தேயம்
அசடமநா மயமசங்க மதுலநிரந் தரமகோ சரம கண்டம்
அசமநந்த மவிநாசி நிர்க்குணநிட் களநிரவ யவம நாதி
அசரீர மவிகார மத்துவித மெனவிலக்கா மநேக முண்டே.

(இ — ள்) அசலம் — அத்துவித முதலிய, விலக்காம் — நிஷேத்திய நாமங்கள், அநேக முண்டு — (இப்படியே) அநந்த நாமங்கள் உள்ளன.

(ப — ம்) தூல சரீரம் சூட்சும சரீரம் அவித்தை சீவன் பஞ்சபூத பௌதிக சமட்டிகள் மாயாப் பிரதிவிம்பரான ஈசுரன் ஆகிய இவைகள் அசைவதற் கிடமாய் அங்கதற்கு சாட்சியாய் அசைவற்றிருத்தலின், "அசல" மெனவும், தண்ணீரில் மூழ் கினவன் உடம்பிற் சலம் பற்றுகின்றதுபோலப் பற்றியிருக்கக் காணாமல் சகல பிரபஞ்சத்தினுள்ளும் புறம்பும் நிறைந்திருக் கின்ற தன்னிடத்தில் அமிழ்ந்திய தூல சரீர முதற் சுத்த பரி யந்தப் பிரபஞ்சத்தி லாகாசம் போல, பற்றுதலற் றிருத் தலின், "நிரஞ்சன" மெனவும், யோகாமிர்தம் தேவாமிர்தம் ஒவ்வொரு காலத்தில் நசித்துப் போதல் போலின்றி, மோட் சாமிர்தம் ஒரு காலத்தும் நாசமற் றிருத்தலின், "அமிர்த"

மெனவும், பஞ்சேந்திரியத்தி லறியப்படும் பஞ்ச விடயத் துக்கும், அந்தக்கரண ஞானத்தி லறியப்படு மிந்திரியம், பிராணன், கரணம், அவித்தை, சீவன், மாயை, ஈசுரனென்ற இவைகளுக்கும் அன்னியமாய்ச் சச்சிதானந்தமாய் அவ்வந்த ரிந்திரிய பகிரிந்திரியங்களை யறிகின்றதாய் அவைகளா லறி யப்படுத லற்றிருத்தலின், "அப்பிரமேய" மெனவும், மல மூத் திரம் குப்பை சேறு கலங்கல் புகை புழுதி முதலான மலம் பொருந்திய பஞ்ச பூதங்களுக்கும், சீழ் இரத்தம் பித்தம் கோழை முதலான மலம் பொருந்திய தூல சரீரங்களுக்கும், காமக் குரோத காசம் படலம் செவிடு ஊமை முதலான மலம் பொருந்தியிருக்கின்ற சூட்சும சரீரங்களுக்கும் அறிவறி யாமை மலம் பொருந்தியிருக்கின்ற அவித்யா விசிட்டர்களுக் கும், சீவர்களிடத்திற் கிருபையினாற் சிருட்டி திதி சம்மாரம் பிறப்பு முதலான மலம் பொருந்தி யிருக்கின்ற மாயா விசிட்ட ருக்கும், அன்னியமா யவைகளுடன் கூடினவன் போலத் தோற்றினும் பிரகாச வாநந்தவடிவு மாத்திரமாய் அம் மலங் களற் றிருத்தலின், "விமல" மெனவும்,

சொர்க்காதி சுகத்தை விரும்பி யதற்குக் கன்மகாண்டத் திற் கூறிய சாதனமான நித்திய நைமித்திய காமியப் பிராயச் சித்த மென்னும் நால்வகைக் கர்மத்தைச் சாங்கமாக வநுஷ் டித்தவன், அந்த சுவர்க்க பல போகமடைவன், மோட் சார்த்தமாய்ச் சிவன் விஷ்ணு முதலான தேவதைகளைக் குறித்துத் தீட்சா சுத்தி, மந்திர எந்திர தந்திரங்களை யுபதே சம் பெற்று, அந்தப்படி செபந் தியானம் பூசை தோத்திரம் தற்பணம் பிராமண போஜன முதலான பத்தி காண்டத்திற் கூறிய சாதனங்களைச் சாங்கமாக வெகுகால மனுட்டித்தவன், நால்வகையான சாலோகாதி யனித்திய முத்திகளிலொன்றை யடைவன்; நித்திய முத்தியான மோட்சத்தை விரும்பிச் சாதன சதுஷ்டய முள்ளவனாய் ஞான காண்டத்திற் கூறிய சாதனமான சிரவணாதியைச் சாவதானமாக வெகுகால மனுஷ் டித்தவனுக்குப் பிரதிபந்த நிவர்த்தியானவுடன் விரும்பித் தேடின மோட்சமா யிருக்கின்ற சச்சிதானந்த சொரூபமானது, அந்தக் கன்மகாண்ட பத்தி காண்டங்களா லடையப்படாத பொருளா யிருத்தலின், "அநுபாதேய" மெனவும், அறிவில் லாமற் சடமாய்த் தோற்றுகின்ற சகல பிரபஞ்சங்களையும் இயற்கை யறிவற்று செயற்கை யறிவாய்த் தோற்றுகின்ற

சரீரத்திரயங்களையும் இயற்கை யறிவாயிருந்து காண்கின்ற சின்மாத்திர சொரூபமானது மூடமற்றிருத்தலின், "அசட" மெனவும், தூல சரீரம் வாத பித்த சிலேட்சுமங்களா லுண்டா கும் பீடைகளையுடைய்தாயும், சூட்சும சரீரம் காமக் குரோத லோப மய்க்க முதலான சுரமுடைய்தாயும் காரண சரீரம் காரிய சரீரங்களுக்கு வித்தாய் வாசனைகளை யுண்டாக்குகின்ற சுரமுடையதாயு மிருத்தல் போலின்றி நிருபத் திரவமான சாட்சி சொரூபமானது நோயற்றிருத்தலின், "அநாமய" மெனவும்,

அஞ்ஞான காலத்தினும் ஞானம் வந்த பின்னும் மூன் றவத்தையினும் வருகின்ற பிரபஞ்சங்கள் வரும்போதும் உடன் வாராமற் போகின்றபோதும் உடன் போகாம லிவை களை யெல்லாங் காண்கின்ற அறிவு சொரூபமாய்ச் சம்மந்த மற்றிருத்தலின், "அசங்க" மெனவும், தூல சூட்சும காரண சரீரங்களும் விராட்டு இரணியகருப்ப மவ்வியாகிருத சரீரங்க ளும் ஆகாரமாய்க் கனமாயிருப்பது போலின்றி நிராகார சொரூபமானது கனமற்றிருத்தலின், "அதுல" மெனவும், ஒன்றுக் கொன்று இடை வெளியுள்ள வஸ்துக்களி லாகாச மிடைவெளி யற்றிருத்தல் போல, இடைவிட்டிருக்கின்ற சரா சரப் பிரபஞ்சங்களில் பிரம சொரூபமானது யிடையற்றிருத் தலின், "நிரந்தர" மெனவும், பதினொன் கிந்திரியங்களா லறியப் பட்ட தூல சூட்சும காரணப் பிரபஞ்சம் போலின்றி அவை களின் அன்நுவய வெதிரேகங்களைக் காண்கின்ற சாட்சி சொரூபமானது அவைகளா லறியப்படாத வஸ்துவாதலின், "அகோசர" மெனவும், ஒன்றை யொன்று கண்டிக்கின்ற லோக சித்தாந்தம் அருகனுதியாகமம், தேவ கந்தருவாரகமம், பிரமாவினுகமம், விஷ்ணுவினுகமம், உருத்திரனுகமம், புரா ணம், பாரதம், நீதிசாரம், வேதத்தின் கன்மகாண்டம் பத்தி காண்டம் போல, கண்டிக்கப்படாத உபநிட்தத்தால் நிர்ண யிக்கப்பட்ட சச்சிதாநந்த சொரூபமானது தள்ளுதலற் றிருத் தலின், "அகண்ட" மெனவும்,

மூர்த்தமா யவயவமாய் கண்டமா யிருக்கின்ற, தூல சூட் சும காரணப் பிரபஞ்சங்கள் உற்பத்தியாதல் போலின்றி, அமூர்த்தமாயும், நிரவயவமாயு,மகண்டமாயுமிருக்கின்றசொரூ பமானது, உற்பத்தியற் றிருத்தலின், "அச" மெனவும், சரீரம்

இந்திரியங்களுக்கும் அந்தக்கரணாதிகளுக்கும், பஞ்சபூதங்களுக்கும், மாயா விசிட்டருக்கும் அந்தங்காண்கினும் அந்தங்காணப்படாத சாட்சி சொரூபமானது முடிவற்றிருத்தலின், "அநந்த" மெனவும், பிராரத்த முடிவில் நாசமடைகின்ற தூல சரீரத்துக்கும், பிரளயத்தில் நாசமடைகின்ற சூட்சும சரீரத்துக்கும் ஞான உதய காலத்தி னாசமடைகின்ற காரண சரீரத்துக்குமப்பாற்பட்ட அட்சர சொரூபமான சாட்சி சைதன்னியமொருக்காலும் அழிவுறா திருத்தலின், "அவிநாசி" யெனவும், சாத்துவிக குணத்திலே ஈசுரனைக் கற்பித்து ரிராசத குணத்திலே சிவனைக் கற்பித்துந் தாமத குணத்திலே செகத்தைக் கற்பித்தும், இவைகளை விரித்தடக்கி விளையாடுகின்ற பிரதானத்திற் கப்பாற்பட்டு அவற்றிற் கதிட்டானமாய் அபரிச்சின்னமா யானந்தமா யிருக்கின்ற சொரூபமானது சத்துவ ராசத தாமத குணமற்றிருத்தலின், "நிர்க்குண" மெனவும், தாமத குண விகாரமான சூட்சுமபூத தூலபூத பௌதிகங்கள் ராசதகுண விகாரமான விசுவ தைசத பிராஞ்ஞ னென்றுஞ் சீவர்கள் சத்துவகுண விகாரமான பிரமா விஷ்ணு ருத்திர னென்றும் ஈசுரராகிய இவைகள், சகளமாயிருத்தல் போலின்றி, சச்சிதாநந்த பிரம சொரூபமானது மூர்த்தமற்றிருத்தலின், "நிஷ்கள" மெனவும்,

கரசரணாதி யவயவமுடையதா யிருக்கின்ற சரீரத் திரயங்கட்கு மன்னியமா யவத்தாத்திரய சாட்சியா யிருக்கின்ற சிதாகாச சொரூபமானது, தனக்கெனவுங் கற்பிதமான பிரபஞ்சத்தைத் தொட்டும் உறுப்பற்றிருத்தலின், "நிரவயவ" மெனவும், சரீரங்கட்கு ஆதி பூதங்கள், அவற்றிற் காதி விட்சேப சத்தி, அதற் காதி அவித்தை மாயை இவைகட் கெல்லா மாதி வஸ்துவாய், அதற்கு மற்றொரு ஆதி வஸ்து இல்லாததாயிருக்கின்ற சைதன்னியம், முதலற்றதாதலின், "அநாதி" யெனவும், சரீரமுடைத்தா யிருக்கின்ற கன்மிகள், யோகிகள், லோக பாலர்கள், பூதாதிபதிகள், கன்ம பலத்தினா லடையப்பட்ட வைசுவானரனாதியாகிய சகல அவித்யா பிரதிவிம்பருக்குஞ், செகத்தென்னுஞ் சரீரம் படைத்த மாயா விசிட்டருக்கும் அன்னியமா யிருக்கின்ற சச்சிதாநந்த சொரூபமானது தேகமற்றதாதலின், "அசரீர" மெனவும்,

பிறப்பு இறப்பாதி விகாரமுடைய அன்னமய கோசம், பசி தாகம் கொடுக்கல் வாங்கல் முதலான விகாரமுடைய

பிராணமய கோசம், காமக் குரோதாதி விகாரமுடைய மனோமயகோசம், சுகதுக்கம் கேட்டலாதி விகாரமுடைய விஞ்ஞானமயகோசம், அறிவறியாமை பிரியமோதப் பிரமோத முதலான விகாரமுடைய ஆநந்தமய கோசமாகிய பஞ்ச கோசங்களல்லாததாயும், இவைகட்கு வருகின்ற விகாரங்களையும் விகார நிவர்த்திகளையுங் காண்கின்றதாயுமிருக்கின்ற சொரூபமானது விகாரமற்றிருத்தலின், "அவிகார" மெனவும்,

மரம் செடி கொடி முதலானவைகள் பூமியிலே யுண்டாய் அப் பூமியிலேயிருந்து பூமியிலே அழிய பூமிமாத்திர மிஞ்சுகின்றது போல, அவத்தாத்திரய பிரபஞ்சங்கள் அவைகளை யறியாநின்ற சாட்சியினிடத் துண்டாயிருநது அழிய சாட்சி மாத்திரமாய் எஞ்சி நிற்கின்றபடியினாலுந் தன்னைத் தவிர ஒரு வஸ்துவு மில்லாதிருத்தலினாலும் சாட்சி சைதன்னியமானது துவைத மில்லாததா யிருத்தலால், "அத்துவித" மெனவும், வேதம் கூறிற்றெனவுங் கூறினர்.

(அ – கை) சொரூப நாமங்களின் ஒருமையைக் கூறல்.

இன்னவகை விதிவிலக்குக் குணங்கணன்றாய்ச் சேர்ந் தொருமித் தெல்லாங் கூடிச், சொன்னபொரு ளொன் றன் றி யிரண்டில்லை யொருபொருளைச் சொல்லுஞ் சொற் கள், பின்னபத மாமதனால் சத்தாதி குணப்பொருளாம் பிரம மேகம், அன்னபொரு ளொருமையறிந் தகண்டபரி பூரணமா யாவாய் நீயே. 138.

(இ – ள்) இன்னவகை – இத் தன்மையாக சுருதி கூறுநிற்கும், விதிவிலக்கு – விதியும் விலக்குமாகிய, குணங்கள் – குணங்களானவை, நன்றாய்ச் சேர்ந் தொருமித்து – நன்றாகச் சேர்ந் தொன்றுபட்டு, எல்லாங் கூடி – அனைத்துங் கூடி, சொன்ன பொருள் – சொல்லிய வஸ்துவானது, ஒன்றன்றி – ஒன்றேயல்லாமல், இரண்டில்லை – துவிதமில்லை, ஒருபொருளை – ஏகமான பிரம வஸ்துவை, சொல்லுஞ் சொற்கள் – உரைக்கும் வசனங்கள், பின்ன பதமாம் – வெவ்வேறு சத்தங்களாம், அதனால் – அக் காரணத்தினால், சத்தாதி குணம் – சச்சிதானந்த மென்னும் குணப் பதங்கட்கு, பொருளாம் – அருத்தமாகிய, பிரமம் – பிரமமானது, ஏகம் – ஒன்றேயாம், அன்ன

— அத் தன்மையான, பொருளொருமை யறிந்து — அருத்தத்தின் ஒருமையை யறிந்து, அகண்ட பரிபூரணமாய் — அகண்டமான பூரண ஸ்வரூபமாக, ஆவாய் நீயே — நீ ஆகுவாய்.

(ப — ம்) யானைக்கு உரல்போற் கால் இருப்பதைக் குறித்துக் கறையடி யெனவும், துவாரமுள்ள கை யிருப்பதைக் குறித்துப் புழைக்கை யெனவும், மலைபோலக் கையுடனிருப்பதைக் குறித்துக் கை மலை யெனவும், பெரிதான மிருகமா யிருப்பதைக் குறித்துப் பெருமா வெனவும், வெவ்வே றருத்தமுள்ள பலநாமஞ் சொல்லப்பட்டு வெவ்வேறு வஸ்து போலத் தோற்றினும் அவைகளாற் கூறும் யானையாகின்ற வஸ்துவொன்று யிருத்தல் போல, பிரம சொரூபம் நிலையுள்ளதா யிருப்பதைக் குறித்து நித்திய மெனவும், நிறைவா யிருப்பதைக் குறித்துப் பூரண மெனவும், அசைவற்றிருப்பதைக் குறித்து அசல மெனவும், அஞ்சனமற்றிருப்பதைக் குறித்து நிரஞ்சன மெனவும், வெவ்வே றருத்தமுள்ள பலநாமஞ் சொல்லப்பட்டு வெவ்வேறு போலத் தோற்றினு மவைகளாற் சொல்லும் பிரமமாகின்ற வஸ்து ஒன்றே யென்பார், "இன்ன வகை...பின்னபதமா" மெனவும், விதிவிலக்கு நாமங்கள் அநேகத்தையு முடையது பிரமமொன்றுதல் போல சத்துச் சித்து ஆநந்த நாமங்களையுடைய பிரமமொன்றுகையால் அங்ஙன மநுசந்தானஞ் செய்யிற், சஞ்சலமான மனம் சலியாமல் சொரூபத்திற் றிரமாய் நின்று கண்டிக்கப் படாததாய் மூன்று பரிச்சேதமில்லாத சொரூபமாவா யென்பார், 'அதனாற் சத்தாதி ... பூரணமாவாய் நீயே" எனவுங் கூறினார்.

(தா — ம்) இவ் விதிவிலக்கு நாமங்கள் பலவாயினு மதனால் உணர்த்தப்படும் பொருளொன்றுதல் போல, சச்சிதாநந்த மென்னும் பதங்கண் மூன்றுயினும் அவற்றாலுணர்த்தப்படும் பொருள் ஒன்றான அத்துவித வஸ்துவேயா மெனவும், அங்ஙன மொன்றென்பதை யுணர்ந்து அகண்ட சொரூபமா யநுபவிப்பா யெனவும் கூறினதாம்.

(அ — கை) குணாதீதமான வஸ்துவிற்குக் குணங் கூறலாமோ வெனில் கூறுகின்றார்.

நிற்குணவத் துவின்குணங்க ளுரைப்பதுதாய் மலடியென னிகரென்றதே, சற்குணனே வத்துநிலை யுரையாம

லறியவல்ல சதுர ருண்டோ, நற்குணவே தங்களிந்தச் சீவன்முத்தி பெறப்பிரம ஞானந் தோன்றச், சொற்குணங் கள் பிரமத்தின் குணங்களன்று பிரமமாஞ் சொரூபந் தானே. 139.

(இ — ள்) நிற்குண வஸ்துவின் — குண ரகிதமான பிரம வஸ்துவிற்கு, குணங்களுரைப்பது — இத் தன்மையான நித்தியமாதி குணங்களைக் கூறுவது, தாய் மலடி என — மாதா வந்தி என்பதற்கு, நிகரென்றோதே — சமான மென்று நீ சொல்லாதே, சற்குணனே — நற்குணமுள்ளவனே, வஸ்து நிலையுரையாமல் — வஸ்து நிச்சயத்தை வேதம் ஆசிரியர் கூறுமல், அறியவல்ல — தானே தெரிந்துகொள்ளுஞ் சாமர்த்தியமுள்ள, சதுரருண்டோ — சதுரரான முமூட்சுக்களும் உளரோ, ஆதலால். நற்குண வேதங்கள் — யாவரிடத்துங் கருணையுடைய சுருதிகள், இந்தச் சீவன் முத்திபெற — இந்தச் சீவன் முத்தியை யடையும் பொருட்டு, பிரம ஞானந் தோன்ற — பிரம ஞானம் பக்குவிகளுக்குத் தோன்றும்படி, சொற் குணங்கள் — உரைத்த சத்தாதி குணங்கள், பிரமத்தின் குணங்களன்று — பிரமத்தின் குணங்க ளல்லவாம், பிரமமாஞ் சொரூபந்தானே — பிரமத்தின் சொரூபமேயாம், நிர்க்குணம் என்பது எதுகை நோக்கி நிற்குணமென நிற்கின்றது.

(ப — ம்) வைராக்கியாதியாற் காமாதி குணங்களைப் போக்கிச் சிரவணாதியாற் றத்துவ ஞானம் பெற்றிருக்கின்ற சீடனே, ரத்தினமாதி வஸ்துக்கள் சட்சிந்திரியத்தினால் அறியத்தக்கனவா யிருந்தபோதிலும், அதனதன் சுபாசுபங்களை அறிந்தவர் கூறக்கேட்டேயறிதல் போல, பதினொன்கு இந்திரியத்தினாலும் அறியக்கூடாத் நிர்க்குண சொரூபத்தைக் கூறக் கேட்டா லறியலாமே தவிர, யில்லாவிடி லெவ்வளவு சமர்த்தரானாலும் அறியக்கூடாதாகையால் முமூட்சுக்கள் சொரூபத்தை யறியும் பொருட்டு வேதம் சத்துச் சித்தாநந்தமெனக் கூறிற்றென்பார், "சற்குணனே ... சதுரருண்டோ" வெனவும், மண்ணினுடைய கடின குணஞ் சலசம்பந்தத்தினா னீங்கி மண் வேறா யிருப்பதுபோலச் சச்சிதாநந்த குணங்கணீங்கிப் பிரமம் வேறாயிராமல் சத்தே பிரமம் சித்தே பிரமம் ஆநந்தமே பிரமமா யிருக்கின்ற தென்பார், "சொற்குணங்கள் ... பிரமமாஞ் சொரூப" மெனவுங் கூறினார்.

(தா—ம்) நிர்க்குண சொரூபத்தை முமுட்சுக்களுக்கு அறிவிக்கும் பொருட்டு வேதஞ் சச்சிதாநந்தமெனக் கூறிற் றெனவும் அவைகள் பிரமத்தின் சொரூபமே யன்றிக் குணங்க ளல்லவெனவுங் கூறினதாம்.

(அ—கை) சச்சிதாநந்தப் பொருளொன் றென்பதைச் சுருதியிற் காட்டினது போல யுத்தியினாலும் காட்டவேண்டு மென வினாதல்.

மோகவிருள் கெடக்கோடி யருணனென வருகுருவே
மொழியக் கேளீர், ஏகபரி பூரணமா மென்சொரூப மென்
னுளத்தி லிறுகும் வண்ண, மாகமங்கள் சொன்னபடி
யென்னையகண் டார்த்தமா வறிந்தே னையா, ஊகமுமொத்
திடவுரைத்தாற் பசுமரத்தி லாணிபோ லுறைக்கு நெஞ்சே

(இ—ள்) மோக இருள் கெட — அஞ்ஞான அந்தகார மானது நீங்க, கோடி யருணனென — கோடி சூரியருதயமானது போல, வருகுருவே — எழுந்தருளிய ஆசிரியரே, மொழியக் கேளீர் — அடியேன் சொல்வதைக் கேட்பீர், ஏகபரிபூரணமாம் — ஒன்றான பூரண சொரூபமாகிய, என் சொரூபம் — எனது பிரமஸ்வரூபம், என்னுள்ளத்தில் — எனது இருதயத்தில், இறுகும் வண்ணம் — அழுந்துமாறு, ஆகமங்கள் சொன்ன படி — சுருதிகள் கூறியபடி, என்னை — எனது ஸ்வரூபத்தை, அகண்டார்த்தமா — ஏகார்த்தமாய், அறிந்தேன் — தெரிந்து கொண்டேன், ஐயா — எனது ஆசிரியரே, ஊகமும் ஒத்திட — சச்சிதாநந்தம் ஏகமென்பதில் உத்தியும் எனக்குச் சம்மதமா கும்படி, உரைத்தால் — அருளிச் செய்தால், நெஞ்சு — என் மன மானது, பசுமரத்தி லாணிபோல் — பச்சை மரத்தில் அறை யும் ஆணியைப் போல, உரைக்கும் — அநுபூதியில் ஸ்திரப் படும்.

(ப—ம்) ஒரு சூரியனுதிக்கும் போதே நீங்கிப் போகத் தக்க பதார்த்தங்களை மறைக்கும் இருளை நீக்குகின்றதற்காக வநேக சூரிய ருதித்தா லெப்படியோ அப்படி ஓர் மொழி யுப தேசித்த மாத்திரமே கெடும்படியான ஆத்மப் பொருளை மறைத்த அஞ்ஞான வந்தகாரத்தை நீக்குகின்றதற்காகப் பூரணமே திருவுருவா யெழுந்தருளிக் கருணையினா லநேக வாக்

இயங்களுஞ் சுருதி யுத்தி அநுபவமுங் கூறுகின்ற தேசிகரே யென்று னென்பார், "மோக விருள் ... குருவே" என்றார்.

(தா – ம்) அகண்டாநுபவ முண்டாகும் பொருட்டுச் சச்சிதாநந்தம் ஒருமை யென்பதற்கு யுத்திகூறும்படி வேண்டிக் கொண்டதாம்.

(அ – கை) அவ்வினாவிற் குத்தரங் கூறல்.

சத்தேசித் தர்குமய லெனிலசத்தா மசத்தானாற் சாட்சி யெங்கே, சித்தேசத் தாகுமய லெனிற்சடமாஞ் சடங்களுக்குத் திதியு மில்லை, ஒத்தேதோன் றியசத்துஞ் சித்து நல்ல சுகமாகு மூகத் துக்கோர், வித்தேயன் னியமாகிற் சடமசத்தாஞ் சுகாநுபவம் விளைந்தி டாதே. 141

(இ – ள்) சத்தே – யாதொன் றிருக்கின்றதோ அதுவே, சித்தாகும் – அறிகின்றதாம், அயலெனில் – சத்துக்குச் சித்து வேறென்றால், அசத்தாம் – சத்துக்கு வேறான சித்து இல்லாததேயாம், அசத்தானால் – அச் சித்து அப்படி இல்லாததே யாமாகில், சாட்சி எங்கே – அவ்வில்லாத சித்துக்கு அறிகின்ற சாட்சித் தன்மை யெவ்விடத் துளவாகும், சித்தே – யாதொன் றறிகின்றதோ அதுவே, சத்தாகும் – இருக்கின்றதாம், அயலெனில் – சித்துக்கு சத்து வேறென்றால், சடமாம் – சித்துக்கு வேறான சத்து மூடமாம், சத்து அப்படி மூடமானால், சடங்களுக்குத் திதியு மில்லை – அங்ஙன மூடமானவற்றிற்கு இருக்குந் தன்மை யில்லாததே யாகும், சத்தும் – இருக்கின்றதும், சித்தும் – அறிகின்றதும், ஒத்தே – பொருந்தினது யாதோ அதுவே, தோன்றிய – விளங்கா நின்ற, நல்ல சுகமாகும் – நிரதிசயாநந்தமாகும், அன்னியமாகில் – ஏகமான சத்துச் சித்துக்கு ஆநந்தம் வேறென்றால், சடமசத்தாம் – அவ் வேகமான சத்துச் சித்துக்கு வேறான ஆநந்தம் மூடம் இல்லாததுமாகும், அவ்வாநந்த மப்படியானால், சுகாநுபவம் விளைந்திடாது – ஆநந்தாநுபவம் உதியாது, ஊகத்துக்கு – இங்ஙனங் கூறிய யுத்தியே ஏனைய நாமங்களை உணர்வதற்கு ஓர் வித்து – ஒப்பற்ற மூலமாம்.

(ப – ம்) திரிகாலத்து மிருக்கின்ற சத்தே சித்தாகாது சித்து அன்னியமாகிற் சித்துக்கு இருந்தறியும் தன்மையில்லை

சடமேயாகு மென்பார், "சத்தே ... சாட்சி எங்கே" யெனவும், திரிகாலத்து மறிகின்ற சித்தே சத்தாகாது சத்து அன்னியமாகில் அச் சத்துக்கு அறிந்துகொண்டிருக்குந் தன்மையில்லை அசத்தேயாகு மென்பார், "சித்தே சத்தாகும் ... இதுயுமில்லை" யெனவும், சத்துஞ் சித்து மேகமானதே யானந்தமாகாது ஆனந்த மன்னியமாகில் அவ்வானந்தத்துக்கு அறிந்துகொண்டிருந்து சுகமாகுந் தன்மையில்லை துக்கமேயாகு மென்பார், "ஒத்தே தோன்றிய ... விளைந்திடா" தெனவும், ஆத்மாவே நித்திய பூரண முதலான தென்றும் அசல நிரஞ்சன முதலான தென்று மறிதற்கு இங்ஙனமே யுத்தி செய்ய வேண்டு மென்பார், "ஊகத்துக்கோர் வித்" தெனவுங் கூறினார்.

(தா — ம்) இருக்கின்றதே யறியுமாகையாற் சத்தே சித்தெனவும், அறிகின்றதே யிருக்கு மாகையாற் சித்தே சத்தெனவும், இருந்தறிகின்றதே சுகமாகு மாகையாற் சத்துஞ் சித்து மேகமானதே யானந்தமாகு மெனவும், உத்தியினாற் சச்சிதானந்த வொருமையை யுணர்த்தியதாம்.

(அ — கை) சச்சிதானந்த வொருமைக்கு யுத்தியை வற்புறுத்திக் கூறுதல்.

வீயாத சத்துமுன்னம் விளங்குவது தன்னாலோ
வேறொன்றாலோ, வாயால்வே றெனிலதுவு மசத்தோசத்
தோவசத்தேன் மலடி மைந்தன், பேயாகா ரியஞ்செயுமோ
சத்தெனவிப் படியதையும் பிரித்துச்சொன்னால், ஓயாத
வவத்தையாங் குதர்க்கவிகற் பங்களைவிட் டொழிந்திடாயே.
**142.**

(இ — ள்) வீயாத சத்து — திரிகாலங்களினும் நசியாதிருக்கின்ற சத்தானது, முன்னம் விளங்குவது — ஆதியிற் பிரகாசிப்பது, தன்னாலோ — சுவயமாகவோ, வேறொன்றாலோ — மற்றொன்றாலேயோ, வாயால் வேறெனில் — வாக்கினால் சத்து அன்னியத்தினாற் பிரகாசிக்கிற தென்பையானால், அதுவும் — அவ் வயலானதும், அசத்தோ — இல்லாததோ (அன்றி,) சத்தோ — இருக்கின்றதோ, அசத்தேல் — இல்லாததே யென்றால், பேயா — பேய்த் தன்மை யுடையவனே, மலடி மைந்தன்

— வந்தியர் புத்திரன், காரியஞ் செயுமோ — ஒரு தொழிலைச் செய்வானோ (அதுபோல அசத்து சத்தை விளக்குமோ விளக்காது) அதையும் — அவ்வயலர்னதையும், இப்படி — இந்தச் சத்தைப் போல, சத்தென — சத்தென்று, பிரித்துச் சொன்னால் — வேறொரு சத்தாகக் கூறினால், ஓயாத வவத்தையாம் — அனவஸ்தா தோஷமுண்டாகு மானதினாலே, குதர்க்க விகற்பங்களை — இந்தத் துர்யுத்தியான வேறுபாடுகளை விட்டு ஒழிந்திடாய் — தவிர்ந்து விடுவாய்.

(ப — ம்) எப்போது மிருக்கின்ற ஆத்மா தானே பிரகாசிக்கின்றதே யன்றி மற்றொன்றினாற் பிரகாசிக்காதே யென்பார், "வீயாத ... வேறொன்றாலோ" வெனவும், அசத்தான வந்தியா புத்திரன் சத்தான ராச்ரீக விவகாரஞ் செய்தலில்லாத்து போலக் காலத் திரயத்திலு மில்லா திருக்கின்றது எப்போது மிருக்கின்ற வாத்மாவை எங்ஙனம் பிரகாசிப்பிக்குமென்பார் "அசத்தேல் ... காரியஞ் செய்யுமோ" வெனவும், இருக்கின்ற ஓர் தீபமானது மற்றோர் தீபத்தினாற் பிரகாசிக்கிறதென்றால், தீபஞ் சமானமாகையா லதனாற் பிரகாசிக்கிறதென்பது கூடாது, அந்த மறுதீபம் வேறொன்றினிடத்திற் பிரகாசம் பெற்றுக் கொண் டிந்த தீபத்தை பிரகாசிக்கிறதென்றால் அத் தீபம் மற்றொன்றினிடத்திற் பிரகாசம் பெற்றுக் கொண்டு பிரகாசிப்பிக்கிறது, அத் தீபம் வேறொன்றினிடத்திற் பிரகாசம் பெற்றுக்கொண்டு பிரகாசிப்பிக்கிறதென்று மேலு மேலுஞ் சொல்ல வரும்.

அதுபோல திரிகாலத்திலுமுள்ள சத்து மற்றோர் சத்தினாலே பிரகாசிக்கிறதென்றால் அச்சத்து சமானமாகையினால் அதினால் பிரகாசிக்கிறதென்பது கூடாது, அந்த மறுசத்து வேறொரு சத்தினிடத்திற் பிரகாசம் பெற்றுக்கொண்டு அச்சத்தைப் பிரகாசிப்பிக்கிறதென்றா லந்தச் சத்து மற்றோர் சத்தினிடத்திற் பிரகாசம் பெற்றுக்கொண்டு பிரகாசிப்பிக்கிறது, அந்தச் சத்து வேறோர் சத்தினிடத்தில் பிரகாசம் பெற்றுக் கொண்டு பிரகாசிப்பிக்கிறதென்று அனவஸ்தா தோஷ முண்டாகி ஆத்ம நிச்சய முண்டாகாது, அதனாற் சனன மரண நீங்காதென்பார், "சத்தென விப்படி ... ஓயாத வவத்தையா" மெனவும், சத்தை மறுசத்து பிரகாசிப்பிக்கிறதென்றால், அச் சத்து தான் சுயமாகப் பிரகாசித்துக்

கொண்டே பிரகாசிப்பிக்கிறதென்று சொல்லவேண்டு மாகையாலும் வேதாந்தத்தில் இரண்டு சத்து இல்லை ஆகையாலும் எந்தச் சத்துத்தான் சுயமாகப் பிரகாசிக்கிறதோ அந்தச் சத்தே சித்தென்றும், மற்றது சத்தன்றென்றும், அச் சித்தான சத்து அத்துவித மாகையால் அதுவே ஆநந்த மென்றுஞ், சையுத்தியினாலே தெளிந்துகொண்டு சுகத்தை யடைவாய் என்பார், "குதர்க்க ... ஒழிந்திடாய்" எனவுங் கூறினர்.

(தா – ம்) சத்தை மறுசத்து பிரகாசிப்பிக்கிறது என்றால் மேலு மேலுஞ் சத்துண்டென்று அனவஸ்தா தோஷமுண்டாகு மாகையாற் சத்தே சித்தெனத் தெளிவா யென்றதாம்.

(அ – கை) சச்சிதாநந்தப் பொருளொன் றென்பதற்கநுபவம் கூறல்.

சுருதியுத்தி யொத்ததுபோல நுபவமுங் கேள்சுழுத்திச் சுகவா நந்தம், மிருதிவடி வாதலிலவ் வாநந்த மேயறிவாம் வேறங் கில்லை, கருதுபிர ளயஞ்சுழுத்தி யிரண்டிலுநீ யிருந்திருளைக் காண்கின் றாயே, இருதயத்திப் படிநோக்கி யேக பரி பூரணமா யிருந்தி டாயே. 143

(இ – ள்) சுருதி – சுருதிப் பிரமாணத்தினாலும், யுத்தி – யுத்திப் பிரமாணத்தினாலும், ஒத்தது போல் – சச்சிதாநந்தப் பொருளொருமை வுணர்த்தியது உனக்குச் சம்மதமானது போல், அநுபவமும் கேள் – அதற் கநுபவப் பிரமாணமும் கூறுதும் கேட்பாய், சுழுத்தி சுகவாநந்தம் – சுழுத்தியவத்தையிலுள்ள சுகமாகிய வாநந்தமானது, மிருதிவடிவாதலின் – நித்திரையி லஞ்ஞானத்தை யறிந்து ஒன்றையு மறியாதிருந்தேனென்ற நினைப்பு ரூபமாய் வெளிப்படுதலின், அவ்வாநந்தமே – அந்தச் சுகமே, அறிவாம். – சித்தாகும். (அவ் வஞ்ஞானம் வேறொன்றினாலே யறியப்படுகிறதென்று சொல்லுவோமெனில்) வேறங்கில்லை – அச் சுழுத்தியில் அதை அறிதற்கு ஆநந்தத்தை விட் வேறொரு பிரகாசமு மில்லை, (ஆனதினா லாநந்தமே சித்து) பிரளயம் – கற்பாந்தமும், கருது சுழுத்தி – சுகமடைய விரும்புகின்ற சுழுத்தி அவத்தையுமாகிய, இரண்டிலும் – இவ் விரண்டவத்தையிலும், நீயிருந்து

— நீ சத்தாக விருந்து, இருளை — மாயையும் அவித்தையுமாகிய அந்தகாரத்தை, காண்கின்றாயே — அறிகின்றாயல்லவா, (ஆனதால் சித்தாகிய வாநந்தமே சத்து) இருதயத்து — உனதிதயத்தில், இப்படி நோக்கி — இவ்விதமான வநுபவத்தினால் சத்தே சித்து சித்தான சத்தே ஆநந்தமெனவும் அச்சச்சிதாநந்தமான அத்துவித சொரூபமே நீயெனவு மறிந்து, ஏக பரிபூரணமா யிருந்திடாய் — ஒன்றான அகண்ட சொரூபமாகவே இருப்பாய்.

(ப — ம்) சுழுத்தி யவத்தையி லப்பிரகாசமான அஞ்ஞானத்தை, சூரிய சந்திர அக்கினி மின்னல் நக்ஷத்திர இந்திரிய கரணப் பிரகாசங்க ளொன்றுமில்லா திருக்கச் சொப்பிரகாசமான வாநந்த மாத்திரமே இருந்தறிகின்றபடியினா லாநந்தமே சித்தென்பார், "சுழுத்திச் சுகவாநந்தம் ... வேறங்கில்லை" யெனவும், எதையறிய வேண்டுமானாலு மிருந்தே யறிய வேண்டும் இல்லா தறியக் கூடாதாகையால் அப்பிரமப் பிரளயாவத்தையிற் சகலப் பிரபஞ்சமும் லீனமான மாயா வந்தகாரத்தையுந் தினப் பிரளயமாகின்ற சுழுத்தியவத்தையிற் றேகேந்திரியாதி சகலமும் லீனமான அவித்யா வந்தகாரத்தையு மறிகின்ற ஆநந்த ரூபமான சித்தே சத்தென்பார், "பிரளயம் ... காண்கின்றாயே" எனவும் கூறினார்.

(தா — ம்) ஆநந்தமே அஞ்ஞானத்தை யறிகையினா லதுவே சித்தெனவும் இருந்தே அறிகையினால் அந்தச் சித்தான ஆநந்தமே சத்தெனவுங் கூறினதாம்.

(அ — கை) சுருதி யுத்தி அநுபவப்படி சீடன் சகச நிட்டையிற் பெற்ற வநுபவங் கூறல்.

பலகலையு முணர்ந்தகுரு மொழிந்தபடி யிவனுமநு
பவம் விடாமல், பலமலரின் மதுப்போல சச்சிதா நந்த
மொன்றும் பரமார்த் தத்தைப், பலபொழுதுங் கண்மூடிச்
சமா தியிருந் தான்விழித்துப் பார்த்த போது, பலவடிவாஞ்
சராசரசித் திரங்களெலாந் தோன்றுமொரு படமானேனே.

(இ — ள்) பலகலையு முணர்ந்த குரு — சகல சாஸ்திரங்களையும் ஐயந்திரிபின்றி யுணர்ந்து இருக்கிற ஞானாசாரியர், மொழிந்தபடி — அநுக்கிரகித்த வண்ணம், இவனும் — இச்

சீடனும், அநுபவம் விடாமல் — அநுபவத்தை விட்டு நீங்காமல், பல மலரின் மதுப் போல — நானு புட்பங்களி லிருக்கும் தேன் ஒருமித்தது போல, சச்சிதானந்த மொன்றும் — சச்சிதானந்தங்க ளேகமாகிய, பரமார்த்தத்தை — அத்துவிதப் பிரமப் பொருளை நாடி, பல பொழுதும் — எப்போதும், கண்மூடிச் சமாதி யிருந்தான் — ஊனக் கண்ணை மூடி ஸ்வரூப சமாதியிலிருந்தான், விழித்துப் பார்த்த போது — சமாதியினின்றும் உத்திதனாய் ஞான விழியால் பார்க்கும் போது, பல வடிவாம் — நானாவித உருவங்களான, சராசர சித்திரங்க ளெலாம் — சேதநா சேதனங்களாகிய சித்திரங்க ளனைத்தும், தோன்றும் — தோன்றுகின்ற, ஒருபடமானான் — ஓர் சித்திரப் படமானான்.

(ப — ம்) காண்டத் திரயங்களையு மையந்திரிபின்றி நன்றாய் விசாரித்துக் கன்ம காண்டம் பத்தி காண்டத்திற் கூறியவை பூருவபட்ச மெனவும், ஞான காண்டத்திற் கூறிய வஸ்து சித்தாந்த மெனவுங் கண்டு அப் பூருவபட்சங்களை விடுத்து அச் சித்தாந்தமான வஸ்துவைத் தானாக வபரோட்சமா யறிந்து சகலருக்கு மவ் வஸ்துவின் அநுபவமுண்டாகும்படி போதிக்கின்றவரா யிருக்கின்ற ஞானாசாரிய ரென்பார், "பல கலையு முணர்ந்த குரு" வெனவும், சேதநா சேதனமாயிருக்கின்ற சகலப் பிரபஞ்சங்களுக்கு மாதாரமாயு மவைகளுக் கதிட்டானமாயுஞ் சருவாத்மகமாயு மிருக்கின்ற அத்திபாதிப் பிரியமாகிய அத்துவித சொரூபமானா னென்பார், "பல வடிவாம் ... படமானான்" எனவுங் கூறினார்.

(தா — ம்) சச்சிதானந்த வொருமையான வத்துவித சொரூபமே தானாகித் தானே யாவுமாக விளங்குகின்ற சாட்சாத்கார வநுபவம் பெற்றானயினா னென்பதாம்.

(அ — கை) அவ் வகண்டாநுபவம் பெற்ற சீடன் முன் துரியாதீத மேழாம் பூமி முக்கிய மென்றது இன்னதெனவும் அதின் வகை யின்னவெனவுங் கூறவேண்டுமெனல்.

இதயமொத்த சற்குருவே நமக்கிதுவே விநோதமன்றி யினிவே றுண்டோ, அதையுரைத்து மதைநினைத்து மிருப்பதன்றோ ஞானிகளுக் கான நீதி, முதலுரைத்த துரியாதீதமுமேழாம் பூமியுமுக் கியமாமென்ற, பதமுமதின் வகையுமெனக் கெளிதாகத் தெளியும்வண்ணம் பணித்திடரே.

(இ – ள்) இதயமொத்த சற்குருவே – எனது மனத்துக் கொத்த வாசிரியரே, நமக்கு – கிருத கிருத்தியரான நமக்கு, இதுவே – பிரம சொரூபத்தைத் தியானிப்பதும் பிரதிபாதிப் பதுமாகிய இதுவே, விநோதமன்றி – லீலையல்லாமல், இனி வேறுண்டோ – இனிமேல் இதற் கன்னியமாகக் கன்மாதிகள் செய்ய வேண்டுவனவோ? இல்லை. அதை யுரைத்தும் – பிரமத்தை முமூட்சுக்களிடத்திலாவது ஞானிகளிடத்திலா வது பிரதிபாதித்துக்கொண்டும், அதை நினைத்தும் – தனித் திருந்தால் சொரூபத்தைத் தியானித்துக் கொண்டும், இருப் பதன்றோ – இருப்பதன்றோ, ஞானிகளுக் கானநீதி – ஞான வான்களுக்கான சுபாவம், (ஆனதால்.) முதலுரைத்த – முன் சொன்ன, துரியாதீதமும் – துரியாதீதத்தையும், ஏழாம் பூமி யும் – ஏழாவது பூமியும், முக்கியமா மென்ற பதமும் – முக்கிய மென்று சொல்லிய பதமும், அதின் வகையும் – அதன் பகுப் பையும், எனக்கு – அடியேனுக்கு, எளிதாகத் தெளியும் வண் ணம் – சுலபமாகத் தெரியும்படி, பணித்திடீர் – அருள் செய்வீர்.

(ப – ம்) சகலப் பிரபஞ்சமுந் தன்னைத் தவிர வேறல்ல வென்றுஞ் சாட்சாத்கார வநுபவம் பெற்று வேறொன்றும் அடையத்தக்க தில்லா திருப்பதினாலே, நித்த சுத்த புத்த மூத்த சத்திய பரமாநந்தாத்துவிதப் பிரம சொரூபத்தை, லீலையாகத் தியானித்துக் கொண்டும், அதனைப் பிரதிபாதித் துக் கொண்டு மிருக்கவேண்டுவதே யன்றிச் சற்குருநாதனே இனிமேல் நமக்குக் கன்மாதி தொழில் செய்யவேண்டுவ தின்றே யென்று னென்பார், "நமக்கிதுவே ... வேறுண்டோ" வெனவும், உயர்ந்த இரத்தின முள்ளவன் அதன் விலை தெரிந் தோரும், அதை விலைக்குக் கொள்ளுவோரும், வந்தாலதைக் குறித்துப் பேசியும் தனித்திருக்கும்போது இவ்வளவு உயர்ந்த இரத்தினம் வைத்திருக்கின்றோ மென்று நினைத்தும் மகிழ்வடைந் திருப்பது போல, அகண்ட சொரூபாநுபவம் பெற்ற ஞானிகள் அவ்வநுபவமுள்ள ஞானிகளாவது அதை அடைய விரும்புகின்ற முமூட்சுக்களாவது கூடவிருந்தால் அச் சொரூபத்தைப் பிரதிபாதித்துக் கொண்டும் தனித் திருந்தா லச்சொரூபத்தைத் தியானித்துத் திருப்தியடைந்து கொண்டு மிருக்கின்றதுதானே சுபாவ மென்பார், "அதை யுரைத்து ... நீதி" யெனவுங் கூறினார்.

(தா – ம்) ஆரூடர்கள் ஆத்ம சொருபத்தைப் பிரதிபா தித்துக் கொண்டிருப்பது லீலையே யன்றி அப்பியாசிகளைப் போலல்ல என்பதாம்.

(அ – கை) சுவரூபவத்திற் செல்லும் மனோலய மார்க்க மான ஞான சத்த பூமியைக் கூறுவான் ருெடங்கி, யவற்றிற் குதாரணமான அஞ்ஞான பூமியை முற் கூறுகின்றார்.

வினவுமிடத் தஞ்ஞான பூமிகளேழ் ஞானபூ மிகளே
மென்பார், இனியவற்று ளஞ்ஞான பூமிகளே ழையுமுந்தி
யியம்பக் கேளாய், தனிவித்துச் சாக்கிரஞ்சாக் கிரமகா
சாக்கிரஞ்சாக் கிரத்தைச் சார்ந்த, கனவுகனுக் கனவுசாக்
கிரஞ்சுழுத்தி யென்றெழுபேர் கணித்தார் மேலோர். 146

(இ – ள்) வினவு மிடத்து – விசாரிக்கு மிடத்தில், அஞ் ஞான பூமிகளேழ் – அஞ்ஞான பூமிகளேழ் என்றும், ஞான பூமிகளேழ் என்பார் – ஞான பூமிகளேழென்றும் வசிஷ்ட முதலிய சாஸ்திரங்களில் பெரியோர் கூறுவர், இனியவற்றுள் – இனி அவைகளுக்குள், அஞ்ஞான பூமிகளேழையும் – அஞ் ஞான பூமிகளேழினையும், முந்தி யியம்பக் கேளாய் – முன்பு சொல்லுவோம் கேட்பாய், தனி – தனிமையான, வித்துச் சாக்கிரம் – வித்து நனவு எனவும், சாக்கிரம் – நனவெனவும், மகா சாக்கிரம் – மகா நனவெனவும், சாக்கிரத்தைச் சார்ந்த கனவு – நனுக் கனவெனவும், கனு – சொப்பன மெனவும், கனவு சாக்கிரம் – சொப்பன சாக்கிர மெனவும், சுழுத்தி யென்று – சுழுத்தி யெனவும், எழுபேர் – ஏழு நாமங்களை, மேலோர் – மகான்கள், கணித்தார் – கூறினார்.

(தா – ம்) அஞ்ஞான பூமிகளேழின் நாமங்களைக் கூறின தாம்.

(அ – கை) அவற்றுள் நான்கு பூமிகளி னிலக்கணங் கூறல்.

முந்தவகண் டத்தெழுமோ ரறிவுமாத் திரமதுதான்
முதல்வித் தாகு, மிந்தவறி விற்பண்டில் லாவகந்தை முளை
போலா மிதுந னுவாம், வந்துவந்து பிறவிதொறு மகம
மதை வளருமது மகாந னுவாம், நந்துமகங் கொடுநனவின்
மனோராச்சி யஞ்செயலே நனுக்க னுவே. 147

(இ – ள்) முந்த – முன்பு, அகண்டத் தெழும் – பரிபூரண பிரம சொரூபத்தில் உதித்த, ஓரறிவு மாத்திரம் – ஓர் போத மாகிய, அதுதான் – அதுவே, முதல் வித்தாகும் – முதலா வதான பீஜசாக்கிரமாம், இந்த அறிவில் – இவ் விதையாகிய போதத்தில், பண்டில்லா – முன்னமில்லாத, அகந்தை – அகந்தை மமதைகள், முளை போலாம் – அங்குரம் போல சூட்சுமமாக உண்டாகும், இது நனவாம் – இது சாக்கிரமா கும், வந்து வந்து – உண்டாகி உண்டாகி, பிறவிதொறும் – சனனங்கடோறும், அக மமதை வளரும் – யான் எனதென்கிற விருட்சம் வளரும், அது மகா நனவாம் – அது மகா சாக்கிர மாம், நந்துமகங் கொடு – எழுகின்ற மனத்தினால், நனவில் – சாக்கிரத்தில், மனோ ராச்சியஞ் செயல் – மனோ ராச்சியம் செய் வது, நனக்கனா – சாக்கிர சொப்பனமாம்.

(ப – ம்) பரிபூரணப் பிரம சொரூபத்தினின்று நாமமும் ரூபமுமின்றி மேலுண்டாகும் மன முதலிய நாம ரூபக் கிரியை களுக்குஆதாரமா யவித்தைபோன்றிருக்கும் போதமே முதலா வதான அஞ்ஞான பூமியென்பார், "முந்தவகண்டத் … முதல் வித்தாகு" மெனவும், அந்தப் போதமாகிய சீவனுக்கு அதற்கு முன்னில்லாத படியினாலே அற்பமாகத் தேகேந்திரி யாதிகளில் யானென்றும் பிரபஞ்சத்தில் எனது என்று முண் டாகின்ற நிச்சயமே இரண்டாவதான அஞ்ஞான பூமி யென் பார், "இந்த வறிவில் … இது நனவா" மெனவும், அச் சீவ னுக்கு மேலுண்டாகின்ற செனனந்தோறு முற் பிறவியின் வாசனைத் தொடர்பினாலே, நான் இன்ன வருணாச்சிரம மாதி யையுடையவ னென்றும் இவன் எனக்குத் தாழ்ந்தோன் அவன் எனக்கு உயர்ந்தோன் என்றும் இவள் அவள் என்று மிது நல்லது அது பொல்லாதது என்னுடையது பிறருடைய தென்றும விருத்தியடைகின்ற நிச்சயமே மூன்றாவதான அஞ் ஞான பூமி யென்பார், "வந்துவந்து … அதுமகாநன" வென வும், அந்தச் சீவனானவன் அறிந்த விடயத்தைக் குறித்தா னாலு மறியாத விடயத்தைக் குறித்தானாலுஞ் சாக்கிராவஸ் தையில் மேலு மேலுஞ் சங்கற்ப விகற்பமா யெழுகின்ற மனத் தினால் அந்தந்த விடயாகாரமா யழுந்திச் சிந்தனை செய்கின் றதே நான்காவதான அஞ்ஞான பூமி யென்பார், "நந்துமகங் கொடு … நனக்கனா" வெனவுங் கூறினார்.

(தா — ம்) பிரம சொரூபத்தில் நாம ரூப ரகிதமா யுண்டான பிரக்ஞையே வித்து சாக்கிர மெனவும், அவ்வறிவு சூட்சுமமாய் யானெனதென்று தோற்ற முண்டானதே சாக்கிர மெனவும், யான் எனதென்னு மத்தோற்றம் விருத்தியடைந்ததே மகா சாக்கிர மெனவும், பார்த்த விடயத்தையும் பாராத விடயத்தையுங் கருதிப் பயனின்றிச் சாக்கிரத்தில் மனோ ராச்சியஞ் செய்வதே சாக்கிர சொப்பன மெனவும் கூறினதாம்.

(அ — கை) ஏனைய மூன்று பூமிகளி னிலக்கணங் கூறல்.

உண்டுறங்கி மனோராச்சி யஞ்செயல்சொப் பனமெ
னும்பே ருடைய தாகும், பண்டுகனுக் கண்டுமறந் ததை
மீண்டு நினைப்பதுசொப் பனந னுவாம், மண்டுமிருண் மூடு
வது சுழுத்தியா மஞ்ஞான வகைகள் சொன்னோம், விண்டு
நிறை முத்திதரு ஞானபூமிகளேழும் விளம்பக் கேளாய்.

(இ — ள்) உண்டுறங்கி — புசித்து நித்திரை செய்து, மனோராச்சியஞ் செயல் — சொப்பனத்தில் கண்டதை விழித்தவுடன் சாக்கிரத்தில் சிந்திக்கின்றதே, சொப்பன மெனும் பேருடையதாகும் — கனுவென்னு நாமமுள்ளதாம், பண்டு கனுக் கண்டு மறந்ததை — பூருவஞ் சொப்பனங் கண்டு மறந்ததை, மீண்டும் நினைப்பது — மறுபடியும் ஞாபகப்படுத்திப் பார்ப்பது, சொப்பன நனுவாம் — சொப்பன சாக்கிரமாம், மண்டுமிருண் மூடுவது — பிரபஞ்ச மடங்கியிருக்கிற அஞ்ஞான வந்தகாரமானது மூடி சடமாயிருப்பது, சுழுத்தியாம்—சுழுத்தி யென்னு மேழாம் பூமியாம், அஞ்ஞான வகைகள் சொன்னோம் — அஞ்ஞான பூமிகளின் விதத்தைக் கூறினோம், விண்டு — நீங்கி, நிறை முத்தி தரும் — பரிபூரணமான கைவல்லியத்தைக் கொடுக்கும், ஞான பூமிகளேழும் — ஞான பூமிகளேழையும், விளம்பக் கேளாய் — சொல்லக் கேட்பாய்.

(ப — ம்) சாக்கிரத்தில் கானல் நீராகவும் கிளிஞ்சில் வெள்ளியாகவும் சந்திரன் இரண்டாகவும் மாறித் தோற்றுவது போல, அச் சீவன் நித்திரை மயக்கமான சொப்பனத்தி லற்ப காலத்தி லநேக வருடஞ் சென்றது போலவும் தாரித்திரன் தனவான் போலவும் தன் தலையை வெட்டித் தான் தூக்கிக் கொண்டு போனது போலவும் இதுமுதலான விபரீதத்தோற்றத்தைக் கண்டு சாக்கிரத்தில் விழித்தவைகளை நினைக்கின்

றதே ஐந்தாவதான அஞ்ஞான பூமி யென்பார், "உண்டுறங்கி ... சொப்பன மெனும் பேருடையதா" மெனவும், அச் சீவன் வெகு காலத்துக்கு முன் சொப்பனத்திற் கண்டு மறந்த வஸ்துவைச் சாக்கிரத்தில் எதிரே யிருக்கின்ற வஸ்துக்கள் தோன்றுதபடி மறந்துவிட்டு வெகுநேரம் ஞாபகப்படுத்திப் பார்க்கும் போது சாக்கிரம் போலத் தோற்றுகின்றதே ஆறுவதான அஞ்ஞான பூமி யென்பார், "பண்டு கணுக் கண்டு ... சொற்பன னவா" மெனவுஞ் சகலப் பிரபஞ்சத்தையு மடக்கியிருக்கின்ற தாயு மந்தகாரமாயுஞ் சடமாயும் அநேக துக்கத்துக் கேதுவான பிரக்ஞை யுடையதாயு மிருக்கின்றதே ஏழாவதான அஞ்ஞான பூமி யென்பார், "மண்டு மிருண் ... சுழுத்தியா" மெனவுங் கூறினர்.

(தா – ம்) நித்திரை மயக்கத்திற் காண்கின்ற நாமரூபத்தை நினைப்பது சொப்பன மெனவும், சொப்பனத்திற் கண்டு மறந்த வஸ்துவை வெகு நாள் கழித்து நினைத்துணருகின்றது சொப்பன சாக்கிர மெனவுஞ், சகலத்தையு மடக்கிக் கொண்டிருக்கின்ற அந்தகாரமே சுழுத்தியவத்தை யெனவுங் கூறினதாம்.

(அ – கை) ஞான பூமிகள் ஏழின் நாமங்களைக் கூறுகின்றார்.

புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சைவிசா ரணையிரண்டாம்
பூமி யாகும், நலதநுமா னசிமூன்றும் பூமிசத்து வாபத்தி
நாலாம் பூமி, சொலுமசம்சத் திப்பேரும் பதார்த்தாபா
வனைப்பேருந் துரியப் பேரும், மலினமறு மகவேழையைந்
தாறேழு பூமிகளா வகுத்தார் மேலோர். 149.

(இ – ள்) புலவர் புகழ் – மகான்கள் துதியாநின்ற, முதற் பூமி – முந்தின பூமியினுமம், சுபேச்சை – சுபம் விரும்ப லெனவும், இரண்டாம் பூமி – இரண்டாவது பூமியினுமம், விசாரணையாகும் – விசாரணை யென்று சொல்லப்படுவதா மெனவும், மூன்றும் பூமி – மூன்றாவது பூமியினுமம், நலதநுமானசி – நல்ல தநுமானசி யெனவும், நாலாம் பூமி – நான்காம் பூமியினுமம், சத்துவா பத்தி – உண்மையிலே மன்னிநிற்ற லெனவும், ஐந்து – ஐந்தாவது, ஆறு – ஆறாவது, ஏழு – ஏழாவது பூமியின், பேரும் – நாமங்களும், சொலுமசம்சத்தி – சொல்லா

நின்ற அசம்சத்தி யெனவும், பதார்த்தா பாவனை – பதார்த்தா பாவனை யெனவும், துரியம் – துரிய மெனவும், மலினமறு மகனே – களங்கமற்ற மைந்தா, மேலோர் – மகான்கள், பூமிகளா வகுத்தார் – சத்த பூமிகளாகப் பிரித்தார்கள்.

(ப – ம்) அநேகங் கோடி சீவர்களில் அநேகங் கோடி சென்மம் நிட்காமிய புண்ணியம் பண்ணிய ஒருவனுக்குக் கிடைக்கத்தக்க அருமையுள்ள தானதினாலும் மற்ற பூமிகள் கிடைக்கின்றதற் கேதுவா யிருப்பதினாலும், மகான்களாற் றுதிக்கப்படுகின்ற சுகம் விரும்ப லென்பார், "புலவர் புகழ் ... சுபேச்சை" யென்றார்.

(அ – கை) அவற்றுள் நான்கு பூமிகளி னிலக்கணங் கூறல்.

துற்சங்க நிவர்த்திவந்து சிவஞானம் விரும்புவது சுபேச்சையாகும், நற்சங்க மொழிவினவி ஞானநூல் பழகல்விசாரணையா நம்பி, முற்சங்க வேட்னைகள் விடறநுமா னசியிந்த மூன்றி னாலும், சற்சங்க மனதிலுண்மை யறிவுதித்தல் சத்துவா பத்தி தானே. 150.

(இ – ள்) துற்சங்க நிவர்த்திவந்து – மூட சங்கத்தை விட்டு நீங்கி, சிவஞானம் விரும்புவது – பிரம ஞானத்தை யடைய இச்சிப்பது, சுபேச்சையாகும் – சுபம் விரும்ப லென்னும் முதற் பூமியாகும், நற்சங்க மொழி வினவி – சாது சங்கத்தைச் சேர்ந்து அவருரைக்கும் வாக்கியத்தைக் கேட்டு, ஞானநூல் பழகல் – வேதாந்த சாஸ்திரத்தை அப்பியாசித்தல், விசாரணையாம் – விசாரணை யென்னும் இரண்டாம் பூமியாகும், நம்பி – விசாரத்தில் வெளிப்படும் பொருளை விசுவசித்து, முற்சங்க வேட்னைகள் விடல் – முன்னுள்ள காமாதி வாசனைகளான இச்சைகளை நீக்குதல், தநுமானசி – மனஞ் சிறுகலென்னும் மூன்றாம் பூமியாகும், இந்த மூன்றினாலும் – இம் முப்பூமிகளின் பழக்கத்தினாலும், சற்சங்க மனதில் – வைராக்கியாதி நல்ல குணங்களைப் பழகிய மனதில், உண்மை யறிவுதித்தல் – சத்தியஞான வனந்தாநந்த சொருபமே தானென்கிற அபரோட்ச ஞானம் பிறத்தலே, சத்துவா பத்தி – உண்மையிலே மன்னி நிற்றலென்னும் நாலாம் பூமியாகும்.

துர்ச்சங்கம் என்பது எதுகை நோக்கி துற்சங்க மென்று நின்றது.

(ப — ம்) பிறவிக் கேதுவான மூடசங்கத்தையும் பிரவிர்த்திகளையும் விடுத்து, மிருதுவாயும் அன்புள்ள வுபசாரமாயுஞ் சாமர்த்தியமாயுந் தேச காலங்களுக்குத் தகுந்ததாயு மிருக்கின்ற சொற்களை வசனித்துக் கொண்டு, பாவத் தொழில் பண்ணப் பயந்து, துன்பத்துக் கேதுவான விடய போகத்திலாசையில்லாமல், சனன மரண பய நீங்குவதற் கேதுவான மோட்சம் யாதென்று கருதி, யென்றைக்குச் சற்சங்கத்தைச் சேர்ந்து சாஸ்திர விசாரணைசெய்து அதை யடைவோமென்று விரும்புகின்றதே சுபம் விரும்பலென்பார், "துற்சங்க நிவர்த்தி ... சுபேச்சையாகு" மெனவும், அப் பூமியப்பியாசத்தாற் றிரிவித கரணமு மொத்துச் சாதுக்களைச் சார்ந்து வேதாந்த சாஸ்திர மெவ்விடத்தி லிருந்தாலும் போய்க்கொண்டு வந்தப்பியாசித்து, சற்குருவினிடத்தி லுபதேசம் பெற்றபடி யாத்மாநாத்மாக்களை நன்றாய் விசாரித்துக் கொண்டிருக்கின்றதே விசார மெய்த லென்பார், "நற்சங்க மொழி ... விசாரணை" யெனவும்,

சுபேச்சை விசாரணை இரண்டு பூமியப்பியாசத்தாற் சச்சிதானந்த நித்திய பூரண வஸ்து இலட்சியார்த்த மென்றும், அசத்து சடம் துக்கம் அனித்தியங் கண்டமான, தேகாதிப் பிரபஞ்சங்கள் வாச்சியார்த்த மென்றும் அறிந்து வாச்சியார்த்தங்களைத் தானல்ல வென நீக்கி, அந்த இலட்சியார்த்தமான வஸ்துவே தானென்று நிரந்தரந் தியானித்துக் காமாதி வாசனைகள் சாந்தமடைந்து நினைவு குவிவதுவே மனஞ்சிறுகுமலென்பார், "முற்சங்க வேடனைகள் விட்டறனுமானசி" யெனவும், முன் மூன்று பூமி யப்பியாசத்தினாற் சகத்து சங்கற்ப மாத்திரமாய் மனோலயமாகிச் சத்திய ஞான வனந்தானந்த சொரூபமே தானென்று அபரோட்சமா யறிகின்றதே உண்மையிலே மன்னிநிற்ற லென்பார், "சற்சங்க மனதிலுண்மை ... சத்துவாபத்தி" யெனவுங் கூறினர்.

(தா — ம்) சாதன சதுட்டய முதித்து, விட்ய தோட்திருட்டியுண்டாய்த் தன்னைத் தரிசிக்க விரும்புவதே சுபேச்சை யெனவும், அவ்விருப்பத்தாற் றூண்டிய சித்து ரூபமுந் தானல்

லாத சடரூப மிஃதென விசாரித்தல் விசாரணை யெனவும், அவ் விசாரத்திலுள்ள சித்தில் வாசனை யுண்டாய்ச் சட்வா சனைவிட்டு மனமடங்குதலே தநுமானசி யெனவும், அச்சித்து வாசனை மிகுந்து அஃதநுபவமாக வெளிப்படுதல் சத்துவா பத்தி யெனவுங் கூறினதாம்,

(அ – கை) ஏனைய மூன்று பூமிங்களி லிலக்கணங் கூறல்.

தத்துவத்தின் மனமுறைத்து மித்தையெலா மறத்தல சம் சத்தியாகும், அத்துவிதா னந்தம்வருந் திரிபுடிபோம் பதார்த்தாபா வனைய தாகும், வத்துநிலை யிருந்தபடி யிருந் தமவு னசுபாவந் துரிய மாகும், இத்துரிய பூமியைமுன் றுரியாதீ தப்பதமென் றதுவுங் கேளாய். 151

(இ – ள்) தத்துவத்தில் மனமுறைத்து – முந்தின நான்கு பூமிகளின் அப்பியாசத்தால் அத்துவித சொரூபத் தில் மனந் திரப்பட்டு, மித்தையெலாம் – பொய்யான அனைத் தையும், மறத்தல் – மறந்துவிடுவது, அசம் சத்தியாகும் – சங்கற்ப மறலென்னு மைந்தாம் பூமியாகும், அத்துவிதாநந் தம்வரும் – ஐந்து பூமிகளின் அப்பியாசத்தால் அத்துவிதா நந்தமுண்டாம், திரிபுடி போம் – அதனல் திரிபுடி நீங்கும், அது பதார்த்தா பாவனையாகும் – அங்ஙனம் திரிபுடி நீங்குதல் பதார்த்த வெண்ண மறுத்திடலென்னும் ஆறும் பூமியாகும், வத்து நிலை – ஆறு பூமிகளி னப்பியாசத்தால் ஆத்மசுபாவத் தில், இருந்தபடி இருந்த – இருந்தவண்ண மிருக்கின்ற, மவுன சுபாவம் – மவுனத் தன்மையே, துரியமாகும் – துரிய மென்னு மேழாம் பூமியாகும், இத் துரிய பூமியை – இத் துரிய மென்னும் ஏழாம் பூமியை, முன் – முன்பு, துரியாதீதப் பத மென்றதும் – துரியாதீதப் பதமென்று சொல்லிய விதத்தை யும், கேளாய் – கூறுதும் கேட்பாய்.

(ப – ம்) முந்தின நான்கு பூமி யப்பியாசத்தினுற்றுன் அத்துவித சொரூபமாத்திரமாகச், சேடித்துக் காமாதி வாச னைகளை நீக்கி மித்தையான பிரபஞ்சத்தை மறந்திருப்பதே சங்கற்ப மறலென்பார், "தத்துவத்தில் ... அசம்சத்தி யாகு" மெனவும், முந்தி ஐந்து பூமி யப்பியாசத்தினுல் அத்தியந்தம் வாசனுக்ஷயம், திரிபுடி நீங்கி அகங்கார கிரந்தியற்று ஆநந்த

சமுத்திரமா யிருக்கின்றதே பதார்த்த வெண்ண மறுத்திட லென்பார், "அத்துவிதாநந்தம் வரும் ... பதார்த்தா பாவனை யதாகு" மெனவும், சுபேச்சை முதலிய ஆறுபூமிகளின் அப்பி யாசத்தினுல் முபசாந்தமாயும் பதினன் இந்திரியங்களினுலு மறியக் கூடாததாயுஞ் சமனுயுஞ் சூட்சுமமாயுந் தற்சுபாவ மாயு மிருக்கின்றதே துரிதை யென்பார், "வஸ்துவிலே...துரிய மாகு" மெனவும் கூறினர.

(தா – ம்) அத்துவித சொரூபத்தில் மனமமுழ்ந்திச் சீவே் சுவர சகத்தை மறத்தல், அசம் சத்தி யெனவும், துவிதத் தோற்றம் நீங்கி அத்துவிதாநந்தமா யிருத்தல் பதார்த்தா பாவனை யெனவும், சுசாதிக விசாதிக சுவகத பேத ரகிதமான சைதன்னியமாக விருத்தல் துரிய மெனவும், இதுவே முக்கிய மான பதமெனவுங் கூறினதாம்.

(அ – கை) இத் துரிய பூமியே துரியாதீதமாகு மியல்பு தோன்றச் சத்த பூமியையும் பஞ்சாவஸ்தையாகப் பகுத்து அதன் வகையும் அதன் இலக்கணமுங் கூறுகின்றார்.

முற்புவிமூன் றினுமுலகந் தோன்றுதலாற் சாக்கிரமா
மூன்றற் கப்பால், சொற்பனமா மதுவுமெள்ள நழுவுமைந்
தாம் பூமியே சுழுத்தி யாகும், அற்புதமாஞ் சுகாநுபவ
மிகுமாறும் புவிதுரிய மதற்கப் பாலோர், கற்பனையி லாத
விட மதீதமென்று மௌனமாக் காட்டும் வேதம்.

(இ – ள்) முற்புவி மூன்றினும் – பூரண ஞான மின்மை யினுல் முதற் கூறிய சுபேச்சையாதி மூன்று பூமிகளிலும், உலகந் தோன்றுதலால் – பிரபஞ்சமானது சத்தியமாய்த் தோற்றுகின்ற படியால், சாக்கிரமாம் – அந்த மூன்று பூமிக ளும் நனவாம், மூன்றற் கப்பால் – நான்காவது சத்துவாபத்தி பூமி, சொற்பனமாம் – பிரபஞ்சமானது மித்தையாகத் தோற் றுதலின் கனவாகும், அதுவு மெள்ள நழுவும் – மித்தையாகத் தோற்றுவதும் நீங்கா நிற்கும், ஐந்தாம் பூமியே – ஐந்தாவது அசம்சத்தி பூமியே, சுழுத்தியாகும் – சுழுத்தியாம், அற்புத மாம் – அதிசயமாகிய, சுகாநுபவ மிகும் – ஆநந்தாநுபவ மிகுந் துண்டாகின்ற, ஆறும் புவி – ஆறுவது பூமியாகிய பதார்த்தா பாவனை, துரியம் – துரியமாகும், அதற்கப்பால் –

அதற்குமேல் ஏழாம் பூமியாகிய துரியம், ஓர் கற்பனையுமிலாத விடம் – யாதொரு சத்த சத்தென்கிற கற்பனையு மற்றவிடம், அதீதமென்று – துரியாதீத மென்று, மவுனமா – மவுனமாகச் வேதம் காட்டும் – சுருதி தெரிசிப்பிக்கும்.

(தா – ம்) சுபேச்சை விசாரணை தனுமானசியாகிய இம் மூன்று பூமியிலும் பூரண ஞானமின்மையினுற் பிரபஞ்சமானது சமமாய்த் தோற்றுது, மெய் போல உயர்ச்சி தாழ்ச்சியாய்த் தோற்றுதலின் அவைகளைச் சாக்கிர மெனவும், சத்துவா பத்தியிற் பூரண ஞான முண்டாவதினுற் பிரபஞ்சமானது உயர்ச்சி தாழ்ச்சியாய்த் தோற்றுது மித்தையாய்ச் சமமாய்த் தோற்றுதலின் அதைச் சொப்பன மெனவும், அசம் சத்தி யில் நினைப்பு இறந்து ஆநந்தாநுபவத்தினுற் சகந் தோற்று மையி னதைச் சுழுத்தி யெனவும், பதார்த்தா பாவனையிற் சுட்டற் றிறந்தாநந்த சாகரமாயிருத்தலி னதைத் துரியமென வும், துரிய பூமியில் வாக்கு மனதுக் கெட்டாததா யிருந்தபடி யிருத்தலின் அதை துரியாதீத மெனவுங் கூறினதாம்.

(அ – கை) இங்ஙன மோர் கற்பனையிலாத விடமாகிய ஏழாவது பூமியைத் துரியாதீத அவஸ்தை யென்று வேதம் கூறுகிற பிரகாரம் குருநாதனே நீர் கூறின், அவ் வேழாவது பூமிக்குத் துரியமெனப் பெயர் வகுத்தாரென்று நீர் சொல்லிய மேலோர், எதைத் துரியாதீத வவஸ்தை யெனக் கூறுவார்க ளெனில் கூறுகின்றார்.

துரியநிலந் தனைத்துரியா தீதமெனின் மயக்கமென்று
கருதி மேலோர், அரியதொரு விதேகமுத்தி யதீதமென்பா
ரதுகணக்கி லாரும் பூமி, மருவுசுழுத் தியிற்காட்சி சுழுத்தி
யென்பா ரென்பதுநீ மனத்திற்கொள்வாய், பெருமைதரு
ஞானபூ மியின்விகற்ப மின்னமுண்டு பேசக் கேளாய். 153

(இ – ள்) சுருதி மேலோர் – ஏழாவது பூமிக்குத் துரிய மெனப் பெயர் வகுத்த சாத்திர கர்த்தாக்கள், துரிய நிலந் தனை – அவர்கள் துரியமென்ற ஏழாவது பூமியைத் தானே, துரியாதீதமெனில் – நாம் கூறிய பிரகாரம் துரியாதீத வவஸ் தையென்று கூறுவார்களேயாகில், மயக்க மென்று – ஒரு பூமி தானே இரண்டவஸ்தையாகக் கூறப்படுகிறதே என்று மோக முண்டாமெனக் கருதி, அரியதொரு விதேக முத்தி – அரு

மையாய்க் கிடைப்பதாயும் ஒப்பற்றதாய் யிருக்கின்ற சீவன் முத்தனுடைய உடல் நீங்கியபின் சித்திக்கின்றதான மோட்ச மாகிய விதேக முத்தியை, அதீத மென்பார் – துரியாதீத அவஸ்தை யெனக் கூறுவார்கள். (ஆனாலவர்கள் துரிய மென்ற ஏழாவது பூமிக்கு முந்தின ஆறு பூமியையும் சாக்கிர சொப்பன சுழுத்தி மூன்றவஸ்தைக்கு ளெங்கன மடக்கிக் கூறுவார்களெனில்,) அது கணக்கில் – அவர்களேழாவது பூமியைத் துரியாவஸ்தை யென்றும் சீவன் முத்தனுடல் மரித்துண்டாகும் விதேக முத்தியைத் துரியாதீத வவஸ்தை யென்று கூறும் அந்தப் பட்சத்தில், ஆறும் பூமி மருவு சுழுத்தியில் காட்சி சுழுத்தி யென்பார் – முதலாவது இரண்டாவது மூன்றாவது பூமியைச் சகம் சத்தியமாய்த் தோற்றுவதாற் சாக்கிர மெனவும், நாலாம் பூமியை சகம் பொய்யாய்த் தோற்றுவதாற் சொப்பன மெனவும், ஐந்தாவது பூமியை அப் பொய்த் தோற்றம் மெள்ள நழுவுவதாற் சுழுத்தி யெனவும், நன்முறைத்த பிரகாரமே கூறி ஆறுவது பூமிக்கு முன் பொருந்திய ஐந்தாவது பூமியாகிற சுழுத்தி யவஸ்தை ஒன்றுக்குள்ளேயே அவ் வாறுவது பூமியையும் அற்புத சுழுத்தி யென்று அடக்கிக் கூறுவார்கள், என்பதும் – என்று கூறப்படும் கருத்தையும், நீ மனத்திற் கொள்வாய் – நீ உனது உள்ளத்திற் றறித்துக் கொள்வாய். (இந்த ஞான சத்த பூமியைக் குறித் தடியேனுக் கின்னமுந் தெரியவேண்டும் வகையுளவோ வெனில்,) பெருமைதரு – மகிமையைக் கொடுக்கின்ற, ஞான பூமியின் விகற்பம் – யோக சத்த பூமியின் வேறுபாடு, இன்ன மூண்டு – மேலு மிருக்கின்றன, பேசக் கேளாய் – யாம் கூற நீ கேட்பாய்.

(ப – ம்) சகல மன்னருக்கு மேலான சாம்பிராட்டாதல் கிடைப்ப தெப்படி யருமையோ அப்படி சாலோகாதி சகல, வபர கதிக்கு மேலான பரமா யிருக்குங் கதி கிடைப்ப தருமை யாதலின், "அரிய" தென்றும், சீவன் முத்திவரை பதங்களில் உவமிக்கும்படி வேறிருத்தல் போல விதேக முத்திக்கு ஒப்புச் சொல்ல வேறொன்று மின்மையால், "ஒரு" என்றும், அற்புதமாஞ் சுகாநுபவம் மிகும்புவி யாதலால், அற்புத சுழுத்தி யென்பார், "காட்சி சுழுத்தி" யெனவும், இரும்புண்ட நீர்போற் றிரும்பாத மகிமையுள்ள விதேக முத்தியைச் சித்திக்கச் செய்வ தென்பார், "பெருமைதரு" மென்றுங் கூறினர்.

(வி — ரை) ஆறும் பூமியைக் கூறினமையா லதற்கு முந்தின பூமி விபரமும் வருவிக்கப்பட்டது.

(தா — ம்) ஏழாவது பூமி வஸ்துநிலை யிருந்தபடி இருந்த மவுன சுபாவமாகையா லதைத் துரிய மென்ற மேலோர், அது கற்பனையிலாத விட்மென்று அதைத்தானே துரியாதீத மென்றார்களேயாகில், ஒரு பூமியைத்தானே இரண்டவஸ்தையாகக் கூறியிருக்கிறதே என்று ஐயமுண்டாமென்று கருதி, அதனைச் சிவன் பிரமான துரியமென்றே வைத்து, அதிற் பிறர் திருஷ்டிக்காவது தேக கற்பனையிருப்பதாற் றேகநீங்கிய விதேக முத்தியைத் துரியாதீத மென்பார்களெனவும், அதனுலவர்கள் ஆநந்தாநுபவத்தால், சகந்தோற்றாத ஐந்தாம் பூமியாகிற சுழுத்தி யவஸ்தைக்குள் ஆநந்த சாகரமா யிருக்கிற ஆறும் பூமியைக் காட்சி சுழுத்தி யென்றடக்கிக் கூறுவார்களெனவும் கூறி, ஞான பூமியைச் சேர்ந்த விவர மேலும் கூறத் தொடங்கினதாம்.

(அ — கை) அந்த ஞானபூமிகளை யடைந்தோர் தாரதன்மியத்தைக் கூறல்.

முன்னிலங்க ளேறியமூ வருமப்பி யாசிகளா முத்த ரல்லர்
பின்னிலங்கள் வரன்வரியான் வரிட்டனெனுஞ் சிவன் முத்
தர் பேத மாகுஞ், சொன்னநடுப் பூமிவந்த ஞானிகளே
பிரமவித்தாந் தூய முத்த, ரின்னமுமப் பூமிகளின் பெரு
மைதனை நீயறிய யான்சொல் வேனே. 154.

(இ — ள்) முன்னிலங்களேறிய — முதற்கணுள்ள மூன்று பூமிகளிலேறி வந்த, மூவரும் — மூன்று பேர்களும், அப்பியாசிகளாம் — சாதகர்களாம், முத்தரல்லர் — சிவன் முத்தர்களல்லர், பின்னிலங்கள் — இறுதியிலுள்ள ஐந்தாறேழு பூமிகளில் ஏறியவர்கள், வரன்வரியான் வரிட்டனெனும் — பிரமவரன் பிரமவரியான் பிரம்வரிட்டன் எனவும், சிவன் முத்தர் பேதமாகும் — சிவன் முத்தர்களின் பேதங்களாம், சொன்ன நடுப் பூமி வந்த — சொல்லிய பூமிகளின் மத்தியாகிய நாலாம் பூமியில் ஏறிய, ஞானிகள் — ஞானவான்கள், பிரம வித்தாம் — பிரம வித்தென்னும், தூய முத்தர் — மேலான சிவன் முத்தர்களாம், இன்னமும் — மேலும், அப் பூமிகளின் பெருமைதனை — அந்த

ஞான பூமிகளின் மகிமையை, நீயறிய – உனக்குத் தெரியும் பொருட்டு, யான் சொல்வேன் – நான் உரைப்பேன்.

(ப – ம்) சுபேச்சை விசாரணை தநுமானசி மூன்று பூமியிலு மப்பியாசிக்கின்றோர் வாக்குக் காயத்தால் ஞானிகளைப் போலப் பிறருக்குக் காணப்பட்டாலும், அவ் வப்பியாசிகளுக்குச் செகத்திற் பிரமாண புத்தி அத்தியந்தம் நீங்காததினாலும், சமுசய பாவனையாதியினால் ஞானமுண்டாகாததினாலும், அவர்கள் சாத்தியரல்லர் சாதக ரென்பார், "முன்னிலங்களே றிய ... முத்தரல்ல" ரெனவும், விடயமாகிய பாம்பு கடிக்குமென பின் மூவர் சமாதி மேடையிலேறி யிருக்க, தானதை மேலே போட்டுக்கொண்டு தனக்கு மயக்க விஷமேறாமலும், கடிபட்ட முமூட்சுக்கு மயக்கவிஷ நீங்கவும் பிரமோகமென்னும் கருடத் தியானத்துடன் சாட்சிமாத்திரமாய் இருப்பதால் தூய முத்த ரென்பார், நடுப்பூமி வந்த ... தூய முத்தரென வும் கூறினார்.

(தா – ம்) முன் மூன்று பூமியை அடைந்தவர் அப்பியாசிகளெனவும் மற்ற நான்கு பூமியை அடைந்தவர் சீவன் முத்தர்க ளெனவும் கூறினதாம்.

(அ – கை) முன் மூன்று பூமியையு மடைந்தோர் முத்தரல்ல ராயினும் அவர் அப்பியாசம் வீணன்றெனத் தெரியக் கூறல்,

நாலாம்பூ மியில்வருமுன் மூன் று பூ மியுமடைந்து நடந்து மாண்டோர், மேலான பதமடைந்து பி ற ந் து மெள்ள மெள்ளவந்து வீடுசேர்வார், மாலான பவத்தில் விழார் முதற்பூமி கிடைப்பதுவே வருத்த மைந்தா, காலான முதற்பூமி கைவந்தான் முத்தியுங்கை வந்த தாமே. 155.

(இ – ள்) நாலாம் பூமியில் வருமுன் – நான்காம் பூமியில் வருவதற்கு முன்னம், மூன்று பூமியுமடைந்து – சுபேச்சையாதி மூன்று பூமிகளையும் சேர்ந்து, நடந்து – அவற்றை யனுஷ்டித்து வரும்போது, மாண்டோர் – மரித்தவர்கள், மேலான பதமடைந்து – உயர்ந்த பதவியைப் பெற்று, பிறந்து – பின் பூமியிற் செனித்து, மெள்ள மெள்ள வந்து – கொஞ்சங் கொஞ்சமாக ஏறி, வீடு சேர்வார் – முத்தியை அடைவார்கள்,

மாலான பவத்தில் விழார் – இச்சா ரூபமான செனனத்தி லமிழார், முதற் பூமி கிடைப்பதுவே – முதற் பூமியான சுபேச்சை யுண்டாவதே, வருத்தம் – பிரயாசமாம், மைந்தா – மகனே, காலான முதற் பூமி – மற்ற பூமிகள் வருவதற்கு வழியான முதலாவது பூமி, கைவந்தால் – கைவசமானால், முத்தியும் – மோட்சமும், கைவந்ததாம் – கைவசமானதாம்.

(ப – ம்) சுபேச்சையாதி மூன்று பூமியில் அப்பியாசிக் கின்றோர் இடையிற் சரீர நீங்கினால், மந்திரகிரியா திரவிய லோபமின்றி யாகாதி செய்தவ ரெந்த வுத்தமமான லோகத்தை அடைவார்களோ, அந்த லோகத்தை அடைந்து அப் போகம் புசித்த பின் பூமியிற் செல்வவானிடத்திலாவது யோகிகளிடத்திலாவது செனித்து, அச் சென்மத்திலாவது அடுத்த சென்மங்களிலாவது வருத்தமின்றித் தத்துவஞானம் பெற்றுப் பரமோட்சமடைவா ரென்பார், "நாலாம் பூமியில்... வீடு சேர்வா" ரெனவும், ஒரு புருடன் நன்னடையினால் ராஜா வின் தயவு பெற்றுச் சிறிதாகவேனும் ஒருத்தியோகம் பெற் றுக் கொண்டால், அவனுக்குப் பின்பு பெரிதான வுத்தியோ கம் சித்தமாய்க் கிடைக்கின்றது போல, ஒருவன் கிட்ட சென் மத்தை விட்டு அநேக சென்மங்களில் நிட்காமியமா யநுட்டித்த புண்ணியத்தால், ஈசுர கிருபை பெற்று அதனால் முதற் பூமியை அடைந்தால் அவனுக் கவ்வீசுர கிருபை யிருப்பதினா லும், துர்ச்சங்கத்தை விட்டுச் சற்சங்கத்தைச் சார்ந்திருப் பதினாலுஞ் சித்தமாய்ப் பரமோட்ச முண்டாகு மென்பார், "காலான முதல் ... முத்தியுங் கைவந்ததாம்" எனவும் கூறினார்.

(தா – ம்) ஞான பூமிகளின் முன் மூன்று பூமி யப்பியா சத்தால் வரும் பயனும், அதின் முதற் பூமியினருமையுங் கூறினதாம்.

(அ – கை) அப்பியாச பூமி அடைந்தவ னெவ்விதத்தி லும் அநுபவியாவா னென்பது தோன்ற அவ னநுபவியே எனக் கூறுதல்.

இப்புவி யிலிஞ்ஞான பூமியொன்றி லிரண்டிலடைந் திருந்தா ரானால், அப்புருடர் மிலேச்சரா கிலுமுத்தர் குரு பாதத் தாணை மெய்யே, தப்புரையென் றவர்கெடுவார்

நடுவான மறைகளை நீ சங்கி யாதே, செப்புமொழி வழி
திடமா யகம்பிரம மென்றிருந்து தெளிந்தி டாயே. 156,

(இ – ள்) இப்புவியில் – இந்த வுலகத்தின்கண், இஞ்
ஞான பூமி – இந்த ஞான பூமிகளேழில், ஒன்றில் – சுபேச்சை
யிலாவது, இரண்டில் – விசாரணையிலாவது, அடைந்திருந்தா
ராகில் – சேர்ந்திருப்பாராயின், அப் புருடர் – அந்தப் புருடர்
கள், மிலேச்சராகிலும் – மிலேச்சர்களானாலும், குருபாதத்
தாணை – தேசிகர் திருவடிமீது ஆணை, முத்தர் – சீவன் முத்த
ராவ ரென்பது, மெய்யே – சத்தியமே, தப்புரை யென்றவர் –
இதைப் பொய்வசன மென்றவர்கள், கெடுவார் – பவத்தில்
அழிவார்கள், நடுவான மறைகளை – நடுவு நிலைமையான வேத
வாக்கியங்களை, நீ சங்கியாதே – நீ குதர்க்கமாகச் சங்கை பண்
ணாதே, செப்பு மொழி வழி – போதிக்கின்ற உபதேச மார்க்
கத்தில், திடமாய் – உறுதியுடையவனாய், அகம் பிரம மென்று
– நான் பிரமமென்று, இருந்து *தெளிந்திடாய் – சமாதியி
லிருந்து தெளிவாய்.

(ப – ம்) வைராக்கியம் பொறுமை முதலான சற்குணங்
களும், நமஸ்கார தோத்திர தியானாதி பத்தியும், சிரவண
மனனாதி ஞானப்பியாசமும், சகல சீவர்களுக்கும் பொதுவாயும்
இவற்றாலுண்டாகும் ஞானத்தாலெந்த வருணாச்சிரமத்தாருக்
கும், மோட்ச முண்டாவதாயு மிருக்க வுத்தமமான பிராமண
வருணத்திலும் சன்னியாசம் பண்ணிக் கொண்டோருக்கு
மோட்சம் வருமென்றும், மற்றோருக்கு இந்த ஞான பூமியை
அப்பியாசித்தாலும் மோட்ச முண்டாகா தென்றும், அதனா
லுண்டாகு மென்பது அசத்திய மென்றுங் கூறுகின்றவர்கள்
நரக துன்ப மடைவார்க ளென்பார், "தப்புரை யென்றவர்
கெடுவா" ரெனவும், சமய நூல்போல் பட்சபாத மின்றிச்
சமனாயிருக்கின்ற வேத மென்பார், "நடுவானமறை" யெனவும்
கூறினார்.

(தா – ம்) இவ் வப்பியாச பூமியை அவசியமடையும்
பொருட்டு, அவைகளின் பெருமையையும் அவைகளாற்
பெறும் பயனையும் கூறி, முன் சொல்லிய மார்க்கப்படி அநுஷ்
டித்து அகண்டாத்ம சொரூபமா யிருப்பா யென்றதாம்.

---

* தெளிதல் சந்தேக நீங்குதல்.

(அ – கை) முத்தி யடைவதற்கு வருணாச்சிரம பேதம் வேண்டுவ தின்றென்பது தோன்ற வோர் சங்கை வினாதல்.

பொல்லாத மிலேச்சருக்கும் விதேகமுத்தி தருஞான
பூமி யென்று, நெல்லாகி முளைக்குமெனைத் தண்டுலமாக்
கியகுருவே நீர்சொன் னீரே, இல்லாளுங் குடும்பம்விட்டுச்
சன்னியா சம்புகுந்தே காங்கி யாரோர், அல்லாமன் முத்தி
பெறா ரென்றுசிலர் சொலுமயக்க மகற்று வீரே. 157,

(இ – ள்) பொல்லாத மிலேச்சருக்கும் – கொடியரான மிலேச்சர்களுக்கும், ஞானபூமி – சுபேச்சையாதி ஞானபூமிகள், விதேக முத்திதரும் என்று – விதேக கைவல்லியத்தைக் கொடுக்கும் என்று, நீர் சொன்னீர் – தேவரீர் அருளினீர், நெல்லாகி – நெல் வித்தைப் போல, முளைக்குமெனை – சனித்துக் கொண்டிருக்கு மடியேனை, தண்டுலம் – அரிசியைப் போல, ஆக்கிய குருவே – சனியாமல் சிவமாகச் செய்த ஆசிரியரே, இல்லாளும் குடும்பம் விட்டு – மனைவி முதலானவர்களுடன் தங்கிய குடும்பத்தைத் துறந்து, சன்னியாசம் புகுந்து – துறவைப் பெற்று, ஏகாங்கியாரோ ரல்லாமல் – தனித்தவர்களே யன்றி, முத்தி பெறாரென்று – மற்ற இல்லறத்தார் மோட்ச மடைய மாட்டார்களென்று, சிலர் சொலு மயக்கம் – சிலர் சொல்லுகின்ற பிரமையை, அகற்றுவீர் – நீக்குவீர்.

(ப – ம்) தவிடு உமி முளையுடனிருந்து முளைக்கின்ற நெல்லை அத் தவிடு முதலியவற்றை நீக்கி அரிசியாக்கி முளையாதபடி செய்கின்றது போல, சீவனாக அஞ்ஞானாதி மலத்துடனிருந்து சனித்து மரித்த வென்னை அவ் வஞ்ஞானாதி மலத்தை நீக்கிச் சிவமாக்கிச் சனன மரணத்தைப் போக்கிய ஞானாசாரியரே என்றான் என்பார், "நெல்லாகி ... குருவே" எனவும் கூறினார்.

(தா – ம்) மோட்சந் துறவறத்தார்க் கன்றி இல்லறத்தாருக்கு வாராதெனச் சிலர் கூறுவதாலுண்டாகு மையத்தை நீக்கவேண்டுமென வேண்டிக் கொண்டதாம்.

(அ – கை) அச் சங்கைக் குத்தரங் கூறத் தொடங்கித் துறவு நாலு வகைத்தெனக் கூறுதல்.

சிட்டர்புகழ் மகனேநீ சங்கித்த சங்கைநன் று தெரியக் கேளாய், கட்டழியுந் துறவுநால் வகையாகு மவைகளுக்கங் காகும் பேர்கள், பட்டதுயர் கெடுங்குடீ சகம்வெகூ தக மஞ்சம் பரமவஞ்சம், விட்டகலுந் துறவுக்கு விராகங்கா ரணமன்றி வேட மன்றே. 158.

(இ – ள்) சிட்டர் புகழ் மகனே – சர்ச்சனர் துதிக்கா நின்ற மைந்தா, நீ சங்கித்த சங்கை நன்று – நீ வினவின ஆட் சேபம் நல்லது, தெரியக் கேளாய் – தெரியக் கூறுதும் கேட் பாய், கட்டழியுந் துறவு – பந்தத்தைக் கெடுக்கின்ற சன்னி யாசமானது, நால் வகையாகும் – நான்கு விதமாம், அவைகளுக் கங்காகும் பேர்கள் – அந் நால்வகை சன்னியாசங்களுக்கும் உளதாகும் நாமங்கள், குடீசகம் வெகூதகம் அஞ்சம் பரம அஞ் சம் (என்பனவாம்,) பட்ட துயர் கெடும் – இவைகளால் சமுசா ரத்தில் பட்ட துன்பம் நீங்கும், விட்டகலும் துறவுக்கு – பந் தத்தை விட்டு நீங்கும் இச் சன்னியாசங்களுக்கு, விராகம் காரணமன்றி – விராகசை காரணமே யல்லாமல், வேடமன்று – வேஷம் காரணமன்றும்.

(ப – ம்) சுருதியிற் கூறிய வாக்கியங்களை விசுவசித்துத் தாமதம் பண்ணாது அவ் வாக்கியப்படி யநுட்டித்து, அகண் டாநந்தத்தைப் பெற்று இருப்பது குறித்து, மேலோர்களாற் றுதிக்கப்படுகின்ற குழந்தா யென்பார், "சிட்டர்புகழ் மகனே" யெனவும், நீ கேட்ட வினாவினால் துறவறத்தார்க்கு மோட்சம் வருமேயன்றி, இல்லறத்தாருக்கு வாராதென்கின்ற மயக்கத் தினால் மோட்சத்துக் கேதுவான அப்பியாசஞ் செய்யாதிருக் கின்ற சீவர்களுக் கெந்த வருணாச்சிரமத்தாருக்கும் மோட்ச முண்டாகு மென்பது தெரிவிக்கப் படுவதனால் மோட்சத்தை விளைவிக்கத் தக்கதென்பார், "நீ சங்கித்த சங்கை நன்றெ" னவுங் கூறினார்.

(தா – ம்) குடீசகம் பகூதகம் அஞ்சம் பரம அஞ்சம் எனத் துறவு நால்வகை யெனவும் அவை சித்திப்பது விராகையினா லேயன்றி அக் குடீ சகமாதியின் வேடத்தினாலன் றெனவும் கூறினதாம்.

(அ – கை) வைராக்கியத்தின் வகையும் அவற்றின் இலக்கணமுங் கூறல்.

மந்தமுந்தீ விரமுந்தீ விரதரமு மெனமூன்று வகைவி
ராகம், வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்
துவரும் விராகமந்த, மிந்தவுடலளவுமனை தனம்வேண்டா
மெனவிடறீ விரமென் பார்க, ளந்தணர்நூன் மித்தை
யென விடலதுதீ விரதரமா மறிந்திடாயே. 156,

(இ – ள்) விராகம் – வைராக்கியமானது, மந்தமும் தீவி
ரமும் தீவிரதரமும், என மூன்று வகை – என மூன்று வித
மாம், அவைகளில் வெந்துயரம் வரும்பொழுது – கொடிய
துன்பம் உண்டாகும்போது, குடும்பத்தை – சமுசாரத்தை,
வெறுத்துவரும் விராகம் – வெறுக்கா நின்ற வயிராக்கியமா
னது, மந்தம் – மந்த விராகமாம், இந்த வுடலளவும் – இத்
தேகாந்த பரியந்தம், மனை – மனைவியையும், தனம் – திரவிய
முதலியவைகளையும், வேண்டா மெனவிடல் – வேண்டா
மென்று துறத்தல், தீவிர மென்பார்கள் – தீவிர விராக
மென்று சொல்லுவார்கள், அந்தணர் – வேதியர்க்குறிய,
நூல் – கன்ம காண்டங்களை, மித்தையென விடலது – கற்பித
மென்று துறத்தலானது, தீவிர தரமாம் – தீவிரதர விராக
மாகும், அறிந்திடாய் – இவற்றைத் தெரிந்து கொள்வாய்.

(ப – ம்) மிகுந்த பாவத்தால் மனைவி, செல்வம் முதலி
யவை நட்டமானபோதும் அவைகளாற் றனக்குத் துன்பமுண்
டானபோதும் அந்த ஸ்திரீயாதியை விட்டு நீங்குவது மந்த
வைராக்கிய மென்பார், "வெந்துயரம் ... மந்த" மெனவும்;
சொற்ப புண்ணியத்தால் சொற்காதி அபரகதி விருப்ப முண்
டாகி, அதை அடையச் செய்யும் தவத்துக்கு ஸ்திரீயாதிகள்
விரோத மெனவும், அவைகளாற் றுன்ப மெனவும் மனத்தாற்
றேகாந்தம் வரை அவைகள் தேவையில்லை யெனவும் கருதித்
துறக்கின்றது தீவிர வைராக்கிய மென்பார், "இந்த வுடலள
வும் ... தீவிர" மெனவும், மிகுந்த புண்ணியத்தால் பரமோட்ச
விருப்ப முண்டாகி அதை அடையும் பொருட்டுச் செய்யும்
சிரவணாதிக்கு, பிரமலோகாதி சத்திய புத்தியும், அந்த
லோகாதி அடைதற்குச் செய்யும் உபாசனையாதியும், விரோத
மெனவும், அந்த லோகாதி உற்பத்தி நாசமுள்ள தாகையால்
அசத்திய மெனவுங் கருதி அவைகளைத் துறக்கின்றது தீவிர
தர மென்பார், "அந்தணர் நூன் ... தீவிரதரமா" மெனவும்
கூறினர்.

(தா – ம்) வைராக்கிய மூன்றெனவும், அதிற் றுன்பத்திறல் சமுசாரத்தை வெறுத்தல் மந்த வைராக்கிய மெனவும் தேகாந்தம் வரை ஸ்திரீயாதிகள் தேவையில்லை என வெறுத்தல் தீவிர வைராக்கிய மெனவும், தேக முதற் பிரமலோக பரியந்தம் அசத்தியமெனக் கண்டு விடுதல் தீவிரதர வைராக்கிய மெனவும் கூறினதாம்,

(அ – கை) மந்த விராகத்திறல் ஒருவித சந்நியாசமுஞ் சித்தியாதா தெனவும் தீவிர விராகத்தில் சித்தியாகும் சந்நியாசங்களின் பிரிவும் நிலையும் கூறுகின்றார்.

பாவிமந்த விராகத்திற் சந்'யா சங்களொன்றும் பலித்திடாதே, தீவிரத்திற் குடீசகமும் வெகூதகமு மென்றிரண்டு திறங்க ளுண்டாம், தாவிநடந் திடத்திடமி லாதவர்க்குக் குடீசகமுஞ் சகங்க ளெங்கும், மேவிநடந் திடத்திடமுள் ளவர்க்குவெகூ தகமுமென விதித்தார் மேலோர். 160.

(இ – ள்) பாவி மந்த விராகத்தில் – பாவியினது மந்த வைராக்கியத்தில், சந்நியாசங்க ளொன்றும் – நால்வகை சந்நியாசங்களில ஒரு சந்நியாசமும், பலித்திடாது – சித்தியாது, தீவிரத்தில் – தீவிர வைராக்கியத்தில், குடீசகமும் – குடீசக சந்நியாசமும், வெகூதகமு மென்று – பகூதக சந்நியாசமு மென, இரண்டு திறங்களுண்டாம் – இருவித சந்நியாசங்களுளவாம், தாவி நடந்திடத் திடமிலாதவர்க்கு – எட்டி நடக்கச் சக்தி யில்லாதவர்களுக்கு, குடீசகமும் – குடீசக சந்நியாசமும், சகங்க ளெங்கு மேவி – உலகி லெவ்விடத்து மடைந்து, நடந்திடத் திடமுள்ளவர்க்கு – நடக்கச் சக்தியுள்ளவர்களுக்கு, வெகூதகமு மென – பகூதக சந்நியாசமு முரியன வென்று, மேலோர் – சான்றோர்கள், விதித்தார் – நியமித்தார்கள்.

(ப – ம்) பரமோட்ச வபரமோட்சங்களைக் குறியாது துன்பத்தைக் குறித்துப் பாவத்திறல், ஸ்திரீயாதியைத் துறந்தவனுக்குப் பின்பு ஸ்திரீயாதி யிடத்தில் இச்சையுண்டாகி அவைகளைப் பற்றுதலிறு லிம்மையில் இகழ்ச்சியும், மறுமையில் நரகமு முண்டாகுமே யன்றிக் குடீசகமாதி நான்குவகைச் சந்நியாசங்களில் ஒன்றும் சித்தியா தென்பார், "பாவி மந்த விராகத்தில் ... பலித்திடா" தெனவும், சஞ்சரிக்கச் சக்தியில்

லாத விருத்தாப்பியமாவது, ரோகமாவது உள்ளவர்கள் சந்நி யாசஞ் செய்துகொண்ட பின், சந்நியாசிகளுக்கு விதித்தபடி சஞ்சரித்தாற் றவத்துக்கு விக்கினமாகு மாகையால், அங்ங னஞ் சத்தியில்லாதவர்கள் காமாதி பிரவிர்த்திக் கேதுவில் லாத வோரிடத்திலிருந்து தவம் செய்தல் தக்கதென்பார், தாவி நட்ந்திட் ... குடீசகமு" மெனவும், ஆரோக்கியமாயும் திடகாத்திரமாயும் யௌவனமாயு முள்ளவர்கள் சந்நியாசம் செய்துகொண்ட பின் தத்துவ ஞானம் வந்த சாதுக்களிடத்தி லிருந்து, ஆத்ம விசாரம் செய்யாது தனித்தோரிடத்தி லிருந் தாற் காமாதி பிரவிர்த்தி யுண்டாகி அதனாற் றவமிழந்து நரகத்துக் காளாவார்களாகையால் அங்ஙனம் சஞ்சரிக்குஞ் சத்தியுள்ளவர்கள் காமாதி பிரவிர்த்திக் கிடமில்லா திருக்கும் பொருட்டுப் பட்டணம் பஞ்சராத்திரியும் கிராமம் ஏகராத்திரி யுமாகச் சஞ்சரித்தல் தக்கதென்பார், "சகங்களெங்கும் ... வெகூதக" மெனவுங் கூறினர்.

(தா – ம்) மந்த வைராக்கியத்தி னொரு சந்நியாசமுஞ் சித்தியாதெனவும், தீவிர வைராக்கியத்தினால் குடீசகம் வெகூதக மென்னும் கரும சந்நியாசங்கள் சித்திக்கு மெனவும், குடீசகம் சஞ்சரிக்கச் சக்தி யில்லாதோருக்கும், வெகூதகம் சஞ்சரிக்கச் சக்தியுள்ளோருக்கு முரியன வெனவுங் கூறின தாம்.

(அ – கை) தீவிரதர வைராக்கியத்தா லிருவித சந்நியாசம் உளதா மெனவும் அவர்கள் முத்தியடையும் வகையுங் கூறு கின்றார்.

இருவகைதீ விரதரத்து மஞ்சனென்றும் பரமாஞ்ச னென்றுஞ்சொல்வார், வருமஞ்ச னுக்குமுத்தி சத்தியலோ கத்தன்றி வாரா தென்பார், பரமாஞ்ச னுக்குமுத்தி யிவ்வு லகின் ஞானத்தாற் பலிக்கு மென்பார், திரமருவும் பரமாஞ் சன் றனுமிரு வகையாகுஞ் செப்பக் கேளாய். **161.**

(இ – ள்) தீவிரதரத்தும் – தீவிரதர வைராக்கியத்தும், அஞ்ச னென்றும் – ஹம்ச சன்னியாச மெனவும், பரமாஞ்ச னென்றும் – பரமஹம்ச சந்நியாச மெனவும், இருவகை – இரு விதமுளவா மென்று, சொல்வார் – சாதுக்கள் உரைப்பார்

கிள், வருமஞ்சனுக்கு – வாராநின்ற ஹம்சசந்நியாசிக்கு, முத்தி – மோட்சமானது, சத்திய லோகத்தன்றி – பிரம லோகத்திற் கிடைப்பதன்றி, வாரா தென்பார் – இம்மையிற் கிடையா தென்று சொல்வார்கள், பரமஞ்சனுக்கு – பரமஹம்ச சந்நியா சிக்கு, முத்தி – மோட்சமானது, இவ்வுலகில் – இவ்வுலகத் தின்கண், ஞானத்தாற் பலிக்குமென்பார் – தத்துவ ஞானத் தாற் கிடைக்குமென்று சொல்லுவார்கள், திரமருவும் – ஸ்திரம் பொருந்திய, பரமஞ்சன் றனும் – பரமஹம்ச சந்நியா சியும், இருவகையாரும் – இரண்டு விதமாம், செப்பக் கேளாய் – அவர்களின் இலக்கணம் சொல்லக் கேட்பாய்,

(ப – ம்) உபாசனை யோகாதிகள் செய்து மோட்ச இச்சை யுடன் தேக நீங்கினோர் பிரம லோகத்திற் போய் பிரம தேவ ரிடத்தில் தத்துவஞானம் பெற்றுச் சீவன் முத்தியுடனிருந்து பிரமத்தி லயமாகும்போது விதேகமுத்தி யடைவா ரென்பார், "வருஹம்சனுக்கு ... வாரா" தெனவும், சாதன சதுஷ்டயம் பெற்றுச் சற்குருவை யடைந்து சதா சிரவணாதி யப்பியாசஞ் செய்கின்றவர்கள் இவ் வுலகத்திலேயே ஆத்ம ஞானம் பெற் றுப் பரமோட்சத்தை யடைவா ரென்பார், "பரம ஹம்சனுக்கு ... பலிக்கு" மெனவுங் கூறினர்.

(தா – ம்) தீவிரதர வைராக்கியத்தி னிரண்டு சந்நியா சஞ் சித்திக்கு மெனவும், அவைகளை யுடையோர் நாமம் ஹம் சன் பரமஹம்ச னெனவும், ஹம்சனுக்குப் பிரமலோகத்திலும் பரமஹம்சனுக்குப் பூவுலகத்திலும் முத்தியுண்டாகு மெனவும், பரமஹம்ச் சந்நியாசி இருவகையாயிருப்பர் எனவும் கூறின தாம்.

(அ – கை) பரமஹம்ச சந்நியாசி இருவகை எனவும், அவர் களின் நாமமும் இலக்கணமும், கிஞ்ஞாசுக்களின் பிரிவும் கூறுகின்றார்.

சிஞ்ஞாசு ஞானவா னென்றிரண்டு பேர்களவ ரிற்சிஞ்
ஞாசு, மெஞ்ஞான பூமியின்முன் மூன்றுபூ மியுணடக்கும்
விவேகி யானோன், சுஞ்ஞான வானென்போன் சீவன்முத்தி
யடைந்திருக்குந் தூய மேலோன், அஞ்ஞான மகலுமந்தச்
சிஞ்ஞாசு மிருவகையா மதுவுங் கேளாய், 162,

(இ – ள்) சிஞ்ஞாசு – சிஞ்ஞாசு எனவும், ஞானவான் – ஞானவா னெனவும், இரண்டு பேர்கள் – இருவர்களாம், அவரில் – அவ்விருவர்களுள், சிஞ்ஞாசு – சிஞ்ஞாசு என்ப வன், மெஞ்ஞான பூமியில் – ஞான பூமி ஏழில், முன் மூன்று பூமியுள் – முந்தின மூன்று பூமிகளில், நடக்கும் – செல்லு கின்ற, விவேகியானோன் – விவேகமுள்ளவனுவன், சுஞ்ஞான வானென்போன் – நல்ல ஞானவா னென்பவன், சீவன் முத்தி யடைந்திருக்கும் – சீவன் முத்தியைப் பெற்றுள்ள, தூய மேலோன் – பரிசுத்தமான மகானும், அஞ்ஞான மகலும் – அறிவின்மை நீங்கும், அந்த சிஞ்ஞாசு மிருவகையாம் – அச் சிஞ்ஞாசும் இரண்டுவிதமாம், அதுவும் கேளாய் – அதனையும் கேட்பாய்.

(ப – ம்) அஞ்ஞானுதி மலமற்று ஆத்ம சொரூபத்தை யடைந்தவ னென்பார், "தூய மேலோன்" எனவும், அஞ்ஞா னுந்தமும் ஞானேதயமு முடையவ னென்பார், "அஞ்ஞான மகலும் ... சிஞ்ஞாசு" எனவும் கூறினர்.

(தா – ம்) பரமஹம்ச சந்நியாசி இருவகையினருக்கும் சிஞ் ஞாசு ஞானவானென நாம மெனவும், அச் சிஞ்ஞாசு அப்பியா சியும், ஞானவான் அநுபவியுமாவா ரெனவும், அச்சிஞ்ஞாசுகள் இருவகையா யிருப்பா ரெனவுங் கூறினதாம்.

(அ – கை) சிஞ்ஞாசு இருவகைக்கு மிலக்கணம் கூறல்.

பந்தமனை துறந்துசில ரதிதிகளா யிருந்தடைவர் பரம
ஞானம், அந்தணர்மன் னவர்வணிகர் சூத்திரரா யிருந்து
சில ரடைவர் ஞானம், இந்தவகைச் சாத்திரத்து மூலகத்து
நடப்பதுகண் டிருந்து மைந்தா, சிந்தனையின் மயக்கமென்
னே சுருதியுத்தி யநுபவத்தாற் றெளிந்தி டாயே. 163.

(இ – ள்) சிலர் – சிலபேர், பந்த மனை துறந்து – பந்த மான இல்வாழ்க்கையை விட்டு, அதிதிகளாயிருந்து – சந்நியா சிகளாக விருந்து, பரம ஞானம் – பிரம ஞானத்தை, அடைவர் – பெறுவார்கள், சிலர் – சிலபேர், அந்தணர் – பிராமண ராகவும், மன்னவர் – க்ஷத்திரியராகவும், வணிகர் – வைசிய ராகவும், சூத்திரராய் – சூத்திரராகவும், இருந்து – இல்வாழ்க் கையி லிருந்து, ஞானம் – பிரம ஞானத்தை, அடைவர் –

பெறுவார்கள், இந்தவகை — இந்தப் பிரகாரம், சாத்திரத்தும் — ஆகமப் பிரமாணத்திலும், உலகத்து நடப்பதும் — உலகத்தி நடப்பதாகிய பிரத்தியட்சப் பிரமாணத்திலும், கண்டிருந்தும் — பார்த்திருந்தும், மைந்தா — மகனே, சிந்தனையின் மய்க்க மென்னே — உன் மனதிற் சந்தேகமேன், சுருதியுத்தி அநுபவத்தால் — சுருதி யுத்தி அநுபவ மென்னும் மூன்றினாலும், தெளிந்திடாய் — தெளிவாய்.

(ப — ம்) பிரம க்ஷத்திரிய வைசியர் சூத்திர ரென்னும் நான்கு வருணத்திலுள்ளு மிருக்கின்றவர்கள் பிரதிபந்த மில்லாதிருந்தால், வாகிய ஆந்திர சந்நியாசங்க ளிரண்டையும் பெற்றுச் சற்குருவை யடைந்து சிரவணாதி அப்பியாசம் செய்து அசம்பாவனையாதி யின்றி அபரோட்ச ஞானத்தினால் பரமோட்ச மடைவார், அவ்வாகிய சந்நியாசம் செய்து கொள்ளப் பிரதிபந்த முண்டானால் ஆந்தர சந்நியாச மாத்திரம் பண்ணிக்கொண்டு அவ்வகையே பரமோட்ச மடைவாரென்பார் "பந்த மனை துறந்து ... ஞான" மென்றார்.

(தா — ம்) மனைவி செல்வம் முதலியவற்றை விடுக்கின்ற வாகியாந்திர சந்நியாசமானது, துறவறத்தினின்று சிரவணாதி யப்பியாசஞ் செய்கின்றதும், ஸ்திரீ முதலானதின் ஆசையை விடுக்கின்ற ஆந்திர சந்நியாச மாத்திர முள்ள இல்லறத்தினின்று சிரவணாதி யப்பியாசஞ் செய்கின்றதும், சிஞ்ஞாசி னிருவகைக்கு மிலட்சண மெனவும், மனைவியாதிகளுடன் கூடியிருக்கின்ற இல்லறமும், அவைகளை நீங்கியிருக்கின்ற துறவறமு மோட்சத்துக்குக் காரணமல்ல, நிராசையே காரணமெனவும் கூறினதாம்.

(அ — கை) மேற் கூறுவோ மென்றவாறே வித்தையாநந்தங் கூறுவான் றொடங்கி இச் செய்யுளிற் பிரமமே கூடத்தரெனக் கூறுகின்றார்.

(வேறு.)

பிறந்ததுண் டானு லன்றோ பிறகு சாவதுதா னுண்டாம்
பிறந்ததே யில்லை யென்னும் பிரமமா வதுவு நானே
பிறந்தது நானென் றாகிற் பிரமமன் றந்த நானே
பிறந்தது மிறந்த தற்ற பிரமமா நானே நானே. 164,

(இ — ள்) பிறந்ததுண்டானு லன்றே — சனித்த துளதா யினன்றே, பிறகு சாவதுதா னுண்டாம் — பின் மரித்த லுள தாம், பிறந்ததே யில்லை யென்னும் — சனித்ததே யின்றென் னும், பிரமமாவதுவும் — பிரமமென்பதும், நானே — நானே யாம், பிறந்தது நானென்றாகில் — சனித்தது நானென்று சொல்லப்படுமாயின், அந்த நான் பிரமமன்று — அப்படிசொல் லப்பட்ட நான் பிரமமாகாது, பிறந்தது மிறந்ததற்ற — உற் பத்தியும் லயமுமில்லாத, பிரமமா நானே நானே — பிரமமாகிய நானே நான்.

(ப — ம்) தாவர முதற் றேவர்கள் வரை எழுவகைச் சரீ ரங்களு மூர்த்தமாயும் அவயவமாயுங் கண்டமாயு முற்பத்தி யுள்ளதாயு மிருப்பதால், நாசமடைகின்றது, அப்படியின்றி நிராகாரமாயு நிரவயவமாயு நிறைவாயு நித்தியமாயு மிருக் கின்ற பிரம முற்பத்தியில்லா திருப்பதால் நாசமடைகின்ற தில்லை யென்பார், "பிறந்த துண்டானுலன்றே ... சாவதுதா னுண்டா மெனவும், உற்பத்தி நாசமுடைய பிரமாதியாகிய பிரமங்களுக்கு மேலாகச் சுருதியிற் கூறும் பிரம சொரூபமே சச்சிதாநந்தமாகிய கூடஸ்த ரென்பார், "பிறந்ததே யில்லை ... பிரமமாமதுவு நானே" என்றும், சாமவேத மகா வாக்கியப்படி அது நீயாகு யென்பார், "பிரமமாநான்" எனவும் கூறினர்.

(வி — ரை) பிரமமென்பது சத்திய ஞான வனந்தாநந்த வஸ்துவாகிய அது, நானென்பது சச்சிதாநந்தமாகிய நீ ஆமென்பது ஆனுயென்னு மைக்கிய மெனக் கொள்க.

(அ — கை) கூடஸ்தனே பிரம மெனக் கூறுகின்றார்.

நானென்ற பிரம மான நானேநா னறியே னென்றால்
நானென்ப தேது பின்னை நம்முடைப் புந்தி யென்னில்
தானது மயக்கந் தன்னிற் சாகுமே சாவா தாகி
நானென நிறைந்தி ருந்த ஞானமா நானே நானே. 165.

(இ — ள்) நானென்ற பிரமமான — யானென்று சொல்லும் பிரமமாகிய, நானே நான் — யானே நானுகும், அறியேனென் றால் — நான் காண்கிலேன் என்னில், பின்னை — பின்பு, நானென் பதேது — நான் என்று சொல்லப்படுவது யாது, நம்முடைப் புந்தி என்னில் — நமது புத்தி யென்று சொல்லில், அது —

அப் புத்தியும், மயக்கந் தன்னில் சாருமே – சுழுத்தி மயக்கத்தில் இறக்குமே, ஆனதால், சாவர்தாகி – இறவாததாய், நானென நிறைந்திருந்த – நானென்று பூரணமாக விளங்கிய, ஞானமா நானேநான் – ஞான ரூபமாகிய கூடஸ்தனே நான்.

(ப – ம்) எசுர்வேத மகா வாக்கியப்படி அகம் பிரமாஸ்மி என்பார், "நானென்ற பிரமமான" வெனவும் கூறினார்.

(வி – ரை) நானென்பது அத்திபாதிப் பிரியமாகிய அகமெனவும், பிரமமென்பது நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமானந்தாத்துவித சொரூப மெனவும், ஆனவென்பது அஸ்மி எனவுங் கொள்க.

(அ – கை) ஞானமே பிரமமெனக் கூறுகின்றார்.

நிறைந்தவா றெந்தவாறு நிலைதெறிந் திலனென் றாயேல்
அறிந்ததாஞ் சுழுத்தி தன்னி லாநந்த மதுவே யாகும்
குறைந்ததற் காநந் தந்தான் குவலயந் தன்னி லில்லை
நிறைந்ததே யிந்த வான்மா நிதானமிவ் வறிவு தானே.

(இ – ள்) நிறைந்தவாறு – நான் பரிபூரணமா யிருக்கும் விதம், எந்தவாறு – எவ்வண்ணம், நிலை தெரிந்திலன் – நிச்சயந் தெரிந்திலன், என்றாயேல் – என்பாயானால், அறிந்ததாம் சுழுத்திதன்னில் – அஞ்ஞானத்தை யறிந்திருந்ததாகிய சுழுத்தியின்கண், அதுவே – ஆத்மாவே, ஆனந்தமாகும் – நிரதிசயாநந்த ரூபமாம், ஆகலின், (பூரணமாம்) குறைந்ததற் காநந்தந்தான் – குறைவா யிருப்பதற்கு ஆநந்தமானது, குவலயந் தன்னிலில்லை – உலகத்தில் ஒரிடத்தும் காணப்படவில்லை, ஆகலின், இந்த ஆன்மா நிறைந்ததே – சுழுத்தியில் ஆநந்தமாயுள்ள இவ் வாத்மா பூரணமே, இவ் வறிவுதானே நிதானம் – ஞானமே நிதானமாம்,

(ப – ம்) ஞானமே பிரமமென்பார், "நிதானம் இவ்வறிவு தானே" எனவும் கூறினார்.

(வி – ரை) இவ் வறிவென்பது பஞ்சேந்திரியத்தினால் பஞ்ச விடயத்தை யறிகின்ற பிரஞ்ஞானமே, நிதானமென்பது ஜீவேசுவர சகத்துக்கு ஆதி காரணமாயும் அவைகளுக்குத் தற் சாட்சியாயும் வியாபகமாயு மிருக்கின்ற பிரம மெனவுங் கொள்க.

(அ - கை) ஆத்மாவே பிரமமெனக் கூறுகின்றார்.

மனத்தினு லெண்ணித் தானே வந்ததிவ் வுலக மாகும்
நினைத்திடி லநேக லோக நிற்பதவ் வறிவி லன்றோ
வனைத்தையுங் கடந்தப் பாலு மந்தமற் றறிவி தாமென்
றெனைத்தனி விசாரத் திட்டா லேகமாய் நிறைந்தோ னானே

(இ - ள்) மனத்தினு லெண்ணித் தானே - மனோசங்கற்பத்தினலேயே, இவ்வுலகம் வந்ததாம் - இப் பிரபஞ்சம் உதித்ததாம், நினைத்திடில் - ஆராயுமிடத்து, அநேக லோக நிற்பது - அனந்த வுலகங்களும் இருப்பது, அவ் வறிவிலன்றோ - ஆரோபமான மனதிற்கு அதிட்டானமான அப் பிரம சைதன்னியத்திலன்றோ, அனைத்தையுங் கடந்து - மன முதலிய பிரபஞ்ச மனைத்தையும் தாண்டி, அப்பாலும் - அதீதமாய், அந்தமற்று - முடிவிறந்த, அறிவு - பிரம சைதன்னியம், இதாமென்று - இதுவே யாகுமென்று, எனை - என்னை, தனி விசாரித்திட்டால் - தனிமையாக விசாரணை செய்தால், நானே - யானே, ஏகமாய் நிறைந்தோன் - பூரணமாக நிறைந்தவனும்.

(ப - ம்) சீவேசுவர சகத்தெல்லாஞ் சங்கற்ப மாத்திரமென்பார், "மனத்தினு லெண்ணித் தானே ... வுலகமாகு" மெனவும், பழுதையில் மயக்கத்தினற் சர்ப்பம், மாலை, தண்டம், தோற்றிக்கொண் டிருந்தாலு மவைகள் அப் பழுதையை விட்ட வேறல்லாமை போல, அதிட்டானமான பிரம சொரூபத்தி லாரோபமான மனத்தினற் சீவேசுவர சகத்துத் தோற்றினுலு மந்த வதிட்டானமான பிரம சொரூபத்தைத் தவிர வச் சீவேசுவர சகத்து வேறல்ல வென்பார், "நினைத்திடில் ... அறிவிலன்றோ" வெனவும், அதர்வண வேத மகா வாக்கியப் படி அயமாத்மா பிரம மென்பார், "ஏகமாய் நிறைந்தோனு" னெனவும் கூறினர்.

(வி - ரை) அற்ற வென்பது அற்று எனத் திரிந்து நின்றது, நானென்பது சுயம்பிரகாசமாய்ப் பிகத்தியக்கு சொரூபமா யிருக்கின்ற அயமாத்மா வெனவும், ஏகமாய் நிறைந்தோனென்பது சச்சிதானந்த நித்திய பூரணமா யிருக்கின்ற பிரம மெனவுங் கொள்க.

(4-கவிக்கும்)

(தா – ம்) இருக்காதி நான்கு வேதங்களின் முடிவாயுள்ள நான்கு மகா வாக்கியார்த்த சொரூபம் தானெனச் சிந்திக்கும்போ துண்டாகும் சுகம், வித்தையாநந்த மென்பதாம்.

(அ – கை) அகண்டாநந்த மநுபவிக்கின்றதற்கு உபாயம் வினுதலு மதற் குத்தரமுங் கூறுகின்றார்.

அந்தவா றிருந்து கொண்டே யாநந்த மநுப விக்க
வெந்தவா றிருந்துகொண்டா லெனக்கிது தெரியுமென்னில்
இந்தமூன் றவத்தை தம்மு ளெழுந்திடும் விருத்தி நீக்கில்
அந்தவா றிருந்து நீயு மாநந்த மடைய லாமே. 168.

(இ – ள்) அந்தவாறு இருந்துகொண்டு – முன் கூறிய படி சர்வாதீதமாய் அநந்தமாய் ஏகமாய் பூரணமா யிருந்துகொண்டு, ஆநந்தம் அநுபவிக்க – வித்தையாநந்தமாகிய அகண்டாநந்தம் அநுபவிக்க, எந்தவா றிருந்து கொண்டால் – எவ்வண்ண மிருந்தால், எனக்கிது தெரியு மென்னில் – எனக் கிவ்வநுபவம் விளங்கு மென்பாயாயின், இந்த மூன்றவத்தை தம்முள் – இச்சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி யென்று மூன்றவஸ்தைகளில், எழுந்திடும் விருத்தி நீக்கில் – உதிக்கின்ற கோர மூட முதலிய விருத்திகளை ஒழிக்கில், அந்தவாறு இருந்து – அந்தப் பிரகாரம் சர்வா[illegible]தமாக நின்று நீயு மானந்த மடையலாம் – நீயும் வித்தியாநந்த[illegible]று மகண்டாநந்தம் பெறலாம்.

(தா – ம்) முற் கூறிய கற்பிதங்கள் அனைத்தும் விருத்தி கற்பித மாகையால் விருத்தி யடக்கினுற்றுன் அகண்டமா யிருந்து பூரணுநந்த மநுபவிக்கலாம் என்றதாம்.

(அ – கை) விருத்தி நீக்குவதற் குபாயம் மூன்றினுள் முக்கிய வுபாயமாகிய ஒன்று கூறுதல்.

வாதனு வசத்தினுலே வருகிற விருத்தி யெல்லா
மேதினு லடக்க லாகு மென்றுதான் விசாரஞ் செய்யில்
போதமா மிராசன் றுனுய்ப் புந்தியைம் புலன்க ளெல்லாந்
தாதரா யிருக்கப் பெற்றுற் சகலமு மடங்குந் தானே. 169.

(இ – ள்) வாதனுவசத்தினலே – வாசனு வசத்தால், வருகிற விருத்தியெல்லாம் – வருகின்ற விருத்திகளனைத்தும், ஏதினு லடக்கலர்கு மென்று – எந்த வுபாயத்தால் ஒடுக்கலா மென்று, விசாரஞ் செய்யில் – விசாரிக்கில், போதமா மிராசன் ருனுய் – ஞான ரூபமாகிய ஆத்ம வரசன் ருனுகி; புந்தியைம் புலன்களெல்லாம் – புத்தி ஞான கரும இந்திரியங்களனைத்தும், தாதரா யிருக்கப்பெற்ருல் – தாசராக விருக்கப்பெறின், சகலமு மடங்கும் – அனைத்தும் நிரோதமாம்.

(தா – ம்) நித்தியாநந்த போதமாகத்தான் அநுபவத்தில் இருந்தால் விருத்திகள் நீங்குமென்றதாம்.

(அ – கை) ஏனைய இரண்டு வுபாயங் கூறல்.

விருத்திக ளடக்க வின்னம் விநோதமாம் யோகத் தாலே
துருத்திபோ லூது முச்சை சுகமுட னடக்கி னிற்கும்
கருத்ததற் கில்லை யென்னிற் காரண சரீர மாகிப்
பெருத்ததோ ரவித்தைதன்னைப் பிடுங்கிடி லடங்குந்தானே

(இ – ள்) விருத்திக ளடக்க – விருத்திகளை யடக்க, இன்னம் – மேலும், விநோதமாம் – விநோதமான, யோகத் தாலே – கரும யோகாப்பியாசத்தினல், துருத்திபோ லூது மூச்சை – துருத்தியைப் போல வூதாநின்ற சுவாசத்தை, சுக முடனடக்கின் – ஆயாசமின்றி நிரோதிக்கில், நிற்கும் – அடங் கும், கருத்ததற் கில்லை யென்னில் – அதற்கு மனமின்ருயின், காரண சரீரமாகி – தூல சூட்சும சரீரங்களுக்குக் காரண சரீர மாய், பெருத்தது – தடித்ததாகிய, ஓரவித்தை தன்னை – ஒப்பற்ற அவித்தையை, பிடுங்கிடில் – பெயர்த்தால், தானே அடங்கும் – விருத்திகள் தாமே ஒடுங்கும்.

(தா – ம்) பிராண பந்தன வுபாயத்தைக் கௌணமாகக் கூறி அவித்தை நீக்கு முபாயத்தை முக்கியமாக கூறினு ரென்பதாம்.

(அ – கை) காரண சரீரத்தைக் களையுமுபாயம் யாதெனு வினுதலுக் குத்தரங் கூறல்.

காரண சரீரந் தன்னைக் களைவதெவ் வாறென் றேனில், ஆரணம்பொய்சொல்லாதே யதன்பொருளகத்தி லுன்னிப், பூரண மாகு மென்மேற் புவனங்க டோற்ற மென்று, தாரணை வந்த தாகிற் றரித்திடு மவித்தை யெங்கே. 171.

(இ – ள்) காரண சரீரந் தன்னை – காரண தேகத்தை, களைவது – கெடுப்பது, எவ்வாறென் றேனில் – எவ்வித மென்று கேட்கில், ஆரணம் – வேதமானது, பொய் சொல்லாதே – மற்ற சாஸ்திரங்களைப் போல அசத்தியத்தைக் கூற மாட்டாதே, ஆனதால், அதன் பொருள் – சர்வம் பிரமமய மென்றும் சர்வமும் மித்தை யென்றும் வேதங் கூறிய அர்த் தத்தை, அகத்தில் உன்னி – உளத்திற் சிந்தித்து, பூரண மாகு மென் மேல் – பரிபூரணமாகிய என்னிடத்தில், புவனங்க டோற்ற மென்று – ஆரோபமாகச் சகங்க டோற்ற மாத்திர மென்று, தாரணை வந்த தாகில் – உறுதியுண்டானால், அவித்தை – அவித்தையானது, எங்கே தரித்திடும் – எவ் விடத்திலிருக்கும்.

(தா – ம்) வேத நிச்சயப்படி குருவாக்கியத்தாற் சர்வம் பிரம மயமென்றும் சர்வம் மித்தை யென்றும் அநுபவ முண் டாயின், அவித்தை நசிக்கு மென்பதாம்.

(அ – கை) சர்வம் பிரமமயம் சர்வம் மித்தை யென்றும் ஞான முதித்தற்கு அநுபவம் கூறல்.

அப்படி யிருக்கச் சித்த மலைதலால் விவகா ரத்தில்
எப்படி கூடுமென்னி லென்னைவிட் டொன்று மில்லை
இப்படிகண்ட வெல்லா மென்மய மென்கனுப் போற்
கற்பித மென்று தானே காண்கின்ற சித்து நானே. 172.

(இ – ள்) விவகாரத்தில் – விவகாரங்களில், சித்தம் – மனமானது, அலைதலால் – விட்சேபப் படுவதால், அப்படி யிருக்க – அவ்விதம் உறுதியாய் நிற்க, எப்படி கூடுமென்னில் – எங்ஙனங் கூடுமென்றால், என்னைவிட் டொன்றுமில்லை – அத்துவிதி யப் பிரம ரூபமாகிய எனக்கு அயலாக ஒரு வஸ் துவுமில்லை, இப்படி கண்ட வெல்லாம் – இவ்விதம் நானுரூப

மாகக் காணுகின்ற கிரியங்களனைத்தும், என்மயம் — எனது சத்தைக் கொண்டு விளங்குவதால் எனது மயமாம், (அல்லது) என் கனுப்போல் — எனது சொப்பனப் பிரபஞ்சம் போல், கற்பிதம் — கற்பிதமாம், என்று — என்பதாக நிச்சயித்து, தானே காண்கின்ற — பாகியாந்தர [பிரபஞ்சங்களைச் சயமே யறியாநின்ற, சித்தே நான் — சைதன்னியமே நான் என்று இருவென்பதாம்.

(தா — ம்) சசவிஷாணம் போல் அத்தியந்த பாவ மின்றிக் கற்பிதமாகக் காணப்பட்ட கிரியங்களனைத்தும் தனது சத்தாஸ் பூர்த்தியாக விளங்குகின்றனவென்று மநுபவதிருஷ்டியால் யாவும் தன்மயமாக விளங்கு மென்பதாம்.

(அ — கை) சித்தே யாநந்த வடிவாமெனல்.

சித்துநா னிறைந்தோ னென்ற திடமற வாதி ருந்தால்
எத்தனை யெண்ணி னாலு மேதுசெய் தாலு மென்ன
நித்திரை யுணர்ந்த பின்பு நிற்கின்ற கனுவே போல
அத்தனை யும்பொய் தானே யானந்த வடிவு நானே. 178.

(இ — ள்) சித்து நான் — சைதன்னிய ரூபனாகிய நான் நிறைந்தோன் — பரிபூரணமானவன், என்ற திடம் மறவாதிருந்தால் — என்னும் திடப் பிரக்ஞையோடு கூடியிருந்தால், எத்தனை எண்ணினாலும் — மானச விவகாரமாக எவ்வளவு சங்கற்பித்தாலும், ஏது செய்தாலும் — காயக விவகாரமாக எக்கிரியை செய்தாலும், என்ன — அதனாலெனக்கென்ன, ஆனி ஒன்றுமில்லை, நித்திரை யுணர்ந்த பின்பு — நித்திரை தெளிந்த பின்பு, நிற்கின்ற கனுவே போல — பொய்யாகத் தோன்றி நிற்கும் சொப்பன விவகாரம் போல, அத்தனையும் பொய்தான் — அவ்வளவு விவகாரமும் மித்தைதான், நானே — யானே, ஆநந்த வடிவு — ஆநந்த சொரூபனும்.

(தா — ம்) தானே சித்தென்னு மநுபவமுதிக்கில் யாவு மித்தையாய்த் தான் ஆநந்த வடிவனுவ னென்பதாம்.

(அ — கை) இவ்வநுபவ முதிப்பதற் கேதுவான வுறுதியைக் கூறல்.

நானென வுடலைத் தானே நம்பினே னநேக சன்மம்
ஈனராய்ப் பெரியோ ராகி யிருந்தவை யெலாமிப் போது
கானலில் வெள்ளம் போலக் கண்டுசற் குருவி னாலே
நானென வென்னைத் தானே நம்பியீ டேறி னேனே. 174

(இ – ள்) அநேக சென்மம் – அனந்த செனனங்களில், உடலைத்தான் – தேகத்தையே, நானென நம்பினேன் – யானென்று நம்பினேன், ஈனராய் – அப்போது இழிந்தவராகவும், பெரியோராகி – உயர்ந்தவராகவும், இருந்தவை யெலாம் – இருந்தவை யனைத்தையும், இப்போது – இச் சமயத்தில், சற்குருவினால் – ஆசாரியர் உபதேசத்தினால், கானலில் வெள்ளம் போல – கானற் சலத்தைப் போல, கண்டு – மித்தையாகப் பார்த்து, என்னைத்தானே – எனது பிரம வடிவத்தையே; நானென நம்பி – யானென்று நம்பி, ஈடேறினேன் – உய்யப் பெற்றேன்.

(தா – ம்) குரு கிருபையினால் தேக நானென்னு நம்பிக்கையை விடுத்துச் சித்தே நானென்னு நம்பிக்கை யுண்டானால் சின்மாத்திரமான முத்தியைப் பெறுவ னென்பதாம்,

(அ – கை) குரு கிருபையை வியந்து மகிழ்தல்.

என்னபுண் ணியமோ செய்தே னேதுபாக் கியமோ கா
நன்னிலந் தனிலெ ழுந்த நாரணன் கிருபை யாலே [ணேன்
தன்னிய னானே னுத் தரீயத்தை வீசு கின்றேன்
தன்னிய னின்னு நானே தாண்டவ மாடு கின்றேன். 175.

(இ – ள்) என்ன புண்ணியமோ செய்தேன் – என்ன தருமஞ் செய்தேனோ, ஏது பாக்கியமோ – யாது பாக்கியம் பெற்றேனோ, காணேன் – நான் தெரிந்திலேன், நன்னிலந்தனில் – நன்னில மென்னும் க்ஷேத்திரத்தில், எழுந்த – மானிடராக அவதரித்த, நாரணன் கிருபையால் – நாராயண தேசிகரென்பவருடைய பெருங் கருணையினால், நான் தன்னியனானேன் – நான் கிருதார்த்தனானேன், உத்தரீயத்தை வீசுகின்றேன் – அங்கவஸ்திரத்தை ஆகாயத்தில் எறிந்து விளையாடுகின்றேன், தன்னியன் நானே – கிருதார்த்தனை யானே, இன்னும் – மேலும், தாண்டவமாடுகின்றேன் – ஆநந்த நடனஞ் செய்கின்றேன்.

(அ — கை) தன்னநுபூதி விளக்கத்துக்குத் தக்க நாமந் தனக்குத் தரித்த மாதா பிதாவைப் புகழ்தல்.

தத்துவ ஞானம் வந்த சந்தோட வதிச யத்தால்
நித்தமா டுவன்கா ணென்ற நிலைமுன்ன மேய றிந்த
சத்திய மதனு லன்றோ தாண்டவா வென்ற ழைத்தார்
அத்தனை மகிமை யுள்ளோ ரன்னையும் பிதாவுந் தாமே.

(இ — ள்) தத்துவ ஞானம் வந்த — அத்துவித ஞான முதித்த, சந்தோட வதிசயத்தால் — வித்தியாநந்த வற்புதத்தினால், நித்தம் ஆடுவன் காணென்ற — எப்போதும் ஆநந்த நடனஞ் செய்வனென்னும், நிலை — நிலையை, முன்னமே யறிந்த சத்திய மதனால் அன்றோ — முன்பே தெரிந்த வுண்மையினால் அன்றோ, தாண்டவா வென்றழைத்தார் — தாண்டவ ராயனென்று நாமந் தரித்துக் கூப்பிட்டார், அத்தனை மகிமை யுள்ளோர் — அவ்வளவு மகிமையுள்ளவர்கள், அன்னையும் பிதாவும் — எனது மாதா பிதாக்கள்.

(அ — கை) நிரதிசயாநந்த வநுபூதி வரப்பண்ணிய குருவை ஆராமையாகப் புகழ்ந்து வணங்குதல்.

வந்ததோ ரிவ்வா நந்த மகிழ்ச்சியா ருடன்சொல் வேன்யான்
சிந்தையி லெழுந்து பொங்கிச் செகமெலா நிறைந்து தேங்கி
அந்தமில் லாத தாயிற் றப்படி குருவே தாந்த
மந்திர மருளு மீசன் மலரடி வணங்கி னேனே. 177

(இ — ள்) வந்தது — மகா வாக்கியத்தினால் உண்டான, ஓர் — ஒப்பற்ற, இவ்வாநந்த மகிழ்ச்சி — ஞான சுகமென்னும் இந்த நிரதிசயாநந்த மகிழ்ச்சியை, யான்யாருடன் சொல்வேன் — நான் எவருடன் கூறுவேன், சிந்தையி லெழுந்து பொங்கி — உளத்தில் ஊறி மேலிட்டு, செகமெலா நிறைந்து தேங்கி — உலகங்க ளனைத்திலும் பூரணமாய், அந்தமில்லாத தாயிற்று — கரை யிறந்ததாயினது, அப்படி — அவ்வண்ணம், வேதாந்த மந்திரம் — வேத முடிவான மகா வாக்கியார்த்த ரகசியத்தை, அருளும் — அருளா நிற்கும், ஈசன் — இறைவனாகிய, குரு — தேசிகரது, மலரடி வணங்கினேன் — தாமரை மலர்போலும் திருவடியைத் தொழுதேன்.

3-கவிக்கும்

(தா – ம்) சிந்தையிலுதித்த வாநந்தம் அந்தச் சிந்தையைக் கரைக்கச் சக சிவபரமான வனைத்தும் தானுகிய சிதாநந்த வடிவமாகவே விளங்குகின்றதென வித்தியாநந்தத்தை முடித்ததாம்.

(அ – கை) இந்நூல் பயன் கூறல்,

வித்தியா னந்த மிந்த விதமென விளம்பி னேமே
பத்தியா லிந்த நூலைப் பார்தநு பவித்த பேர்கள்
நித்திய தரும நிட்டை நிலைதனை யறிந்து சீவன்
முத்தியை யடைந்தி ருந்த முனிவர ராகு வாரே. 178.

(இ – ள்) வித்தியாநந்தம் – ஞான சுகமானது, இந்த விதமென – இந்தப் பிரகாரமா மென்று, விளம்பினேம் – சொல்லினேம், பத்தியால் – அன்பாக, இந்த நூலைப் பார்த்து – பிரம ஞானியாகிய சற்குரு முன்னிலையில் இந்த ஞான சாஸ்திரார்த்தத்தைக் கேட்டுணர்ந்து, அநுபவித்த பேர்கள் – அப்பொருளை யறிந்தபடி அநுபவத்துக்குக் கொண்டுவந்த பேர்கள், நித்திய தரும நிஷ்டை – நித்தியமான ஞான நிஷ்டையின், நிலைதனை யறிந்து – நிலைமையைத் தெரிந்து, சீவன் முத்தியை யடைந்திருந்த – சீவன் முத்தி பதத்தைப் பெற்றிருந்த, *முனிவரராகுவார் – முனி சிரேஷ்டராவர்கள்.

(அ – கை) குருவாக்கியப்படி இந்நூல் சம்பூரணமாயிற்றெனல்.

ஆரணப் பொருளாம் வித்தி யாநந்தம் விளங்க வேதுங்
காரணங் குறைவி லாமற் கைவல்லிய நவநீ தத்தைப்
பூரண மாக்க வேண்டிப் பூர்வமா நன்னி லத்தில்
நாரண குருநமக்கு நவின்றனர் யோகில் வந்தே, 179.

(இ – ள்) ஆரணப் பொருளாம் – வேத முடிவிலுள்ள மகா வாக்கியார்த்தமான, வித்தியாநந்தம் – ஞான சுகம், விளங்க – சிஞ்ஞாசுகளுக்கு விளங்கும் பொருட்டு, கைவல்லிய

*முனி – மனனசிலர், வரர் – சிரேஷ்டர் இவர் சுகர் நாரதர் முதலியோர்.

நவநீதத்தை – கைவல்லிய நவநீத மென்னு ஞான சாஸ்திரத்தை, ஏதும் – எவ்வளவும், காரணம் – எடுத்துக் காட்டுங் காரணங்களில், குறைவில்லாமல் – குறைவுபடாமல், பூரணமாக்க வேண்டி – சம்பூரணமாக்கக் கருணை கூர்ந்து, பூர்வமாநன்னிலத்தில் – பழமையான நன்னில மென்னும் க்ஷேத்திரத்தில் மானிட வடிவமாக வெழுந்தருளிய, நாரண குரு – நாராயண தேசிகரானவர், நமக்கு – அடியேனுக்கு, யோகில் வந்து – யோக நிஷ்டையில் தோன்றி, நவின்றனர் – அருளிச் செய்தனர்.

(தா – ம்) குரு கிருபையால் இந்நூல் விக்கினமின்றிச் சம்பூரணமாயிற் றென்பதாம்.

(அ – கை) இந் நூலைப் புகழ்தல்.

குலவுசற் குருவின் பாதக் குளிர்புனற் றலைமேற் கொண்டால்
உலகினிற் றீர்த்த மெல்லா மூற்றபே றடைவார் போல
நலமையா குங்கை வல்லிய நவநீத நூலைக் கற்றோர்
பலகலை ஞான நூல்கள் படித்தஞா னிகளாய் வாழ்வார். 180

(இ – ள்) குலவு – சுத்தப் பிரமமாக விளங்கா நின்ற, சற்குருவின் – ஞான தேசிகரின், பாதக் குளிர்புனல் – பாதத்தில் அபிஷேகம்செய்த குளிர்ந்த சலத்தை, தலைமேற் கொண்டால் – சிரசின்மீது புரோட்சித்துக் கொண்டால், உலகினில் – சகத்திலுள்ள, தீர்த்த மெல்லாம் – தீர்த்தங்க ளனைத்திலும் ஸ்நானஞ் செய்து, உற்ற பேறு – அவற்றாலடையும் பயனை, அடைவார் போல – எப்படிப் பெறுவார்களோ அதுபோல, நலமையாகும் – மோட்ச சுகத்தைப் பயக்கத் தக்கதாகிய, கைவல்லிய நவநீத நூலைக் கற்றோர் – கைவல்லிய நவநீத மென்னும் ஞான சாஸ்திரத்தைப் படித்தோர், பலகலை ஞான நூல்கள் – பலகலைகளாகிய ஞான சாஸ்திரங்களை, படித்த ஞானிகளாய் – கற்றுணர்ந்த ஞானிகளுக்குச் சமானமாய் சுவாநுபூதி பெற்று, வாழ்வார் – வாழ்வார்கள்.

(தா – ம்) சிஞ்ஞாசுகள், அளவிறந்த ஞான சாஸ்திரங்களின் சாரமாக இந் நூல் கூறப்பட்டிருப்பதால், இந்நூல் அவசியம் கற்கவேண்டு மென்றதாம்.

---

சற்குருவின் உபயத் திருவடிகளுக்கே நமஸ்காரம்.

---

சந்தேகம் தெளிதற் படலம் முற்றிற்று.

---

ஆக படலம் 2-க்கு செய்யுள் 288

---

கைவல்லிய நவநீதம் சுவாநுபூதி விளக்கவுரை முடிவு பெற்றது.

---



அருள்மிகு ஸ்ரீ பாலதண்டாயுதபாணி சுவாமி.





ஸ்ரீ பயரனீஸ்வரர் ஆலயம்
உடையார்பாளையம்




ஸ்ரீ சற்குருநாதர் ஆறுமுகம் சுவாமிகள் உறைவிடம், உடையார்பாளையம்